உ

குகஸகாயம்.

# ஸ்ரீ கந்தபுராணச் சுருக்கம்

(வசனம்)

இஃது

இராமநாதபுரம்

வித்துவான் மாப்பிள்ளை

வீ. தங்கவேலுஸாமித் தேவரவர்கள்

இயற்றியது.



முதற்பதிப்பு.

சென்னை,

திருவல்லிக்கேணி,

கல்விப்பிரகாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கலானது.

1907ஆ ஜனவரிமீ 20உ





# Copies of Testimonials

MADRAS

*16th August* 04

I have much pleasure in introducing to the Public of Madras Vidvan Thangavelu Samy Devar of Ramnad Samasthanam who is a very clever Violinist. I had an occasion to engage him for or of the entertainments in the Bagavath Katha Prasanga Saba established in the Thondaimandalam High School and he pleased the audience with his skill in handling the instrument and I am sure he is deserving of all encouragements from the music knowing gentlemen.

(Sd) C. SUBBARAYA PILLAI,
Jt. Secretary,
B. K P. Saba,
Thondaimandalam High School,
Madras.

———o———

Madras 20th November, 1904.

In introducing to the general public M. R. Ry. Vidvan Thangavelu Swamy Thevar Avergal of Ramnad Smasthanam, we are glad to say that he is one of the famus violinists and has the peculiar knack of pleasing the audience with exquisite music. He is very respectably connected and deserves every encouragement. We wish him success in life as an eminent violinist and a vocalist.

(Sgined) C. SUBBARAYA PILLAI,
(Signed) M. MUNUSAMY NAIDU,
Joint Secretaries,
B. K. P. Sabah
The Thondaimandalam High School.

———o———

Madras 24th November 1904.

We have much pleasure in giving a testimony to M. R Ry. Thangavelu Swami Thevar of Ramnad Samasthanam. He comes of a very respectable family and plays well on the violin. V

believe he gave much satisfaction to the members of our sabah when we once engaged his services for an entertainment on 13th Novem ber 1904, when the anniversary of our sabah was celebrated. He deserves every encouragement at the hands of the music loving public of Madras.

(Signed) C. P. ANANTANARAYANA AIYAR,
Do T. T. Thiruvenkata Chariyar,
B. A., B. L., High cort Vakil,
Joint Secretaries
The Sri Parthasarathi Swami Sabha,
Triplicane.

——o——

Madras 18th October 1904.

I have much pleasure in testifying to the excellent ability of Mr. Thangavelu Swami Thevar, the eminent violinist of Ramanathapuram Samasthanam. He has been in Madras for only a few months and as far as I can judge the public here have been very favorably impressed with the superior skill displayed by him in his performances whether given by themselves or as accompanied to vocal music. I, have heard him follow on the voilin some of the best singers of the day and the rapidity and the ease with which he followid them are really remarkable. I earnestly hope that he will meet with all possible euconragement.

(Signed) M. SHUNMUGA MUDALIAR,
Secretary
Mylapore Sangita Sabha.

——o——

Madras 21st September 1904.

I have much pleasure in introducing to the public M. R. Ry Thangavelu Swami Thevar Avergal a famous master violinist of Ramnad Samasthanam. Having heard his eminence I had an occa sion to engage him in the " Sri Saraswathi Gnana Sabba " wherein he displayed his talents in full at the time. No donbt I find in him a peculiar feat of enriching the minds of the audience with

exquisite music. He is a respectable gentleman with pleasant manners. He deserves all the encouragement and I have no doubt he will stand the test on any occasion. I sincerely wish him every success in life as an eminent violinist.

(Signed) S. A. RAGUNATHA CHARIAR,
Hony Secretary,
The Sri Saraswathi Gana Sabha.

—o—

Madras 29th June. 1905.

We have much pleasure in giving testimony to the efficiency of Mr, Thangavelu Sawmy Thevar of Ramnad Samasthanam in the art of playing violin, which we had the opportunity of testing on the occasion of the grahapravesam ceremony of our sabha on the 11th June, 1905, when he enriched the minds of the audience.

We are very sorry for his absence from our midst and wish him every success wherever be goes.

(Signed) N. DURAIVELA CHARI, B. A.
C. BURANGAM NAIDU,
Honorary Joint Secretaries,
The Sugirtha Lakshmi Vilasa Sabha.

—o—

I have much pleasure in stating that I heard M.R.Ry. Thanga velu Samy Thever Avergal of the Ramnad Samasthanam, play on the violin and was much pleased with the exquisite skill with which he handled the instrument. He is a near relative of the Ramnad Rajah and is as pleasant a gentleman in his manners and deportment as he is a master of Hindu music, I hope he will be better known than he is now and his talents will be fully appreciated.

(Sd) L. C WILLIAMS,
23—8—05. Inspector of Schools.

சிவமயம்

சிறப்புப் பாயிரம்

## சென்னை, ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர்
## ம-ா-ா-ஸ்ரீ, கோ வடிவேலு செட்டியாரவர்கள் இயற்றிய

### நிலமண்டில வாசிரியப்பா.

புண்ணியன் புராதனன் புத்தமு தன்னவன்
பண்ணியன் மொழியுமை பாகத் தற்றவன்
தற்பரன் சிற்பரன் சம்பு சநாதனன்
அற்புத னரவணி யமலன் றூனு
டாலத் திருக்கிற் பண்ணவ ரிடுக்கண்

மூலம் பாற முனிவரர் போற்றிட
வந்தருள் குருபரன் வள்ளி மணாளன்
அந்தமில் சோதி யறுமுகக் கடவுள்
உளக்கணுக் கன்றி யூன்கணுக் கொளித்துத்
துளக்கற நிமிர்ந்த தோய்வில னெற்கருள்

பகவன் முருகன் பன்னிரு தோளன்
இகலற யாவுமா யிலங்கும் பெம்மான்
தனியா விருக்குந் தன்மைமேற் பூண்ட
இனியா ருளமல ரெழுந்தருள் கந்தன்
புரிவுற விரிவுறப் பொருத்த மாகச்

சரிதங் கூறுந் தமிழ்ச்செயுட் கிணங்கச்
சற்குணப் பெரிய சாமித் தேவனும்
கற்டும் பொற்புக் கறையில் கல்வியும்
தரமொடு பிறவுந் தயங்கிய சிவசுந்
தராநாய்ச் சியாருந் தாமுற் பவத்திற்

பண்ணிய தவத்தின் பயனாய் வந்தவன்
எண்ணிலாக் கல்வி யியைந்தவ ரிடத்துக்
கற்றவன் றமிழைக் காட்சிக் கினியன்
சொற்றிடு வளனெலாஞ் சேர்ந்துற வாயொளிர்
முகவையம் பதியான் முரனில் குணத்தான்

மிகவிருப் புற்று மேன்மையார் நிதம்
நற்றிறத் தவருழி நயமுறப் பெற்றவன்
பற்பல பட்டமும் பலவிடத் துற்றவன்
பதியிடத் தேசிய பாஸ்கர சேது
பதிவளன் மைத்துனன் படர்வே தாந்தத்

துறையினி துவந்தவர் தொடர்புமேற் கொண்டவன்
நிறைவா னகத்து நிலைத்து வீசு
புகழ்பெறு குலன்வரு புமானென தன்பன்
யுஞ்சொலும் பான்மை யுற்றிடு தங்க
வேற் சாமி தேவ வித்தக னுவலர்

ஏற்ற மிக்க திதுவே யாமெனச்
சொல்வளம் பொருள்வளந் துதிவள நிறைய
அல்வள மகல வரனருள் சாரக்
கத்திய வடிவிற் கனிவுட னொருநூல்
இத்தமிழ் மக்களுக் கியற்றியீந் தனனே

உ

சிவமயம்.

# அநுக்கிரமணிகை.

# பிழைதிருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 28 | சுருச்கி | சுருக்கி |
| 2 | 5 | சுருக்கிப்பாகார் | சுருக்கிப்-பாகார் |
| 2 | 15 | காந்த்புரா | கந்தபுரா |
| 5 | 6 | கம. வெ | ஸ்ரீ. கம. வெ. |
| 5 | 15 | வாமாருங் | வரமாருங் |
| 5 | 6 | கொகையா | தொகையா |
| 5 | 28 | விண்மணி | வின்மணி |
| 6 | 4 | க்ர்ஞ்சி | காஞ்சி |
| 6 | 23 | ்வைரவக் கசவுன் | வைரவக் கடவுள் |
| 7 | 4 | மெ்ய்யறு | மெய்யரு |
| 13 | 25 | தான் | தாம் |
| 15 | 4 | நிலகண்டவன் | நீலகண்டன் |
| 15 | 24 | காலகண்ட | காளகண்ட |
| 22 | 4 | முடியினே | முடிபினே |
| 22 | 5 | பராசடரிஷி | பராசரிஷி |
| 30 | 1 | மாயாபுரி | மாயமாபுரி |
| 31 | 12 | சேய்ஞாலூர் | சேய்ஞலூர் |
| 42 | 11 | சிஞ்சமுக்னும் | சிக்கமுகனும் |
| 51 | 33 | அசகமுகி | அசமுகி |
| 52 | 4 | ஒழித்திரு | ஒளித்திரு |
| 54 | 29 | மரம | பரம |
| 58 | 18 | பயத்திற் | புயத்திற் |
| 64 | 32 | மதம் | மகம் |
| 106 | 31 | சப்தம் | சபதம் |
| 131 | 11 | ஙிங்கமுகன் | சிங்கமுகன் |
| | | மிரளமிரள | மருளமருள |
| 194 | 4 | பார்பதியார் | பார்ப்பதியார் |

உ

# வேலுமயிலுந் துணை.

## முகவுரை.

சிவநேசச் செல்வர்காள்!

அகண்ட பரிபூரண வநாதிமல முத்த சித்ருப்பரம் பொருளாஞ் செய்கைவேற் சிவகுமரனது மாச்சரிதத்தின் விரிவை, யக்கடவுளினது மெய்யன்பரடியார்க்கு மடியரினுபய சரணாரவிந்தங்களைச் சிரத்தணியாப்பூண்ட வோர் பெற்றியிலென்றுந் தமழியாப் புகழ் போன்றேவுள்ளத நுக்கோடித் தெய்வசம்பத்தையுடைய நாமவேன் மன்னர்பிரான் ஸ்ரீமது. ஹிரண்ய கர்ப்பயாஜி ரவிகுல ராஜா முத்து விஜய ரகுநாத பாஸ்கரஸேது பதியவர்களினற்பணித்திறத்தாற் சுருக்கிப்பெருக்க முறவ வாவலானேன். இச்சுருக்க மான்மாக்களின்றருக் கொழியப் பேரின்பம் பெருக்க நிலையுறுமென்பதினளக்கருஞ் செயற்களைச் சிறியனியானோ விரிக்குந்திறத்தன்? ஸ்ரீகந்தர் சஷ்டியினறுநாணெற்புற்குகபவனது விரிந்த வருளாடற்களை விரிக்கும் விரிவைச் சுருக்கிப் பாராயணஞ்செய்து விடலருமையெனமன மூசலாடினர்க்கோர் பேருறுதலென்புன்சொற்களாமேயவிச்சுருக்கஞ்சுருக்கிற்றரு மெனுமிப்லேயே சிறியனேன் பெரிதுங்கொளற்பால தானேன். அளக்கலாகா நற்கல்வி கேள்வியின் செல்வத்துயர்ந்த விருமுது பெரியோரெனதித் தொழிலிற் கந்தம்பெற விருக்குங்கந்தவேட் சொந்த நோக்கிப் பேராதரஞ் செய்வரெனுந் துணிபை மேற்கொண்டிருக்கின்றேன். வீ. த.

உ

## திருமுருகன் றுணை,

## பாயிரம்.

ஸ்ரீமது பாஸ்கரஸேதுபதி மகாராஜா அவர்களா லருளப்பெற்றது.

### விருத்தம்.

பரமனார் விழியிற்றோன்றிப் பரமனு யுலகந்தன்னில், வரமெலாமன்பர்க்
கேயவிய வந்தாண்ட வெல்லாம், கரதலாமலகம் போலக் கூறுமாக்காந்த
நூலைத், தரவெனுச் சுருக்கித்தந்தான் றங்கவேற் சாமிதானே (1)

படையுடை முகவைவாழும் பண்புறுந் தேவனுகிச், சடையவனடியானுன
தங்கவேற்சாமிசெய்த, நடையதாங் காந்தங்கண்டு நானிலந்தன்னிலுள்ளோ,
ரிடைவிடாதயம் போலாகி யினிது கீற்றிருந்தார் மாதோ. (2)

வேம்பத்தூர் சிலேடைப் புலியாகிய ஸ்ரீ பிச்சுவைய ரவர்களால்
தரப்பெற்றது.

வெண்பா.

போகாத சஞ்சிதத்தைப் போக்கி யருள்கொடுக்கும், வாகான காந்தவிரி வைச்சுருக்கிப் பாகார், விடையை நிகர்த்ததங்க வேற்சாமி செய்த, நடையே சிறந்த நடை. (1)



சேது சமஸ்தானம் மஹாவித்வான் ஸ்ரீமது உபயவேதாந்தேத்யாதி
ஸ்ரீமான் சிற்றந்திக்காடு ஸ்ரீநிவாஸா சார்ய ரவற்களாற் றரப்பெற்றது.

ஸ்ரீதங்கவேல்ஸ்வாமின்ரு பாலவர்ய: வித்வான் மஹாஸ்கந்த புராணசாரம். சக்ரேப்ரபந்தம் த்ரவிடோக்திஜாலை: ஸம்ஸாரஹந்த்யை விதுஷாம் ஸுகாய. (1)



பர, கோ. இத்யாதி.
சென்னை வித்வான் ஸ்ரீமான் ச, பு, துருஸ்வாமி நாயடு அவர்கள்'

கட்டளைக் கலிப்பா.

நினையிலங்கயிலாதரனையன்பா லூங்குறப்பயில்காந்தபுராணமாம், வினைக்குய ஃதாலரிவேதனைகட்கும், வீயுமூப்பிறப்புப்பிணிக்கூற்றிற்குஞ், சுனைக்குகல்லமிழ்தந்தனைத் திப்புடைச் சூரியர் பருகித்தினைப் போச்சுவான், வனைதற் செய்தளித்தான் வசனமதா வாழ்சுர் சேடெழிற் றங்கவேற்சாமியே. (1)



நாகூர் ஸ்ரீமான் குலாம்காதிறு நாவலரவர்களாற் றரப்பெற்றது.

கொச்சகக் கலிப்பா.

மாமலையும் வாசுகியு மத்தமுமா ஞணுமெனத், தாமலையப் பாற்கடலைக் கடைந்தமுத தனைத்திரட்டித், தோமலையப் பல்கோடி சுரர்க்களித்தா னெனக்கூறு- சேமலையவ்வளவுடைய நீள் சடையான் செயலாங்கு. (1)

ஓராறு திருமுகமு மொருமயிலும் வடிவேலும், ஈராறு மலர்க்கரமுமிருமயிலு முடையான்றன், ஏராருங் காந்தமெனுங் கடல்கடைந்திட் டின்னூலாந், சேராகுமாரமுதைத் திரட்டியுரியவர்களித்தான். (2)

எத்திசையும் புகழ்கொண்ட விரும்பொதியி லெனுமலையான், பத்தியலுமாருத பாண்டிவள நாடான், நத்தியலும் பெரும்பணையும் பூங்காவு கனிசூழ்ந்து, முத்தமிழுங் குடியிருக்கு முகவையெனும் பேரூரான். (3)

அருமாணும் பன்மலரினகன் பொழிலு நாற்பாலும், பெருமதிளும் நிலக் தோங்கிப் பிறங்குபுகழ் வாணியெனும், ஒருமகளும் விமலையெனுமொருமகளு மாச்சிறந்த, இருமகளுமாறுமல் விளையாடு மெழின் மனையான். (4)

வார்தாங்கு முலைமடவார் வேளென்று மயறுங்கச், சீர்தாங்கு பேரழகு காற் குணமுஞ் சிறந்துள்ளான், பார்தாங்கு குடக்தோளிற் பகையவரைப் புறங்காணத், தார்தாங்கு தங்கவேற் சாமித் தமிழ்வலனே. (5)

வெண்பா.

முக்கனியொன் கோவமுத மென்கோதே னென்கோ, எக்கனியென் கோமற் றெவனென்கோ, மிக்கபுகழ் அங்கவேற் சாமி யகங் கன் றிருமாலாந், தங்க வேற்சாமி தமிழ்.



சிவகங்கை ஸ்ரீ.எஸ். பெரியசாமித் தேவரவர்கள்.

வெண்பா.

சருவ சனமகிழ்காந் தத்தின் கதையைத்,திருவசன மாகச்சிறக்க, மருவில்லா, அங்கவே லாரு மறுமுகன்று லைப் பணியுந் தங்கவேற்சாமி செய்தான். (1)

வருங்கவலை யொழித்திரப்போர்க் கனுதினமுஞ் செம்பொன்னள்ளி வரையா திந்து, கருங்கவலை யுலகதனிற் புகழ்படைத்த பாற்கரவேள் கருதப் பெற்றோன், நெருங்கவலை விழிமாதர் மதன்றங்கவேற்சாமி நேயன் செய்தான், சுருங்கவலைச் செய்பருதிபோல்வசன மன விருளைத்துரக்க மாதோ. (2)



இராமநாதபுரம் ஆலூர் ஸ்ரீ கிருஷ்ணகவி,

கந்தபத்யம்.

வசந்த்ராவிடகதகா ருசிரஸ் காந்தார்த்த மக்துலோகுலுசதுவ, ஙரசியிஞ் செதங்கவேலிதி யுசிதம் பகிஸிவுசி பொகடியுல்லமு பூசெ, அங்கிபலய் புலுநீசிகி செக்கடு, கொஸது சுநுவ்ருஷபமெக்குமாதோ, ஸங்கத்தமுகநு வுண்டநுசுங் கடஸாயக நுதிம் சகல வாஞ்சிதம்.

ஆண்டுகோண்டான் சுப்பிரமணியப் புலவரவர்களின் மருகர் பூச்சேரி
ஸ்ரீ சே, பழனி வேலுப்பிள்ளை யவர்கள்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியம்.

சாந்தமெனும் விரிகடலிற் கருத்தென்னு மேருமத்தைச் சாணவூன்றிச்,
சார்ந்தவிப்பூவுறை மாந்தர் போந்த செவிவாய் மாந்தத் தகையபோதந், தேர்
ந்த மனத்தாற்கடைந்து தெவிட்டாத வானந்தந்திகழ வெய்தி, யீந்தனனன்
னடைய மிழ்தந்து கனருட் கொடங்க வேலென்னுமாலே. (1)

கட்டழகன் றங்கவேற்சாமி யின்றன் பிட்டிலிசைக் கானங்கேட்டாற்,
பட்டமரமுந்தளிர்க்குஞ் சிலையுமெழு காயுருகும் பசுவுந்தான் செய், நட்டனை
விட்டின் னமிழ்தங் கொடுக்கும் விடவரவ முந்தனல்கு மென்னின், வட்ட
வுலகினி லிதனுக்கிணை சொல்லவே றென்றும் வகைகாணோமால். (2)



சென்னை திருவேட்டீச்சுரம், காக்களூர். சிங்காரவேள் முதலியார்.
மகனார், திரு. சிவ சங்கர பண்டிதர் அவர்களால் தரப்பெற்றது.

கங்கைமதி புனைசடிலத்திறைக்குபதே சித்தருளுங் கருணை மூர்த்தி,
செங்கையில் வேலெடுத்தடியார்க்கருள் சுரக்கும் பெருங்கருணைத் திறத்தி
னோடு, மங்களமார் சரிதையெலா மினிதுரைக்குங் காந்தத்தை மகிழ்ந்தியாரு
ஞ், சங்கையிலா தெளிதுணரத் தமிழ் வசனச்சுருக்கமதாய்ச் சாற்றினனால். 1

அன்னவன்யாரென வினவிலருந்தவத்தோர் மிகவிரும்பி யடைந்து வை
கக், கன்னலெலாங் கமுகெனவுங் கரும்பெனச் செஞ்சாலிகளுங் கலந்து தோ
ன்றிப், பொன்னகரங்கவலகெடு வளமலிந்த புகழ் முகவை புரந்து வாழும்,
மன்னவன் பாற்கரசேதுபதிக்கி னியமைந்தனனு மகிமையோனே. (2)

சந்தேப் பேரமுதந்தனையெவர்க்குமிக விரும்பித் தானஞ்செய்து, மங்கா
தபெருஞ்சீர்த்தி யெத்திசையு மிகவளர வளர்க்குஞ்சீரான், செங்காந்த ளலர்ந்
தமணங்கமழும் கந்தமாதனச் செஞ்சிகரிமேய, கங்காதரற் குமரனுக்கே யெக்
காலும் அடிமைசெயு மன்புளானே. (3)

கல்வியினிற் பேரறிவிற் கட்டழகி லிவன்போலக் காணோமென்றும், வில்
லியிற் சங்கிதவித்தை தனிலிவன்போல வேறாரென்றும், தொல்லுலகிற் பத்
பல ரிவ்வாறுரைக்க மகிமை பெறுந்தூயோனெல்லாம், வல்லவனற் சீர்கொ
ண்ட தங்கவேற்சாமி யெனும் வள்ளலானே. (4)

### வெண்பா.

ஒப்புயர் வில்லாமறையின் ஒண்பொருளெல்லாமினிது, செப்புமிசைகொண்ட பெருஞ்சீராளன், இம்பெரிய, தங்கவேற்சாமி தமிழ்வசனக் காந்தத்திற் செங்குங்கிடையா திணை, (5)



### சேலம்ஜில்லா டேங்கனிக்கோட்டை போர்ட் லோயர் சகின்டரிஸ்கூல் ஹேட்மாஸ்டர் கம. வே, சிவசுப்பிரமணிய வையரவர்கள்.

### எண்சீர்கழி னெடிலாசிரிய விருத்தம்.

மறையுணர்ந்து முளங்தேறு மாக்தரோடு மன்னுமவை யுணராரு முப்புமாறிங், இறைபுகன்ற புராணங்க ளீரொன்பானி லீசற்கா வமைந்திட்டவீரைந்தாகுந், திறற்சைவம் பவுடியமே பொற்புமிக்குந் திசழிலிங்க மார்கண்டங் காந்தமச்சம், அறலுலவுங் கூர்மமொடு வாராகம்மே யணிகுறட்ப்ரம்மாண்டமென வரைவர் மேலோர். (1)

புரமூன்று மெரித்தோற்குப் பொருந்தி நிற்கும் புராணங்களீரைந்திற் புகழான் மேவுஞ், சிரமாறு தரித்தோன்றன் சரிதஞ்செப்புந் திறந்தெழிற்பல் பொருண்மிகுத்த காந்தந்தன்னே, வாமாருங் கச்சியப்பன் கமலவாழ்ந்த வான்முனிவன் சம்பந்தன் முதலாவந்தோர், திரமாக விரிகொகையா வகுத்தா ரே னுஞ் சிறியோரு மெளிதுணரும் வகைத்தா னின்றே. (2)

அன்னகுறை தேர்ந்துவெளிற் றறிஞரோடு மறிவகலாச் சிறுவர்சிறுமியருந்தோரட், பொன்னருவி பொழிகிற்றென் றினியசொல்லாற் புகன்றனன் கத்தியமாப் புகழான் மிக்கோன், என்னினிய வேற்செம்மற் றெக்காலத்து மிடையகலா வடித்தொண்ட னெழிலன்வேலன், தன்னனைய குணமிக்கான் சேதுவேந்தன் தன்மருகன் கந்தவிலா சங்கொண்டோனே. (3)

உ

சிவமயம்.

வேலுமயிலும் துணை.

## ஸ்ரீ கந்தபுராணச் சுருக்கம்.

### விநாயகர் காப்பு.

திகடசக்கரச் செம்முக மைந்துளான், சகடசக்கரத் தாமரை நாயக, னகடசக்கர விண்மணியாயுறை, விகடசக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம். (1)

## சுப்பிரமண்ணியர் காப்பு.

மூவிரு முகங்கள்போற்றி முகம்பொழி கருணைபோற்றி, ஏவருந்துதிக்க நின்ற விருறு தோள்போற்றி காஞ்சி, மாவடிவைகுஞ் செவ்வேண் மலரடி போற்றியன்னான், சேவலுமயிலும்போற்றி திருக்கைவேல் போற்றிபோற்றி 2

## நூற் பயன்.

இந்திராகிப்பார் மேலின்பமுற்றினிது மேவிச், சிந்தையினினைந்த முற்றிச் சிவகதி யதனிற் சேர்வ, ரந்தமிலவுணர் தங்களுடல் கெடமுனிந்த செவ்வேற், கந்தவேள் புராணந்தன்னைக் காதலித்தோது வோரே. (3)

## வாழ்த்து.

வான் முகில் வழாது பெய்க மலிவளஞ் சுரக்கமன்னன், கோன்முறை யரசு செய்க குறைவிலாதுயிர்கள் வாழ்க, நான் மறையறங்க ளோங்க நற்றவம் வேள்விமல்க, மேன்மை கொள்சைவநீதி விளங்குகவுலக மெல்லாம். (4)

## சிவபெருமான்.

திருவந்த தொல்லைப்புவனத் தொடு தேவர்போற்றிப், பெருவந்தனை செய்த றிதற்கரும் பெற்றியெய்தி, யருவந்தனையு முருவத்தையு மன்றி நின்ற வொருவன்றனது பதந்தன்னை யுளத்துள் வைப்பாம். (5)

## சிவசத்தி.

செறிதருமுயிர் தொறுந்திகழ்ந்து மன்னிய, மறுவறுமானிட மரபின்மேவியே, யறுவகை நெறிகளும் பிறவுமாக்கிய, விறைவிதன் மலரடி யிறைஞ்சியேத்துவாம். (6)

## வைரவக்கடவுள்.

பரமனை மதித்திடாப் பங்கயாசன, னொருதலைகிள்ளியே யொழித்தவானவர், குருதியுமதந்தையுங் கொண்டுதண்டமுன், புரிதருவடுகனைப் போற்றிசெய்குவாம். (7)

## வீரபத்திரக் கடவுள்.

அடைந்த வியுண்டிமே மரர்யாவரு, முடிந்திட வெருவியே முனிவர்வெருவிய, குடைந்திடு மாமகமொடியத்தக்கனைத், தடிந்திடு சேவகன் சரணம்போற்றுவாம். (8)

### திருநந்திதேவர்.

ஐயிருபுராண நூலமலற்கோதியுஞ், செய்யபன் மறைகளுந் தெரிந்து மாயையான், மெய்யறு ளுள்புகல் வியாதநீட்டிய, நையடுநந்திதன் கழல்கள் போற்றுவாம். (9)

### திருத்தொண்டர்கள்.

அண்டரு நான்முகத்தயனும்யாவரும், கண்டிடவரியதோர் காட்சிக்கண்ணவா, யெண்டகு சிவனடி யெய்திவாழ்திருத், தொண்டர்தம் பதமலர் தொழுது போற்றுவாம். (10)

### கலைமகளார் துதி.

தாவறு முலகெலாந்தந்த நான்முகத், தேவுதன் றுணைவிபாச்செறிந்த பல்லுயிர், நாவுதோறிருந்திடு நலங்கொள்வாணிதன், பூவடிமுடிமிசைப்புனைந் துபோற்றுவாம். (11)

உ

சிவமயம்.

வேலுமயிலும் துணை.

# ஸ்ரீ கந்தபுராணச் சுருக்கம்.

(வசனம்.)

## க-வது உற்பத்தி காண்டம்.

### விருத்தம்.

பாச நீக்கித்தன்பாற்படு நல்லரு, ளீசனல்குமியல் பெனவெய்தினோர், தேசுமாற்றிச்சிறந்த தன்மெய்யொளி, வீசுகின்றது வெள்ளியங்குன்றமே,

திருவருள் விளங்கும் ஒப்புவமை யில்லாத திருக்கயிலாயத்திற் பரமேஸ்வரி இடப்பாகத்தில் விளங்க வேதகாயகனாகிய சிவபிரான் கொலுவிருக்குஞ் சமயத்தில் லோகநாயகியாகிய பராபரையானவள் மனதில் ஒன்றைநினைத்துத் திருமேனி நடுங்கச் சடுதியிலெழுந்து பரமசிவத்தின் பாதாரவிந்தங்களைச் சேவித்து ஓ நாயகனே! அடியேன் மனக்கவலை நீங்கும்படிக்கு அநுக்கிரகம் செய்யவேண்டும், அதாவது தேவரீரை இகழ்ந்த தக்கனிடத்தில் நான் பலநாள் வளர்ந்தது மன்றி அவன்பெண் என்னும் பொருள் உள்ள தாக்ஷாயணி என்னும் பெயரையும் பெற்றிருக்கின்றேன். ஆதலால், அந்தநாமத்தையும் அவனால் தரப்பெற்ற இந்த உடலையும் தாங்கி இருக்கப் பயப்படுகின்றேன். அக்கவலை நீங்கி நான் மகிழ்ச்சி யடையும்படிக்குக் கடாக்ஷிக்கவேண்

டுமென்று அன்பினால் எமது அன்னை விண்ணப்பம் செய்யக்கேட்டுப் பரமேஸ்வரன், ஓ! சங்கரி! பர்வதராஜன் உன்னைப் பெண்ணாகப் பெறவேணுமென்று நம்மைக்குறித்து அரிய தவங்கள் செய்திருக்கின்றான். நீ அவனுக்குப் புத்திரியாகப் போய்ப்பிறந்து பின் நம்மைக் குறித்துத் தவம்செய்தால் நாம்வந்து உன்னைக் கல்யாணம்செய்து கொண்டு இவ்விடம் வருவோம் என்று திருவாய்மலர்ந்தனர். அவ்வண்ணமே, அம்பிகை திருக்கயிலாயத்தை விட்டு இமையமலை வரையின் சிகரத்திலுள்ள புஷ்பவகைகள் மலிந்த மதுரஜலத்தடாகத்தில் ஓர் வெண்டாமரையைத்தொட்டிலாகக்கொண்டு அதிற் குழந்தையாய் விளையாடியிருந்தாள். பக்கத்துச்சோலையில் தவம்செய்திருந்த பர்வதராஜன் அதைக் கண்ணுற்று அடங்கா மகிழ்ச்சியடைந்து குழந்தையை வாரி எடுத்துத் தனது தருமபத்தினியாகிய மேனையைக்கூவி நமது அன்னைவந்தாள்! வந்தாள்! நமது தவம் இன்றைக்கு ஈடேறியது! பிழைத்தோம்! பிழைத்தோம்! இந்த ஜெகன்மாதாவைப் போற்றிவளர்க்கக்கடவை! என்று கொடுக்க, அவள் பரவசத்துடன் கைகளிற் பெற்று நாளொரு வண்ணமும் பொழுதொரு மேனியுமாய் வளர்த்து வருங்காலத்தில் அம்பிகைக்கு நான்காம்பிராயம் வந்துற்றது. அப்போது லோகநாயகி தனக்கு அநுக்கிரகம் செய்திருந்த பரமசிவனைக் குறித்துத் தவம் செய்ய நினைவுகொண்டு தனது பிதாவினிடம் இமய வரைச்சாரலில் தனக்கு ஓர்தவச்சாலை இயற்றித்தரல் வேண்டுமென க்கேட்டுக்கொண்டனள். பர்வதராஜன், நீ நினைத்தபடி முடிவதற்கு இன்னம் சிலகாலம் போகவேண்டும், அதுபரியந்தம் எங்கள் பாவங்கள் தீர இவ்விடத்தில் இருக்கவேண்டுமென்று பரிவுடன் சொல்ல, அம்பிகை பரமசிவத்தின் அருளைக் கொண்டு நான் முடிக்க இருக்கும் தவத்தைத் தடைசெய்ய வேண்டாமெனப் பின் அவன்நிருமித்துக் கொடுத்த தவச்சாலையை உற்றுப்பாங்கிமார்களை ஏவலுக்கு வைத்துக்கொண்டு மனதை ஒருவழிப் படுத்தித்தவம் செய்திருந்தனள். பார்வதியார் இவ்விதமாய்த்தவம் செய்திருக்கும்போது சூரபதுமனானவன் பரமசிவ கடாக்ஷத்தினால் பெற்ற ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கு இறைவனாய்க் கொடுங்கோன் முறையாய் அரசு செலுத்தித் தேவரை மிகவும் வாட்டி வந்தனன். அதுகாலையிற் கயிலாயத்திற் பூர்வம் தாம்வேதத்தின் அந்தப்பொருளை அநுக்கிரகம் செய்த சனகர் சன

ந்தனர் சனற் குமாரர் சனாதனர் ஆகிய இந்நால்வருக்கும் பரமசிவன் மோனநிலையைக்காட்டி யோகத்தில் இருந்து விட்டனர். காரணனாகிய கண்ணுதல் மௌனத்திருந்தமையால் தேவர்களும் அரம்பையர்களும் பூமியின்கண் இராநின்ற சர்வப் பிராணிகளும் காமவின்பக் குறிப்பினை வெறுத்திருந்தனர். இதுசமயத்திற் சூரபதுமன் குமாரனாகிய பானுகோபன் பொன்னுலகத்திற் படையெடுத்து இந்திரகுமாரனையும் மற்றத்தேவர்களையும் பிடித்துச் சிறையிலிட்டதுமன்றி அவர்களைத் தகாதபணி விடைகளைச் செய்யச்சொல்லித் தொந்தரித்தான். தேவேந்திரன் சில தேவர்களுடன் தப்பி இமயவரைச்சாரலுக்கு ஓடி மறைந்து அவ்விடத்தில் இத்துன்பங்களை ஒழிக்கும் நோக்கமாய்ப் பரமசிவனைக் குறித்துத்தவம்செய்தான். பரமசிவன் அவனுக்குப் பிரசன்னமாகித் தேவராஜனே! வருந்தவேண்டாம். ஆதியில் தக்கன் நம்மை இகழ்ந்து செய்த யாகத்திற்கு நீங்கள் உடன்பட்டிருந்த பாதகத்தினால் இத்தனை வருத்தங்கள் நேர்ந்தன. அதுவும் நீங்கும்காலம் சமீபித்தது. இன்னும் சிலபோதில் நம்மிடத்து உதிக்கப்போகின்ற குமாரனால் உங்கள் துன்பங்கள் அனைத்தும் நீங்கிச் சுகத்தில் இருப்பீர்களென்று தேறுதல் சொல்லிப்பூதநாயகன் கயிலைக்கு எழுந்தருளினார். பின் இந்திரன் சந்திரசேகரன் வாக்கியத்தை நினைந்து நினைந்து களித்தவனாய்ப் பின் வருமாறு நினைக்கலாயினான். சிவபிரான் இப்போது சனகாதியருக்கு யோக சாதனையைக் காட்டி விருப்பை ஒழித்திருக்கின்றார். பராசத்தியாரோ இமயவரையில் தவம்செய்திருக்கின்றனள். இவர்கள் இருவரும் கூட்டுறவில்லாமற் குமாரன் எப்படித் தோற்றுவன்! இந்தச்சந்தேகத்தைத் தெரியவேண்டுமென்று துரிதமாய்த் தேவர்களுடன் தேவேந்திரன் படைப்பின் தொழிலின்றி மனவாட்டனுடன் சிங்காதனத்தில் வீற்றிருக்கின்ற பிரமதேவரைக் கண்டு வணங்கிச்சூரன் கொடுமையையும், பரமசிவன்தனக்கு அநுக்கிரகித்துப்போன செய்தியையும் சொல்லி இனி நானும் தேவர்களும் பிழைக்கும் வகையைக் கட்டளை யிடவேண்டுமென்று கேட்கப்பிரமன் இரங்கி, ஓ! இந்திரனே! அதற்குச் சில முயர்ச்சிகளைச் செய்து முடிக்கவேண்டியதால் மகா விஷ்ணுவைக்கலந்து பேசிநடத்தவேண்டுமென நிதானித்துப் பிரமதேவர், தேவராஜன்சகிதம் மாதவனை அடைந்து வணங்கித் தங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லிக்கொள்ள, அப்போது முராரியானவர் சர்வப்பிராணிகளும் காமவலையிற்பட்டு இன்பமடைவதாகப் பஞ்சபுஷ்பாணங்களைப் பிரயோகித்துத்திரிலோ

க்களிறும் தன் அரசுசெல்ல விருக்கின்ற நமது புத்திரனான மன்ம தனை வேண்டிப் பரமசிவனிடத்திற்கு அனுப்புவிராயின் அவன் முயற் சியினால் அரன் யோகத்தினை நீங்கிப் பார்வதியைக் கலந்து ஒரு குமா ரனைத்தருவர் அவரால் உமது குறைகள் அனைத்தும் நீங்கிவாழலாம் என்றுரைத்தார். அப்போது பிரமன் மன்மதனை அச்சபை நடுவே வர நினைத்தமாத்திரத்தில் அங்ஙனம் அவன் வந்து தோன்றினன். பிரமன் அவனைப்பார்த்து ஓ! மன்மதா! நீ பரமசிவத்தின் பேரில் உன் பாணங்களைச் செலுத்தி அவர் நிலையைக்கெடுத்து விரகமுண்டாக்கி ப்பருவதராஜ புத்திரியைக்கூடும்படி செய்வையே ஆனால் நாங்கள் எல் லோரும் க்ஷேமம் அடைவோம். ஆதலால் எங்கள் நிமித்தம் நீவிரை வில் போகவேண்டுமென உரைத்த காரியம் செவிபுகாமுன்னம் அவ ன் உள்ளமெங்கும் தகிக்கப்பட்டு வருந்திப்பின் மனத்திடம் செய்து கொண்டு பிரமனைக்குறித்துச் சர்வேஸ்வரனை எனது அற்பமாகிய பா ணங்களை எவிச்செயங்கொள்ளப் போவேனாயின் இந்தப்பிராணனுட ன் யான் மீண்டுவருவதுமுண்டோ! பற்றற்றபரம் பொருளை மயக்கு ம் விதம் யாது! அதைத்தவிர எனக்கு வேறேயாதும்கட்டளையிட்டால் நான் செய்யத்தயாராயிருப்பேன் என்று பலவிதங்களாக யாது எடுத் துச் சொல்லியும் பிரமனுதியர்கேளாததினாலே சித்தசன் இவர்கள் சா பத்தில் நாம் நசிப்பதிலும் பரமேஸ்வரனால் நாம் நாசமடைவது மேன் மை என்பதாகக்கொண்டு கயிலையங்கிரியை நோக்கிச் செல்வதாயி னன். பிரமன் இந்திரன் முதலானதேவர்களும் சித்தசனுடையசெய்தி தெரியவேண்டுமென்று கயிலைபங்கிரியின் ஓர் பாரிசத்தில் வந்தமர்ந் திருந்தனர். மன்மதன், காவல்கொண்டிருக்கும் நந்திதேவரின் அனும தியின்பேரில் தேவாதிதேவனாகிய எமது கர்த்தன் மோனத்திருக் கும் தலத்தை நெருங்கிச் சிவனுதனைத் தெரிசித்தவுடன் பயப்பிராந்தி கொண்டு சரீரம் வியர்க்க மனங்கலங்கிக் கரத்திற் பற்றிய தநுசுடன் கீழே விழுந்து மரணசோபத்தை அடைந்தான். இதனைப்பக்கத்தில் நின்ற இரதிதேவிகண்டு, நமது கணவன் மாண்டனனே, என்செய் வேனென அவனை எடுத்துத் தனது மடியிற் கிடத்திமலர் விசிறிபாற் சிறுகாற்றெழ விசியகாலத்தில் அவன் சற்றுநேரத்தில் உணர்ச்சி உண்டாய் க்கண்களைத்திறந்து எழுந்து பிரிய நாயகியாகிய இரதிதே விக்குத் தேறுதலை பலகூறித்தேற்றப் பின் மன்மதன்தனது மனதிற் கும்கவும்தயிரியத்தை செப்பிக்கொண்டுவில்லை நேராகப்பிடித்துப்பரமன் இருதய கமலத்திற்குச்சரியாகக் குறிபார்த்துப் பஞ்சபுஷ்ப பாணங்

கணையும் பிரயோகித்தான். அவைகளும்தமது வீரங்களைக்காட்டி அதி வேகமாய்ப் போய் கர்த்தன் தேகத்தில் தாக்கியமாத்திரத்தில் அவர் தம் அனல் விழியினைச்சற்றே திறந்து மன்மதனைப்பார்க்க அதிற்பெருகிய சுவாலை தாக்கி மன்மதன் உடல்கரிந்து தூளாயெரிந்து போனான். இரதிதேவியானவள் தனது ஆசைநாயகனுக்கு நேர்ந்ததைச் சகிக்காதவளாய்ப்பற்பலவாகப் பன்னிபன்னிப் புலம்பியிருந்தாள்.

இவைநிற்க,கிழக்குத்திசை வாயிலினிடத்திற்சேர்ந்து பரமனைத்தெரிசிக்கக்காலம் பார்த்திருந்த பிரமனாதி தேவர்கள் தாம் அனுப்பிய மன்மதன் சாம்பலாய் எரிந்துபோன சங்கதிதெரிந்தவுடன் மனதிலே கலங்கிப் புத்திவானாயிருந்த ஒரு புத்திரன் சடுதியில் மாண்டவிடத்துப் பிதாவானவன் களைத்து வருந்து மாறுபோலத் துக்கசாகரத்தின் மூழ்கிவாடிப் பின் யாவரும் ஒரு முகமாய்ப் பெருமானைப் போற்றிவேண்டுவதே முக்கியமான காரியமென்று ஆலயக்கீழ்த் திசைக் கோபுரவாயில் முன்னம் கூட்டமாய் நின்று கல்லென்னும் ஓசைபெறத்துதிப்பதாயினர். சிவபிரான் அவைகளைத்தமது திருச்செவியிலேற்று நந்திதேவரைக்கொண்டு அவர்களைத்தமது முன் வருவித்தகாலத்துத் தம்மைவணங்கி நின்ற தேவர்களை நோக்கி மனவாட்டத்துடன் நீங்கள் வருந்தி முறையிடுவதற்குக் காரணம் என்னவென்று கேட்டனர். தேவர்கள் வாய்புதைத்துச் சூரனின் கொடுமையினின்றும் எங்களை விடுவிக்கத் தேவரீர் முன் திருவாய் மலர்ந்தவண்ணம் கடாக்ஷித்தருள வேண்டுமென்று இரந்துகேட்டுக் கொண்டார்கள். அப்போது தேவதேவன் பிரமனாதியரிடத்திற் கிருபையுற்று ஓ! தேவர்களே! கலங்காதீர்கள்! உங்கள் கருத்தின் வண்ணம் முடிக்கக்கடவோம். இன்று முதல் விசனம் என்பதை மறந்துவிடக்கடவீர்கள். பார்வதியைத்திருக்கல்யாணம் செய்கின்றோம் என அநுக்கிரகம் செய்யத்தேவர்கள் மகாமேருவைச்சேர்ந்து சிவபிரானை வழிப்பட்டிருந்தனர்.

அவர்கள்நீங்கியபின் ஓர்பாரிசத்தில் மனவருத்தத்துடன் காலம் பார்த்திருந்த இரதிதேவியானவள் லோகநாயகன் எதிரில்வந்து என் பிராணநாயகன் செய்த அபராதத்தினைப் பொறுத்தருளி அவரைப் பழயபடியேசிவத்தனுக்கிப் புருஷப்பிச்சை தரவேண்டுமெனக் கரங்களை நீட்டி இரக்கும்போது ஒப்பற்றபரமேஸ்வரன் அவளிற்கிரங்கப் பார்த்து பெண்ணே! நீ புலம்பி வாடவேண்டாம், கௌரியினை இமயவ

ரையிடத்து நாம்பாணிகிரகஹணம் செய்கின்றகாலையில் உனது மணவாளனாகிய மன்மதனை எழுப்பித்தருவோமெனத்திருவாய்மலர்ந்தனர். பின் சனகாதிகள் சிவபிரான் திருவடிகளிற் பணிந் தெழுந்து கடவுளே! தேவரீர் கடாக்ஷத்தினால் அடியோங்கள் மனவியாபாரங்களைப்போக்கி க்கிருதார்த்த ரானோமென்று பரிவாகப் போற்றிப்பரமனிடம் விடைபெற்று நீங்கினர்..

பரமேஸ்வரன், தவம்செய்திருக்கும் பர்வதராஜன் புத்திரியாகிய பார்ப்பதியாருக்குத் தமதிடத்திருக்கின்ற அன்பின்திறங்களைப் பலர்க்குக்காட்டத்திருவுளங்கொண்டு அவற்றைச்சோதிக்கவேண்டி அகண்டாகாரமாகிய தமது தேகத்தைக்குறுக்கி வாமனட்படிவந்தாங்கிவேதபாரகராகிய ஒருபிராமணக்கிழவனைப்போலத் திருவுருவெடுத்துமெல்லமெல்ல நடந்து இமயகிரியினைச்சேர்ந்து பார்வதியார் தவம்செய்திருக்கின்ற சாலைக்கருகில் வருவதை வாயில் காத்திருக்கின்ற கன்னியர் கண்டு இவர்மகானென அவரை எதிர்கொண்டு வணங்கி உபசரித்துச் சுவாமிகாள்! இத்தலத்திற்கு எழுந்தருளிய கார்யம் யாதோ திருவுளம் பற்ற வேண்டும் எனப்போற்றினர். நாமரூபமற்றபரமன் ஓ! பெண்களே! மலைபரையன் புத்திரியின் அரியதவங்களைக்கண்டு களிக்கும்படிக்கு வந்தனமென்றார். மகாபாக்கியமெனச் சில கன்னியர் ஓடிப்பார்வதியாருக்குத் தெரிவித்தபோது அவள் உள்ளே அழைத்து வாருமெனக்கட்டளையிட அவர்கள் விருத்தப்பிராமணரை அழைத்துவந்து அம்மன் முன்விடக்கண்டு எமது பரமனுக்குப் பக்தராகக்காணப் படுகின்றதென அவரை எதிர்சென்று அம்மன் வணங்கி நின்றகாலையில் ஓர் தோழிப்பெண் பக்கத்திலிருந்து ஓர்பீடத்தினைக் கொண்டுவந்து வைத்து அந்தக்கபடசந்நியாசியை வீற்றருளச்செய்தாள். அத்தருணத்தில் அய்யனவர் பார்வதியாரை அதிகப்பிரியத்துடன் பார்த்து ஓ! பெண்கள் சிகாமணியே! உமது அழகிய திருமேனி வாடிவதங்கும்படிக்கு அரியதவங்களைச் செய்கின்றது என்ன பெற்றினைக்கருதி எனக்குறித்துக்கேட்கப் பார்வதியார் தம்பக்கத்தில் நின்ற பாங்கிக்கு மறுமொழி சொல்லும்படி சைகை செய்ய அவள் திருநேத்திர தாரியாகியசிவபிரான் தம்மைக் கடிமணமுடித்துத்தமதிடப்பாகத்திற் கொண்டாளுங் கருத்தினளாய் எமதிறைவியானவள் இத்தகைய அரிய தவங்களைச்செய்து வருகின்றனள் என்று சொல்லக் கேட்டதேவ

தேவோத்தமரான பரமன் நகைத்துப்பேசுகின்றனர். ஓ! பாக்கியே! கேட்பாயாக. கங்காதரமூர்த்தி இவளுக்கு எளிதிற்கிடைக்கப்பட்டவனோ? அல்லது ஒருக்கால்வரினும் வேண்டியபேற்றினைத்தருவதன்றி இவளை ஒரு பொருளாய் நினைத்துப் பாணிக்கிரஹணம் தான்செய்வானோ! ஆதலால் உங்கள் இறைவியாகிய உமையவள் தவநிலை நீங்கிச் சவுக்கியமாய் இருப்பதே பலன்என்று சிவபிரான் சொல்லிய விசேஷங்களைக்கேட்ட இமயவள் கோபங்கொண்டு மனம் நொந்து பெருமூச்செறிந்தவளாய் நாணத்தைப்போக்கி அத்தேவர் நேரில் இதனைச் சொல்வதாயினள். ஓ! விருத்தரே! இவ்வாக்கியத்தைக் கேட்பீராக, பரமேஸ்வரன் இரங்கிவந்து என்மனவிருப்பத்தினை நிறைவேற்றுமற் போவாராயினும் நான்தவ நிலையினை விடுவேனோ? இன்னமும் வெகு காலம் கடினமாகியவிரதங்களைச் செய்து பிராணனைவிட விருக்கின்றேன். கிழவனாகியதால் புத்தி மயங்கித் தகாதவார்த்தைகளைச் சொன்னீர் என்று பார்வதியார் சிறிச்சொல்லக் கபடப்பிராமணர் ஓ! பெண்கள் சிகாமணியே! நீமிகவும் அறியாதவள். முக்கண்ணனாகிய பித்தன் வளப்பங்களைச் சொல்லக் கேட்பாயாக. உலகநடத்தைகள் தெரிந்தவனல்ல. உடுப்பதோ புலித்தோல். வாகனமோ எருது. ஆபரணங்களோ அசுபமாகிய எலும்புந்தலையும் பன்றிக்கொம்பும் சர்ப்பமுமாம். பாத்திரமோ ஓடு. புசிப்போகொடிய விஷம். இருக்கும் இடமோ சுடுகாடு. அணிவதோ அமங்கலமாகிய வெள்ளெருக்கு அருகு. பூசுவதோ அசுசியாகிய சாம்பல். கரங்களில் ஏந்துவதோ சூலம் தீமான் உடுக்கை. சேனைகளோ பூதங்கள். இன்னான் இன்னகுலத்தான் என அறிவதற்கு முதல் தாய் தந்தையாரே கிடையாது. மேலும் நாமரூபமில்லாதவன். அவனுக்கு இத்தகைய பலசிறப்புகள் தான் உண்டு. அவைகளனைத்தும் உன்பட்சத்தில் சேரும்படிக்கான கருத்தைக்கொண்டோ அரியதவங்களைச் செய்து வாடுகின்றனை? உன்னைப்போன்றவளுக்கு இப்படிப்பட்டவனை இச்சிப்பது அழகோவென்று சிவபிரான் சொல்லியதைப் பார்வதியார்கேட்ட மாத்திரத்தில் திருக்கரங்களினால் இருசெவிகளையும் மூடிக்கொண்டு சிவநாமங்களைச் ஜெபித்து வருந்தினவளாய் அதிகக்கோபத்துடன் துன்பத்தில் ஆழ்ந்து இதனைச்சொல்வதாயினள். ஓ! கிழப்பிராமணனே! கேட்பாயாக, எமதுகர்த்தனிடத்தில் உன்மனதிற் சிறிதேனும் பக்திவைராக்கியங்களின் திறமானது காணப்படவில்லை. நீ கொண்டிருக்கும் சிவவேடத்தைப் பார்க்குமிடத்துப் பட்சிக்

கூட்டங்களை வஞ்சித்துப்பிடிக்கும்படி வேடன் தனதுசிரத்தில் தழைகளைக் கட்டிக்கொண்டு போகும் விதம்போலிருக்கின்றது. எமது கர்த்தனை எவ்வளவும் மதியாமற் புறங்கூறவல்லகடின சித்தத்தையுடையகள்ள வேடந்தரித்து வந்த மூதியனே! இவ்விடத்தைவிட்டுச் சீக்கிரம் அப்புறம் போய்விடக்கடவை யென்று பார்வதியார் பேசியகாலத்தில் கபடப் பிராமணர் அம்மையை நோக்கி நகைத்தவராய் ஓ! பெண்கள் அமுதமே! ஏன் அவசரப்படுகின்றனை உனது மங்களகுணங்களைக் கேள்வியாய் அதிக மையல்கொண்டு வந்த என்மனக்கருத்தைக்கேட்டறியாமற் புறம்பிற் போ போவென்றுசொல்வதென்னை! வெகுதூரத்திலிருந்து வருந்தி இவ்விடம் சேர்ந்தது வேதச்சடங்கின்படி உன்னைத் திருக்கல்யாணஞ்செய்து கொண்டுபோவதற்காகும் அது தெரியாதபடிக்குத் தூரத்துநின்று யென்று மாயக்கோலம் பூண்டு வந்த சிவபிரான் சொல்லியதைப் பார்ப்பதியார் கேட்டமாத்திரத்திற் திருச்செவிகளை மூடிச்சகிக்கப் படாமையால் மனம் வருந்திச்சரீரம் ஆடிக்கத் துக்கித்தவளாய் இரக்கமற்ற இக்கிழப்பிராமணன் இவ்விடம்விட்டுச் செல்பவனாகவும் காணப்படவில்லை நாமேபோய்விடுவது நலமென்றெண்ணி மிருதுவாகிய திருவடிகள் நோவ வேகமாய் ஒரு மறைவிடத்தை நோக்கிச் செல்லுகின்றபோது பரமசிவமானவர் உமையவளது மனவுறுதி முதலியவைகளுக்குக் கிருபை உண்டாகித் தாம் கொண்ட கோலத்தினை மாற்றிச் சிவகணங்கள் முதலியோர் சூழ்ந்துபோற்ற ரிஷபவாகனரூடராய்க் காட்சிதந்தார். இவ்வாறு பிறப்பிலியாகிய தம் கணவன் தோற்றியதைப் பராபரை தெரிசித்துப் பலதரம் பூமியில் விழுந்து சேவித்து அறிவினளாகிய நாயினேன் பேசியகுறை பாடுகளைப்பொறுத்தருளல் வேண்டும் இறைவனே! என்றுமிகவும் வருந்தி நிற்கப்பரமேஸ்வரர் களித்து நீ முன்னம் பேசியவைகளை நாம் தோத்திரங்களாகக் கொண்டனம். உன்னைத்திருமணம் செய்வதற்காக நமது பரிவாரங்களுடன் நாளையத்தினம் வருவோமென்று திருவாய்மலர்ந்தருளிப் பரமேஸ்வரன் மறைந்தனர். பருவதராஜன் இவைகளைக்கேட்டு அளவிலா ஆனந்தக்கடலில் ஆழ்ந்துதமதுபுத்திரியினிடம் வந்து இனி அரமனைக்குப் போவோமென்று அவளை அழைத்துவந்து சேர்ந்து களித்திருந்தனன்.

மூலகாரணக் கடவுளாகிய பரமேஸ்வரர் வெள்ளியங் கிரியினைச்சேர்ந்தவுடன் அகஸ்தியர் முதலிய சப்தரிஷிகளையும் வரவழைத்தனர்.

அவர்கள் பரமன்முன் அதிவேகங்கொண்டு சென்று அடியோங்களுக்கு ஆகும் தொண்டினைக் கட்டளை யிடவேண்டுமென்று விண்ணப்பம்செய்ய, நீலகண்டவன் அவர்கள்மேல் திருக்கண்சாத்தி நீங்கள் நமக்குப்பார்வதியை இத்தினமே திருமணமுடிக்கும் படியாகப் பேசி முடித்து விரைவில்வரக்கடவீரெனச் சப்தரிஷிகளும் மலையரசனுடைய பரிபூரண சம்மதத்தைத்தெரிந்து மீண்டு தேவ தேவனுக்கு அறிவித்துத் தம்பதிக்கு வருதி பெற்றுக்கொண்டனர்.

இப்பால் மலையரையனனவன் தேவர்கள். பணிவிடைகளை முடித்து வருபவனாகிய மயனை மனதில் நினைத்தனன். அவன் அரசன் முன் வந்து பணிந்து தொழில் யாது என வேண்டினன். பரமசிவனுக்கு உமையவளை திருக்கல்யாணஞ்செய்து தரவிருப்பதால் இம்மலைதனைச்சூழ்வர விருக்கின்ற நகரத்தினைப் பொன்னுலகத்திலும் மேம்பாடாக அலங்கரிக்கக்கடவை யென்று அரசன் சொல்ல, அவன் அவ்விதமே அற்புத அலங்கார முதலியவை செய்து அவனை மிகமகிழ்வித்தான். கிரிராஜன், பலகோடி தூதுவரை வருவித்து மகாவிஷ்ணு பிரமதேவன் தேவேந்திரன் முதலிய தேவர்களுக்குத் திருக்கல்யாண மகோற்சவ சம்பிரமத்தினை அறிவித்து வரக்கட்டளையிட்டான். ஸ்ரீ மகாலெட்சுமி சரஸ்வதி முதலியோர் பார்வதியை மேலாகஅலங்கரித்துத் தேவகன்னியர் சூழ மங்கலவாழ்த்துக்களைப் பாடிக்கொண்டிருந்தார்கள். அப்போது, மலையரையன் தனது சுற்றத்துடன் கயிலாயநாதனிடம் சென்று தாழ்ந்து திருக்கல்யாணத்திற்குக் கிருபை செய்து இமயவரையினிடத்திற்கு எழுந்தருள வேண்டுமெனப் போற்றி நிற்கக்காலகண்ட மூர்த்தி இத்தினமே இமயத்திற்கு வருகின்றனம், நீமுன்போய் ஜாக்கிரதையாயிருவெனத் திருவுளம்பற்ற அவன் விடைபெற்றுத் திரும்பித் தன்னகரை அடைந்து பரமசிவத்தினை எதிர்பார்த்திருந்தனன்.

இமயவான் சென்றபின் பரமசிவமானவர் பூதகணங்களும் சூழத் திருக்கயிலையைவிட்டு இமயகிரியினைச்சேர்ந்த காலத்துத் திருமணச் சம்பிரமத்தினைத் தெரிசிக்கும்பொருட்டு மேல் அண்டங்களினிடத் தடங்கியிருக்கின்ற புவனவாசிகளனைவரும் ஏககாலத்தில் அவ்விடத்திற் கூடியகாரணத்தாற் சுமைமிகுதிப்பட்டுப் பூமண்டலமானது தேவர்கள் வருக வடபக்கம் தாழ்ந்து தென்புறம் மிகவும் உயர்ந்

௩௫. அப்போது பரமசிவம் அகஸ்திய முனிவரை அழைத்து ஓ! குறுமுனியே! நீ தென் தேசத்தைச்சேர்ந்து பொதிகைப் பருவதத்தில் வசித்துத்தவஞ் செய்திருப்பாயாகிற் பூமண்டலஞ் சமமாகிச் சவுக்கியமடையுமென்று சொல்லியகாலத்தில், அகஸ்தியர் மனம் வருந்துதலைக்கண்டு கர்த்தன் நாம் நீயிருக்கும் பொதிகை மலையிற் பார்வதியுடன் எழுந்தருளித் திருமணக்கோலத் தெரிசனையைக் காட்டுவோமென அருள்செய்தனர். பின்கும்பமுனிரானவர் அதிசீக்கிரமாக நடந்து போகும்போதுமாயையின்திறம் பெற்றகிரவுஞ் சகிரியையும், தனக்கு நிகரில்லையென்று இறுமாந்திருந்தவிந்தகிரியையும் மங்கும்படிக்கு அடக்கி ரிஷிகளை வஞ்சித்துக்கொன்று தின்றிருந்தவில்வலன் வாதாவி என்னும் இராட்சதப் பாதகரையும் அதம்பண்ணினவராய்ப் பரிசுத்தமாகியகாவிரி நதியினைக்கமண்டலத்திலேந்திப் பொதியவரையைச் சேர்ந்து சிவபிரான் திருக்கோலத்தினை மனதிற் சிந்தித்திருந்தனர். அக்காலத்திற் சகலபிராணிகளும் மனக்களிப்படையும்படி வடபக்கமும் தென்பக்கமும் தராசுத்தட்டினைப்போலச் சமமாகநின்றது. இப்பால்மலையரையன் கட்டளைப்படிக்கு எமது இறைவியாகிய பார்வதியானவள் சகல ஆடம்பரங்களுடன் ஸ்ரீமகா லெட்சுமியின் கரத்தினைப்பற்றிக் கொண்டு சரஸ்வதிதேவி அருகில் அம்மையின் பெருமைகளைக் கொண்டாடிவரக் கல்யாண மண்டபத்தினைச்சேர்ந்து பிறப்பிலியாகிய பரமசிவத்தின் பாதாரவிந்தங்களிற் பணிந்து நிற்கும்போது ஸ்ரீமகாலெட்சுமியானவள், தாயே! லோகநாயகனிடப் புறத்தில் வீற்றிருப்பையென வேண்ட அவ்வாறே பரமன் எழுந்தருளியிருக்கும் சிங்காதனத்தில் தேவேந்திரன் முதலானவர்கள் ஜெப ஜெப வெனப் போற்றப்பராசத்தி யானவள் வீற்றிருந்தனள். அத்தருணத்தில் மலையிறைவனானவன் பார்ப்பதியாரின் திருக்கரத்தினைப் பரமசிவனது கரத்தில் வைத்து வேதசாகைகளை ஓதி ஐயனே! அடியேன் அரிதிற்பெற்ற இப்பெண் கொடியைமன தொருமித்துத் தேவரீருக்குப் பாரியாகத் தந்தேனென்று அத்தேவதேவவோத்தமனைத்தனக்கு மருமகனாக நினைந்து தாராதத்தஞ் செய்து கொடுத்தான். சகலரும் மோட்சசாம்பிராச்சியத்தினைப்பெற்றவர்களைப்போல் அளவற்ற மகிழ்ச்சியில் மூழ்கிக்களித்திருக்கும் தருணத்தில் கணவனின்றித் துக்க சாகரத்தில் மூழ்கியிருந்த இரதிதேவியானவள் பரமசிவத்தின் திருமணக்கோலத்தினைத் தெரிசித்து, கர்த்தனே! அடியாளும் களித்திருக்கத்தக்கதாக மங்கிலியப்பிட்சை தந்தருளவேண்டுமென்று பிரா

ர்த்திந்த தக்ஷணமே பரமசிவத்தின் கிருபையால் மகாவிஷ்ணு முதலானவர் பிரமிக்கும்படியும் இரதிதேவியானவள் மகிட்சியடைந்து துள்ளும்படிக்காகவும் அச்சபையினிடத்திற்கருப்பு வில்லைக் கரத்திற் பற்றிக்கொண்டு "உம் உம்" என்று ஆர்ப்பரித்து அனங்கன் தோன்றினன். இவ்விதமாக வெளிவந்த உருவிலியானவன் பார்வதியாருடன் வீற்றிருக்கின்ற பரமேஸ்வரனது பொற்பாத கமலங்களை அடுத்துப்பன்முறைபணிந்து போற்றுகின்றபோது பரமசிவம் கிருபாநோக்கம் பாலித்துச் சித்தசனே! உன்மனைவிக்கு நான் அநுக்கிரகம் செய்தபடிக்கு அவளுக்கு மாத்திரம் நீ உருவாய் விளங்கி மற்றவர்களுக்கு அருபியாக நின்று உன்பணிகளைச்செய்து வருவையெனத் திருவுளம்பற்ற அவன் தன்தேவியுடன் தனது இருப்பிடம் சேர்ந்து மகிழ்ந்திருந்தனன். பின் சிவபிரானனவர், சிங்காதனத்தை விட்டிறங்கிச் சகலரும் சூழ்ந்து போற்ற ரிஷபவாகனத்தின் மீது ஆரோகணித்துத் தமது திருக்கரத்தினை நீட்டிப் பார்வதியாரையெடுத்து இடப்புறத்திற் சேர்த்தணைத்துக்கொண்டு வாகனத்தை நடத்தி வெள்ளியங்கிரி மாளிகைப் புறத்தில் வந்தவுடன் மகாவிஷ்ணு முதலியோருக்கும் மலையரையன் முதலானவருக்கும் கிருபாநோக்கம் பாலித்து உங்கள் பதவிகளிற்சென்று சுகஜீவிகளாய் வாழக்கடவீர்களென்று திருவுளம் பற்றி உமைபவளுடன் தமது அரமனையிற் பிரவேசித்துச் சபாமண்டபத்தில் நவரத்தின மயமாயிருக்கும் சிங்காதனத்தில் யதாப்பிரகாரம் தேவியாருடன் வீற்றிருந்தனர். பிராணிகளனைத்தும் சிவமும் சத்தியும் சேர்ந்த மகிமையினற் காமவின்பம் மேற்கொண்டு போகங்களை அநுபவித்து ஆனந்தமடைந்திருந்தன.

பரமசிவன் பராசத்தியுடன் வீற்றிருந்தபின்பு பலகாலம் பிள்ளையைத்தராமற் சும்மாயிருப்பதைச் சூரபதுமன் உபத்திரவத்திற்கஞ்சி மகம்மேருச்சாரலில்வந்து ஒளித்திருக்கும் பிரமனாதி தேவர்கள் கண்டு பின்னும் ஓர் தரம் சிவபிரானை வேண்டிக்கொள்ளச் சமயம் பார்த்து வரும்படி திருக்கயிலைக்கு வாயுதேவனை யனுப்பினர்கள் அவன் மந்தமாருத அசைவால் மெல்லென்று கயிலையின் முதற்கோபுரவாயிலிற் பிரவேசிக்கச் சமீபித்தபோது நந்திதேவர் அதைத்தெரிந்து கோபங்கொண்டு சீறி அவனைப்பின் மன்னித்துவந்த வழியே போகவிட்டனர். அவன் மீளத்தாய் வயிற்றிற் பிறந்ததாக வெண்ணிப் பிழைத்தோமென்று பிரமனாதி தேவர்களை யடைந்து நந்திதேவரின் காவல்திறத்

தைச் சொல்லினன். பின் தேவர்களனைவோரும் வருத்தமடைந்து திருக்கயிலாயத்திற்குச் சென்று ஆலயத்திற்கெதிரில் வீற்றிருக்கும் நந்திதேவரைக்கண்டுபோற்றி எங்கள் துன்பங்கள் அத்தனையும் திருவுள்ளத்திற் கொண்டிரங்கிச் சிவபிரானுக்கு எங்கள் வரவினைத் தெரிவித்து விடைபெற்று வந்து எங்களைப் பரமன் திருமுன்பு விடவேண்டுமென்று வேண்டுவதற்கு நந்திதேவர் இரங்கி ஆலயத்துட்சென்று சிவபிரானை வணங்கிச் சொல்லச் சிவநாதன் அவர்களை வரவிடக்கடவை என்று திருவாய் மலர்ந்தவுடன் திரும்பி மகாவிஷ்ணுபிரமதேவர் முதலிய தேவரைக்கண்டு அவர்களை நந்திதேவர் உள்ளேபோகும்படிக்கு விடுத்தனர். பிரமனுதிதேவர் அனைவரும் பராசத்தி இடப்பாகத்தில் விளங்கிச் சிங்காதனத்தில் வீற்றிருக்கின்ற எமது ஐயன் முன்னேசேர்ந்து அவர் பொற்பாத கமலங்களிற் பன்முறை பணிந்தெழுந்து பத்திவிசுவாசத்துடன் நிர்மலக்கடவுளே! ஒரு சற்புத்திரனை எங்கள் துன்பம் நீங்கும்படிக்குச் சீக்கிரத்தில் தேவரீருக்கு ஒப்பாகப் படைக்கவேண்டுமென்று பலதரம் வணங்கிக் கேட்டுக்கொள்ளப் பரமேஸ்வரர் அவர்களிற்கிருபையுற்றுத் தமது பழைய கோலமாகிய சண்முகங்களுடன் தோற்றி எதிரிலிருக்கின்ற மகாவிஷ்ணு முதலாகிய தேவர்களனைவரும் தமது மனத்திடுக்கிட்டு அற்புதத்தராய்க் கர்த்தன் கிருபையின் பெருக்கினை நினைந்து நினைந்து புகழ்ந்திருக்கின்ற காலத்தில் தாம் வகித்திருக்கின்ற திருமுகங்களாறினும் பிரகாசித்திருக்கின்ற நெற்றிவிழிகள் தோறும் ஒவ்வொரு அனற்பொறியினை உண்டாக்கினர். அப்படிப்பிறந்த பொறிகள் ஆறும் அதிசுவாலைகளை வீசிப்பூமண்டலம் அண்டகோளகை முற்றும் சரேலெனப்பரவியாதொரு பிராணிகளையும் வதைசெய்யாமற் சராசரங்களைப்பயமுறுத்தி அலைத்தன. அக்கால், ஞானநாயகனைத் தேவர்கள் வேண்டிக்கொள்ளத்தாண்டவமூர்த்தியானவர் அவர்களுக்கு ஆதரவுசொல்லித் தமது திருமுகங்கள் ஆறையும் மறைத்து யதாப்பிரகாரம் தமது திருமுகம் ஒன்றினைத்தாங்கி அனற்பொறிகளைத் தமது திருமுன் வருவதாகத் திருவுளத்திற் கொண்டனர். அவைகள் முன்போல் ஆறுபொறிகளாக உருக்கொண்டு சுவாலித்துவந்து தம் திருமுன் நின்றதை மகிழ்ச்சியாகப் பரமன் பார்த்துப் பின் ஜெபசாலிகளாகிய வாயு அக்கினி தேவர்முகங்களைநோக்கி நீங்கள் இருவரும் இந்த அனற்பொறிகளைத் தாங்கிக்கொண்டு போய்க் கங்கையாற்றில விடுவீர்களெனக் கட்டளையிட அப்படியே அவர்களிருவரும் ஒருவர்மாற்றி யொருவராய் அவை

களைச் சிரசில் தாங்கிச் சகலதேவரும் தம்மைச் சூழ்ந்துவரக் கங்கையிற் கொண்டுபோய் விட்டனர். கங்கையானவள் அவைகளைச் சரவணப்பொய்கையினிடத்துக் கொண்டுவந்து சேர்த்தனள். இப்படிக்கு அருவாய் உருவாய்ப் பலவாய் ஏகமாய்ப் பரப்பிரம சொரூபமாகப் விளங்குஞ் சோதிப் பொறிகளானவை பின்பு ஒரு ரூபத்தினைக் கொண்டு உலகங்களனைத்தும் பிழைத்தற் பொருட்டுக் கிருபைவிளங்கும் ஷண்முகங்களையும் பன்னிருகரங்களையும் படைத்த ஒப்பற்றகுழந்தை வடிவங்கொண்டு விளங்கின. அக்குழந்தையை மகாவிஷ்ணு முதலிய தேவர்கள் அடங்காத மகிழ்ச்சிகொண்டு தெரிசித்துப்பின் கார்த்திகை முதலிய கன்னியர்களைத் தருவித்து ஓ! பெண்களே! எமது கடவுள் ஒருகுழந்தையைப்போல வடிவுகொண்டு இந்தச் சரவணப்பொய்கையிலிருக்கின்றனர். அவருக்கு உங்கள் கொங்கைகளிற் பெருகும் பாலை உண்ணக்கொடுத்து அன்பாகப்போற்றி வரக்கடவீர்களெனச் சொன்ன மாத்திரத்தில் அவர்கள் மகாபாக்கியமென்று இசைந்து குமாரதேவர் சமீபத்திற்போய் அதிகப்பிரியத்துடன் அய்யனே! அமுதுண்ணவாருமென்று தங்கள்கரங்களை நீட்டிஅழைத்து வேண்டுமுன்னிலையிற் சண்முகங்களைக் காட்டி. ஒருதோற்றமாகக் காட்டியவர் ஆறுகுழந்தைகளாக நின்றனர். கார்த்திகைத் தேவியர் ஆறு உருப்பெற்று நின்ற முதல்வனைத்தங்கள் மார்பிலணைத்துக் கொங்கைகளிற் பெருகும் பாலினைஅவருக்குக் கொடுத்துப்பின் அவரைத்தாமரை மலராகிய தொட்டிலினிடத்தில் வளர்த்தி எமது கண்மணியே நித்திரைசெய்யும் என்றிவ்வாறு தாராட்டிப் போற்றிவரும்போது அவ்வன்னையர்களிக்க அக்குமரன்கிருபையுற்று அனேகம் திருவிளையாடல்களைச்செய்து விற்றிருந்தனர். இனிநவவீரரும் இலட்சம் வீரரும் தோற்றிய பிரபாவம் பேசுவாம்.

பார்ப்பதியார் தம்மிடத்திற் பரமன் திருக்குமாரனைப் படைக்கவொட்டாமல் தேவர்கள் செய்தார்களெனக் கோபங்கொண்டு இந்திரன் பிரமன் விஷ்ணுமற்றத்தேவர் முதலியவர்களுடைய தேவியருக்கு இத்தினமுதல் புத்திர சந்தானமில்லாமற் போகக்கடவரெனச்சபித்தனள். ஆதலின், தற்காலம் வரையில் முப்பத்து முக்கோடிதேவரென்றும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளென்றும் பேசவிருக்கின்றது.

பார்வதியார் பொறிகளின் சுவாலைக்கு முன்வெருவியோடிய காலத்து அவள் பாதச்சிலம்பினின்றும் கழன்று கீழேவிழுந்திருந்த நவமணிகளிற் பின் அம்மன்சுவாமியாரிடம் வந்துற்ற காலையில் அவள் திவ்ய சுந்தரவடிவமானது பிரதிபலிக்க லாயிற்று. நவமணிகளின் மூலமாகத்தோற்றநின்ற உமையவளின் ஒன்பது திருவுருவங்களையும் பரமன் பார்த்தருளி வாருமென வழைத்தனர். நவசக்திகளும், உடனே உதித்து வெளிவந்தனர். அவர்கள் பரமசிவத்தின் ரூபலாவண்யங்களைப்பார்த்து மயல்கொண்டு உடனே கருப்பமுற்றனர். உமையவள் அதை யறிந்து சக்களத்திகளாகிய காரணத்தாற் கோபங்கொண்டு அச்சத்திபரைக் கருப்பங்களுடன் பலகாலம் இவ்வாறே இருக்கக்கடவீர்களெனச் சபித்தனள். பின்சுவாமி அம்பிகையை அவர்களுக்கு அருள்செய்யும்படி திருக்கண்நோக்க அவர்கள் அவள் அருள்பெற்று நாகரத்தினம் என்பவள் வீரவாகுதேவனையும், தரளவல்லி என்பவள் வீரகேசரி என்பவனையும், புஷ்பராகக்கன்னிகை என்பவள் வீரமாமயேந்திரனையும், கோமேதகப்பாவை என்பவள் வீரமாமபேச்சுரனையும், வைடூரியப்பாவை என்பவள் வீரமாபுரந்தரனையும், வைரமங்கை என்பவள் வீரராக்கதனையும், மரகதவல்லி என்பவள் வீரமார்த்தாண்டனையும், பவளவல்லி என்பவள் வீரராசுத்தனையும், நீலவல்லி என்பவள் வீரதீரனையும் பெற்றார்கள். முன்அம்பிகை நவசத்திகளைச் சபித்தகாலையில் அவர்களுக்குப் பயந்தால் வியர்வை உண்டானதிலிருந்து இலட்சம் வீரர் பிறந்திருந்தனர். பரமன் இக்குமாரர்கள் அனைவோரையும் பார்த்துக் குமாரசுவாமிக்கு நீங்கள் படைத்துணையாக இருக்கக்கடவீர்களென அநுக்கிரகம் செய்தனர்.

அப்பால் சிவபிரானனவர் சரவணப்பொய்கையினிடத்து வளருகின்ற நமது திருக்குமாரனை இத்திருக்கயிலாயத்துக்கு அழைத்துவரப்போவோமென்று பார்ப்பதியாரிடம் சொல்ல அவள் அதிக மகிழ்ச்சியாய்க் காலகண்ட மூர்த்தியுடன் ரிஷபவாகனத்தில் ஆரோகணித்து மகாவிஷ்ணு முதலானதேவர்கள் தங்கள் துன்பங்களெல்லாம் தீர்ந்தனெனக் கொண்டாடிப் பூதகணங்கள் சூழ்ந்து பன்மலர்களைப் பரமன் மீதிலிறைத்துத் தொடர்ந்துவர இமயபருவதத்திற் கருகிலுள்ள சரவணப்பொய்கைக் கரையைவந்து சேர்ந்து அறுவகைத் தோற்றத்தினைக்கொண்டு திருவிளையாடல் செய்திருக்கின்ற

குமார தேவரைப்பார்த்து மகிழ்ந்திருக்கின்ற சமயத்தில் பாலசுப்பிரமணியக்கடவுளானவர் தேவதேவோத்தமனேயும் பிராட்டியாரையும் கண்டு முகமலர்ந்திருந்தனர். எமதிறைவன் உமையவளைப்பார்த்துப்பெண்ணே! உனது திருக்குமாரனை எடுத்துவரக் கடவை என்றனர். அவள் மனப்பூரிப்புடன் வாகனத்தை விட்டிறங்கிப் பொய்கையினிடத்துச் சென்று தமது பிள்ளைகளாகிய அறுவகைத் தோற்றங்களையும் கரங்களாற் சேர்த்து வாரியெடுத்து மார்பினிடத்தில் அணைத்துச் சண்முகங்களும் பன்னிருகரங்களும் விளங்கும் படிக்கான ஓர் உருவாகச் செய்தனள். இவ்வாறு கவுரியானவள் சேர்த்து ஒன்றுபடுத்திய தமது திருக்குமாரனைப் புத்திரவாஞ்சையினால் உச்சிகள் மோந்து கொஞ்சப்பார்ப்பதியாருக்குக் கொங்கைகள் விம்மிப்பால் பிறிட்டோடியது. பிராட்டியார் அதை இரத்தினக்கிண்ணத்திற் சேர்த்துப் புதல்வனுக்குப் பரிந்தூண்ணக்கொடுத்தனள். பாலைத்தெவிட்ட ஊட்டுவித்து லோகநாயகியானவள் குமாரசுவாமியினை இடையிலெடுத்துக்கொண்டு போய்ச் சிவபிரானைச் சேவிக்கச்செய்தபோது பசுபதி ஆவலாய்த் தமது திருக்கரங்களை நீட்டிக்குமாரனையெடுத்து மார்பிற்சேர்த்து மூத்தாடி மகிழ்ந்து தமது பக்கத்தில் இருத்திக்கொண்டனர். பார்ப்பதி தேவியையும் பரமனானவர் கரத்தினைத்தாழ்த்தி யெடுத்து தமது இடப்புறத்திற் சேர்த்தனர். இறைவிக்கும் இறைவனுக்கும் நடுவேகுமார தேவரானவர் இரவு பகலுக்கு மத்தியிற் செல்கிற அந்திப்போதைப் போலவிளங்கினர். குமாரசுவாமியானவர் அவ்விதம் விளங்குவதைத் தெரிசித்த அனைவரும் நெருங்கிச்சூழ்ந்து கல்லென்னும் ஓசையெழப் புகழ்வதாயினர். சூரனது கொடுமைகளினின்றும் எங்களை யீடேற்ற வேண்டுமென்று தேவர்களொருபக்கம் பிரார்த்தித்து நின்றனர். பாலசுப்பிரமண்ணிய தேவரைப்போற்றிவந்த பாக்கியவதிகளான கார்த்திகை மாதர்கள் அனைவரும் குமாரதேவரைப் பிரியமனம்வராமற் சிவபிரான் முன்னம் பூமியிற்படிய விழுந்து சேவித்து நின்றனர். அரவாபரணர் அவர்களுக்குக் கிருபையுற்று நீங்கள் இந்தக் கந்தசுவாமிக்கு முலைப்பால் கொடுத்துப்போற்றிவந்த படியினால் இக்குழந்தைக்கு உங்கள் பிள்ளை என்னும் பெயர்விளங்கக்கடவது. உங்களுக்கு உரியதினங்களில் இக்குமரனை வழிபட்டு விரதமிருப்போர் எத்தகையரெனினும் அவர்கள் விரும்பியவரத்தைத் தந்து கடைசியில் அவர்களுக்குச்சாருப்பதவியையும் கொடுப்போம் என அநுக்கிரகம் செய்தனர்.

முன்பார்வதியார் கொங்கைகளில் அதிகரித்தொழுகிய பாலானது ஆற்றுப்பிரவாகம் போலோடிச்சரவணப்பொய்கையிற் பெருக்கெடுத்தபோது வேதங்களைமுற்றுமோதி அவற்றின் முடியினைத்தெரிந்த பிராசப ரிஷிபிள்ளைகள் அறுவரும்நன்னெறிகளிற் பிசகிக் கொடிய காரியங்களைப் செய்யக்கண்டு மனபொறுமைற்பெற்ற தந்தையர் சபித்த காரணத்தினல் மீனுருப்பெற்று அப்பொய்கையினிடத்து உலவிக் கொண்டிருந்தவர்கள் அங்கீரிற் பாய்ந்திருந்த பாலினை உண்டனர். உடனே அவர்கள் சாபவலியொழிந்து மச்சவுருவு நீங்கித்தமது பழய ரிஷிக்கோலங்களைக் கொண்டவராய்ச் சிவபிரானை வந்து பணிந்து நிற்க, அவர்களுக்கு அந்திவண்ணன் கிருபை உற்று. நீங்கள் இப்பருவதங்களில் தவம் செய்திருப்பீராகில் இன்னம் கொஞ்சக்காலத்தில் இக்குமரனே இம்மார்க்கமாக வந்து உங்களுக்கு அருள்செய்வனென த்திருவாய்மலர்ந்தனுப்பினர். பின்சிவபிரான் மற்றத் தேவர்களனைவோர்களுக்கும் விடைகொடுத்தனுப்பித் தாம்கயிலாயத்திற்கு எழுந்தருளித் திருத்தேவியுடன் குமாரதேவர் மத்தியில் விளங்கச் சிங்காதனத்தில் வீற்றிருந்தனர்.

பின், குமாரசுவாமியானவர் தமது துணைவராகிய நவவீரர் இலக்கத்தவர்களுடன் கூடிக்கொண்டு ஒருவராலும் சாத்தியப்படாத மிக அற்புதமான பாலப்பருவத்துக்குரிய திருவிளையாடல்களைச் செய்து வருகின்றதருணத்திற் பராசக்தியானவள் அவைகளைப்பார்த்து அதிசயங்கொண்டு மகிழ்ந்தவளாய்ச் சிவபிரானை வணங்கிப்போற்றி இப்பாலகன்காரணங்களை எனக்குத் தெரிய அநுக்கிரகம் செய்யவேண்டுமென்று வேண்டப்பரமன் ஓ! உமைபவளே! குமாரதேவனைக் கங்கையேந்திச் சென்றமையாற் காங்கேயனென்றும், சரவணப்பொய்கையில் தங்கியதால் சரவணபவனென்றும், கார்த்திகைப்பெண்கள் பாலுண்டமையால் கார்த்திகேயனென்றும், அறுவகைப்பட்டிருந்ததை நீ ஒன்றுபடுத்தியதால் கந்தனென்றும், நமதுபுராதன முகங்களாறைப் பெற்றதனல் சண்முகனென்றும் திருநாமங்கள் அவனுக்கு விளங்குவதாயின. மேலும் தாரகப்பிரமத்தின் ஓசையானது ஆறெழுத்தாகத் தோன்றும் அவை ஒன்றுபட்டு உன்திருக்குமாரனது நாமத்திற்குரிய சடாக்ஷரங்களாகநின்றன. ஆதலால் ஆறுமுகன் நமது சத்துவத்தினைக் கொண்டிருப்பவன். அவனுக்கும் நமக்கும் பேதகம் இல்லையென்று குமாரசுவாமியாரின் மற்றப்பெருமைகளனைத்தையும் விடாம

லெடுத்துரைத்த காலையில், அம்பிகையானவள், இப்படியாயிருக்கிறது இந்தப்பாலன் மகத்துவமென்று மனமகிழ்ந்திருந்தனள்

இவைநிற்க, குமாரதேவர் இன்னும் பல அற்புதத் திருவிளையாடல்களைச் செய்வதாய் நினைந்து அண்டத்தில் விளங்கும் சத்தகுலாசலங்கள் சத்தசாகரங்கள் புவனங்கள் அவைகளினுட் பட்டபிராணிகள் முதலாகக் கிரமங்கள் தப்பிமாறுபடச்செய்துகளித்தனர். இதனால் இந்திராதிதேவர்கள் இராக்கதரின் கொடியசெய்கைகளென மருளடைந்து அவை அறியும் காரியமாய் எங்கணும் உலாவி மகம்மேருகிரியைஉற்றகாலையில் அவ்விடம் ஓர்பால் அப்பருவத்தின் பொற்சிகரங்களை ஒடித்துத் திசாதிசைகளில் வீசிநிற்கின்ற குமாரசுவாமியார் செய்கைகளைக் கண்ணுற்றுப் பிரமித்தவராய் இதுவரையில் நாங்கள் கண்டமாறுபாடுளைச் செய்தவன் இவனையாவனெனக் குறித்துச் சகலரும் ஏகமுகமாய் அவரை வளைந்துகொண்டு சண்டைதொடுத்தனர். அதைகண்டு உமையவர் திருக்குமாரன் மனதிற் சிந்தித்து ஒப்பற்ற வில்லினையும் கொடிய பாணங்களையும் நிருமித்து யாவரையும் கணப்போதில் மடித்து நின்றனர். பின்தேவகுருவாகிய பிரகஸ்பதி பகவான் வந்து குமாரதேவரை வேண்ட அவர் சகலரையும் பிராணனைப்பெற்றெழுவதாகக் கடாக்ஷித்தனர். தேவேந்திரன் பின் தனது அறியாமையை மன்னிக்கக் குமாரதேவரைப் பன்முறைவணங்கிப் போற்றி அவருடைய அருளைப்பெற்றுப்பின் அக்கடவுளைத் தேவர்களனைவோர்களுடனும் சேர்ந்து அபிஷேக முதலியவை செய்து அர்ச்சித்துப் பலவரங்களைப்பெற்று மகிழ்ந்தனன். பின்குமாரக்கடவுள் திருக்கயிலைக்கு எழுந்தருளினர்.

இப்படி யிருக்குங்காலையில், நாரத ரிஷியானவர் ஓர்யாகம் மந்திர வேறுபாடுகளினாற் செய்யநேரிட்டு அதினின்றும் ஓர்வெள்ளாடு பிறந்து ஜெகத்தை வருத்துவதாயிற்று. அதைப்பற்றி அம்முனிவர் முருகக்கடவுளை வந்துதொழுது விண்ணப்பம் செய்ய, அவர் வீரவாகுதேவரைக்கொண்டு அதைப்பிடித்து வரச்செய்து தமக்கு வாகனமாகக்கொண்டனர். பின்னொருகாற் சிவபிரான் சந்நிதானத்துக்குச் சென்ற பிரமதேவன் கோபுரவாயிலைத் தாண்டும்போது குமாரசுவாமியை அலட்சியமாக எண்ணிவணங்காமற் செல்ல அதை எமபெரு

மான் கவனித்தவராய் அவனைவரவழைத்துப் பிரணவதத்திற்குப் பொருள்கேட்டனர். அது தெரியாததினால் தமது திருக்கரங்களினால் அவன் சிரங்களிற் குட்டிவிலங்கிட்டுச் சிறையிலிட்டுத்தாம் சிருஷ்டித்தொழிலை நடத்தியிருந்தனர் அத்தருணத்தில்மகாவிஷ்ணுவானவர் இச்செய்தியைத் தெரிந்து பிரமனை விடுவிக்கவேண்டுமென்று யோசித்துத்தேவர்கள் ரிஷிக்கூட்டங்கள் முதலானவர்களுடன் திருக்கயிலாயத்தைச்சேர்ந்து சபாமண்டபத்தில் வீற்றிருக்கின்ற ஒப்பற்ற ஞானநாயகனாகிய பரமசிவத்தினது திருவடிகளில் தாழ்ந்தெழுந்து பிரமனுக்கு நேர்ந்த சங்கடத்தினை முறையிட்டுக்கொண்டபோது தீனதயாபர மூர்த்தியானவர் கிருபையாய் நந்திதேவரைப் பார்த்து நீதுரிதமாய்நமது குமாரனிடம் போய் நமது கட்டளை யெனச் சொல்லிப் பிரமனைவிடுவித்துக்கொண்டு வாவென அனுப்பினர். நந்திதேவர் பரமனைச் சேவித்து விடைபெற்றுக் கந்தமாதனவரையைச்சேர்ந்து விளங்குகின்ற சண்முகப்பெருமானைக் கண்டவுடன் சேவித்துப்போற்றித்தான் வந்தகாரணத்தைச் சொல்லிமுற்றும் முடிக்குமுன்னம் குமாரசுவாமியார் கோபித்துப் பிரமன் சிறையினை நீக்கமாட்டோம் இதைக்குறித்து இங்கு நீ இன்னம் சிலநேரம் இருப்பையானால் உன்னையும் அரியகாவலிற் படுத்துவோம். துரிதமாகப்போய் விடக்கடவாயென்ச்சிறிச்செல்லிய போது நந்திதேவர் மறுமொழிபேசுவதற்கஞ்சி நமக்கும் என்னகெடுதி நேரிடுமோ என்று யோசித்துச் சீக்கிரம் திருக்கயிலாயத்துக்கு வந்து காலகண்ட மூர்த்தியைப் பணிந்து இன்று நான் பாலசுப்பிரமணியக்கடவுளைக் கண்டு தேவரீர் கட்டளையினைச் சொல்லும்போது அதை மறுத்ததுமன்றி என்னையும் சிறைப்படுத்துவதாகச் சொல்லினர். ஆதலால் மாறுபேசஅஞ்சி வந்து விட்டேன் என்றனர். சிவபிரான் திருநகைகொண்டு தமது திருமாளிகையைக்கடந்து ரிஷபவாகனத்தின் மீது சகலரும் புடைசூழ ஆரோகணித்துத்தமது திருக்குமாரன் வாசமாயிருக்கின்ற கந்தமாதனத்தைச் சேர்ந்து சண்முகக்கடவுள் எழுந்தருளியிருக்கின்ற ஆலயத்தின் முகவாயிலின் அருகில் வந்திறங்கி மெல்லநடந்து அதிசுப்பிரியத்துடன் வருவதனைக்கண்ட குமாரதேவர் தமது பிதாவானவர் வருகின்றனரென்று துரிதமாய்ச் சிங்காதனத்தை விட்டிறங்கி எதிர்கொண்டு கர்த்தன் திருவடிகளிற் பணிந்து அழைத்துக்கொண்டு போய்ச் சிங்காதனத்தில் வீற்றிருக்கும்படி செய்து கரங்களைக் கூப்பிநின்று பிதாவே! தேவரீர் என்னைத்

தேடிவரவேண்டிய காரணமென்னே! திருவுளம்பற்ற வேண்டுமென ப்போற்றப்பரமசிவம் பரிவாய்ச்சொல்வதாயினர். ஐயனே! நீபிரமனை ச்சிறைப்படுத்தி வைத்திருப்பதாகத் தெரிந்து அவனைவிடுவிப்பதாகக் கருதிவந்தனம். அவன் காவலை யொழித்து அனுப்பிவிடக் கடவா யென்றபோது குமாரக்கடவுள் வேதங்கள் முதலிய சகலத்துக்கும் ஆதாரசத்தியாகும் பிரணவத்தின் பொருளை அறியாதபிரமன் சிருஷ் டித்தொழிலை நடத்தத்தகுந்தவனென்பது அசம்பாவிதம். இத்தகை யவிவேக சூனியனுக்கு இந்தச்சிறந்ததொழிலைக் கொடுக்கலாகுமோ? அவன் சிறந்த பூசனைகளைத் தேவரீருக்குச் செய்து வருபவனென்னும் தயவினுல் இத்தொழிலை அவனுக்குக் கடாக்ஷித்தீர்! அதில் அவன் மமதைகொண்டவனுப் உயர்வுதாழ்வுகளை நிதானித்து நடந்துகொள் ளத்தெரியவில்லை. அவனைச்சிறையில் நின்றும் விடுவிக்கமாட்டேன். இன்னம் சிலகாலம் இருந்தால் அவனுக்குப் புத்திவரும் என்று திருக்குமாரன் சொல்லியபோது சிவபிரான் சிந்தித்து, இவனைப்பய முறுத்தி னல்லாது இவன் வழிக்குவரமாட்டானென்று தமது திரு வுள்ளத்திற் கருதிக் குமரனே! உன்னடபடிக்கைகள் வெகுநேர்த்தி யாக விருக்கிறது? முன்னம் நமது கட்டளையின்படி வந்த நந்திதேவ ரையும் பயமுறுத்தித் திருப்பி அனுப்பிவிட்டாய். இப்போது நாமே நேரே வந்தும் நீ அதை அலட்சியம் செய்து மறுத்துப் பேசுகின்றனை என்று கருணாநிதியாகிய சிவபிரான் கோபித்தவரைப் போற்கடிந்து சொல்ல, குமாரதேவர் இனித்தடை சொல்லக்கூடாதென்று பிரம தேவனை விடுவித்துக்கொண்டு வரும்படிக்கு தமது பரிசனருக்கு கட் டளை யிட்டனர். உடனே சிலர்ஓடி, ஒடுங்கிக்கிடக்கின்ற பிரமனை வில ங்கினைப்போக்கி அழைத்து வரச் சிவகுமாரனவர் பிரமன் கரத் தினைப்பற்றி வந்து பரமேஸ்வரர் சந்நிதானத்தில் விட்டனர். பிரமன் பரமன் திருவடிகளிற் பணிந்து போற்றி அதிகமானமும் வெட்கமும் மனதை வாதிக்கத் தலைகவிழ்ந் திருந்தனன். கர்த்தன், பிரமனை நோக்கி அதிகம் வாடி வருந்தினையோ எனத்திருவாய் மலர்ந்தனர். பிரமன், தேவரீர் திருக்குமாரர் எனக்குச்செய்த இந்தத் தண்டனைசரியானது தான். நான் எக்காலத்தும் கருவமடையாமற் புனிதனுமானேனெ ன்று சொல்லியபோது சிவபிரான் கிருபையுற்றுப் பிரமனே! நீமுன் போல் உனது சிருஷ்டித்தொழிலை நடத்தியிருப்பாயெனக் கட்டளையி ட்டனுப்பினர். பின்பு, கர்த்தன் முருகக்கடவுள் திருமுகத்தினை யோ

க்கி, ஐயனே! சமீபத்தில் வருகவென்றழைத்து அவரைத்தழுவி யெடுத்துத்தமது தொடைமீதிலிருத்தி அப்பனே! ஓங்காரப்பொருள் உனக்குத்தெரியுமோ? அதனை இப்போது எனக்குச்சொல்லக் கடவாய் என்றபோது, குமாரதேவர், ஆதிகர்த்தனே! பார்ப்பதியாருக்கு முன்னம் தேவரீர் யாவருக்கும் தோற்றுசபடிக்குப் போதித்திருக்க நான் என்ன சொல்லப்போகிறேன் என்று சொல்லச்சிவபிரான் நகைத்துக் குமாரனே! அப்படியே நமக்கு இரகசியமாகத் தெரிவிக்கக்கடவையென்று தமது திருச்செவியினைத் தாழ்த்தியபோது சண்முக தேவர் ஒப்பற்ற பதத்தின் நிச்சயத்தினைத் தெரிவித்தனர். அதைக்கேட்டவுடன் பரமேஸ்வரர் அதிக மனமகிழ்ந்தவராய் அத்தலத்தில் நிலைமைபெற்று விளங்கும்படிக்குத் தமது திருக்குமாரனுக்கு அநுக்கிரகஞ்செய்து பரமனானவர் பழையபடிக்குத்தமது திருக்கயிலையினை அடைந்து, வந்ததேவர்களுக்குச்'செலவு கொடுத்தனுப்பித் தமது திருமாளிகையிற் போய் அமர்ந்தனர்.

அத்தருணத்தில், அகஸ்தியர் இந்தச் சமாசாரங்களைக் கேள்விப்பட்டுக் கந்தமாதனம் வந்து கந்தசுவாமியைக் கண்டு போற்றி வேண்டி நிற்க, குமார தேவரானவர் பிரணவப்பொருளின் நிச்சயத்தையும் ஆறு சாஸ்திரங்களின் மகிமைகளையும் அப்பந்திரிபற அவருக்கு உபதேசித்தருளினர். அப்போது அகஸ்தியர் சித்த சமாதானம் அடைந்து கந்தசுவாமியை வணங்கி விடைபெற்றுத்தமது இருப்பிடம் சென்று மகிழ்ந்திருந்தனர்.

இவ்விதம் சுப்பிரமணியக்கடவுள் அற்புதங்கள் விளங்க விருக்கும்போது ஓர் சமயம் அவர் தமது பிதாவாகிய சிவபிரானுடைய சந்நிதானம் செல்வதாகக் கருதி கந்தமாதன பர்வதத்தை விட்டுப் புறப்பட்டு வந்தனர். அந்த மார்க்கத்தில் மகாவிஷ்ணுவின் புத்திரிகளாகிய சுந்தரி அமுதவல்லி என்னும் இரண்டு பெண்கள் தம்மைக் குமரக்கடவுள் பத்தினிகளாகக் கொள்ளவேண்டுமென்னும் கருத்துக் கொண்டு சரவணப் பொய்கைக் கரையில் தவம் செய்திருந்தார்கள். சுவாமியானவர் அதை அறிந்து அவர்கள் பேரிற் கிருபைஉற்று அவர்களை நோக்கி அமுதவல்லியே நீ போய்த் தேவேந்திரனுக்குப் பெண்ணாக வளரக்கடவாய். சுந்தரியே நீ போய்ச் சிவமுனி புத்திரியாக அவ

தரித்து வேடர்கள் மூலமாய் வளர்ந்திருக்கக்கடவாய், நாம் சமீபத்தில் உங்களைத்திருக்கல்யாணஞ்செய்து கொள்வோம் எனத்திருவாய்மலர்ந்து பின் தமது மாதாபிதாக்களை வந்தடைந்து அவர்களைப் பலதரம் வணங்கி நின்றனர். அவர்கள் இருவரும் அவரை மகிழ்ந்தெடுத்து ஆசனத்திலிருத்திய காலையில் பிரமன் விஷ்ணு தேவேந்திராதியர்கள் சூரனுடைய கொடுமைகள் சகிக்கலாகாதென அங்குவந்து பரமனை வேண்டிக்கொண்டார்கள். அப்போது பரமசிவன் தமது ஒப்பற்ற திருக்குமாரனைக் குளிர்ந்த பார்வையுடன் நோக்கிக் குழந்தாய்! நீ தான் அந்தச் சூரன் என்பவனை வேருடன் நிர்மூலம்பண்ணத் தக்கவனென்று திருவாய்மலர்ந்து அவருக்கு அஸ்திரங்கள் முதலியவை கொடுத்து ஆசிக்கூறி நவவீரர்கள் இலக்கத்தவர்களுடன் தேவர்களும் படைதுணையாகச் சூழக் குமாரதேவரையுத்த சன்னத்தராய் அனுப்புவதாயினர்.

இவர்கள் குமாரதேவர் கட்டளைப்படிக்கு வீரவாகுதேவரைத் தமக்குத்தலைவராகக்கொண்டு சூரபதுமன் சகோதரனாகிய யானைமுகத்தையுடைய தாருகன் வாசஞ்செய்யும் மாயமாபுரத்தைக் குறித்துச் சென்று அதனுட்பிரவேசித்து அவ்விடம் எதிர்த்த அவுணவீரர்களை வளைத்துக்கொடியபோர்செய்து அனேகரைமடித்தனர். அதுகண்டு தாருகன் கடுங்கோபத்துடன் சண்டைக்கு வெளிவந்து பூதப்படைகளை மிகவும்மடித்து எதிர்த்துவந்த இலட்சத்தவரைத்தனது துதிக்கையாற் பற்றிக்கடலிற் போய்விழ வீசினன். நவவீரரில் ஒருவனாகிய வீரகோளரிஎன்பவன் அந்த அவுணன் கிரீடத்தைப் பாணத்தாற் கீழேவிழவீழ்த்தினன். அரக்கன் தனக்கெதிர்ப்பட்ட மற்றொருவீரனாகிய வீரகேசரிஎன்பவனுடைய மார்பில்தனது வயிரத்தண்டத்தைக்கொண்டுபலமாகச்சாடி அவனைமூர்ச்சிக்கச்செய்தான். வீரவாகு தேவர் ஆர்ப்பரித்து எதிர்த்துவந்த காலையில் தாருகன் முத்தலைச் சூலமொன்றுவிட்டு அவரைமயங்கும்படிசெய்து விட்டான். பின்வீரவாகுதேவர் மூர்ச்சை தெளிந்துஎழுந்து அவுணக்கொடியோன் பேரிற் பிரமாஸ்திரத்தைவிட அதைஅவன் வென்று மாயையின்பலவித வுருவங்களெடுத்து மயக்கத்தைத்தருவதாயினன். தேவரானவர் வீரபத்திரப்படையைத் தம் கரத்திலெடுக்க மாயத்தோற்றம் விலகியோடியது. அவுணராஜன் பக்கத்திலிருக்கும் மாயைக்கிருப்பிடமாகிய கிரவுஞ்

சகிரியினுள் ஓட்டம்பிடித்தான். அவனை வீரவாகுதேவர் தொடர்ந்து சென்றுஅக்கிரியினுள் வழியொன்றுந் தெரியாமல் மயங்கிவிழுந்து விட்டனர். மற்றவீரர்களும் சயினியங்கள் சகிதம் அம்மலையுள் தேவரைப் பின்பற்றிச் சென்று அவர்களும் பிணம்போலானார்கள். அது சமயத்தில் அவுணராஜன் மலையின் உச்சியிற் கிளம்பி வந்து மீதப் பூதப்படைகளை அஸ்திரங்களால் மடித்துப் பலரை நானுதிசைகளிலும் ஓடச்சாடினன்.

இவைகளை நாரதமுனிவரானவர், தெரிந்து சகியாதவராய்க் குமாரசுவாமியாரிடம் உடனே வந்து சேவித்து விண்ணப்பஞ் செய்தனர். மகாகிருபை யோடுங்கூடிய எமது பாலசுப்பிரமணியக் கடவுள் அதிசீக்கிரமாகத் தாருகன் முன்வந்து தோன்றினர், அவ்வவுணனுக்குச் சிவகுமாரன் தெரிசனையினல் ஞானேதயமாகி அப்பால் அவருடன் யுத்தம் செய்வதாய் ஆரம்பஞ் செய்து விட்டான். குமாரசுவாமி உடனே அவனது வில்லை இரண்டாக ஒடித்து மற்றொரு வீரவாளியால் அவன் துதிக்கையையும் இருகொம்புகளையும் கீழேவிழ அறுத்துத் தள்ளினர். அவன்கோபங்கொண்டுசுவாமியின் விருதுக்கொடியை ஒரு பாணத்தால் வெட்டித்தள்ளிச் சாரதியாக வந்த வாயுதேவனையும் மற்றொரு பாணத்தாற் காயப்படுத்தினன். சுவாமியானவர் மற்றோர் பாணத்தை விட்டு அவன் நெற்றியிற் பட்டு உருவிப்போகச் செய்தவுடன் அவன் தேர்த் தட்டில் மயங்கி விழுந்தான். பின் குமாரசுவாமியானவர் அவன் சேனைகளை வளைத்துப்பாணங்களினுற் சின்னபின்னப்படுத்தியபோது அவுணன் மூர்ச்சைவிட்டுக் கிளம்பித் தனியாய் நின்று நாராயணாஸ்திரம் பிரம்மாஸ்திரம் முதலிய தகுந்தவைகளை விட அவைகள் சுவாமிக்கு யாதொரு தீங்கும் இயற்ற வண்ணம் வந்து நின்றன. பின் பாசுபதாஸ்திரம் விட்டான். அதைக் கந்தசுவாமியார் கொடுத்தவன் மறுபடி வாங்குமாறு போலத்தமது கரத்திற்பற்றினர். கொடிய அரக்கன் குமாரசுவாமியினுடைய திறங்களுக்கு அதிசயித்துப் பக்கத்திலிருக்கும் கிரவுஞ்சகிரியின் உதவியைக்கொண்டு மாயவித்தைகளைக் காட்டிச் சுவாமியை மயக்கலாயினன். உடனே, கடவுளானவர் தமது ஒப்பற்றவேலாயுதத்தினை யேவித் தாருகன் மார்பினையும் கிரவுஞ்சகிரியினையும் பிளந்து மயக்குற்றிருந்த வீரவாகு தேவர் முதலியோரையும் மீட்டுத்தமதிடம் வருவித்துக்கொண்டனர்.

தேவர்கள் புஷ்பமாரி தூர்த்தனர். தாருகன் சண்டையில் மாண்டு கிடக்கின்ற மற்றப் பூதவீரர் அனைவரும் நித்திரையினின்றும் எழுந்தவரைப்போலக் கிளம்பிவந்து முருகேசனைப்பணிந்து நின்றனர். தாருகன் முன் தம்மீதுவிடக்கரத்திற் கொண்டிருந்தபாசுபதாஸ்திரத்தைக் குமரக்கடவுள் வீரவாகு தேவருக்குக்கொடுத்துப் போனவிடங்களிலெங்கும் நீ வெற்றிபெற்று வரக்கடவை என அனுக்கிரகம் செய்தனர்

பின் குமாரதேவனானவர் சமர்க்கள வெல்லையைக் கடந்து களித்திருக்கும் தேவர்களுடனும் பூதச்சேனைகளுடனும் பலதேசங்களைக்கடந்து இமயகிரியினைத் தாண்டித் தென் தேசத்தை நோக்கி நடந்து சூரியன் அஸ்தமான சமயத்தில் தேவகிரி என்னும் பருவதத்தைச் சேர்ந்தனர். ஆங்கு மகாவிஷ்ணு முதலியதேவர்கள் சிவகுமாரனை வணங்கிக் கர்த்தனே! எங்கள் நீடித்த கிலேசம் தீரத்தாருகனையும் கிரவுஞ்சத்தையும் பிளந்தீர் அடிபோங்கள் தேவரீரை அருச்சித்து வழிபடவிரும்புகின்றனம். அதற்குக் கடாக்ஷிக்கவேண்டுமென்று பிரார்த்தித்துக் கொள்ள குமாரசுவாமியார் உங்கள் கருத்தின் வண்ணம் செய்யுங்களென்று திருவாய்மலர்ந்து பக்கத்தில் தொழுது நிற்கும் தேவதச்சனை குறித்துச் சிற்பாசிரியனே! நாம் அனைவரும் வாசம்செய்யத்தக்க ஒருநகரத்தினை இக்கு துரிதமாய் அமைத்து முடிக்கக்கடவை எனப் பணிந்தனர். சிற்பியானவன் சுவாமி! இதோ முடித்தேனெனச் சீக்கிரம் ஒரு விசாலமாகிய நகரத்தைச்சகல வளங்களுடன் நிருமித்து அதனிடத்திற் பால சுப்பிரமணிய தேவர் வாசஞ்செய்யத்தகுந்த ஆலயமொன்றினையும் அமைத்து குமாரசுவாமியாரை வந்து பணிந்து நின்றனன். வெற்றிவேற் கடவுள் சகலருடன் அந்நகரத்துட் பிரவேசமாகி அங்குள்ள தமது ஆலயத்துள் நவவீரர் இலட்சத்தவருடன் சென்று சிங்காதனத்தில் வீற்றிருந்தனர். அது சமயத்திற் பிரமனாதி தேவர்கள் குமாரசுவாமிக்கு த்திருமஞ்சனமாட்டிச் சொர்னப்பட்டாடையைத் தரித்துச் சகஸ்திர நாமங்களைப் பாரிஜாதபுஷ்ப விதங்களால் அருச்சித்துத் தாண்டமாலையையும் திவ்யபரிமளக்கலவைகளையும் சாத்தி இரத்தினாபரணங்களை அணிந்து பலவகைகள் முதலிய நைவேத்தியங்களைச் செய்து கற்பூர நிரஞ்சன முடித்துத் தீர்க்க தண்டஞ் சமர்ப்பித்துப் போற்றித் தெரிசித்துக் களிப்படைந்தார்கள். இவை நிற்க.

தாருகாசுரன் மாண்டதை இராட்சததூதர் ஓடி மாயாபுரியைச் சேர்ந்து அவன் இராஜ பத்தினியாகிய சவுரிக்குத் தெரிவிக்க அவள் நிலத்தில் விழுந்து அலறிப் புலம்பும்போது தாருகனுக்கு உரிய மற்றத் தேவிமார்கள் அச்செய்தியைத் தெரிந்து பரந்துவந்து மூத்தவளாகிய சவுரியைக் கட்டிக்கொண்டு பிரலாபித்துப் பின் அவர்கள் அனைவரும் பட்டணத்தைக்கடந்து இரணக்களத்தில் வந்து தங்கள் கணவன் அலங்கோலமாக விழுந்து கிடப்பதனைக்கண்டு அவன்மேல் விழுந்து அழுது புலம்புவதானார்கள். தாருகன் குமாரன் அசுரேந்திர னென்பவன் பிதாவுக்கு நேர்ந்ததைக் கேள்விப்பட்டு இரணக்களம் வந்துபலவாறுகப் புலம்புவதாயினன். சவுரிஎன்பவள் தன்குமாரனைப்பார்த்து என்புருஷனுடன் நான்போவதற்குச் சீக்கிரம் வேண்டிய ஏற்பாட்டைச் செய்துமுடிக்கக்கடவாயென்றாள். அசுரேந்திரன் என்னை வேண்டி நீஇருக்கவேண்டுமென்று எவ்வளவோ சொல்லியும் அவள்கேட்காமல் கடைசியில் அவனால் விசாலமாக வளர்த்திக்கொடுக்கப்பட்ட அக்கினிக்குழியில் தன்பிராணநாயகனுடனும் மற்றத்தேவிமார்களுடனும் பிரவேசமாகிவிட்டாள். அசுரேந்திரன்கிலேசத்துடன்மயேந்திரபுரியைச்சேர்ந்து சபாமண்டபத்தில் விளங்கும் சூரபதுமனைக்கண்டு ஓ! வெனப்புலம்பித்தேவேந்திரன் தந்திரவஞ்சகத்தினாற் சிவகுமாரனென்பவனை உடன்படுத்த இப்போது அப்பாலனால் தாருகன்மாண்டனன் கிரவுஞ்சமும் வெற்றிவேலாற் பிளப்புண்டதென்று கதறிச்சொல்லச் சூரன்இது சுத்தப்பொய்யான விஷயம் என்று பிற்பாடு நிசத்தைத்தெரிந்து அடங்காத துக்கத்தையும் கோபத்தையும்கொண்டு தானே அந்தக்குழந்தையுடன் நேரே சண்டைசெய்து அவனைச்சேர்ந்தவர்கள் அனைவரையும் நாசப்படுத்தி வருவேனெனப் புறப்படுவதாயினன். அப்போது அமோகனென்னும் மந்திரியானவன் தேவரீர் சிறுகுழந்தையின்பேரிற் கோபித்துப் போருக்குச்செல்லல் புகழுக்குரியதன்று இன்னம் வேவுகாரர்களை அனுப்பி அச்சிவகுமாரன் விஷயங்களை ஆராய்ந்துகொண்டுபின் அதற்குத் தக்க ஓர் ஏற்பாட்டைச்செய்து வெற்றியடையலாமெனச் சூரன் அப்படியே அறிந்துவரச்சாரணர்களை அனுப்புவதாயினன். இவைநிற்க.

தேவகிரியில் வீற்றிருந்த சண்முகப்பெருமானனைவர் சூரியன் உதயமானவுடன் அதைநீங்கிச்சகலரும் சூழகடந்து கேதாரம், காசி

ஸ்ரீசயிலம், சுவாமிமலை, திருவேங்கடமலை, காளத்திமலை, திருவாலங்காடு, காஞ்சிபுரம், அருணாசலம், திருவெண்ணெய் நல்லூர், திருமுருகுன்றம், சிதம்பரம், இவைகளை முறையேவணங்கிப் போற்றிக் காவிரி நதியினைக்கடந்து அதன்வட பாரிசத்திற் பெருகும் மன்னியாற்றங்கரையில் வந்துசேர்ந்தனர்.

மகாவிஷ்ணு முதலினோர் பாலசுப்பிரமணியரைத் தொழுது இத்தகையவிடம் கிடைப்பது மிகவரிது. ஆதலால் இன்றிரவு இங்கு தங்கியிருக்கவேண்டுமெனப் பிரார்த்தித்தனர். சரவணபவன் விஸ்வகர்மனைக்கொண்டு யாவருந்தங்கும்படிக்கானநகரம் ஒன்றுஉண்டாக்கும்படி செய்து அதில் இனிதுவிற்றிருந்தனர். பிரமனாதியர் அப்பதிக்குத் திருச்சேய்ஞாலூர் என்னும் பொருத்தமுள்ளபெயரை இட்டார்கள். அதுசமயத்தில் இந்திரனானவன் சிவகுமாரனிடம் விடைபெற்று வெளியேறி உலாவியிருக்கும்போது சிகாழியைச் சூழ்ந்த வனத்திலிருக்கும் தேவதைவந்து தன்வசத்தில் ஒப்புவித்திருந்த ஆபரணபெட்டியைக் கொண்டுவந்து மகபதியினிடம் கொடுத்தது. அவன் அதைவாங்கித் தனது நாயகி அணியாநின்ற பூஷணங்களைக் கண்ட மாத்திரத்தில் அவள்பேரில் அடங்காத மையல்கொண்டு தன்பரிசனரைப் பார்த்து இத்தகைப்பெட்டியை நீங்கள் பதனமாக வைத்திருக்கக்கடவீர்களெனக் கட்டளையிட்டுப்பின் குமாரசுமாமியாரைக் காலையில் வந்துபணிந்துநிற்கக் காங்கேயன் தேவராஜனே! சிவநாதனை நாமிங்கு பூசிக்கவேண்டியதாயிருப்பதால் அதற்கு வேண்டும் உபகரணங்களைத் தருவிப்பை எனக்கட்டளையிட்ட மாத்திரத்தில் அவன் அப்படியே சேகரித்துப்பணிந்து நின்றனன், சரவணபவன் தேவதச்சனால் ஒருஆலயத்தை நிருமித்து அதிற்சிவலிங்கத்தைப்பூசித்து மும்முறை பணிந்தெழுந்த காலையிற் சிவபிரான் தோற்றி உனது பூசனைவழிபாடுகளுக்கு மிகமகிழ்ந்தனம் என்று ஒருமகத்தாகிய பாசுபதாஸ்திரத்தைத் தந்து மறைந்தனர். பின்சிவகுமாரன் அவ்விடம் விட்டுத் திருநெல்வேலியையும் திருவாரூரையும் தெரிசித்துக்கொண்டு கொல்லனுலையிற் காயப்பட்டுச் சிவந்திருக்கும் இரும்பைப்போல அழன்றிருக்கும் பாலைநிலத்திற்பிரவேசித்தபோது மின்னலிடிகளுடன் மேகங்கள் இடைவிடாமல் வருஷித்துப்பின்பு அது குளிர்ந்து விளங்கியது அதைத்திருப்பரங்குன்றச்சாரலில் தவம் செய்திருந்த பராச

ரிஷிகுமாரராகிய அறுவரும் ஞானயோகத்தில் தெரிந்தவர்களாய்க் கர்த்தனை வந்து கண்களாரக்கண்டு வணங்கிநிற்கத்தேவேந்திரன் அவர்கள் முன்சரவணப் பொய்கையில் மீன்பிடித்து விளையாடினமைக்காக அவர்களின் தந்தையாரால் மீன்களாய்ப் போகும்படிக்குச் சாபம் பெற்று அப்பொய்கையில் இருந்தசமயத்திற் பார்ப்பதியாரின் திருமுலைப்பாலை உண்ணக்கிடைத்த மகிமையினால் இவ்வுருவம் பெற்றார்களென விபரமாய்க் குமாரதேவருக்கு அவர்களுடைய சரித்திரத்தை யெடுத்துரைக்க வேலாயுதமூர்த்தியும் அவர்கள்பாற் கிருபையாய்த் தம் கூடவரும்படிக்குக் கட்டளையிட்டனர். அப்பால் வேற்கடவுள் திருச்செங்குன்றூரைத் நெரிசித்துத் திருச்செந்திற்பதியிற்பிரவேசித்துடன்தேவதச்சனைக்கொண்டு அவ்விடத்தில் திவ்வியமானநகரமொன்றினை அமைத்து அதில் அனைவோரும் தங்கியிருக்கும்படிக்குச்செய்து தாம் தமக்கு அங்கு ஏற்படுத்தியுள்ள மாளிகையில் அனைவருடன் பிரவேசித்திருந்தனர். அப்போது குமாரக்கடவுள் சூரன்முதலிய அசுரர்களின் வரலாறுகளை எல்லாம தமக்குச் சாங்கோபாங்கமாக எடுத்துரைக்க வேண்டுமென்று கட்டளையிடத் தேவராஜன்வாக்கில் வல்லபிரகஸ்பதி பகவானைவேண்டித் தேவரீர் நமது சண்முகப்பெருமானுக்கு அவைகளைச்சொல்லியருள வேண்டுமெனப் பிரார்த்திக்கொண்டபிரகாரம் அவர் சொல்வதாயினர்.

க வது உற்பத்திகாண்டம் முற்றிற்று.

———(o)———

உ

குகமயம்

## உ-வது அசுரகாண்டம்.

விருத்தம்

ஊரிலான் குணங்குறியிலான் செயலிலானுரைக்கும்
பேரிலானொரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்
சாரிலான் வரல்போக்கிலான் மேலிலான் றனக்கு
நேரிலானுயிர்க் கடவுளா யென்னுளே நின்றான்.

மரீசி குமாரனான காசிபருக்கு உதித்த அறுபத்தாறுகோடி இராட்சதருக்கு அரசனாகிய அசுரேசனென்பவன் சுமாலி புத்திரியாகிய மங்கலகேசியைக் கல்யாணஞ்செய்து பாக்கிய வசத்தினாற் சுரசை என்னும் பெண்ணைப்பெற்று அவள் ஒப்பற்ற வடிவைக்கண்டு பரிவாக வளர்த்து வரும்போது குரவனான சுக்கிரன் அவளுக்கு மாயவித்தைகள் அனைத்தையும் மந்திர பூர்வமாகப் போதித்து அவள் வல்லபத்திற்காக மாயை என்னும் நாமமிட்டு அரக்கர் சிறுமையினையும் தேவர் பெருமையினையும் எடுத்துக்கூறி இனி அசுரகுலம் விருத்தியடையும்படிக்கு நீ காசிப மகாரிஷியை மையல்மூட்டி அவரைச்சேர்ந்து வலிய பிள்ளைகளைப் பெற்று அவர்கள் பரமசிவத்தை நோக்கி அரியதவங்களைப் புரிந்து மேன்மையுறும்படி செய்வாயெனக் கட்டளையிட்டனர். அதை மாயையானவள் கேட்டு அடியேன் அப்படியே செய்யக்கடவனென அவரைச்சேவித்துப்போய்க் காசிபர்தவம் செய்திருக்கும் வனத்தையடைந்து மோகினிக்கும் மேலாகிய வடிவினைக்கொண்டு அவருடைய கண்ணிற் படத்தோன்றலும் அவர் சிவத்தின் கண் செலுத்திய சித்தம் கலைந்து அவள்பேரில் அடங்காத மையலைக்கொண்டு, பெண்ணரசியே! உமது வரவு என்பாக்கியவசமாகும். ஆதலால் உமதுகுலம் யாது? நீர் இருக்குமிடம் எது? உமது திருநாமமென்ன? உமது தந்தை யாவன்? சற்று தயைசெய்து சொல்லுமெனக் கேட்டனர். மாயை அவரைப்பரிந்து நோக்கித் தவத்தினை விரும்பிய மகத்துக்களுக்கு இவைகளினால் ஆகவேண்டியதென்னே? முத்தியினை அளிக்கும் தவம் செய்யப்போம் என்றனள். காசிபர் மனம் கரைந்து காமநோய் வருத்துகின்றதால் சற்றுதயை செய்யவேண்டும் என்றனர். அதை மாயை கேட்டு நகைத்துநான் மேருவுக்குத்தட்சணபாகத்திலுள்ள கங்கையை நாடிச் செல்லுகின்றேன். ஆதலால், நான் அவ்வாறேபோய் வருவேனென்று சொல்லி மறைந்து விட்டனள். உடனே காசிபர் அவளிடத்திற் கொண்ட மையலினாலே மிகவும் துன்பப்பட்டு வருந்திப் பலவிதங்களாக வாய்விட்டுப் புலம்புவதாயினர். அப்போது சகல துன்பங்களுக்கும் மூலமான மாயையானவள் தான் எண்ணிவந்த கோரிக்கையினைப் பெறுதற்கு இது தருணமென்றெண்ணிப் பின் அவர்காண மின்னற்கொடியை ஒப்பத்தன் உருவம் வெளிப்பட நின்றாள். மாயையினைக்காசிபர் கண்டவுடன் திரவியத்தைக் கண்ட தரித்திரனைப்போலக் களித்துப்பின் அவளுடைய சம்மதத்தின் பேரில் அவளையணைத்துக்

கட்டிப்போகக்கடலின் கரைகாண மன்மத நூல் இலக்கணப்படிக்குக் கிரீடித்தனர். மாயையானவள் மனம்பூரித்துப் பேரானந்த சமுத்திரத்தைக் கடந்தவள் போலக்களித்தின்ப முற்றாள். அப்போது பிரமன் விஷ்டு தேவேந்திரன் விண்ணவர் முனிவராதியர் தத்தம் உள்ளம் நடுக்குறப் புயவன்மையிற் சிறந்த சூரபதுமன் பிறந்தான், அவர்கள் வியர்வையில் வலிபெற்ற முப்பதினுயிரம் வெள்ளம் தானவர் பிறந்தனர். பின் அவள் மற்றோரிடம் சென்று பெண் சிங்கவடிவாகக்காசிபர் ஆண்சிங்க வடிவுகொண்டு அவளைப்புணர உடனே ஆயிரமுகங்களையும் இரண்டாயிரம் கரங்களையும்பெற்ற சிங்கமுகாசுரன் உதித்தான். அவர்களின் வியர்வைகளிடத்திலிருந்து நாற்பதினுயிரம்வெள்ளம் சிங்கமுகங்களைப்பெற்ற இராக்கதர் பிறந்தனர். அவர்களை அவ்விடத்தேவிட்டு மற்றோரிடம் சென்று மாயையானவள் பெண்யானை வடிவெடுத்து நிற்கக்காசிபர் மதயானைவடிவுகொண்டு புல்லினர். உடனே நாலுகொம்புகளையுடைய யானைமுகத்துடன் தாருகாசுரன் உதித்தான். அவர்களின் வியர்வையில் நாற்பதினுயிரம் வெள்ளம் யானைமுகங்களைப்பெற்ற அவுணர் வெளிவந்தனர். மாயை பின் செம்மறியாடாக முனிவர் செச்சை வடிவுகொண்டு கூட உடனே அசமுகி என்னும் பெண்ணனவள் அவதரித்தனள். வியர்வையில் முப்பதினுயிரம் வெள்ளம் அவுணர் பிறந்தார்கள். அவர்களை அத்தலத்தில் நிறுத்தி வேறோரிடம் சென்று யாளி, புலி, குதிரை, மான், கரடி, முதலான மிருகங்களின் வடிவைக் கொண்டு விடியற் காலத்திற் புணர அவ்வம் முகங்களைப் பெற்று அறுபதினுயிரம் அவுணர் தோன்றினர். இவ்வாறே மாயையானவள் சூரன் முதலான நான்கு பிள்ளைகளையும் இரண்டு லட்சம் வெள்ளஞ் சேனைகளையும் ஓர் இரவிற் பெற்றனள்.

சூரியன்உதயமானபின் சூரன்தன்துணைவருடன்கலந்துவந்து தாய் தந்தையரை வணங்கிக் குரவரே! இனிநாங்கள் நடந்துகொள்ள வேண்டிய கிரமங்களைக்கட்டளையிடுவீரெனப்போற்றக்காசிபர் மகிழ்ந்து தவத்தினும் சிறந்த பொருளொன்றுமில்லை யெனப் பலநீதி வாக்கியங்களைப்போதித்துப் பின் மார்கண்டேயரின் சரித்திரத்தையும் வரன் முறையாக அவர்களுக்கு உதாரணமாவெடுத்துப் போதிப்பதாயினர்.

கடகமென்னும் நகரத்திற் பிரமகுலத்தில் அவதரித்துந் தவங்

களைச் செய்து சிரேஷ்டரான குச்சகரென்பவருக்குக் கவுச்சிகரென்னும் ஓர் ஒப்பற்ற குமாரர் பிறந்தார். அவர் பரமசிவத்தைக்குறித்து அரியதவங்களைச் செய்து ஈஸ்வரனநுக்கிரகத்தால் மிருகண்டேயரென்னும் பெயரும்பெற்றுத் தமது பிதாவையுற்றகாலத்தில் அவர் புதல்வனை நோக்கி மிகமகிழ்வுற்று நீ கற்புடைய மனையாள் ஒருத்தியை மணந்து இல்லற தருமத்தை நடத்திப்பின் யோகசாதனைகளைச் செய்ய விருப்பமாகின்றேன் என்றார். அதற்கு அப்புதல்வர் தவத்தினல்லது பொய்யாகிய இல்லறத்தைப் பூண்டு ஜனன வாதையை ஒழிக்கலாகுமா? பிரமன் பூமியின் கண்ணிரானின்ற அளவற்ற மகாபாதகங்கள் அனைத்தையும் ஏகமாய்ச் சேர்த்துப் பெண் உருவாகப் படைத்ததேயன்றி வேறென்ன? இவை தேவரீருக்குத் தோற்றாதது மன்றே எனவுரைத்தனர். பிதாவானவர் இல்லற தருமவியலைப் பற்றிய பல நியாயங்களை எடுத்துக்கூறி நமது குலத்தினராகிய மேலோர் நரகத்தில் அழுந்துவதை நீத்தற் பொருட்டுத் தொன்மையைக்கடைப்பிடித்து இம்மை மறுமைப் பலனைத்தரும் புதல்வனைப் பெறவேண்டி உத்தமக்கன்னியை மணஞ்செய்யக்கடவாயெனக் கட்டளையிடப் புதல்வர் அக்கருத்திற்கிசைந்து அப்படிக்கானதோர் உத்தமஸ்திரீயை எனக்கு விவாகம் செய்துவைத்தால் நான் இல்லறத்திலிருக்க மனமுடையேனெனக்கூறப் பிதாவானவர் அவ்விதமே செய்வேனெனப் பெண் தேடிவரப் பிரயாணமாயினர். பயணமாகிப் பலவிடங்கள் துருவி வருங்காற் சோழதேசத்தில் அநுமயம் என்னும் ஓர்வனத்தில் அருந்தவராகிய உசத்தியரென்பவரின் குமாரி விருத்தை என்பவள் சகல இலக்கணங்களையும் பெற்றுப் பருவமுடையவளாயிருப்பதை யறிந்து அவர் அத்தவரின் ஆசிரமத்தை அணுகும்போது அவர் இவரை எதிர்வந்து உபசரித்துத் தமது இருக்கைக்கு அழைத்துவந்து அவருக்கு அமுதம் போன்ற போஜனத்தை அருத்தி மகிழ்ந்து, தேவரீர் இவ்விடம் எழுந்தருளியகாரியம் யாதெனவினவக்குச்சகர் தவசிரேஷ்டரே! நீர் அருமையிற் பெற்றபெண் கொடியை என் குமாரனுக்கு மணஞ்செய்யக் கருதிப் பேசவந்தோம் என்னும் வாசகம் செவிபுகாமுன் ஆனந்தவாரி பொங்க உடனே இசைந்தனர். இப்படி இருக்கும்போது விருத்தை என்பவள் தோழிப்பெண்களுடன் சேர்ந்து வனத்திற் பூக்கொய்து விளையாடச்சென்ற காலத்தில் ஒரு காட்டானை வேகமாய்த் தமது எதிரில் வரக்கண்டு தோழிப்பெண்கள் பலதிக்கினும் ஓடிமறைய

அத்தருணத்தில் விருத்தைஎன்பவள் தானும் ஒருபுறம் ஓடும்போது ஆழ்ந்திருந்த ஒரு பாழ்ங்கிணற்றில் விழுந்து அழுந்தி மாண்டனள். தோழிப்பெண்கள் உசத்திய முனிவரைக் கண்டு வனத்திற்காட்டானை யைக்கண்டு பயந்து ஓடிவந்து விட்டோம். உம்முடைய குமாரத்தியா கிய விருத்தையைக் காணக்கூடவில்லை யெனச்சொல்ல அவர் மகா வருத்தத்தை யடைந்து எங்கனுந் தேடிக்காணமற் பின் அக்காட்டின் பாழுங்கிணற்றில் அவள் மரித்துக்கிடப்பதைக்கண்டு எடுத்தகாலையில் யாவரும் வருத்தப்பட்டுப் புலம்புவதானர்கள். அப்போது, பெண் கேட்கவந்த குச்சகரானவர் அவர்களைவருக்குந் தேறுதலைச்சொல்லி நாம் நாளை இப்பெண்ணை எழுப்பித்தருவோம். இக்கன்னிகை காலமு டிந்து இறந்தவளல்ல. இதனைப் போதவுணர்வின லறிந்தோம் எனவு ரைத்து அவ்வுடலைத் தயிலக் கொப்பரையிற் பதனஞ்செய்து வைக்கக் கட்டளையிட்டனர்.

குச்சகமுனிவருடைய ஞானதிஷ்டியில் தோன்றியதென்னவெ ன்றால்:— தருமதத்தனென்னும் வணிகனொருவன் அவனுடையமா தாக்கள் சம்பாதித்துத்தருமம் நடத்திவந்த சொத்துக்களை அவர்களு க்குப்பின்தன் ஆளுகையில் ஓர்கபட இரசவாதியின் மாயையில் அக ப்பட்டுப் பொருளழிவுசெய்தமையால் அப்பாதகன் மதங்கொண்ட யானை யாகப்பிறந்து பூர்வசம்பவங்களொன்றையும் அறியாது இதனை ச்செய்தானென்பதாம். குச்சகர் இப்பிறப்பைச் சிவகடாக்ஷத்தினல் இந்நிமிஷத்தில் மாற்றவேனெனத்துணிவு கொண்டவராய்த் தமது தவத்தின் ஒருதினப்பலனை அந்தயானைக்குத்தத்தம் செய்தகாலத்தில் அப்பாதகம் நசித்து அவ்வுருமாறிச் சுந்தரமுள்ள தேவஉருவம் பெற் றுநின்றனன். பின்அவன்அவருடைய அருளினாற்பொன்னுலகப்பதவி யை அடைந்தான். பின்பு குச்சகமுனிவர் எமதர்மராஜனைத் தியா னிக்கஅவன்வந்து இறந்தபெண்ணுக்கு உயிர்ப்பிச்சைதந்து சென்ற னன். உடனேசகலரும் ஸந்தோஷசாகரத்தில் மூழ்கிக்குச்சகருடைய குமாரனுக்கு விருத்தையைத் திருக்கல்யாணஞ்செய்து கொடுத்தா ர்கள். இவர்கள் உயிரும் உடலும் போலக்கூடிவாழும் நாளில் மிரு கண்டனென்னும் ஓர் புத்திரனைப்பெற்றார்கள். இவருக்குத்தகுந்த பிரா யம்வந்தபின் மருத்துவதியென்பவளை மணந்து வெகுகாலம் பிள்ளை

யில்லாமலிருந்தபடியால் பரமசிவத்தைக்குறித்து அவர்கள் தவம் செய்யமுதல்வன் பிரசன்னமாகி அவரை நோக்கித் துர்க்குணமுள்ள பிள்ளைவயது நூறு உடையதாகத் தேவையா? அல்லது சற்குணமுள்ளபுத்திரன் பதினாறுவயதுடையவன் தேவையாவெனக்கேட்க மிருகண்டுவென்பவர் பதினாறுவயதைப்பெற்ற சற்புத்திரனையே வேண்டிக்கொள்ளச் சிவபிரான் அவ்வாறே அநுக்கிரகித்தனர். பின் மருத்துவதியென்பவள் கருப்பமுற்றுத் திரிலோகங்களுமீடேற வேதங்களையோதும் வாயைப்பெற்ற ஓர்திருக்குமாரனைப் பிரசவித்தனள். பிரமதேவர் எழுந்தருளி அப்பிள்ளைக்குமார்க்கண்ட னெனப்பேர்தந்து சென்றனர். கலைகளனைத்திலுந் தேர்ந்து பதினாறுபிராயம் பெற்றுவிளங்குந் தமது திருக்குமாரனாகிய மார்க்கண்டனென்பவனைப் பெற்றோர்பார்த்து விசனிக்க நேரிட்டகாலையில் அவன் அவர்களுக்குத் தயிரியங் கூறிப்பரமசிவனைக்குறித்துத் தவஞ்செய்து நான்பூரணஆயுளைப்பெற்று வருவேனெனத் தாய் தந்தையரிடம் விடைபெற்று அதிசீக்கிரத்தில் திருமணி கன்னிகையென்னும் ஆலயத்துட்சென்று ஸ்ரீ விஸ்வநாதரைச் சேவித்துமகிழ்ந்துபின் அவ்வாலயத்தின் தென்பாரிசத்தில் பரமசிவன் உருவமாகிய இலிங்கத்தைஸ்தாபித்து அன்புடன்பூசித்து வருகையில் பரமசிவன் எழுந்தருளி அவனைக்கிருபா நோக்கமாகப்பார்த்துப் பிள்ளாய்! காலனுக்குச்சிறிதும் அஞ்சலே! அஞ்சலே! என்று தமது உபயசரணாரவிந்தங்களையும் பத்தன் சிரத்திற்சூடினர் பின்னும் மார்க்கண்டன் பழயபடியேசிவலிங்கத்தைப் பூசனைவழிபாடுகள் செய்துவரும்போதுபதினாறுவயதும் பூரணமாயிற்று. அப்போதுஎமபடன் அவனுடைய உயிரைக்கொண்டுபோகவந்தனன்பாலன்பரமசிவன் பாதகமலங்களைஎக்காலமும்தொழும்இயல்பினனாயிருப்பதால்அவன் பயந்துதிரும்பிப்போய்இயமதருமனிடம்சொல்ல அவன்பெருமையைவாய்ந்தகாலனை அனுப்பினன். அவன்மார்க்கண்டனை அணுகியழைத்தகாலையில்அவனைமார்க்கண்டன்இங்கு அணுகாது போவெனக்கோபித்துரைக்கஅவன் மீண்டு தருமராஜனிடம் சென்று அதனைத்தெரிவித்தான். இயமராஜன் மகாகோபங்கொண்டுஎருமைக்கடாவாகனத்திலேறிக்கரியதேகத்தையும் கொடியவேலையும் தாங்கிப் பாலன் சமீபத்திற்போய்த்தான் கரத்திற்கொண்ட காலபாசத்தைக் கிறுகிறெனச் சுழற்றி யெறிந்து அவனுடைய திருக்கண்டத்தில் மாட்டிச் சிவலிங்கத்துடன் வலித்திழுக்கத் தொடங்கினன். அதுசமயத்தில் மார்க்கண்டன் சற்று

மனமிளையாமற் சிவலிங்கத்தைத்தழுவி மிருத்தியுஞ்செயா! மிருத்தியுஞ்செயா!! வெனப்பரமனைப்போற்றிக் கர்த்தனே! கூற்றுவன் வலிசெய்கின்றான். கடாக்ஷிக்கவேண்டுமெனப் பிரார்த்தித்தபோது சிவபிரானெழுந்தருளி அஞ்சலே! அஞ்சலே! எனமார்க்கண்டனுக்குத் திருவாய்மலர்ந்து பின் வீரகண்டை யணிந்த தமது இடது திருவடியை நீட்டிச்சற்று எமனை உதைத்தனர். அத்தாக்கலினாற் கூற்றுவன் இடிமுழக்கம்போல் இரைந்துபூமியில் விழுந்துமாண்டனன். பரமசிவன் தம்மைப்புகழ்ந்திருந்த சிறுவனைக்கிருபையாகப் பார்த்து மகிழ்ந்து மதலாய்! நீநம்மைப்போற்றிச் சிறந்தபூசனைபுரிந்த காரணத்தினால் என்றும் பதினாறாய் அழிவில்லாத ஆயுளைஉனக்களித்தோமென அருளிச்செய்து மறைந்தனர். பின்தேவர்கள் பரமசிவத்தைப் பிரார்த்திக்க எமன் உயிர்பெற்று வாழ்ந்தான். ஆகையால் கேட்டீர்களோ! சூரனாதிபரே! தவத்தின் மேலானபொருள் ஒன்று மில்லை. அதைச்செய்து மேம்பட்டிருக்கக்கடவீர்களெனக் காசிபர் கட்டளையிட்டனர்.

பக்கத்திலிருந்த மாயையானவள் இதனைக்கேட்டு நகைத்துஇது மேலாகிய மோக்ஷவீட்டைப்பெற விருப்புற்ற தவத்தருக் கல்லாமல் நாம்பெற்றகுழந்தைகளுக்குப் போதிக்கப்படுவதோ? இவர்கள் கீர்த்தியையுடைய சக்கிரவர்த்திகளாகச் சிவ கடாக்ஷத்தினால் ஆகவேண்டுமென்றனள்.காசிபர்அதுவிஷயம் நீயேஅவர்களுக்குப்போதித்தனுப்புவையெனச்சொல்லினர். மாயையானவள் சூரன்முதலிய மூவரைநோக்கி உங்களுக்குச் சென்மவயிரிகளாயிருக்கும் தேவர்கள்தங்கள் முயற்சியினால் மேன்மையடைந்து மேலுலகத்துள்ள மேலான செல்வசம்பத்தை யநுபவித்து வாழ்கின்றார்கள். ஆகையால், நீங்கள் கங்காசடாதரமூர்த்தியைச் சித்தத்திலிருத்தி வீரமாமகத்தை அவரினும் சிறந்த மேம்பாட்டைப்பெறக்கருதிச்செய்து முடித்து முதன்மையான செல்வத்தைச் சம்பாதித்துக்கொள்ளக் கடவீர்களென்று கட்டளையிட்டாள். அதற்கு உடன்பட்ட குமாரர்களுக்கு அது விஷயத்தில் உதவியாயிருக்கும்படி மாயையானவள் காசிபரைவிட்டு நீங்கிப்பிள்ளைகளை மகத்துக்கழைத்துச் சென்றனள். முனிவர் அவள் பிரிவாற்றாது வாடிமயங்கிச் சோகமுற்றிருந்தனர். பிரமதேவர் தமது குமாரனுக்கு உற்றமயக்கத்தை நோக்கிஅவரை அடுத்துத்தேற்றித்தவத்தில் மனத்தைநிறுத்தியிருக்கும்படி செய்து போயினர். அசுரகுருவாகிய சுக்கி

ரபகவான் மூவருடைய முயற்சிகளை உணர்ந்தவராய் மகிழ்ச்சி அடைந்து அவர்களை மார்க்கத்திற் சந்தித்து அவர்களுக்குக் கர்த்தனுடைய திருமந்திரமாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை உபதேசித்துத் தம்பதிக்கு மீண்டனர். இப்பால், மாயைபுத்திரர் வடதிசையை நோக்கிச்சென்று உத்தரபூமியைச் சேர்ந்து ஓர் இடத்தைக்குறித்து ஆங்கு வேள்வியை முடிக்க யோக்கியமாய்ப் பதினுபிரம் யோசனை விஸ்தீரணமுள்ள மதிலை எழுப்பி அதைச்சுற்றிலும் வலிபெற்ற இராக்கதச்சேனைகளைக் காவலாக இருத்தி அதனுள் ஓமகுண்டங்களை அமைத்துத் தவத்தைத் தொடங்கினர்கள். இவ்வாறு தொடங்கி வெகுகாலம்வரை பரவசிவம் பிரசன்னமாகாமையினுற் சூரன் அக்கினிக்கொழுந்து விட்டெரியும் யாககுண்டத்தின் மத்தியிற் சிவப்பாகக்காய்ந்து விளங்கி இருக்கும் ஊசிய வச்சிர கம்பத்தின் மீது ஆகாயத்திற் கிளம்பிக் குதிக்க அவ்வூசியானது அவன்கபாலத்திற்கு மேலும் உருவிப்பிளக்க ஆவன் வேள்விகுண்டத்தின் அடியில்விழுந்து பதைத்து மாண்டனன். பக்கத்தில் ஓமஞ்செய்திருந்த சிங்கமுகாசுரன் இதைக்கண்டவுடன் மனம் நடுங்கிக் கண்களில் நீர்பெருகப் பிரலாபித்து இனிப்பரமசிவம் எங்களுக்கு மனமிரங்கிக் காட்சிதராமலிருந்தால் நாங்களிருவரும் அவ்விதமே மாளக்கடவோமெனப் பரந்திருக்கும் தனது ஆயிரம் சிரங்களையும் ஒவ்வொன்றுகத்தன் கரங்களின் நகங்களினுற் கிள்ளிக்கிள்ளித் தன்தமயன் பூசித்த யாகத்திற் சமித்துகளாகக் கொண்டு போட்டனன். தவமுயற்சியினுல் மீண்டும் அச்சிரங்கள் அவனுக்கு முளைக்க அவைகளையும் பறித்துப்பறித்து அவன் அவிகொடுத்தலினுலே அவனது கரங்கள் ஓய்ந்தும் சிவபிரான் கடாக்ஷியாதலினுல் தானும்தீயிற் பாயத்துணிந்து வானத்தில் எழும்ப மனதில் திடங்கொண்ட மாத்திரத்திற் சிவபிரான் திருவுளத்தில் அதை அறிந்து ஓர்விருத்தப்பிராமணவடிவங்கொண்டு அவன்முன் தோற்றிக் கிலேசப்பட்டு வருந்தற்குக் காரணமென்னவென அவனை வினவிக் கங்கையை வருவதாய் நினைந்தனர். அக்கங்கையானது ஓமகுண்டத்திற் பாய்ந்தவுடன் சூரபதுமன் அதினின்றும் வெளிவந்தனன். உடனே பரமசிவம் ரிஷபவாகனரூடராய்ச் சிவகணங்கள் சூழ அம்மூவருக்கும் பிரசன்னமாகி உங்களுக்குத்தேவையான வரங்கள் தருவோம் கேளுங்களெனக் கட்டளையிடச் சூரன் விண்ணப்பஞ் செய்கின்றுன். தீனதயாபரனே! அண்டங்கள் அனைத்தினுக்கும் சக்கிரேஸ்வரனுய் அரசு செலுத்தவும் அவைகளைக்

காக்கவல்ல ஆக்கினைசக்கிரமும் நினைத்தற்குமுன் அவைகளைச் சுற்றிப் பார்த்து வரும் வேகமுள்ள வாகனங்களும் எக்காலமும் அழிவில்லாத வச்சிரதேகமும் தந்தருளவேண்டும். இஃதன்றியும், கேசவன் முதலியோர் எதிர்த்தாலும் அவர்களையும் ஜெயங்கொள்ளும் வலியையும் சமஸ்த தேவாஸ்திரங்களுக்கும் நாசமில்லாமல் சிரஞ்சீவியாயிருக்கையும் கடாக்ஷிக்க வேண்டுமென்று பிரார்த்திக்கப் பரமேஸ்வரன் அருளிச்செய்வார்: இப்பூமண்டல வெல்லையுள் ஆயிரக்கோடி அண்டங்கள் உண்டு. அவற்றுள் ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கு நீ அதிபனாய் நூற்றெட்டு யுகங்கள்வரையில் அரசுசெலுத்தக்கடவாய் என்று அண்டங்கள் முற்றிலும் நினைவின்படிக்குச் செல்லும் வேகமும் வலியும் பெற்ற இந்திரஞாலமென்னும் தேர் ஒன்றையும் அப்புவனங்களைப் பாதுகாக்க விஷ்ணுவின் சக்கிரத்தினும் சிறந்த திகிரி ஒன்றையும் வீரம்பெற்ற சிங்கவாகனம் ஒன்றையும் பாசுபதாஸ்திரம் முதலிய தேவப்படைகளையும் எக்காலத்திலும் அழிவில்லாத வச்சிரகாயத்தையும் அனுக்கிரஹித்து மிக்கவலி பெற்ற பதினாயிரக்கோடி சயினியங்களையும்படைத்தளித்துச் சூரபதுமனையாரினும் பெரியோனாகச் செய்த காலையில்துணைவராகிய சிங்கமுகனும் தாருகனும் கர்த்தன் திருவடிகளிற் சேவித்துப் போற்ற அவர்களுக்கும் வேண்டிய வரங்கள் அஸ்திரங்கள் கொடுத்துப்பின் ஆதி மூர்த்தியானவர் மூவரையும் நோக்கி நமது ஒப்பற்ற சத்திஒன்றினாலன்றி மற்றெவர்களாலும் உங்களை வெல்லபடாதென்றருளிப் பூதகணங்கள் போற்றத்தமது திருக்கயிலைக்கெழுந்தருளினர்.

மாயையானவள் தனதுபுத்திரர் பெற்றவரங்களுக்காக ஆனந்த சாகரத்தில் மூழ்கியிருந்தனள். பின்மூவரும் தமது பிதாவாகிய காசிபரையடைந்து நமஸ்கரித்துச் சிவகடாக்ஷத்தினால் தாங்கள் பெற்றவைகளைத் தெரிவித்து அவருடைய ஆசீர்வாதமும் பெற்றனர். அசுரகுருவாகிய சுக்கிரபகவான் அவர்களை வந்தடைந்து அவர்கள்பெற்ற பேற்றினுக்காக மிகச்சந்தோஷங்கொண்டு அம்மூவருக்கும் மகாவிஷ்ணு முதலியதேவர்கள் அனைவரையும் ஜெயங்கொண்டு திக்கு விஜயமும் பெற்றுத் திரும்பி இப்பூமியிற் சிறந்தவிடத்தில் ஓர் நகரம் உண்டாக்கி அதிற் சகலருந்தொழுது சூழ அரசுசெலுத்திவாழக்கட வீர்களெனக் கட்டளையிட. அவர்கள் அதற்கு இசைந்து அவ்வாறேவலிபெற்ற சயினி

யங்களுடன் பயணமாகிக் குபேரன் பட்டணமாகிய அழகாபுரியை வந்து வளைந்துகொள்ள அவன் பரமசிவத்தின் பூரணகடாக்ஷம்பெற் றவர்களென எண்ணி அவர்களை எதிர் கொண்டுவந்து ஆசிர்வதித்து என்னையும் எனது சுற்றத்தையும் உங்களது அடிமைகளாகக் கொண் டருள வேண்டுமென வேண்டிப்பின் தனது இருக்கை சேர்ந்தான். இவ்வாறே மூவரும் இந்திரன் அக்கினி இயமன் நிருதி வருணன் முதலானவர்களைத் தமக்குச் சரணமடையும்படி செய்தார்கள் தீவாந் தரங்கள் சத்தபாதலங்கள் இவைகளிலெல்லாஞ் சென்று வெற்றி கொண்டு தமதுகொடியை நாட்டிப்பின் மகாவிஷ்ணுவையும் சண்டை க்கழைத்து அவருடைய சக்கரத்தையும் தாருகாசுரன் தனக்குக் கழுத் தணியாகக்கொண்டனன். பின் மூவரும் தேவாதிதேவனாகிய பரமன் வீற்றிருக்கும் திருக்கயிலையைச் சேர்ந்து தமது வாகனங்களை விட்டிற ங்கிப் பரமனைப் போற்றிப்பணிந்து மற்ற அண்டங்கள் முற்றிலும் போய்ப்பார்த்து வருவதாய்ச் சென்று அவ்வாறே அவ்விடங்களிலெ ல்லாம் ஜெயசீலராய்த் திரும்பிச் சுவர்க்கலோகம் வந்து சேர்ந்தனர். அப்போது பூர்வத்தில் தேவர்களுக்குத தோற்றோடிமறைந் திருந்த தானவ அரசனாகிய அசுரேந்திரனென்போன் தனது குருவாகிய சுக் கிரபகவானிடம்திக்குவிஜயம் செய்துவரும் சூரபதுமனைக் காணவிரு ம்புகின்றேன். தேவரீர் அதற்குக் கிருபைசெய்ய வேண்டுமெனப் பிரார்த்திக்க அப்பகவான் அப்படியே சூரனுடன் இவன்பந்துத்து வம்பாராட்டி யிருக்கும்படி செய்து வைத்தார்.

பின் சூரனானவன் தனது துணைவர்களுடன் பூமண்டலம் வந்து சேர்ந்து சுக்கிரன் கட்டளைப்படிக்கு விஸ்வகர்மனைக்கொண்டு தென் சமுத்திர நடுவில் தனக்கு வீரமாமயேந்திர மென்னும்பெயருள்ள ஓர் ஒப்பற்ற நகரத்தையும், சிங்கமுகன் வாசஞ்செய்வதற்கு ஆசுரமென் னும் ஓர் நகரத்தையும் உண்டாக்கிப் பின்தனது மற்றோர் சகோதரனா கிய தாருகனுக்கு மகா மேருவுக்குத் தென் பாரிசத்தில் மாயாபுர மென்னும் பெயருள்ள ஒரு பட்டண முண்டாக்கிப் பின் தனக்குநிரு மித்த பட்டணத்திற் சகலவைபவத் துடனும் பிரமனாதியர் சகலரும் போற்றச் சுபதினத்திற் பிரவேசித்துச் சபாமண்டபத்திற் கோடிசூரி யப்பிரகாசம் பெற்று விளங்கும் சிங்காசனத்தில் வீற்றிருந்தான். அத் தருணத்தில் நான்முகன் வயிர முடியினை இராஜாதிராஜன் சிரசிற்சூடி

னன். இந்திரன் முதலிய தேவர்கள் அவனுக்காக வேண்டிய பலவே லைகளைச் செய்து கொண்டு கைகட்டி அவன் தயவுக்கு எதிர்பார்த்து நின்றனர். அப்போது சூரன் மகாவிஷ்ணுவைப்பார்த்து நீ இன்றுமுதல் நாம் வேண்டும்போது வந்து செய்திகளைக் கேட்டுப் போக்கடவை யெ ன்றும், பிரமனை நித்தியம் பஞ்சாங்கம் சொல்லிப் போவாயெனவும், இப்படி மற்றத் தேவர்களுக் கெல்லாம் பலகட்டளைகளை ஏற்படுத் தியபோது அவர்கள் தேவரீர் கட்டளைப்படியே நடக்கின்றோ மென வணங்கி நின்றனர். பின் விஸ்வகர்மன் புத்திரியாகிய பதுமகோமளை என்பவளைச் சூரனும், அக்கினி தேவன் புத்திரியாகிய விபுதை என்ப வளைச் சிங்கமுகனும், நிருதிபுத்திரியாகிய சவுரி என்பவளைத் தாருகனு ம்மணஞ்செய்து கொண்டார்கள். இவ்விதமாகத் திருக்கல்யாணங்கள் முடிந்த பின் சூரனானவன் தம்பியரை நோக்கி உங்களுக்கு ஏற்படுத் தியிருக்கும நகரங்களிற் சேர்ந்து நம்மைப் போலவே சகல செல்வங் களையும் அனுபவித்திருப் பீர்களென்று சொல்லிச் செலவு கொடுத்த னுப்பினன்.

இப்படிச்சூரன் சக்கிரேஸ்வரனாய் ஆண்டுவருங் காலத்தில் ஓர் தினம் அவன் இந்திரன் முதலியோரை அழைப்பித்துச் சமுத்திரமகர மச்சங்களைப் பிடித்துநாம்புசிப்பதற்குத் தினம் கொண்டு வந்து சேர் க்கக்கட வீர்களெனக் கட்டளையிட அவர்கள் அவ்வாறே நாள்தோ றும் அவ்விழி தொழிலைக் குறைவறச் செய்து துக்கசாகரத்தில் அ முங்கி வேத வொழுக்கங்களை இழந்துசிங்கமுகன் தாருகனுக்குரியபணி விடைகளையும் செய்து வருவார்கள்.

இப்படி நடந்து வருங்காலையிற் சூரபதுமனுடைய பட்டத்துத் தேவியாகிய பதுமகோமளை என்பவள் எமனைப்போன்ற குமாரனொ ருவனைப் பெற்றாள். அக்குழந்தை விருத்திச் சந்திரனைப போல்வளர் ந்து வருங்காலையில் ஓர்தினம் பொற் றொட்டிலில் நித்திரை செய்யும் போது சன்னல் மார்க்க மாகச்சூரிய கிரணமானது தன்மீது கொஞ்ச ந்தாக்க அவன் கோபங்கொண்டு உடனே வேகமாய்ப் பாய்ந்து சூரிய னைக்ஷணத்திற்பிடித்து மீண்டு தனது தொட்டிற்காலிற் கட்டி நித்திரை செய்தான். பின்பிரமதேவன் தனது பிரமாஸ் திரத்தையும் மோக னாஸ்திரத்தையும் அப்பாலனுக்கு வெகுமானமாகக் கொடுத்து வே ண்டிச் சூரியனை விடுவித்தனன். பிதாவாகிய சூரன் இவைகளைக் கே

வ்விப்பட்டு மிகமகிழ்ச்சி யடைந்து தனது குமாரனுக்கு அக்காரணத்தினாற் பானுகோபனென்று பேரிட்டான். இவன் காளைப்பருவ மடைந்தபோது மகா விஷ்ணுவையும் போரிற் செயித்து அவராற்புகழ்ப்பெற்று வாழ்ந்தான்.

சூரபதுமன் தங்கையாகிய அசமுகி என்பவள் அழகுள்ள புருஷரைத் தேடிஇரவுபகல் என்னும் பேதமில்லாமல் நேர்ந்தபோது அவர்களை வலிவில் தழுவி இன்ப நலத்தினை அனுபவித்துக் களித்தும் சிறந்தவடிவுள்ள தேவபத்தினியரைப் பல வந்தமாகக் கொண்டுவந்துதன் தமயன் மார்புறத் தழுவி மனங்களிக்கக் கொடுத்தும் இவ்வண்ணமாகத் திரிபவள் ஓர்தினம் துர்வாச முனிவரை அடுத்து அவரைவலிதிற் புணர்ந்து வில்வலன்வாதாவி என்னும் இரண்டுகொடிய புத்திரரைப் பெற்றனள். அக்குமாரர் தமது பிதா வாகிய துருவாசரிஷியினுடைய பாதங்களிற் பணிந்து தேவரீர் நோற்ற தவமுயற்சிகளை எங்களிருவருக்கும் தரக்கடவீரெனக்கேட்க, அதற்கு அவர்குமாரர்களே! நீங்கள் அதைத்தவிர வேறே எதனைக்கேட்கினும் தருவேனென்ற வளவில் அவர்கள் பிதாவின் பேரிற்கோபங்கொண்டு கொல்ல எத்தனித்த போது முனிவர்வெகுண்டு நீங்கள் இருவரும் அகத்திய முனிவரால் மாளக்கடவீர்களெனச் சபித்து ஓர் மாயமந்திரத்தை உச்சரித்து அப்பாதகர் விழிக்குட்புலப்படாது மறைந்தனர். பின் பாதகர் இருவரும் பிரமனைக்குறித்துக் கடுந்தவம் புரிந்து நீங்கு செய்யும்படிக்கு ஏதுவானவரங் களையே பெற்றுக் கொண்டார்கள். வில்வலன் என்பவன் தனது சகோதரனாகிய வாதாவியை மாயமாகிய ஓர் ஆட்டுக்கடா வாக்கித்தான் முனிவனைப்போல மாயவேஷந்தாங்கித் தனக்கு எதிர்ப்பட்ட ரிஷிகளைப்போற்றித் தன்னு ஆசிரமத்துக் கழைத்துப்போய் அமுதுண்ண வேண்டுமென்று தனது துணைவனாகிய ஆட்டைக் கொன்றுசமைத்து அவருக்கு உண்ணும்படி படைத்து அவர் உண்டபின்புவாதாவி வாவென்றழைப்பான். அவ்வொலியினைக் கேட்டமாத்திரத்திற் பிரமன் வரமுயற்சியினால் அவன் உருவம்பெற்றுக் கூரியகொம்பினால் அம்முனிவரின் வயிற்றைப்பீறி வெளிவர அதினால் இறந்த வுடலை இருவரும் புசித்துத் தினமிருப்பர்.

சூரபதுமன் ஓர்சமயத்தில் இந்திரன் மனைவியாகிய இந்திராணியைப்பிடித்து வருவீரெனக்கட்டளையிட்ட சமாசாரம் இந்திரன் தெரிந்து விரைவில் தன் அந்தப்புரம்சென்று தன்தேவிக்கு அதைத் தெரிவித்து அவளும் தானும் குயிலுருப்பெற்று மாயமாகத்தன் நகரைக்கடந்து இப்பூமியிற் சீகாழித்தலத்தை யடைந்து பரமசிவனை அருச்சித்துப் போற்றியிருந்தார்கள். அவர்களிருவரும் அவ்வாலயத்தைச் சுற்றிலும் நந்தவனம் உண்டாக்கி அதிற் புஷ்பிக்கும் மலரால் பரமனை அருச்சித்திருக்கும் போது மழையின்றிப் பூஞ்செடிகள் மிக வாடிப்போயின. அதற்காக இந்திரன் வருத்த முறத், தேவராஜனே இக்காவின் மத்தியில் ஒரு நதி பெருக விருக்கின்றது. அதனால் இவ்வனம் மிகவுஞ்செழித்து உன் பூசனைக்குத் தாழ்வில்லாமற் புஷ்பங்களைத்தருமென்று ஒரு வாக்கியம் வானத்தில் உண்டாகியதை அவன் கேட்டு மகிழ்ந்து பழயபடிக்குத் தவஞ்செய்து கொண்டிருந்தான்.

அக்காலையில் நாதமுனிவரானவர் விந்தகிரியினருகில் வந்து ஓ! வரைகளிற் சிறந்த விந்தமே! மகம்மேருவானது தனக்கு ஒருவரும் நிகரில்லை யென்று தன்னையே முக்கியமாக வெண்ணி இறுமாந்திருக்கும் காரணத்தை அதற்குமேம்படச் சிறப்பையுடைய நீமதித்துப் பார்த்ததில்லையோ? துரிதமாய் அம்மலையினது கருவத்தை யடக்க முயர்ச்சிப்பாயெனச்சொல்லிச் சென்றனர். உடனே விந்தகிரியானது அண்டகோளகையை அளாவிச் சத்தியலோகம்வரையிலும் உயர்ந்து மகம்மேருவை நெருங்கப்பரந்து நின்றது. இதனால் வெளியிடமில்லாமல் வானவழி யடைபட்டிருந்தமையால் தேவர்கள் இனியென்ன செய்வதெனக்கருதிப் பொன்மலைச் சாரலில் தவஞ்செய்திருக்கும் அகஸ்திய முனிவரை வேண்டிக் கொண்டனர். அப்போது கடலையுண்ட குறுமுனிவர் பரமசிவனைத் தியானித்துப் போற்றி நிற்கும்போது பரமன் பூதகணங்கள் சூழக்காட்சி தந்து தவசிரேஷ்டரே! உமக்குவேண்டுவ தென்னை எனத்திருவாய்மலர்ந்தவுடன், சுவாமி! விந்தகிரியை அடக்கும்படிக்கான சக்தியை அடியேனுக்கு அநுக்கிரகம் செய்யவேண்டுமெனப் பிரார்த்திக்க, அவர் வேண்டுவதற்கிரங்கிப் பசுபதி அவ்வாறே தந்தனம். விந்தம் பாதலம்சேர்ந்த பின்பு நீபொதிய மலையைச்சேர்ந்து தவஞ்செய்திருப்பாயெனக் கட்டளையிட, அகஸ்தியர் கர்த்தனே! தேவ

ரீரை அவ்விடத்திற் பூரிக்க நீர்வளம்வேண்டும். ஆதலால் அத்தலத்திற்சிவகதி பெருகக்கடாக்ஷிக்க வேண்டுமெனப் பிரார்த்தித்தனர். பரமன் காவிரியை நினைக்க அவள் சங்கரனது பாதங்களில் வந்து பணிந்து நின்றனள். பெருமான் ஓ! பெண்கொடியே இந்தவசி ரேஷ்டர் பின் நீ சொல்லக்கடவாய். இவர் உன்விஷயத்திற் கையைக்காட்டுங் காரணம் சம்பவிக்குமானால் அன்றையதினம் நீபிரிந்து பூமியின்கண் பெருகிச் சகலரும் மூழ்கிப்போற்றிக் கதியைப்பெறும்படி நிலைபெற்றிருப்பாயெனக் கட்டளையிட்டுச் சிவபிரான் குறுமுனிக்குத் தக்ஷண தேசத்திற்குப் போகச்செலவு கொடுத்துத் தமது கயிலாயஞ் சேர்ந்தனர். அகஸ்தியர் தென்திசையை நோக்கி நடந்து வரும்போது பருவதவடிவு கொண்டிருக்கும் கிரவுஞ்சனென்னும் இராக்கதப்பாதகன் அதனைத்தெரிந்து அவரைவஞ்சிக்க எண்ணங் கொண்டு மாயமந்திரங்களை உச்சரித்துப் பலமாயா விநோதங்களைக் காட்டலாயினன். அதை அகஸ்தியர் தெரிந்து கோபங்கொண்டு பாதகனது உருவமாகிய மலையினிடத்தில் தமது கையிலுள்ள தண்டினாற் குத்திப்பலவிரிந்த துவாரங்களாக்கிப் பின் ஓ! சண்டாளனே! நீ சரவணபவன் வெற்றிவேலினாலிறக்கக்கடவை யெனச்சாபமிட்டுப் பின் தென்தேசத்தைக் குறித்து நடப்பதாயினர்.

அப்படி வருங்காலையில் தேவகிரியின் மார்க்கமாய்க் காசித்தலத்தைத் தெரிசித்துக்கொண்டு விந்தகிரியின் சமீபத்தில் வந்து நாம் பொதிகைக்குப் போகும்படிக்குச் சிறிது வழி விடவேண்டு மெனக் கேட்க விந்தமானது ஓ! குறியவனே! உனக்கு அஞ்சிவழிவிடுவேனோ? வந்தவழியைத் திரும்பிப்பார்த்து ஓடிப்போவென்று இறுமாந்துரைக்க அகஸ்தியர் மகாகோபங்கொண்டு அக்கிரியினது உச்சியில் தமது உள்ளங்கையைவைத்து அழுத்திப் பாதலத்திற் சேரும்படி செய்தனர். அப்போது விந்தமானது நடுக்குற்று ஓ! தபோநிதியே! நாயினேன் அபராதத்தைப் பொறுத்தருள வேண்டுமென வேண்டத்தமிழ்முனிவர் குறுநகைகொண்டு விந்தமே! நாம் பொதிகையிலிருந்து இம் மார்க்கமாய்த் திரும்பிவரும்போது நீ முன்போல நிற்பாயெனச்சொல்லித் தேவர்கள் கொண்டாட வில்வலன் வாதாவி என்பவர் வசித்திருக்கும்படியான விடத்தில் வந்துசேர்ந்தனர். வில்வலன் அம்முனிவரை எதிர்சென்றழைத்துப்போய்த்தனது ஆச்சிரமத்தி லிருத்தி

ஆட்டின் உருப்பெற்றிருக்கும் தனது சகோதரனுகிய வாதாவியைக் கொன்று உண்டியுடன் சமைத்துக் குறுமுனிக்குப்படைத்து அவர் போஜனம் செய்து முடித்த பின் சண்டாளனுகிய வில்வலன் தனக்கு முன்னம் பிரமதேவன் அநுக்கிரகம் செய்த மந்திரத்தை உச்சரித்துத் தம்பி! வாதாவி! வாவென அழைத்தான் அதுசமயம் அண்ணு! இதோ வந்துவிட்டேனென முனிவரின் வயிற்றைப் பீறிவெளியே உருப்பெற்று வரும்படி ஆர்ப்பாடஞ் செய்யக் குறுமுனி யிது அசுரரின் மாயை எனத்தெரிந்து பரமசிவனைத் தியானித்துத் திருநீற்றைக்கரத்தில் அள்ளி வாதாவி அவ்வாறே சீரணிக்கக்கடவதென மும்முறை தமது வயிற்றைத் தடவியவுடன் அப்பாதகன் சீரணித்துப் போயினுன். வில்வலன் அதைத்தெரிந்து கோபித்துத் தண்டமொன்றைக் கைப்பற்றி அவர் சிரத்தில் மோதிக்கொல்லவர, உடனே முனிபுங்கவர் தருப்பை ஒன்றை எடுத்துப் பாசுபத மந்திரத்தை உச்சரித்து விட அவனும் சாம்பலாய் விழுந்தான்.

அகஸ்தியர் இவ்விதமாய் அசகமுகியின் பிள்ளைகளை மாய்த்த பின்பு காவிரிப்புனல் அடங்கிய கமண்டலத்தைத் தாங்கித் தண்டத்தை யூன்றிக் கொங்கு தேசத்தைச் சேர்ந்து பரமசிவனை அருச்சித்துப் பிரமஹத்தியைப் போக்கிக்கொண்டு தேவேந்திரன் தவஞ்செய்திருக்கும் சீகாழித்தலத்தை வந்துற்றனர். அப்போது நாரதர் அதிக வேகமாய் வந்து இந்திரனைக்கண்டு உனது பூசனைக்குத் தவறு நேரிடாதபடிக்கான காலம் நெருங்கியது. கேட்பாயாக! நீவிரைவில்விநாயக மூர்த்தியைப் பூசித்து அவரை அகஸ்தியர் கமண்டலச்சலத்தைக் கொட்டிவிடும்படி செய்வாயெனச் சொல்லிப் போந்தனர். தேவேந்திரன் அவ்வாறே விநாயகக்கடவுளைப் பிரார்த்திக்க, அவர் அப்படியே முடித்துத் தருவமென்றருளி வேகமாய் அகஸ்தியர் ஆசிரமத்திற்குக்காக்கை உருவமாகி வந்து காவிரிதீர்த்தமிருக்கும் கமண்டலத்தின் பேரில் உட்கார்ந்திருந்தனர். கும்ப முனிக்குக் கணபதி என்பது தோற்றுமல் தமது கையை நீட்டிப் போவெனத் துரத்தினர். அப்போது கஜாநனர்குண்டிகையைத்தள்ளித்தேவராஜன் கோரிக்கைப் படிக்குப் பூமியிற் பெருகக்கடவா பென்று அநுக்கிரகஞ் செய்தனர். காவிரி வெள்ளமானது ஆர்ப்பரித்து உலகத்திற்சென்றது. விநாயகர் காக்கைவடிவு நீங்கிப் பிராமணப்பிள்ளையைப்போலப் போவதை அகஸ்தியர் கண்

டுஅது அரக்கனின் மாயையென மகாகோபங் கொண்டு இவன் அக ங்கதையை அடக்குகிறேனென அவர் தலையில் தமதுகையினற் குட்ட நினைந்தெழுந்து தொடர்ந்தனர். அப்போது விநாயகர் அவருக்கு அகப் படாமல் எங்கும் உலவித்தப்பித்துக் கொண்டதினால் முனிவர் இளை த்து வலியடங்கிச் சோர, உடனே விநாயகர் அவரிற் கிருபையுற்றுத் தமது சொரூபத்தைக் காட்டினர். அக்கோலத்தை முனிவர் கண்டு திடுக்கிட்டு இந்த அபராதத்திற்கு என்னசெய்வோமெனத் தமது சிர த்தில் தாமே வருந்தும்படி மாறி மாறிக்குட்டிக் கொண்டு சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து தம்மை மன்னிக்கும்படி பிரார்த்தித்தனர். விநாய கர் நீரமக்குச் செய்தவைகளை நாம் சற்றுங் குற்றமாக நினைக்கவில்லை யென முனிபுங்கவரைத் தேற்றிப்பின் தமது துதிக்கையினை நீட்டி க்காவிரிப் பெருக்கின் ஜலத்தினைக்கிரஹித்து அகஸ்தியருடைய கம ண்டலத்தில் விட்டனர். மற்றப்பிரவாக மெல்லாம் பூமியிற்பெருகிப் போயின உனக்கும் வேண்டும் வரம்யாது என விநாயக்கடவுள் தி ருவாய்மலர முனிவர் பன்முறை அவரை வணங்கி இனிமேல் தேவ ரீரை வழிபட்டு யாவரேனும் குட்டிக்கொள்வாராயின் அவர்களுக்கு வேண்டும் வரங்களைக் கடாக்ஷிக்கவேண்டு மெனப் பிரார்த்தித்துத் கொண்டவண்ணம் விக்கினகர்த்தன் வரந்தந்து தமதிருப்பிடஞ்சென் றனர் பின் அகஸ்தியமுனிவர் கொங்குதேசத்தைக் கடந்து தென் திசையை நோக்கிப் பரமேஸ்வரன் புகழினைத் துதித்துக்கொண்டு அகங்காரத்தினற் சிவத்துவேஷத்தை யுடைய வைணவப்பிராமண ர்குடியிருக்குங் குற்றாலத்தைச்சேர்ந்தபோது அவ்வினத்தார்வெகுண்டு சிவனுக்கடிமையாகிய நீ பவித்திரமாகிய இத்தலத்தின் எல்லையையும் மிதிக்கக்கூடுமோ? சீக்கிரமாய் இவ்விடத்தைவிட்டு போவெனக் கடுஞ் சொற்கள் கூறித் துரத்துகின்றவர் மீது அகஸ்தியர் கோபியாமல் இ தோ போய்வாகிறேனென்று ஓர்பால் ஒதுங்கிப்பின் அவர்விஷ்ணுவுக் கு கந்தாசனைப்போலக் கோலங்கொண்டு திரும்பிவரக்கண்டவர்கள் இவர்மதுநாராயணனுக்குப்பிரியபத்தராகியமகத்துவென அவர்பாத ங்களிற்பணிந்து விஷ்ணு எழுந்தருளியிருக்கும் ஆலயத்திற்கு அவரை அழைத்துப்போனார்கள் அப்பொது அவர்வயிணவரிடத்தில் தாம்பெரு மாளைப் பூசிக்க வேண்டுமென்பதாய் அதற்கு வேண்டிவனைவகளை யெல்லாம்சேகரித்துக்கொண்டு மூர்த்தியின் சமீபத்திற் போய்த்தமது குறியகரங்களை அக்கடவுளின் திருமுடியின் மீது வைத்துக் "குறுகு

குறுகு குற்றுலா" என்று அழுத்திக்குழையச் செய்து திரட்டியுரு ட்டிச் சிவலிங்க வடிவமாக்கிப் பின் தாமும் சிவவேடந்தாங்கிச் சிவகா மங்களையோதி அரச்சிக்கும்போது இச்செயல்களைக்கண்டவைணவப் பிராமணர் தேகம் புழுங்கக் கோபித்து வஞ்சகன் தப்பிப்போகுமு ன்னம் அவனைப்பிடியுங்கள் கட்டுங்கள் அடியுங்களென்றுபலவசை களைப் பேசிக்கொண்டு சூழ்ந்து தம்மைப் பிடிக்கவருவதை அகஸ்தி யர் கண்டுகோபித்து அவர்களைப் பார்த்தமாத்திரத்தில் சீற்றக்கன ல் அதிகரித்து அவர்களின்தேகங்களைச் சுட்டுக்கரித்துவாட்ட அவர் கள் அதைச் சகியாதவர்களாய்க் கைகால்கள் ஒடியப் பலதிக்கினும் ஓடியொழிந்தனர் அத்தினமுதல் அது விஷ்ணுஸ்தலமென்பதுமாறி ச் சிவஸ்தலமாயிற்று. பின் குறுமுனிவர் பொதியமலையைச்சேர்ந்து ஓர்சாரலில் அமர்ந்து பரபசிவனைக் குறித்துத் தவஞ்செய்திருந்தனர்.

இப்பால், அகஸ்தியர் கமண்டலத்தினின்றும் கவிழ்ந்த காவிரி யானது மகாமகிமையுடன் ஆகாயத்தை அளாவஅலைகளை வீசிக்கொ ண்டு பலகாத எல்லை அளாவாகப்பரந்து கிழக்குத்திசையை நோக்கித் தேவேந்திரன் வாசமாய்ச் சிவபிரானை வழிப்பட்டிருக்கும் வனத்திற் பரிமளபுஷ்பங்களையுடைய பூஞ்சோலையிற்பாய்ந்து வாடிநின்றநந்த னவனம் குளிர்ந்து பசுமையாகத்தோற்றுவதை மகவான்கண்டு பூரி த்து ஆனந்தக்கூத்தாடிப் பரமசிவத்தையும் விநாயகமூர்த்தியையும் கொண்டாடிக் கொண்டிருந்தான். இவ்விதமாகத் தேவர்கோன் அம் பிகாபதியை வழிபட்டுவரும்போது சூரபதுமனிட்ட கொடியபணிவி டைகளைச்செய்து தேகமும் மனமும் மிகவும் வருந்தியதேவர்களிற் சிலர் ஐய கோ! எக்காலம் எங்கள்துன்பங்கள் நீங்கப்போகின்றனவென இந்திரனைவந்துகண்டு முறையிட்டுக்கொள்ள அவன்மிகவும்வாடி என் னசெய்வதெனயோசித்துக் கயிலைக்குச்சென்று புவனேஸ்வரருக்கு இ வைகளை விண்ணப்பஞ்செய்வதாய் நினைத்து தனது பத்தினியாகிய அயிராணியிடம் சொல்லிக்கொள்ள அவள் இராக்ஷதப்படை வீரர் கள் இன்னும் தன்னைத்தேடித்திரிகின்றனர் என்றும் தானும்கூடவரு வதாகத்துக்கித்துக்கூறினள். அப்போது தேவராஜன் ஓ! பிராணநா யகியே! பயங்கொள்ளவேண்டாம் நான் திரும்பும்வரையில் உன்னைப் பாதுகாக்க அரிஹரபுத்திரர்காவலாயிருக்க நீவிசனப்படவேண்டியகா ரணமென்ன? உன்னை அந்த அய்யனார்வசம் ஒப்புவித்துப்போக இருக்

கின்றேனென அதற்கு அவள் அவருடையவரலாற்றைக்கேட்க இந்திரன்சொல்வதாயினன்.

தேவர்கள் திருப்பாற்கடலைக்கடைந்த காலத்திற்பிறந்த அமுதத்தைக்கொடிய சுபாவமுடைய அசுரர் உண்டுவாழாதபடிக்குமகாவிஷ்ணுவானவர் மோகினி அவதாரம் எடுத்தனர். பின்பரமசிவனும் மோகினியாகவந்த பரந்தாமனுங்கலந்து இன்பமுற்றகாலத்துக் காமவெப்பத்தினல் இருவருக்கும் வியர்த்தொழுகியஜலமானது பெருகிக்கண்டகிநதியெனப் பேர்பெற்று விளங்கியது. அந்நதியில்தோன்றிய சாளக்கிராமங்களாகிய கீடங்களைமகத்துக்களெடுத்து விஷ்ணு சொருபமாகக்கருதிப்பூசித்துவருவர். பின் அவர்களிருவருககும் நமதையனுகிய அரிஹரபுத்திரர் பிறந்தனர். அத்தேவர் உன்னை இரட்சிக்கக்கடவரென்று இந்திரன் அப்புத்திரனைத் தியானித்து நிற்க, அத்தேவர் கிருபையுடன் அவருக்குப் பிரசன்னமாகி வந்து ஓ இந்திரனே! நீகயிலைபோய் வருமளவும் நாம் இந்திராணியைக் காப்பாற்றிக் கொடுப்போமென்று தமதுசேனைத்தலைவனுகியமகாகாளனை அவளுக்குக்காவல் வைத்துமறைந்தனர். பின் தேவராஜன் களிப்புடன் வந்த தேவர்களுடன் பரமனெழுந்தருளி யிருக்கும் கயிலைக்குச்சென்று முதல்வாயிலில் வீற்றிருக்கும் நந்திதேவரை வணங்கிச் சங்கதிகளை விண்ணப்பஞ் செய்ய அவர் பரமேஸ்வரன் சனகாதிகளுக்குக் ஞானயோகநிலையைக்காட்டி ஏகாந்தத்தி லிருப்பதாயும் அவர்கள் துன்பம் ஒழியுங்காலம் சமீபிக்கவில்லை யென்றும் சொல்லிப்பின் இவர்கள் இராக்ஷதப் பாதகராற் படுந்துன்பங் களுக்கு இரங்கி முகவாயில் மண்டபத்தில் ஒரு பாரிசத்திற் காத்திருக்கும்படிக்கு உத்தரவு கொடுத்த பிரகாரம் அவ்விடம் தேவர்கள் தங்கிப்பரம சிவத்தைத் துதித்துக்கொண்டிருந்தார்கள்.

இது சமயத்தில், சூரன் தங்கையான அசமுகி யென்பவள் காமலாகிரியாற் கற்பின் வரம்பைக்கடந்து தன்னை எதிர்ப்பட்ட தேவர் மனிதர்களை யெல்லாம் வலிதிற் பற்றி அவர்களுடன் கூடிக்களித்து எங்கணும் உலவிச் சீகாழித்தலத்திற் சிறந்து விளங்கிய பூஞ்சோலையைக் கண்ணுற்ற வளவில் இத்தகைய சிங்காரவனப்பத்தினை நான் எவ்வுலகத்திலும் பார்த்ததே இல்லை என்று தோழிகளுடன் மிகவும்

ஆனந்தமாய்ப் பேசிக்கொண்டு அதிற் பிரவேசித்துப் புஷ்பவகைகளை க்கொய்து விளையாடி இவ்வனத்தைப் படைத்தவர்களையும் காணவே ண்டுமென்று தேடி வருகையில் தன் கொழுநன் குறித்துப் போனகா ரியம் சித்தியாதற் பொருட்டுத்தன் இஷ்டதேவதையை நாடித் தவ ஞ்செய்து கொண்டிருக்கும் இந்திராணியைக்கண்டு அவள் இன்னு ரென்பதை யறிந்து கொண்டு பாங்கிகளைப் பார்த்து அடிதோழி காள்! இவளை இப்போதே பிடித்து எனது தமயனாகிய சூரபதுமனி டம் கொண்டு போய் அவன் விரகதாபம் தீர்த்தலையும்படி கொடுப் பேனென இடிமுழக்கம்போற் பேசிச் சமீபித்து வருஞ்சமயத்தில் இந்திராணியானவள் எமன் வந்தாற்போலத் திடுக்கிட்டு எழுந்து அப் புறம் போக எத்தனப்படுகையில் அரக்கியானவள் அவளை நோக்கி அடி! இந்திராணி! நில்லு! நில்லு! என்று அவள் சமீபத்தில் வந்து அவள் காதலனை இழிவாகப்பேசி அவனை விட்டுத் தனது தமயனை அவள் அடையவேணும் என்பதான பல அநீதிவாக்கியங்களை எடுத்து ப்போதித்தனள். அக்கொடிய சொற்களை இந்திராணி கேட்டமாத்தி ரத்திற் செவிகளிற் காய்ச்சிய நாராசத்தைச் சொருகியது போலப்ப தைபதைத்து வருந்திக்காதுகளைப் பொத்திப்பரமனைத் தியானித்து எதிரில் நிற்கின்ற கொடியவளைப்பார்த்து உனக்குச்சம்பவிக்கப்போ கும் கெடுதியை யாவரால் அளவிட்டுச் சொல்லமுடியும்! நீ பிறந்தமர பினையும் மேல்வரும்பழிபாதகங்களையும் எவ்வளவேனும்பகுத்து நிதா னித்தவளில்லை! என்நாயகனிடத் தல்லது மற்ற எவராயிருந்தாலும் அவர்களிடத்தில் இச்சை கொள்ளாத எனக்கு இடையூறாகிய இழி வானநடக்கையைப் போதிக்கத்துணிந்தாய். ஆதலால், உன்வம்மிசம் விருத்தியடைதற்குக் காரணமில்லை. மேலும் நான் தனியாயிருப்ப தாய் எண்ணவேண்டாம். நீ விரைவில் இவ்விடம் விட்டுப் போய்விட க்கடவை என்றனள். அதைக்கேட்டு, அக்கொடியவள் இந்தக்ஷணம் உன்னைக்கொன்று தின்று கோபந்தணிவேன். ஆனால் என்தமயன் உன்னிடத்தில் அதிக இச்சைப்பட்டிருக்கும் காரணத்தினாற் பொறு த்தேன். இந்நிமிஷமே உன்னைப் பலவந்தமாய்ப் பிடித்துக்கொண்டு போய் அவனிடம் சேர்க்கிறேனென்று இந்திராணியின் கரத்தைப் பற்றியிழுத்தபோது அவள் பூனைவாயிற் பட்டகிளியைப்போல் அல றுவதாகிச் சுற்றிலும் பார்த்து யாவரையும் காணாதபடியால் திகிற் கொண்டு புலம்புவதாயினள். ஓ! கர்த்தனே! இப்பாதகி பலவந்தமாய்ப்

பிடித்திழுத்துத் தொந்தரிக்கின்ருள்! விடுவிக்கவருவாய்! ஸ்ரீ மகாவிஷ்ணுவுக்கும் பரமசிவத்திற்கும் உதித்த அய்யனே! ஓலம்! பொய்யருக்குப் பொய்யனுய் மெய்யருக்கு மெய்யனுய் விளங்குந் தீனதயாபர மூர்த்தியே! ஓலம்! என்று இவ்வாறு பலபல விதங்களாய் முறையிட்ட காலயிற் காத்திருந்த மகாகாளர் கேட்டு ஐயையோ! எங்களையனைக் குறித்துக்கூவி இப்பதிவிரதை ஓலமிடுவதோ என்று உடைவாளைக்கரத்திற் பற்றிச் சூழற்றிப்பாய்ந்து அரக்கியின் முன் வந்து தேவராஜன் பத்தினியை வஞ்சித்தெங்கே கொண்டு போகின்ருய்! நில்லு! நில்லு! என்றதட்டி ஓபதிவிரதாசிரோமணியே! உன்னைத்தொட்ட கொடிய பாதகியின் கரங்களை இதோவெட்டித் தள்ளிவிடுகின்றேனெனத் தயிரியங் கூறியகாலையில் அசமுகி விழிகளில் தீப்பொறிசிதறக் கோபித்துச்சிறிக்கரத்திற் பிடித்திருந்த சூலத்தைச் சுழற்றி மகாகாளர்மார்பிற்கு இலக்காக எறிந்தனள். அதுதன்பேரில் வருவதை வீரன்கண்டு தன் கைவாளினுல் அதை இருதுணிவாக வெட்டித்தள்ளினுர். அசமுகி சீறி அருகில் நின்றதோழியின் கரத்திலிருந்த சூலத்தை வாங்கிக்கொண்டு வீரமகாகாளர் மார்பிற்குத்த நினைந்து மாறி மாறி வாதுகொடுக்கும் போது அக்குறிப்பைத் தெரிந்துவீராதி வீரன் தமது வாளினுல் ஓங்கிவீசி அச்சூலதைத்துகட் படுத்தினுர் பின் அவள் ஓர்பருவதத்தைப் பிடுங்கி அவர் பேரிற் சுழற்றி யெறிந்தனள். அது வேகமாய் வரும்போது மகாகாளர் நகைத்துத் தமது வேற்றிவாளினுல் அதை வெட்டித்தள்ளிச் சிங்கநாதஞ் செய்தனர். அத்தருணத்தில் அசமுகி இவனை வெல்வது அரிதென்றெண்ணிக் கபடமார்க்கமாய் இந்திராணியைக் கொண்டு போய்விடுவோ மென்று அவளைத்தன் கரத்திற் பற்றினவளாய் அதிவேகமாய்ச் செல்வதை மகாகாளர் கண்டு உடனே அவளை பின்பற்றி அவளுடைய கூந்தலைத் தமது ஒருகரத்தாற்பற்றி மற்ருேர் கரத்தினுல் உடைவாளையுருவி இந்திராணியைப் பற்றியிருந்த அரக்கியின் வலது கரத்தைத் தோள் வரையில் தேவர்கள் கொண்டாடும் படிக்கு வெட்டித்தள்ளி இந்திராணியை அப்புறப்படுத்தி அசமுகியைத் தமது காலினுல் உதைத்துத் தள்ளிப் பின்பக்கத்தில் நின்ற தோழியைப்பார்த்து உனக்கும் கையிருக்கலாகாதென்று கொய்து தள்ளிவிட்டனர். உடனே இருவரும் ஓவென்றலறிப் பூமியில் விழுந்தனர். அசகமுகியானவள் மூர்ச்சித்துத் தெளிந்தெழுந்து தனக்கு நேர்ந்த துன்பத்திற்காகச் சமுத்திரத்தைப்

போலக் கோ கோ வெனத்தனது இடது கையைப் பூமியில் அடித்துக்கொண்டு "அழுது" இந்திராணியைப்பார்த்துப் பற்களைக்கடித்துச் சொல்லுவாள் உன்னையும் உன்புருஷனையும் எவ்விடத்தில் ஒழித்திருப்பினும் தூதராற் பிடித்துவரச்செய்து மாறாத சிறையில் அடைப்பித்து வருத்திக்கடைசியிற் கொல்லுவிப்பன். நான் அப்படிச் செய்யாமற் போவேனே யாகில் நான் சூரன் தங்கையுமல்ல என்மார்பிலிருப்பது கொங்கைகளுமல்ல எனச் சபதம்செய்து போயினள்.

நாரதமகா முனிவரானவர் இந்தச்சங்களைக் கொஞ்ச நேரமும் மனதில் அடக்கி வைத்திருக்கக் கூடாதவராய் உடனே அவர் தேவேந்திரனை வந்து கண்டு நடந்தவைகளை எல்லாம் உரைத்து விட்டனர். அப்போது தேவராஜன் மனக்கவலையுற்றுத் தேவர்களுடன் நந்திதேவரிடத்திற் போய்த்தனக்கு உற்ற துன்பத்தைச் சொல்லி வருந்தி இன்னம் சிலகாலம் தவம்செய்து பின்கர்த்தனைக்காணும்படிக்கு இவ்விடம் வருகின்றேனென விடை பெற்றுத் தனதுதிருத் தேவியாகிய புலோமிசையை வந்துகண்டு அவள் துக்கத்தைப்போக்கிக் காத்து இரட்சித்த மகாகாளரைப் போற்றி யனுப்பிபபின் இந்திரனும் புலோமிசையும் இனிநாம் இந்தவிடத்திலொருக்ஷண நேரங்கூட இருக்க லாகாதெனச் சூரனுக்குப் பயந்து தேவர்களுடன் மகம்மேருச் சாரலிற்போய்ப் பதுங்கி யிருந்தனர்.

இது சமயத்திற் கையறுப்புண்ட அசமுகியானவள் தன்தோழியுடன்வீரமா மயேந்திரப் பட்டணத்திற் பிரவேசித்துக் கண்டவர்பல விதங்களிற் பேசி ஆச்சரியப்பட வீதி வழிச்சென்று இராஜாதிராஜன் கொலு வீற்றிருக்கும் சபாமண்டபத்திற் பிரவேசித்துத் தனதுதமயனாகிய சூரபதுமன் முன்அடித்து அலறிவீழ்ந்து இந்திராணியைப் பிடித்து வரும்வேளையில் தேவேந்திரனுடைய ஏவலினுல் மகாகாளனென்பவன் இவ்வித ஆக்கினைசெய்து விடானென்று பல பல விதங்களெல்லாம் கூறிப்பிரலாபித்தனள். அப்போது சூரன் வடவைபோற் கொதித்து விழிகள் சிவந்துதீப்பொறிக்கப்புருவம் நெற்றியிலேறக் கோபமாகித் தேவரனைவரையும் கொல்ல நினைத்தவனுய்ப் பல கோபவார்த்தைகள் பேசியகாலத்துப் பானுகோபனென்பவன் எழுந்து அவன் பாதங்களிற் பணிந்து யான் தேவேந்திரனை அவனுக்குப் பணிவிடை

செய்திருக்கும் தேவர்களுடன் பிடித்து வரக்கடவேனென வருதிவாங்சிச் சென்றனன். பின் சூரபதுமன் பிரமனைக் கொண்டு வெட்டுண்டகைகளை முன்போற் படைக்கும்படி செய்தனன். அப்படியே அவர்களிருவரும் கைகளைப்பெற்ற பின் சூரனனவன் தன் தங்கையின் தோழியைப் பார்த்துப் பாநுகோபனுடன் நீ சென்று கரங்களைத் துண்டித்தவிடத்தைக் காட்டுவாயென அனுப்பினன்.

பின்பு சூரியர்முதலிய நவக்கிரகங்களையும் இராசிகள்முதலிய நட்சத்திரங்களையும் தசவாயுக்களையும் இருதுக்கள் முதலியோரையும் இந்நிமிஷம் நமது முன்கொண்டு வருவீர்களெனச் சூரன்சாரணர்களுக்குக் கட்டளையிடுமுன் அவர்கள் ஓடி எல்லோரையும் அவ்விதமே கொண்டுவந்து சேர்த்தார்கள். அப்போது சூரன் அவர்களை மிக வெகுண்டு நோக்கி என் ஆசைத்தங்கையின் கரத்தை வெட்டியகாலத்தில் அதற் கொருதடை செய்யாமல் நீங்களெல்லோரும் சும்மா பார்த்திருந்த காரணமென்னவென்று கேட்டு அவர்களை யெல்லாம் கடுஞ்சிறையிற் கொண்டுபோய் வைக்கும்படிக்கு உத்தரவு செய்தனன். பின் திக்குப்பாலகரை வருவித்து நமது ஏவலுக்கு அஞ்சிஓடிய தேவேந்திரனையும் அவன் மனைவியையும் நீங்கள் கண்டு பிடித்து நமக்குக் கூற முடியாமல் திசை காவலரெனப் பேர்பூண்டு மாயமாய் ஏய்த்துத் திரிவது வெகுநேர்த்தியென்று அவர்களைக் கோபித்துத் தமது வயிர வாளை உருவித்தண்ட நாயகர் கையிற் கொடுத்து அவர்களின் உறுப்புகளைப் பலவிதங்களிற் சேதம் செய்யும்படி கட்டளையிட்டுப் பிரமதேவனைப் போய்வரச் செலவுகொடுத்த காலையில் அவர் சூரனை நோக்கிப் பற்பல ஆசிகள் கூறி ஒபவுத்திரரே! க்ஷமித்துக் கேட்டருளுக! சூரிய சந்திராதியராகிய நவக்கிரகங்கள் இருதுக்கள் இராசிகள் முதலியோர் உமது பணிவிடைப்படிக்கு நடந்துகொள்ளப்பட்டவர்கள். இவர்கள் சஞ்சரியாமல் உலக ரெக்ஷணார்த்தம் நடவாதென வேண்டிக்கொள்ளச் சூரன் அவர்களை விடுதலை செய்யும்படி கட்டளையிட்டான்.

இவை நிற்க, சூரியனைச் சிறையிலிட்ட வீராதி வீரனுகிய பானுகோபனென்பவன் யுத்தசன்னத்தனுய் அனேகம் வெள்ளம் சயினியங்களுடன் புறப்பட்டு இந்திரனையும் அவன் மனைவியையும் எங்கும் தேடிக்காணமல் தேவலோகத்தை நோக்கிச் சென்று அதை முற்றிக்கை

போட்டுக் கொண்டான். அதை அவ்விடத்தில் அரசு செலுத்தி யிருந்த இந்திரன் குமாரனாகிய சயந்தனென்பவன் தெரிந்து தப்பியோடுவதிலும் யுத்தம் செய்து வெல்வதே மேன்மை என்பதாகச் சகலசயினியங்களுடன் தானும் அயிராவதத்தில் ஏறிக்கொண்டு சண்டைக்குச் சென்றான். அப்போது இரண்டு சேனைகளும் கைகலந்து பிரமாத யுத்தமானதில் தேவர்களை அசுரர் சிறைபிடித்து விட்டார்கள். பின் இந்திர குமாரனாகிய சயந்தனும் பலவாகப் போராடிப் பானுகோபனாற் சாவுக்குச் சரியான மூர்ச்சையடைந்த போது அவனையும் சிறையாகப் பிடித்துக் கொண்டு பொன்னுலகத்தை அக்கினிப் பிரவேசப்படுத்திச் சாம்பலாக்கித்தனது பிதாவாகிய சூரனிடம் திரும்பிவந்து சிறையிற் கொண்டுவந்த சயந்தன் முதலிய தேவப்படைகளை ஒப்புவித்து இந்திரனை அவன் மனைவியுடன் காணக்கூடவில்லை என்றனன். சூரன் தன்குமாரனை மெச்சிப்பின் தேவர்களைத் தீயெழப்பார்த்துப் பற்களைக் கடித்துத் தண்ட நாயகரைக் கூவியழைத்து இவர்கள் உறுப்புகளைச் சின்னபின்னப்படக் கண்டித்து விடக்கடவீர்களெனக் கட்டளை யிட்டனன். அப்படி அக்கொடியவர் தேவர்களின் அவயவங்களைப்பலபல விதங்களாய்க் கோரமாய் வெட்டிச் சேதப்படுத்திய காலத்தில் அவர்கள் அமுதம் உண்டவலியினால் மீளவும் அவ்வவ்வ வயவங்கள் வளர்ந்து சம்பூரணம் பெற்று விளங்குவதைச் சூரன் கண்டு அமுதவலிக்கு அதிசயித்து அத்தேவர்களை யெல்லாம் விலங்கிட்டுக் கொடிய காவலிற் போடும்படிக்கு உத்தரவு செய்து மகிழ்ந்திருந்தான். முன் யுத்தத்திற் பானுகோபன் மார்பிற் பாய்ந்து தனது நான்கு கொம்புகளும் முறிபட்டு அவன் குத்தினால் மூர்ச்சித்துக் கிடந்த அயிராவதமானது தெளிந்தெழுந்து திருவெண்காடென்னும் தலத்தையடைந்து அதிற் பரமசிவக்கோலமாகிய இலிங்கத்தை ஸ்தாபித்துப் பக்திபூர்வமாகப் பூசித்து வருங்காலையிற் பரமன் அனுக்கிரகித்த படிக்கு முன்னம் ஒடிந்த கொம்புகள் முளைக்கக்கண்டு களித்து அப்பதியை நீங்காமலே மரமசிவத்தை வழிபட்டுக் கொண்டிருந்தது.

இவை நிற்க, மகம்மேருச்சாரலில்தவஞ் செய்திருந்த தேவேந்திரனும் அவன் மனைவியும் தேவதூதரால் இவைகளைக் கேள்விப்பட்டு மிகவிசனமுற்றுப் பரமசிவனை வழிபட்டிருக்கும்போது லோகநாயகன் கிருபைகூர்ந்து அவனுக்குப் பிரசன்னமாகி உனக்குவேண்டிய

வரங்களைக் கேட்டுக்கொள்ளெனத் திருவாய்மலர்ந்தருள, அதைக் கேட்ட இந்திரன் நமஸ்கரித்துச் சூரன் முதலியோரைக் கொன்று எங்கள் துன்பத்தினை விலக்கி அருளவேண்டுமென வேண்டினன். அதற்குப்பரமசிவம் மகிழ்ந்து யாம் பார்வதியோடு கூடி ஒரு குமாரனைத் தருவோம். அக்குமாரனால் நீங்கள் க்ஷேமம் அடைவீர்களெனச் சொல்லிப்பின் எங்களுடைய வருத்தங்கள் தீரத் தமது நெற்றிக்கண்ணினால் தேவரீரைத்தந்தருளினர், எம்முடைய தந்தையாகிய தேவரீர் அவதாரஞ்செய்தபிறகு இந்திராதிதேவர்களுக்கு முன்போயிருந்த உயிர் மறுபடியும்வந்து பொருந்தியதுபோலவும் அவர்கள் சூரனைக்கொன்று தத்தம் அரசுகளைக் கைகொண்டவர்போலவும் களித்தார்கள் ஆகையால் தேவரீரே அவ்வசுரனைக்கொன்று எங்களைக்காக்கவேண்டுவதன்றி வேறுபுகலிடம் எங்களுக்கில்லையென்று தேவகுருவாகிய பிரகஸ்பதி பகவான் சொல்லிவந்தபோது எல்லாம் உணர்ந்த குமரக்கடவுள்கேட்டு அதிகமகிழ்ச்சியடைந்து யாம் உங்களை இரட்சிப்போம் அய்யப்படவேண்டா மென்று இகபரங்களை உயிர்களுக்குக் கொடுத்தாளும் எம்பெருமான் கூறினர். மகபதியானவன் அப்போது அவ்வாறு! முருகக்கடவுளுடைய பாதங்களில் தேவக்கூட்டத்துடன் சாஷ்டாங்கமாய் வீழ்ந்து வணங்கித் துன்பமெல்லாம் போய் அளவிடக் கூடாத ஆனந்த சாகரத்தின் மூழ்கியிருந்தனன்.

## 2-வது அசுரகாண்டம் முற்றிற்று.

———(o)———

உ

குகசகாயம்.

## 3-வது மகேந்திர காண்டம்.

விருந்தம்.

விரிஞ்சன் மாறே வராலும்
வெலற்கரும் விறலோனாகிப்
பெருஞ்சூரர் பதமும்வேத
வொழுக்கமும் பிறவுமாற்றி

யருஞ்சிறையவர்க்குச் செய்த
வவுணர் கோனுயி கொள்வான்
பரஞ்சுடருருவாய் வந்த
குமரனைப் பணிதல் செய்வாம்.

சூரபதுமனுதியர் உற்பத்திமுதல் சயந்தனுதியரைச்சிறைவிட்ட வரையிற் குமாரக் கடவுளுக்குப் பிரகஸ்பதி பகவான் கூறியபோது அக்கடவுள் வீரவாகு தேவரைச் சூரனிடம் தூதாக அனுப்பி அவன் காவலில்வைத்து வருத்தும் தேவர்கள் அனைவோரையும் விடுதலைசெய்யும்படிக்கும் அப்படி அவன் செய்யாவிடில் தக்ஷணமே அவனைப்புத்திரமித்திர களத்திராதிகளுடன் வேரோடு சின்னபின்னப்படக்கண்டித்து அவர்களை விடுவித்து வரத்தயாராயிருக்கின்றோம் என்றும்கேட்டு வரும்படிக்குவருதி செய்தனர். அப்போது அந்தேவர் வேலாயுத மூர்த்தியின் பாதாரவிந்தங்களிற் பணிந்து விடைபெற்றுச் செல்லுங் காலையில் இந்திரனானவன் அவரைப் பின்தொடர்ந்து ஓ! வீரவாகு தேவரே! நீர்போகும் அவ்விடத்திற் காவலிலிருக்கின்ற என் குமாரன் முதலிய தேவர்களை முதலிற்கண்டு அவர்களுக்குத் தயிரியங்களைக்கூறியபின் அரசனிடம் பொய் வார்த்தையாடி வரவேண்டுமென வேண்டிக்கொள்ள அதற்கு அத்தூதர் இணங்கி அவரிடம் வருதிபெற்றுப் பின்கடலைத் தாவுவதாய்க் கந்தமாதன பருவதத்தின் பேரில் ஏரிவிஸ்வருப மெடுத்து மகா சிறப்புடன் விளங்கி நின்றனர். அப்படி நிற்கின்ற வீரகண்டை சப்திக்கும் பாதங்களையுடைய தேவரானவர் குமார தேவருடைய திருவுருவத்தினைத் தியானித்துக் கரங்களைக் கூப்பிஅவரைத் தொழுது சூரபதுமன் வாசஞ்செய்யும் பட்டணத்தை உற்று நோக்கி வாயுவேகமும் பிற்படமுற்பட்டுத் தாவிப்போவதாயினர். இவ்விதமாகச் சமுத்திர மார்க்கத்திற் சென்று சூரன் பட்டணமாகிய மயேந்திரபுரியின் வடபாரிசத்தில் ஜெயசாலியாகிய யாளிமுகனென்னும் அவுணவீரன் காவலாயிருக்கின்ற இலங்கை நகருக்கு அருகில்வரும்சமயத்தில் வீரசிங்கனென்னும் ஓர் அவுணன் அவருக்கெதிரிற் போய்த்தடுத்துப் பலகோடி வீரர்களுடன் அவரை யெதிர்த்துக் கொடிய சண்டை விளைப்பதை வீரவாகு தேவர்கண்டு நகைத்துத் தமது உடைவாளினுல் அவ்வளவு வீரர்களையும் சடுதியிற் சுற்றிச் சுற்றி வெட்டி வெட்டிக்குவித்துச் சிங்காதஞ்செயதனர். வீரசிங்கன் அதிககோபங்கொ

ண்டு முத்தலைச் சூலமொன்றை அவர் பேரில்ஏவ அவர் அதை இரு
துண்டாக வெட்டி எறிந்தனர். அவுணன்வச்சிராயுதத்தை எடுத்துவீ
சினன். அதையும் இருதுண்டாக வெட்டித் தள்ளிப்பகைவன் மற்றோ
ர்படையை எடுக்குமுன்வீரவாகுதேவர் விரைந்துதமதுவாளினால் அவ
ன்கரங்களைக் கண்டித்துப் பின் சிரத்தையும்கொய்து தள்ளினர். இப்
படிக்குப் பாலசுப்பிரமணியக் கடவுள்விடுத்த தூதரானவர் தேவர்கள்
கொண்டாட ஜெயம் பெற்றுப்பின் இலங்கையின் கொடுமுடிகளின்
ஒன்றின்மேற் பாய்ந்து நின்றனர். அதனால் இலங்கையானது கடலில்
மிகவும் ஆழ்ந்து அதிகத் துன்பங்கள் நேரும்படிக் கானதை
யாளி முகன் குமாரனாகிய அதிவீரன் தெரிந்து கோபித்துத் துரிதமா
ய் நால்வகைச் சேனைகளுடன் வீரவாகு தேவர்முன் வந்துயுத்தத்தை
த்தொடங்கினபோது அவர் கோபங்கொண்டு தமது உடைவாளைக்கர
த்திற்பற்றி அவுணர்பிராணன் துடித்து உடல்கள் கண்டதுண்டப்பட்
டிறக்கும் படிக்குச் சங்கரிக்கத் தொடங்கி ஒரு நிமைப்போதிற் களத்
தில் அதிவீரனைத் தவிர வேறே ஒருவரும் இல்லாமற் செய்து விட்ட
னர். அப்போது அதிவீரன் அவருடைய சேவகமே சேவகம் எனமதி
த்து வேலாயுதம் ஒன்றை எடுத்து அவர்பேரில் விட்டனன். அதை
அவர் வாளினால் இருதுண்ட மாக்கினர். அவுணன் கோபித்துத் தண்
டமொன்றைச் சுற்றி வீசினன். அது சீறிவருவதைக் கண்ட தேவர்
அதனை ஒரு பொருளாக மதியால் தீரத்துவத்தோடு நிற்கும் போது
அது அவர் மார்பிற்பட்டுத் தன்வலி யொடுங்கிப் பொடிப் பொடியா
கி விட்டது. அப்பாதகன் அதைக்கண்டு அதிக ஆச்சரியத்தனாய்
முத்தலைச் சூலமொன்றைப்பிரயோகித்தனன். அதை அவர் தமதுகை
யிற் பிடித்து ஒடித்தெறிந்தனர். பின் அதிவீரன் வடவையைப் போற்
கோபித்துப் பிரமன் அருளிய வீரவாள் ஒன்றைத் தன் கரத்திற் பற்றி
வீரவாகு தேவர்மீதுதாவிவரப்பின் இருவரும் சுழன்று சுழன்று வாட்
போரைச் செய்து வரும்போது பாலசுப்பிரமணியக் கடவுள் விடுத்த
தூதரானவர் ஒருசாரி பின்னிடைந்து பாய்ந்து தமது வாளைவீசி அதி
வீரன் இரண்டு பாதங்களையும் சிரத்தையும் தோள்களையும் மார்பையு
ம் கண்ட துண்டங்களாகத் துணித்து நிலத்தில் தள்ளிச் சிங்கநாதஞ்
செய்தனர்.

பின் வீரவாகு தேவரானவர் பகைவர் எவரும் இல்லாததால்

வீரமா மயேந்திரபுரிக்கு ஆகாயமார்க்கமாய்த்தாவிச்செல்லும் போது அப்பட்டணத்தின் வடபக்கம்வாசலில் மகா வீரபராக்கிரம சாலிகளாகிய அளவிறந்த அவுணவீரர்கள் தங்கள்தலைவர்கள் சகிதம் காவல்கொண்டிருக்கும் திறத்தினைக்கண்டு அதைக்கடந்து செல்வது அரிதெனஅவர் அதிசயித்துக் கீழ்ப்புறவாயிலைப் பார்ப்போமெனக் கருதிஅவ்விடஞ்சென்று அக்கொடிய காவலையும் அவர்கண்டு யோசித்தவராய்த் தெற்கு வாயிலைப் பார்க்கும்படிக்குப் போயினர். அவ்விடத்தில் கஜமுகனென்னும் சேனைத்தலைவன் மகாபராக்கிரமாய்க் காவல் கொண்டிருந்தவன் ஆகாயமாக்கமாய்ப் போகும் வீரவாகு தேவரைக் கண்டவுடன் அவரைத் தடுப்பதாக மகாகோபங் கொண்டெழுந்து ஆரடாபயலே! அப்புறம்போகாதே! நில்லு' நில்லு! என்று அதட்டி என்னைமதியாமற் போகின்றனை! நீயார்?எனக்கேட்டுப் பிதற்றிக்கொண்டு அவரைத்தொடர அப்போது அத்தேவர் அடாபயலே! உனக்கு இறுதிக்காலம் கிட்டிக்கொண்டது வாவா வென்றழைத்த மாத்திரத்தில் அவுணவீரன் கோபங்கொண்டுஅவர்பேரில் ஒருபருவதத்தைப்பிடுங்கி எறிந்தனன். அப்போது அவர் பாலசுப்பிரமணியக் கடவுளைத் தியானித்து முயற்சியின்றி நிற்க. அப்பருவதம் அவர் பயத்திற்பட்டுத்தூளாய் வீழ்ந்தது. பின் கஜமுகன்தனது ஆயிரம் துதிக்கைக்கும் ஆயிரம் பருவதங்கள் கொண்டுவந்து வீரவாகு தேவர்மேல் எறிந்தனன். அப்போது தேவர் முன்போலவே கந்தசுவாமியைத் தியானித்துநிற்க, அப்பருவதங்களெல்லாம் அவர்பேரிற்பட்டமாத்திரத்தில் தூளாய் வீழ்ந்தன.அதுகண்ட அவுணன் மகா ஆச்சரியங் கொண்டவனாய்ப் பின் பாரித்ததண்டமொன்றையும் பிரயோகம் பண்ணித்தோற்றுத் தனது ஆயிரம் துதிக்கைகளையும் கொண்டு பருவதங்களை வேறுடன் பிடுங்கி வருங்காலையில் வீரவாகுதேவர் அந்த ஆயிரந் துதிக்கைகளையும் மலைப்பாம்புகளைப் போற்புரளும்படிக்கு வெட்டித் தள்ளப்பாதகன் சிறித்தேவரைத்தன் வாயிற்போட்டு மென்று தின்னுவேனெனத்தனது இரண்டாயிரங் கரங்களையும் இருபாரிசத்தினும் பரப்பி வீரவாகு தேவரைப் பிடிக்கவர அவர் அவ்விரண்டா யிரங்கரங்களையும் தமது வீரவாளினல் வெட்டித் தள்ளினர் பின் கஜமுகன் மல்யுத்தம்செய்வதாய்த் துணிந்து தனது புயங்களினல் வீரவாகு தேவருடைய புயங்களிற் பலமாக மோதிப் பின்னிடையும் போது குமாரசுவாமியாரின் தூதர் துரிதமாக

ந்தமது பாதகங்ளின் ஒன்றினுல் அப்பாதகன் மார்பினிடத்து உதைக்க அவன் பதைபதைத்து விழுந்து மாண்டனன்.

அப்போது வீராவாகுதேவர் தமது அவ்விதரூபத்துடன்பட்டணத்துள்ளே செல்வது யுக்தத்தையே வருவித்துக்காலதாமதத்தைச் செய்யுமெனமதித்துக் குமாரதேவரைச்சிந்தித்து அவர் அருளினுல்அணுப்பிரமாணமான தேகத்தைக்கொண்டு ஆகாயத்திற் கிளம்பிக் கிழக்குக்கோபுரவாயிலின்மீதேறி நின்றனர். அப்போது அந்நகரம்முற்றிலும் இராநின்ற அளவிறந்த அதிசயங்களைச்சிலநேரம் கண்ணுற்றிருந்ததேவரானவர் பூமிதேவியானவள் அளவற்றகாலம் அரியதவங்களைச் செய்துவருந்திப்பெற்ற பலப்பிராப்தியே இப்பட்டணமாக உருவெடுத்து விளங்காநின்ற தெனமதித்துப் பின் தமது அணுப்பிரமாணமாகிய உருவத்துடனே அப்பட்டணத்திலுள்ள இன்னும்மகாஅற்புத விநோதங்களையெல்லாம் தப்பாமற்சுற்றி ஆச்சரியத்துடன்பார்த்து உலவிவரும்போது இந்திரகுமாரனுகிய சயந்தனுதியரின் சிறைச்சாலையை அவ்விடத்தில் தேடிப்பார்ப்பதாயினர்.

இப்படி யிருக்கும்போது முன் சயந்தனும் மற்றத்தேவர்களும் சிறைச்சாலைகளிற் கட்டுண்டு கொடிய இராக்ஷதர்களால் இந்திரன் இந்திராணி இவர்களின் மறைவிடத்தைச் சொல்லும்படிக்குக் கொடூரமாகிய பலவிதங்களில் இம்சிக்கப்பட்டு வருந்திச்சிவபிரானை நோக்கித்தங்கள் வருத்தங்களை முறையிட்டுச் சோர்ந்து அறிவிழந்த பிரேதங்களைப்போல விழுந்துகிடக்கின்றபோது சராசரப்பிரபஞ்சங்கள் அனைத்திலும் எள்ளில் எண்ணெயைப்போலப் பரிபூரணமாக விளங்கிநடப்பிக்கும் கிருபைக்கடலாகிய ஆறுமுகக்கடவுள் அவர்கள் கிலேசங்களைத்திருவுள்ளத்திற்கொண்டு சயந்தனுதியரின் இன்னலைப்போக்கக்கருதி வெற்றிக்கொடி வச்சிராயுதம் அங்குசம் பாணம் வெற்றிவேல் அபயம் சின்னமயமுத்திரை கமலம் மழு தண்டாயுதம் வில் மலர் மாலை இவைகள் பொருந்திய பன்னிருகரங்களும் பூரணசந்திரோதயம்போன்ற சண்முகங்களும் பிரகாசிக்கத்தக்கதாக அச்சிறைச்சாலையிற் சோர்ந்திருக்கும் சயந்தனுதியரின் கனவில் ஒவ்வொருவருக்கும் தோன்றித் தாம் இன்னரென அவர்களுக்குத் தெரிவித்துத் தேறுதலை சொல்லி ஓ! தேவர்களே! சிலதினங்களில் உங்கள் வருத்தங்கள் ஒழிய

முன்போல நீங்கள் நிலைபெற்றுச் செல்வங்களை அடைந்து வாழும்படிக்கு நாம்செய்வோம் அதுவரை சலனமற்றிருப்பீரெனவும் நமது சகோதரனாகிய வீரவாகுவையும் இனிப்பார்ப்பீர்களெனவும் ஜிவகுமாரன் அவர்களுக்கு அநுக்கிரகித்து மறைந்தனர். பின்தேவர்கள் நித்திரையினின்றும் எழுந்தவரைப்போலத் தாம் தம் உணர்ச்சியினைப் பெற்றெழுந்து கர்த்தன் வாக்கியங்களை ஒருவருடன் ஒருவர் சொல்லிக்கரங்களைக்கூப்பி அவரைப்போற்றி ஆனந்தக்கூத்தாடிக் கடினசித்தமுடைய கொடியகாவலர் இவைகளைக்காணின் என்னசெய்வரோவென்றும் பயத்தினால் ஆரவாரமின்றி வீரவாகுதேவரை எதிர்பார்த்திருந்தனர். அப்போது அத்தேவர் பலவிடங்களிலும் அவர்களினுடைய இருப்பிடத்தை ஆராய்ந்துவரும்போது பலகோடி அவுணவீரர் காவல்செய்திருக்கும் அச்சிறைச்சாலையைக் கண்ணுற்றமாத்திரத்திற் சயந்தனாகியர் அதிலிருப்பதாகத்தெரிந்து குமாரதேவரின் திருநாமமந்திர முபாசிப்பினால் அக்காவலர் தன்னைக்காணாமல் அறிவற்றிருக்கும்படிசெய்து சயந்தனுக்குச் சமீபத்தில் வந்தனர். அப்போது அவன் பண்டுபழகியவனைப்போல் அவரைநெருங்கிப்போற்றித் தேவரீர் வந்த காரியத்தைத் தயைசெய்ய வேண்டுமெனப் பிரார்த்திக்க வீரவாகுதேவர் இந்திரதனையனைப்பரிவாகப்பார்த்து ஓ! சயந்தனே! ஷண்முகப் பெருமானை உன்பிதாவாகிய இந்திரன்வணங்கி உன்னை விடுவிக்கக் கேட்டுக்கொண்டமைக்கு இரங்கி அவர் திருக்கயிலையைவிட்டுப் பூமியில்வந்து தாருகனையும் கிரவுஞ்சகிரியினையும் வாட்டி இப்போது திருச்செந்திற் பதியில் ப்ரமன் விஷ்ணு இந்திராதி தேவருடன் எழுந்தருளி இருக்கின்றனர். என்னைச் சூரபதுமன் சபைசேர்ந்து உங்களை அவன்விடுதலைசெய்யும்படிக்குப் பேசிவர அங்கு நின்று தூதுவிட்டனர். என்பெயர் வீரவாகுதேவனென வழங்கிவருவரெனச் சொல்லக் கேட்டசயந்தனாகியர் மிகச்சந்தோஷமாகி அய்யனே! எங்கள்துன்பங்கள் சீக்கிரம் நீங்கும்படிக்குக்கிருபை செய்யவேண்டுமென்று பலவாறுகப் பிரார்த்தனை செய்துகொள்ள வீரவாகுதேவர் அதற்கு இரங்கிச் சூரன் உங்களை விடுதலை செய்யாவிட்டால் வேலாயுதக்கடவுளானவர் நாளையத்தினமே இவ்விடம்வந்து அவுணர்பூண்டை வேரறக்களைந்துஉங்கள் சிறையையும் விடுவிக்க விருக்கின்றனர் என அக்கடவுளின் பிரதாபங்களையும் எடுத்துச்சொல்லிப் பின் அத்தேவர்களுடைய கூட்டத்தைக் கையமைத்திருத்தி அச்சிறைச்சாலையைக் கடக்

கும்போது காவலர் முன்போல நினைவுண்டாகி எழக்கடவரெனச் சொல்லி நடந்தனர்.

இவ்வாறு வீரவாகுதேவர் அவ்விடம்விட்டுப் பழயபடி சூட்சும ரூபத்தைக்கொண்டு வானவழியில் தாவிப்போய்ச் சூரபதுமன் அரண்மனையைச்சூழ்ந்த அகழியைக்கடந்து அதி அற்புதக்காவலைப் பொருந்திய பொன்மதிலைக் கிட்டிப்பற்பல ஆயுத சவரட்சணைகளைக் கொண்டு சத்துருக்கள்முதலிய ஜீவராசிகள் நுழைய இடங்கொடாமல் உயர்ந்துவானத்தை அளாவநிற்கும் கோபுரவாயிலின் சிறப்புகளைக்கண்டு அதிசயித்து அவ்வழிபோவதுயார்க்கும் அரிதெனக்கொண்டு அவர்களுக்குத்தோன்றாமல் அதினுள்ளே பிரவேசித்துச் சூரபதுமன் மாளிகைமுதலிய வளப்பங்களையும் அவன் சபாமண்டபத்தின் பெருமைகளையும் கண்டு அதிசயித்துப்பின் இவைகளெல்லாம் சிவபிரான் வரப்பிரசாதமகிமையென அவ்விடம்விட்டு நீங்கிச் சிங்காதனத்து இருந்து அரசுசெலுத்தும் சூரபதுமன் முன்போய்வார்த்தையாட எத்தனித்துப் பரம்பொருளாம் சரவணபவன் சரணாரவிந்தங்களைத் தியானித்துச் சிங்கம் தாவியதற்கொப்பாக ஆகாயமார்க்கமாகக் கிளம்பிப் போய்க் கொலுவில் இருக்கும் சூரபதுமனுக்கு எதிரில் நின்று சிவகுமாரன் அருளால் சூட்சும உருவைமாற்றிச் சகலரும் காணத்தக்கதாகத் தமது நிஜரூபத்தைக்கொண்டு இறங்கிச் சூரபதுமனைப்பார்த்து ஓ! அவுணராஜனே! நான் சிவபிரானுக்கு இனியகுமாரதேவர் விடுத்த தூதன் எனத்தெரிவித்துப்பின் சூரன் உயரச்சிம்மாசனத்தில் இருக்க நான் நிலத்திலிருந்து வாதாடுவது பாலசுப்பிரமணியக் கடவுளது பெருமைக்கு அடாது எனக்கருதி அப்பெருமானைத் தியானித்த அளவில் அவர் அநுக்கிரகத்தால் வீரவாகுதேவருக்கு ஒப்பற்ற சிங்காசனமொன்று வானவழி அதிவேகமாகச் சொலித்துவர அதை அவர் கண்டு ஷண்முகப்பெருமாள் கடாக்ஷிக்கத்தமக்கு வந்ததாக எண்ணி அவரைச்சிந்தித்துப்போற்றிச்சிங்கராஜன் மலையில்தாவியதை ஒப்ப அதின்பேரில் ஏறிக் கண்டவர்யாவரும் அதிசயித்துப் பலவிதங்கள்பேச இராஜாதி ராஜன்சிங்காதனத்திற்கும் மேலாகக் கம்பீரமாய் வீற்றிருந்து பாலசுப்பிரமணியதேவர் திருநாமங்களைச் செபித்துக் கொண்டிருக்கின்ற வீரவாகுதேவர் ஜெயவுற்சாகங்களைச் சூரபதுமன் கண்டவுடன் அதிகக்கோபங்கொண்டு சீறி அதட்டி அவரைப்பார்த்

து அடாபயலே! உன்னைப்பார்க்கின்ற காலையில் மாயவித்தைகள் சில கற்றுக்கொண்டவனாய்க்காணப்படுகின்றது. உன்னைப்போலத்துணிவு கொண்டு வேறேயாவரேனும் இவ்விடம் வந்து அவ்வித்தைகளைக் காட்ட மிகப்பயப்படுவார்கள். அப்படியிருக்க விவேகமற்ற மூடனே! நீ இப்போது காட்டிய இந்திரஜாலம் அரிதாகிய காரியமென்று எவ்வளவும் எண்ணவேண்டாம். நீயாவன்? என்னநிமித்தம் இங்கே வந்தாய்? உன்னை அனுப்பியவர் யாவர்? நீ வாளுக்கு இரையாகுமுன் இவைகளை விரைவில் நமக்குச்சொல்லி விடக்கடவாயென்று அழன்று கூறியபோது வீரவாகுதேவருக்கு அதிகக்கோபம் பிரவேசித்துச் சூரபதுமனைப்பார்த்து ஓ! அவுணராஜனே! நான் மாயவித்தைக்கா ரனல்ல. உன்னைப்போல் ஓர் சூரனென்று மதிப்பாயாக! இந்திரனைப் பலவிதங்களிலும் வருத்தி அவன் தேவியுடன் தப்பி ஓடிப்பதுங்கித் திரியச்செய்ததுமன்றிப் பொன்னுலகத்தினை அக்கினிதேவனுக்கு இரையாக்கி மற்றத் தேவர்களையும் அவர்கள் பெண்டுபிள்ளைகளுடன் பாரவிலங்குகளைப்பூட்டி அரிய சிறையிற்படுத்தித்தகாத ஏவல்களைச்செய்யச்சொல்லி வருத்துகின்றனை என்பதைமகாவிஷ்ணு பிரமதேவன் இந்திராதிதேவர் முதலியவர்கள் பலதரம் சிவபிரானிடம் முறையிட்டு அதனைத் தவிர்த்தாளப் பிரார்த்தித்துக் கொண்டமைக்கு அப்பிரானும் இரங்கித்தமது ஒப்பற்ற குமாரதேவரைச்கொண்டு அத்துன்பங்களை அவர்களுக்குப் போக்கிவைக்கும்படிக்கு அளவற்ற பூதப்படைகள் சூழ இப்பூமண்டலத்திற்கு அனுப்புவதாக அப்படியே அப்பாலசுப்பிரமணியக் கடவுளும இவ்வுலகில் வந்து தாருகனையும் கிரவுஞ்சனையும் தமது வெற்றிவேலினாற் பிளந்து கொன்று அப்பதியைக்கடந்து நேற்றையத்தினம் தெய்வீகம் பொருந்திய திருச்செந்திற்பதியில் வந்து சேர்ந்திருக்கின்றனர். நீசிறையில் அடைத்துவைத்திருக்கின்ற தேவர்களைவிடுவித்துவிட்டால் இன்னும் சிலகாலம் வாழ்ந்திருப்பாய். அப்படிச்செய்யாவிட்டரல் இதோகுமாரதேவர் உன்னைப் புத்திர மித்திரகளத் திராதிகளுடன் அளவிறந்த வெள்ளம் அவுணச் சேனைகளையும் சின்ன பின்னப்படவாட்டி நாசம்செய்து உலகஉபாதிகளை நீக்கிச்சகலரும் நிலைபெற்று வாழும்படிக்குச் செய்யத்திருவுள்ளத்தில் எண்ணி இருக்கின்றார். இதனை உனக்குவிரித்துக் காட்டும்படிக்குக் குமாரதேவர் எனக்குக்கட்டளை யிட்டனுப்பினர். ஆதலால் துரிதமாய்த் தேவர்கள் காவலைவிடுதலை செய்து இன்னும்மகதைஸ்வரி

யங்களை அநுபவித்து வாழக்கடவை. நான் சிவசுப்பிரமணிய தேவரு க்குப்பின் பிறந்த நவவீரர் இலட்சர்களில் மூத்தவனாகிய வீரவாகுதே வரென்னுந் திருநாமமுடையவ னென்று சொல்லியவாசகம் சூரபது மன் கேட்ட அளவிற் கோபக்கனல் மூண்டு விழிகளில் அக்கினிப் பொறிகள் "குபீல் குபீல்'' எனக்கொட்டக்கரத்துடன் கரத்தை ஓங்கி த்தட்டிச்சபை அதிரும்படிக்கு நகைத்து இராஜாதிராஜர்கள் தொ ழுது போற்றும்படிக்கான ஏகசக்கிரேஸ்வரனாகிய சூரனென்னும் எனக்கு இன்னம் பற்கள முழுமையும் முளையாமல் மழலைச் சொற் கள் திருந்தாமல் வசனித்திருக்கும் அச்சிறுபாலனோ இத்தகைய புத் திகளைச் சொல்லி அனுப்புவன்? ஆதிமுதல் எங்கள் முன்னோர்களா கிய இராக்கதர் வம்சங்களைத் தேவர்கள் பலவாறிலும் துன்பஞ்செ ய்து கொன்ற தீங்குகளை உத்தேசித்து இப்போது நாம் அவர்களை அலைத்து வாட்டிக்கடையில் மீளாத சிறையிலும் அடைத்து வைத் தோம் உன்னை ஒருபொருளாக மதித்துப் பலவார்த்தைகள் நாம் சொல்வதாயில்லை. உலகங்கள் அனைத்தையும் அழிக்கின்ற தருணம் நேர்ந்தாலும் நமவசப்பட்டிருக்கின்ற தேவர்களை விடநினையோம். நீ இப்படிக்கு நம்மிடம் மதிகெட்டு உளறியபடியால் இதோ நாம் ஓடிப் போன அந்த இந்திரனையும் மற்றத்தேவர்களையும் கூட இக்ஷணமே தேடிப்பிடித்து வரச்செய்து அவர்களுக்கு விலங்குகள் மாட்டி அரி யகாவலிற் படுத்தி வருத்துவோம். என்தம்பி தாருகனையும் கிரவுஞ்ச னையும்பிளந்து கொன்றசெய்தி நேற்றையத்தினம் தான் நாம்கேள்விப் பட்டோம். இதோ நம்சேனைத்தலைவர்களிற் சிலரை அனுப்பி அப்பா லனைவாட்டி. அவர்களைக் கொன்ற பழியைத்தீர்த்துக்கொள்ள இருக்கி ன்றோம். சிவனிடத்து உதித்த அப்பாலனோ என்எதிரில்நின்று சண் டைகொடுக்க வல்லவன்! தேவர்களை எக்காலத்திலும் விடுதலை செய் வதில்லை நீ பயித்தியகாரனாகையாற் பாலன் வார்த்தைக்கு இசைந்து நம்மிடம் தூதாகவந்தனை ஆயினும் உன்பிராணனை வாங்காமல் தயை செய்து விடுகின்றோம் இனி இப்பட்டணத்திற் சற்றும் நில்லாமல் தப்பிப்பிழைத் தோடக்கடவை யென்று சூரபதுமன் பேசியதை வீர வாகுதேவர் கேட்டவுடன் எழுந்த கோபக்கனலானது மனதைவரு த்தச் சிறிச்சபை அதிரும்படிக்கு நகைத்தவராய் இதனைச் சொல்லுவ தாயினர்.

ஓ! சூரனே! நீபரமேஸ்வரனுடைய நுதல்விழிகளில் உதித்த சரவணபவன் பெருமைகளையும் குணாதிசயங்களையும் வீரபராக்கிரம உத்தண்டங்களையும் எவ்வளவும் கவனியாது முடத்தனத்தாற் பாலனென்று இகழ்ச்சியாகப்பேசிய உன்நாவை இந்த வீரவாளினாற்கொய்து சிரமற்று நிலத்தில் விழுந்து உருளவெட்டித்தள்ளி உன்னுயிரையும் எமலோகத்திற்கு அனுப்பிவிடுவேன். ஆனால் எமது அய்யனிடத்தில்அப்படிக்கு உத்தரவு யாம்பெற்றுவரவில்லை யென்றவுடன் சூரன் சிறித்தூதாக வந்தவனைக்கொல்லல் நமக்கு அடாதெனச்சொல்லிப் பக்கத்தில் தனது பணிவிடையை எதிர்பார்த்திருக்கும் ஆயிரம் ஜெயசாலிகளாகிய வீரரைப்பார்த்து நம்மை மதியாமற்பேசும் இவனைப்பிடித்துப் பாரவிலங்குபூட்டி அரியசிறையில் அடைத்துப் பத்திரமாய்க் காக்கக்கட வீர்களெனக் கட்டளையிட்டனன். உடனே அந்தவீரர்கள் வீரவாகு தேவரைப்பிடிக்க நெருங்கி வருகின்றசமயத்தில் அவர் நீண்டிருக்கும் தமது கரங்களில் ஒன்றைநீட்டி அவ்வீரர்சிகைகளைச் சேர்த்துப் பிடித்துத்தூக்கிச் சுழற்றிச்சபாமண்டபத் தூணினிடத்தில் ஓங்கிமோதி அவர்களைக்கொன்று உடல்களைச் சூரன்மேல் எறிந்து எமது இறைவன் வெற்றிவேலானது உன்னைக்கொல்வது நிச்சயம். சண்டாளனாகிய உன்முகத்தையும் பார்க்கமாட்டேன். போய்வருகிறேனென்று வீரவாகுதேவர் வானத்திலெழுந்த மாத்திரத்தில் அவர் வீற்றிருந்த சிங்காதனமானது சடுதியில் வானத்திலெழுந்து மறைந்தது. அம்மாத்திரத்தில் சூரபதுமனுக்கு அதிகக் கோபமாகித்தனது அருகிலிருக்கின்ற சதமுகன் என்னும் அவுணவீரனைப் பார்த்து நம்மைமதியாமல் வைதுபேசி ஆயிரம் வீரரையும் விரைவிற்கொன்று அவமானப் படுத்திப்போகின்றனன். அவன் தூதனுதலாற் கொல்லாமல் நீ இந்நிமிஷம் அவனைக்கட்டிப் பிடித்து வரக்கடவை என்று ஆக்கியாபிக்க அவ்வீரன் உடனே வீரவாகுதேவரைச்சகல சயினியங்கள் சூழவளைந்து கொண்டு தனுசுகளிற் கூர்மையாகிய கொடிய பாணங்களை அமோகமாய்ப் பூட்டிச்சற்றும் இரக்கமற்றபாதகர் அவர் ஒருவர் பேரிற் செலுத்தியபோது அவைகள் முருகக்கடவுள் அனுப்பியதூதர் பேரில் வந்து விழுந்து யாதொரு பிரயோசனமு மின்றித்துகள் பட்டுகுழ்ந்தன. அப்போது வீரவாகுதேவர் கோபங்கொண்டு மகாமேருவைப்போல் பதினாயிரம் சிகரங்கள் விளங்கவானத்தை அளாவியிருந்த ஒரு கோபுரத்தில் தாவி அதைப்பறித்துக் கொண்டு தம்மை

வாதாடிச் சூழ்ந்திருந்த சயினியங்கள் பேரில் வேகமாய் வீசிவீசி ஒரு நொடியில் அச்சேனைப் பெருக்கனைத்தையும் மடித்துச் சதமுகனைத்த னியனாக்கிவிட அவுணவீரன் அவர் திறத்தைக்கண்டு மனம்கலங்கின வனாய்ப்பின் தயிரியத்தையும் விடாமல் அளவிறந்தசரங்களை அவர் பேரிற் பொழிந்து ஆர்ப்பரித்தான். வீரவாகுதேவர் அவைகளையும் சட்டைபண்ணாமல் தட்டிப்போட்டு வேகமாய்ச்சென்று அச்சேனைத் தலைவன் கரததிற் கொண்டிருக்கும் வில்லைப்பறித்து ஒடித்தெரிந்த போது சதமுகன் அவரைத்தன் வலப்புறத்து நூறு கரங்களினாலும் பிடித்தான். அக்காலையில் வீரவாகுதேவர் தமது வலியபுயத்தினால் அவன் மார்பில்தாக்கிப் பூமியில் விழுந்து உருளத்தள்ளி அவன் பழைய படிக்கும் எழுந்துவர எத்தனித்த சமயத்தில் அவர் அப்பாதகன் நூறு சிரங்களையும் கொய்து அவனை மடித்துவிட்டனர். பின் சண்முகப்பெரு மாள்கிருபையுற்றுச்சொல்லி அனுப்பிய நீதிகளை அங்கீகரியாமல் இக ழ்ந்துபேசிய இச்சூரபதுமன் வீற்றிருந்து அரசுசெலுத்தும் சபாமண் டபத்தையும் பின் இப்பட்டணத்தையும் நாசம்பண்ணக்கடவேனெ னச் சபதம்பேசிச் சரவணபவன் திருவடிகளைத் தியானித்து விஸ்வ ரூபங்கொண்டு நின்றபோது அந்நகரமும்அவர்மிதிக்கு ஆற்றாமல்தத் தளித்து அதின் எல்லைகளில் எங்கும் இருந்து கடற்சலம் அப்பட்ட ணத்துட்புகுந்து அவ்விடத்தில் அளவிறந்த சேதங்களும் துன்பங் களும் விளைவித்தன. அக்காலத்திற் சூரபதுமன் அரமனையைக்காவ ல் செய்திருந்த அன்பதுவெள்ளம் அவுணவீரர்களும் அவ்விஸ்வரூப த்தைக்கண்டு பயந்து பின் சூரனுக்குப்பயந்து கோபித்தெழும்பி அ வரைவந்துவளைத்துக் கடும்போர் செய்ய வீரவாகுதேவர் தமது வலி யகால்களினாலும் கைகளினாலும் அவர்கள் எல்லோரையும் எம லோகம் குடியேற்றுவித்தனர். பின் சண்டைமுகத்தில் ஒருவரையும் காணாதபடியினால் வீரவாகுதேவர் சூரபதுமன் அரமனைமுகப்பில் மகம்மேருவினும் பாரித்துவிளங்கி நின்ற கோபுரத்தைப்பறித்துத் தம் கரத்திற்கொண்டு அவன்வீற்றிருந்து அரசுசெலுத்தும் நவரத்தினமய மான சபாமண்டபத்தின் மேற்குறிப்பிட்டு வீசிச்சிங்காநாதம் செய்த னர். அக்கோபுரமானது சுழன்றுபோய் அம்மண்டபத்தின்மீது அதி க ஓசை எழவிழச் சூரபதுமன் தவமகிமையினால் அவனும் பிள்ளைக ளும் தவிர மற்றவர்கள் அனேகருடன் அதுஉருத்தெரியாமல் நொச

ப்பட்டுப்போனது. உடனே சூரபதுமன் வீரவாகுதேவர் விஸ்வரூப த்தைக்கொண்டு சபையை நாசப்படுத்தினதைக்கண்டு கடுங்கோபந் தனுப்த் தன் அருகிலிருக்கின்ற ஐந்நூறு சிரங்களும் ஆயிரம் கரங்க ளும் பெற்றி நககின்ற வெற்றியாளராகிய அவுணவீரர் ஆயிரவரை அனுப்பி அவ்வீரவாகுதேவரைப் பற்றி தம்முன் அவன் அவய வாதிகளைக்கொய்து பின்னமாக்கிப் பின் அவனைக்காவற்படுத்தி வருத் தக் கடவீர்களெனக் கட்டளையிட்டனுப்பினான். அவ்வீரர் தம்மைவந் துஎதிர்க்குமுன் வீரவாகுதேவர் அப்பட்டணத்தின் சிறப்புகளையும் செல்வப்பெருக்கையும் நாசமாக்குவதாய்த் துணிந்து நகரமெங்கும் சின்னபின்னப்படப் பிரசண்டமாருதத்தைப் போலச் சுழன்று சுழன்று உலவிச் சாடியகாலத்தில் வீதிகளிலிருந்த உப்பரிக்கைகள் மேடைகள் மாளிகைகள் ஒன்றேனும் உருவாகக் காணப்படாதபடி சகலமும் இடிந்து நுறுங்கி நிலத்திற் கலந்து சமனாய்க் காணவிளங்கியன. வீர வாகுதேவர் அப்படிக்குச் சாடியபோது தேவர்கள் காவலிற்பட்டிருக் கின்ற சிறைச்சாலைக்கு மட்டும் யாதொரு பின்னமும் நேராமற் பாது காத்து இரட்சித்தனர். முன் சூரபதுமன் ஏவியசக்கிரவாகுகளென் னும் கொடிய பாதகர்கள் வீரவாகு தேவரைக் கிட்டிவளைத்துக்கொ ண்டு தமதுவிற்களில் தேவப்படைகளைப் பூட்டி அபரிமிதமாய் அவர் மீதிற் செலுத்திய காலையில் வீரன் சிறித்தக்ஷணம் ஓர்மாமரத்தைப் பிடுங்கித் தமது கையிற்பிடித்துக் கொண்டு அம்மரம் ஒன்றைக்கொண் டே மேற்குறித்த ஆயிரம் வீரர்களையும் அவர்களுடன் பெரும்புறக் கடலை ஒப்ப இரைந்துவந்த சதுரங்க வெள்ளங்களின் பெருக்கையும் சுழற்றிச்சுழற்றி மோதிக்கண்டம் கண்டமாய் அதப்படித்திக்கொன் று எதிரிகள் ஒருவரும் இல்லாமையாய் மதயானையைப் போலப்போர்க் களத்தை நோக்கி நின்றனர். இது காரணங்களைச் சூரபதுமன் கேள் விப்பட்டு வீரவாகு தேவரின் சௌரியங்களையும் புயவன்மைகளையும் நினைந்து நினைந்து மனம் பொறுமற் சபையிலிருக்கின்ற வர்களைப்பார் த்துச் சொல்லுகின்றான். பாலசுப்பிரமணியன் விடுத்த அபலனாகிய ஒரு தூதன் விசாலமாகிய கடலைத்தாவி இலங்கை முதலிய அரிய காவல்களைக்கடந்து இந்த மகாசபையிற்சேர்ந்து சற்றும் பயமில்லா மல் நாம் வீற்றிருக்கின்ற சிங்காதனத்திலும் சிறந்ததாய் உன்னத முள்ள பீடத்தில் அசைவற்றிருந்து அகன்ற மண்டலாதிபதியாகிய

நம்மிடத்திற் கொஞ்சமும் மரியாதையின்றி அவமதித்துப்பேசி நாம் ஏவிய வீரரையும் கொன்று சபையைக்கலக்கி நமது பட்டணத்தை யும் அழித்து இப்போது அளவற்ற அவுண வீரர்களையும் கொன்று இன்னம் இப்பதியைவிட்டுப் போகாமல் வீற்றிருக்கின்றனன் எனக் கேட்டோம். நமது பெருமை நேர்த்தியாக இருக்கின்றதெனச் சொல் லி மேல் நடக்க வேண்டியதை யோசித்திருக்கும்போது பத்துத்தலைக ளும் இருபது கரங்களு முடைய வச்சிரவாகு என்னும் அவன் பிள்ளை எழுந்து அவன் பாதங்களிற் பணிந்து அத்தூதனை இந்நிமிஷம் தாங் கள் ஆக்கினை செய்யும்படிக்குப் பிடித்துக் கட்டிவந்து தங்கள் முன் விடுவேனெனச் சொல்லி விடைபெற்றுத் தனது தோழர்களையும் யுத்த சன்னதராய் வரும்படிக்குக் கட்டளையிட்டுத்தானும் போர்க்கோலங் கொண்டு தேர்கள், மதயானைகள், குதிரைப்பந்திகள் தனித்தனி அஞ் ஞூறு வெள்ளமும் அவுணர் இரண்டாயிர வெள்ளமும்கொண்ட சது ரங்க சேனைகளுடன் புறப்பட்டு வரும் மார்க்கத்தில் அவனுக்கு நேர் ந்த துர்ச்சகுனங்களையும் பாராட்டாமற் கோபத்தையே முன்னிட்டுக் கொண்டு வருகின்றவனை வீரவாகு தேவர்கண்டு இந்த ராஜகுமாரனை யும் அவனைச்சேர்ந்த இந்தச்சதுரங்க சேனைப்பெருக்கினையும் அந்தி படுமுன் வெற்றிபெறுமற் போவேனாயின் நான் ஆறுமுகேசன் அடி மையாக மாட்டேனென்று பிரதிக்கினை செய்துகொண்டு வேலாயுதப் பெருமானது செந்தாமரை மலரடியைத் தியானித்து யுத்த சன்னத்த னாய்ப் புயங்களைத் தட்டிச் சிருங்க நாதத்துடன் அட்டகாசம்செய்து கரங்களைப்பிசைந்துகொண்டு இராஜகுமாரன் வரவை எதிர்பார்த்திரு க்கும் சமயத்தில் அம்முழக்கத்தைச் சூரன் குமாரனாகிய வச்சிரவாகு கேட்டு அதிசயித்து நம்மைக்கண்டு கிஞ்சித்தும் மதியாமற் கொக்கரி த்த சத்தமென மதித்து அடங்காக் கோபத்தனாகி முருகப்பெருமாள் தூதனாகிய வீராதி வீரனைச் சீக்கிரத்திற்கிட்டி நால்வகைச்சேனைகளு டன் அவரை வளைத்துக்கொடிய பாணங்களைச் சங்கையின்றி அவர் பேரில் ஏகோபித்துப் பிரயோகித்தபோது அனலையொத்த வீரவாகு தேவர் திருமேனி முற்றும் உதிரம் பீறிட்டுச் சிவந்து காட்டவும் அ வர் அதிகக் கோபங்கொண்டு ஓர் வேங்கைபோலச் சயினியத்திற் பாய் ந்து கோடி கோடிக் கணக்கில் வீரர்களைப் பலவிதங்களில் மடித்துக் கொன்று அப்பாலும் கோபந்தணியாமல் மரங்களைப் பிடுங்கிக் கொ

ண்டே இரதகஜதுரகபதாதிகளைச் சுழற் காற்றைப்போல வளைத்து வளைத்துச்சாடி நிர்மூலப்படுத்திப்பின் தோமரரான பாலகுமாரர்களையுங் கொன்று வச்சிரவாகுவைத் தனிப்படவிட்டனர். அதை இராஜகுமாரன் கண்டு பிரமித்தவனாய் ஓ! தூதனே! உன் புஜபலபராக்கிரமத்திற்கு மிக மெச்சினேன். வீரவாகுவென்பது உனக்கேதகும். உன் தயிரியத்துக்கு யாவரையும் ஒப்புச்சொல்லக்கூடவில்லை. என்கண்காண இப்போது நீ செய்த சண்டைக்கு நிகராய் முன்னோர்களிலுமெவரும் செய்திருந்ததாய் நான் கேள்விப்பட்டதில்லை. ஓ! வீரனே! அப்பேர்பட்ட உன் ஆண்மைத்தையான் இனிச்சிலநேரத்தில் அடக்கி உன்னைக் கட்டிக்கொண்டுபோய் என் பிதாவின் முன்விடக் கடவேனென்று அவர் கண்டத்திற்கும் புயத்திற்கும் மார்பிற்கும் குறிகொண்டு அநேக பாணங்களை எவி ஆர்ப்பரித்தனன். அப்போது வீரவாகுதேவர்களத்தில் விழுந்து கிடந்த பாரித்த இருப்புலக்கை ஒன்றை எடுத்துக் கொண்டு அப்பாணங்களை எல்லாம் தும்சப்படுத்தினர். இராஜகுமாரன், அவ்விருப்புலக்கையைப் பாணத்தாற் பொடியாக்கிவிட்டு ஆயிரம் இரண்டாயிரம் கணக்கிற் கொடியபாணங்களைச் சந்தித்துவிட அவைகள் வீரவாகு தேவர் சரீரமுற்றுந்தாக்கி உதிரம் பெருக்கெடுத்தோடியதினால் அவர்களைத்து நிமைப்போது மயங்கிஇருந்து உடனேதெளிவுண்டாகிச் சிங்கத்தைப் போலப்பாய்ந்து வச்சிரவாகு ஏறியிருந்த இரதத்தை வாரியெடுத்துக் கிறுகிறெனச் சுழற்றி ஆகாயத்தில் வீசியெறிந்து வீரசிங்கத்தைப் போலக் கர்ச்சித்து உலவிக்கொண்டிருந்தனர். அவ்விரதம் அவனுடன் வெகுதூரம்போய்ப் பின் திரும்பிவந்து பூமியில்விழுந்து நறுங்கிய காலத்தில் தனக்குச் பலகாயங்கள் பட்டபோதிலும் சூரகுமாரன் அவைகளைப் பாராட்டாமல் தீரனாய்த் தனவில்லை வளைத்தனன். வீரவாகு தேவர் அதை அவன் கையில் நின்றும் பறித்து முறித்தெறிந்து விட்டனர். உடனே சூரகுமாரன் தனது உடைவாளை உருவிக்கொண்டு இடம் வலம் பாய்ந்து வருவதை வீரவாகுதேவர்கண்டு துரிதமாய்த் தமது வாளாயுதத்தை உருவிக்கொண்டு அவனுடன் சண்டைசெய்து கடைசியில் அவன்பத்துச்சிரங்களையுங் கொய்து தள்ளிமடித்தனர்.

பின் வீரவாகு தேவரானவர் தம்முடன் சண்டைகொடுக்க ஒரு

வரையுங் காணமல் விரைவிற் செந்திற்பதியைச் சேருவதாய்ப் பிரசண்டவாயுவைப் போன்று ககனமார்க்கமாகப் பறந்து முருகப்பெருமானைத் தியானித்துக்கொண்டு மயேந்திரத்துக்கு வடபாரிசக் காவலாயுள்ள இலங்கைப்பதியைச் சமீபித்தகாலையில் முன் சூரபதுமனைக்காணப்போய் இப்போது திரும்பி அவ்விடம் வந்து தன்குமாரன் இறந்ததும் பட்டணம் அழிந்த செய்தியும் கேட்டு வெகுண்டிருக்கும் யாழிமுகன் என்பவன் அவரைக்கண்டு யாரடாபயலே! நில்லு! நில்லு! எங்கேமறைந்தோடுகின்ருய்! என்று அதட்டித்தடுத்துப் பாதகனே! யாம்இல்லாதகாலத்து இப்பதியை அழித்தது மின்றி என் அருமைப்புதல்வனையும் கொன்றனை. மேலும் சக்கிராதிபதியாகிய சூரபதுமன் நகரையும் பலவளங்களையும் மனதிற் கினியபுதல்வனையும் பின்னப்படுத்தினை யெனக்கேள்விப்பட்டோம். இப்படிக்கான பழிகாரப்பயலாகிய நீமீளவும் பிராணனுடன் உன் இருப்பிடம் சேரப்போகின்ருயோ? உன்னை இமைப்போதிற் கொல்லாமல் விடேன்! புத்தியீனனே! உன்னுற் கூடியமட்டும் பார் என்று தன்னைச்சூழ்ந்து வந்தசதுரங்கசேனைகளையும் வீரவாகுதேவர் மீதில்விட்டபோது அவர்கோடையிடியைப் போல்யாவரும் நடுங்கக்கர்ச்சித்துத் தமது மின்னலை ஒத்தவாளாயுதத்தை உருவி இடசாரிவலசாரியாக அந்த இராக்ஷதக் கூட்டமத்தியிற் பாய்ந்து அவர்களைத் தலைவேறு தோள்வேறு மார்புவேறு இவ்விதங்களாக அச்சேனசமுத்திரங்கள் அனைத்தையும் நாசஞ்செய்து முடித்ததையாழி முகன்கண்டு கோபதீபிதனுய் அவரைப்பற்றிப் பிசைந்து கொல்வதாய்த்தன் ஆயிரங்கரங்களை அவர்பேரில் நீட்ட அவைகள் அனைத்தையும் தமது வீரவாளினுல் வெட்டியெறிந்தனர். பின் அவ்வனன் தனது மற்ருெராயிரம் கரங்களைக்கொண்டு அளவிறந்த பருவதங்களைப்பிடுங்கி வீரவாகுதேவர்மேல் எறிந்தகாலையில் அவைகளுக்கெல்லாம் அவர் தப்பித்துக்கொண்டு அவனுடைய மற்ருேர் பாகத்தின் ஆயிரங்கரங்களையும் சேதித்தெறிந்தனர். அவன் வடவையைப் போற்கொதித்துக்குமார தூதரைப் பிடித்துக்கொள்வதாய்த் தனது நீண்ட ஆயிரந்துதிக்கைகளையும் நீட்டித்தாவி வரும்போது இவர்தமது வீரவாளைக்கொண்டு அவன் ஆயிரஞ்சிரங்களையும் வெட்டித்தள்ள அவன் அலறிப் பூமியில் விழுந்திறந்தான்.

இவ்விதமாய் அதம் செய்தபின் வீரவாகுதேவர் எதிர்ப்பாரை க்காணுததால் வீரவாளை உறையிற்சேர்த்து இலங்கை எல்லையைக்கடந்து ககனமார்க்கமாய் மனோவேகத்தினும் முந்திச்சமுத்திரத்தைத்தாண்டித் திருச்செந்திற் பதியைச்சேர வருகின்றதைப் பூதவீரர்கள் பார்த்தமாத்திரத்தில் ஜெயஉற்சாகங்களுடன் குதித்துக்களிக்கின்ற காலத்தில் அவர்கள் தலைவர்கள ஓடிவந்து கரங்களைக் கூப்பிக்கொண்டு நெருங்கி வீராதி வீரனே! தேவரீர் புஜபல பராக்கிரமங்களை எங்களாற் புகழக்கூடுவதோ என்று பலவிதங்களில் அவரைத் துதித்து உபசரித்தார்கள். அப்போது வீரவாகுதேவரும் அவர்களிடத்தில் மிகுந்த பரிவுடன் குமாரதேவர் கட்டளைப்படிக்குச் சூரனிடம் வார்த்தையாடி வந்தேன் என்று பிரியவசனங்களைப் பேசியிருக்கின்றபோது சண்முகப்பெருமான் சந்நிதானத்திற் காத்திருந்த துணைவர்கள் எண்மரும் இலட்சத்தவரும் வேகமாய்வந்து முன்னவன் திருப்பாதங்களில் வீழ்ந்துபணிந்தார்கள். உடனே அவர்களை வாரியெடுத்தணைத்து க்ஷேமங்களைவிசாரித்தபின்பு தம்பியார்சூழ்ந்து வரநடந்து போய்ச்சுயஞ்ஜோதி வடிவாய் எங்கும் பரிபூரணமாய் நிறைந்து நடிப்பிக்கும் பெருமையினைப்பெற்ற குமாரதேவர் வீற்றிருக்கும் திருமாளிகையிற் பிரவேசித்து மகாவிஷ்ணு பிரமதேவன் இந்திரன் தேவர்கள் ரிஷிக்கூட்டங்கள் முதலியவர்கள் சூழ்ந்து போற்ற நவரத்தினமயமாகிய திருச்சபையில் விளங்கும் சிங்காதனத்தில் தேவதேவோத்தமனாகிய குமாரதேவர் எழுந்தருளியிருக்கும் காட்சியைத் தெரிசித்து அதிக ஆவலுடன் ஆனந்தப்பரவசராய் ஜெய ஜெய வெனப் போற்றிச் சமீபித்துப் பாலசுப்பிரமணிய தேவரின் பாதாரவிந்தங்களில் மும்முறை வலம் வந்து சேவித்தெழுந்து துதித்து நிற்கின்ற வீரவாகுதேவரைக் குழந்தைவேலன் கிருபையாகப் பார்த்தருளிச் சூரபதுமன் சபைக்குப் போய் வந்தசங்கதியைச் சவிஸ்தாரமாய்ச் சொல்வாயெனக் கட்டளையிட்டனர்.

அப்போது அவர் பக்திவிநயத்துடன் வாய்புதைத்துக் கொண்டு தேவரீர் அருளிச்செய்தபடிக்குச் சூரன் பிழைக்கும் மார்க்கங்களைப்பற்பல விதங்களில் தெரிவித்தபோதிலும் அவைகளைத்தான் கடத்தேறத்தக்கதாக நினையாமற் கோபித்துத் தேவர்கள் சிறையை ஒரு

போதும் விடுவிக்கமாட்டேனென்று உறுதியாகச்சொல்லிவிட்டனன். அடியேன் யாதொரு பிரயோசனங்களின்றித் திரும்பினேனெனப் பேசியமாத்திரத்திற் சகலமும் தெரிந்த கந்தசுவாமியார் திருநகைகொண்டு ஓ! சூரனே! நீ செய்துவந்த காரியங்களில் ஒன்றும் சொன்னவனல்லே. அவைகளை இச்சபையோர் அறியும்படிக்குச் சொல்லுவாயெனக்கட்டளையிட வீரவாகுதேவர் கர்த்தனே! கொடிய சூரன் நகரத்துட் பிரவேசிக்கும் காலத்திலும் திரும்பும் காலத்திலும் சிலராக்ஷதர்கள் தடுத்து வாதாடியபோது தேவரீர் வலிமையினால் அவர்களனைவரையும் கண்டித்துவந்தேனெனச் சொல்லியபோது சரவணபவன் அவரிடத்துப் பூரணகடாட்சத்தினால் அப்பனே! அவர்கள்மடக்கி வாதாடியபோதுமிகவும் வருந்தினையோவென அவர் முதுகைத்தடவிக் கிருபாநோக்கம் பாலித்து விஷ்ணு பிரமன் இந்திராதியர்களைப்பார்த்துக் கேட்டீர்களோ! அச்சூரன் நமது வாக்கியங்களைத்தடுத்தனன். ஆதலால் இனி அந்தப்பாதகன் மாதாங்காரத்தை அடக்கித்தேவர்களை மீட்டுக்கொண்டு வரும்படிக்கு நாளைக்கே போவது உசிதமெனத் திருவாய்மலர்ந்தருள அவர்கள் வருத்தங்களொழிந்து களிப்புடன் அப்படி நடத்துவது முக்கியமெனச்சொல்லி யிருந்தார்கள். பின்வீரவாகுதேவர் இந்திரனைக்கண்டு சயந்தனுதி தேவர்கள் சங்கதியையும் விளம்பி அவன் மனவாட்டங்களைப் போக்கினர். இவைநிற்க, இனிச்சூரன் சங்கதிகளை இயம்புவாம்.

வேவுகாரரால் தனது அருமைக் குமாரனாகிய வச்சிரவாகு என்பவன் மாண்டசங்கதியைச் சூரன்கேள்விப்பட்ட மாத்திரத்தில் அவன் சிங்காசனத்தினின்றும் பூமியில் விழுந்து அடா என் செல்வகுமாரா! என்னை மோசம்செய்து போனையோவென்று பலவிதங்களில் வெகுநேரம் பிரலாபித்தகாலையில் தருமகோபனென்னும் மந்திரியானவன் அவன் அருகில்வந்து கரங்களைகூப்பிக்கொண்டு மண்டலாதீஸ்வரனே. உமது கீர்த்திப் பிரதாபங்களையும் சூரத்தன்மைகளையும் எவ்வளவும் நினையாமற் கிலேசத்தை மேலிட்டிருப்பது உம்மையொத்த வீரர்களுக்குத்தகுமா வெனப்பலவாறுகூறி அவனைத்தேற்றியபோது அவன் சோபம் நீங்கி எழுந்து தூதரைப்பார்த்து நமது திருக்குமாரனை அஞ்சாது கொன்ற அத்தூதன் எங்கேயெனக் கோபித்துக்கேட்க அவர்கள்

இலங்கையைக்கடந்து சென்றனரெனக்கூறினர். பின் சூரன் அவ
ர்களைநோக்கிப் பிரமனைக் கணப்போதில் அழைத்துவரக் கட்டளையி
ட அதற்கு அவர்கள் இராஜாதி ராஜனே! பிரமன் இந்திரன் விஷ்ணு
முதலானதேவர்கள் பாலசுப்பிரமணியரைச்சூழ்ந்து உம்மைமதியா
மற் பயமின்றியிருப்பதாய்க் கேள்வியாகின்றோம் எனத் தெரிவித்த
காலையில் அவன் நல்லகாரியம் அவர்கள் கர்வத்தைச் சீக்கிரத்தில அ
டக்குகிறேனென்று பல்லைக்கடித்து நீங்கள் மற்றோர் அண்டத்திற்கு
ஓடி வேறு பிரமனைப்பிடித்து வருவீர்களெனக் கட்டளையிட்டமாத்திர
த்தில் அவர்கள் அங்கோடி அவரை யிழுத்துவந்து சூரன்முன்
நிறுத்தினர். அக்காலத்திற் சிருஷ்டிகர்த்தனை அவன் அருகில் அழை
த்துப் பிரமனே! அழகுமின்னப்பட்டுப் போயிருக்கும் இப்பட்டணத்
தைப்பழயபடிக்கு நிருமிப்பாயெனக் கட்டளையிட்டனன். அவன்
அப்படியே அவ்வேலையைச் சீக்கிரத்தில் நிறைவேற்றிக் சூரனிடம்
வருதிபெற்றுத்தன் இருப்பிடம்சென்றனன். பின் சூரன் சபாமண்ட
பத்தில் முன்போலச் சிங்காதனத்தில் வீற்றிருந்து வேவுகாரர்களைக்
குறித்து நீங்கள் அதிவேகமாகத் திருச்செந்திற் பதிக்குப்போய் அவ்
விடம் இருக்கப்பட்ட செயல்களை நன்றாய் அறிந்துவருவீர்களெனக்
கட்டளையிட்டனன். அவர்கள் அப்படியே அவ்விடம்சென்று திரும்பி
ச் சூரனிடம் வந்துபணிந்து சொல்லுகின்றனர். ஒன்று பத்து நூறு
ஆயிரம் சிரங்களையும் அதற்கு இரட்டிவலிய கரங்களையும் கொண்ட
பெரியதேகங்களைப் பெற்றிருக்கின்ற இரண்டாயிரவெள்ளம் பூதப்
படைகளும் அவர்களுக்குத் தலைவர் நூற்றெண்மரும் சொல்லரும்
வீரத்தன்மைவாய்ந்த தம்பியர் இலட்சத்தொன்பதின்மரும் மகாவிஷ்
ணு முதலியதேவர்கள் முனிவர்களுடன் சூழ்ந்துபோற்றப் பாலசுப்
பிரமணியர் வீற்றிருக்கின்றன ரென்றும் இனிமேல் அவர்சகலசேனை
களுடன் பிரயாணப்பட்டுக் கடலைகடந்து இவ்விடம்வந்து தேவரீருட
ன் சண்டைசெய்ய நினைக்கின்றனர் என்றும் சொல்லச் சூரன் அதை
க்கேட்டு இனித் தாமதிக்கக் கூடாதென வீரர்களைப் பலதிசைகளி
லும் செலுத்தித் தன் தம்பி சிங்கமுகாசுரனையும் திக்குத்திகாந்தரங்
களில் இருக்கப்பட்ட சேனைத்தலைவர்களையும் அறுபோகத்தில் வல்ல
வராய சுற்றத்தவரையும் முதியோர்களையும் தம்மிடம் வருவித்து
அவர்களை நோக்கி இதனைச் சொல்வதாயினன். நம்குலப்பகைவர்கள்

னாகிய தேவர்களை நாம் அரியசிறையிற்படுத்தி வருத்திவைத்திருப்ப தை இந்திரன் தெரிந்து கயிலாசபதியினிடம் போய் அவ்வருத்தத் தைப் போக்கிவைக்கும்படி பிரார்த்தித்துக்கொள்ள அவர் ஒரு பிள் ளையைப் படைத்து அதனுடன் பலவெள்ளப் பூதரைக்கூட்டி அனு ப்பி-நம்முடன் சண்டைகொடுக்க அனுப்பிவைத் திருக்கின்றாராம். அப்பாலனானவன் இப்போது சமுத்திரக்கரையிலிருக்கின்ற செந்திற் பதியை அடைந்து ஒரு தூதனைநம்மிடத்திற்கு அனுப்பினன். அவன் நம்மை மதியாமற்பேசி அனேகம்சேனைகளுடன் சேனைத்தலைவர்களை நிர்முலப்படுத்தினனமையுமன்றி எமது திருக்குமாரனையும் கொன்று போயினான். இவைகளனைத்தையும் நீங்கள் நன்கு ஆராய்ந்து மேல் நடத்தவேண்டிய காரியமொன்றை எமக்குத் துரிதமாகக் குறிக்கக்க டவீர்களெனச் சொல்லினன். அப்போது மந்திரிமுதலானவர்கள் தனித்தனி பின்வருமாறு பேசத்தொடங்கினர்.

எமது அரசனே! தாருகனையும் கிரவுஞ்சனையும் கணப்போதில் நாசம் செய்த வீரனைப்பாலன் பாலன் எனச்சொல்லுவதும் அவனு க்கு உதவியாக வந்திருக்கும் வலியதுணைவர்களைப் பைசாசங்களெ ன்று இகழ்வதும் விசாலித்த சமுத்திரத்தைச் சுலபமாகத்தாண்டி அளவற்ற காவலையுடைய இப்பட்டணத்தைத் தீரனாய்த் தனி நின்று அவுணவீரர்களைக் கொன்றதன்றி உமது ஆசைக்குமாரனையும் கொன் றுபோனவனை அபலனாகிய தூதனென மதிப்பதும் பேரறிவினருக் குஅழகோ? ஆதியில் எப்போது தேவரீருக்கு ஓர்வித்தியாசம் தெ ன்பட்டதோ அப்போதே காலதாமதமின்றி அப்பால சுப்பிரமணி யன் பேரில் எதிர்த்துப்போய்ச் சண்டைகொடுத்து வாட்டித்துரத்தி யிருப்பீராகில் இத்தகையநஷ்டமும் அவமானமும்நேர்ந்திருக்குமோ? மகைஸ்வரியமயதையினால் அக்காலத்திற் செய்யவேண்டிய காரி யங்களை முடிக்காமல் மறந்திருந்ததினால் இவ்விதம் நமக்கு நேர்ந்துவி ட்டது. நூற்றெட்டு யுகங்களாய் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் ஏகசக்கிரமாய் ஆளப்பட்டதீரனே! இந்திரஞாலத்தேரையும் யாளிவா கனத்தையும்கொண்டகெம்பீரனே! சலனமற்றதனுசையும் அக்ஷயதூ ணியையும் வேற்றிகொண்டல்லது மீளாதபாணங்களையும் பரமசிவக டாக்ஷத்தினாற் பெற்ற உமது இன்னும் அளவுபடாத பெருமைகளை

பெல்லாம் ஒருவராற்கணித்துரைக்கக் கூடியதோ? அப்படியிருக்கப் பச்சைப்பாலனையும் அவன்பிடித்த தூதன் வீரங்களையும் நீர் ஒருபொருட்டாக நினைந்து மயங்கி இவ்வளவுதூரம் யோசிக்கக்கூடியதோ! தேவரீர் அப்பிள்ளையை எதிரிபாகக் கொண்டு போர்புரியப்போதல் உமது சூரத்தன்மைக்கு அழகன்று. ஆதலால் இப்போதே எங்களில் ஒருவரைச்செலுத்தி அவர்களை வெற்றிகொண்டு நீர் களித்திருக்கக் கடவீரெனச்சொல்லினர்.

அப்போது மகா வீரதீரனாகிய சிங்கமுகாசுரன் தன் தமயனைப் பார்த்து ஓ! இராஜபரமேஸ்வரனே! இவர்களெல்லாரும் தங்களுக்கு இருக்கின்ற வீரங்களையும் வலியையும் விஜயங்களையும் சொன்னார்களே அன்றி உமக்கு இந்த அரசு நிலைபெற்றிருக்கும்படிக்கான காரணங்களை அறிந்து தெரிவித்தவரில்லை. தேவரீர் அடியேன் பேரிற் கோபியாது கேட்டருள் வீராக! இந்திரன் முதலிய விண்ணவரைச் சமுத்திரத்தின் மகரமச்சங்களைப் பிடித்துச் சுமந்துவந்து நீர் ஒருவரன்றிப் பற்பலருக்கும்தினம்கொடுத்து வரும்படிக்குக்கட்டளையிட்டீர். அப்பாதகங்கள் வீணிற்போவதோ?சற்புக்கரசியாகிய இந்திராணியை இச்சித்துக்கொடிய இராக்ஷதர் பலரை ஏவியகாரணத்தினால் இந்திரன் அவனுடன் தன்பதியை இழந்து ஓடி ஒளிக்கச்செய்தீர். இவையுமன்றிப் பொன்னுலகை அக்கினிதேவனுக்கு இரையாக்கிச் சிரழித்து அவன் பிள்ளை சயந்தனையும் தேவர்களையும் அரியசிறையில் வைக்கச்செய்தீர். தேவர்கள் பரமனைக்குறித்து இக்காரணங்களை முறையிட்டுக் கொண்டதினால் இப்படிப்பட்ட துன்பங்கள் நமக்கு வந்து சேர்ந்தன. பின்னால் இன்னும் கெடுதி சம்பவிக்கும் என்பதை நீர் செல்வச்செருக்கினால் மறந்து பித்தனைப்போலத் திகைக்கின்றீர். ஆதியில் பரமசிவன் இந்தச்செல்வங்களை நூற்றெட்டு யுகங்கள் அநுபவித்திருக்கும்படிக்கு வரம்கொடுத் திருக்கின்றார். அத்தவணை இதுவரை முடிந்தது. விதிவலியினால் நீர் அதனைமறந்தீர். இதன்றியும் பரமசிவம் உங்களை யாவரும் வெல்லமாட்டார்கள் என்றும் நமது சத்தியானது உங்களைக்கண்டித்துவிடுமெனவும் கடாக்ஷித்தருளியிருக்கின்றாரே? அதற்குத் திருஷ்டாந்தம் தாருகனிற் கண்டுகொள்ளும். அரசனே! இவைகளையெல்லாம் தீர்க்கமாயோசித்து இப்போதாவது தீனராகிய தேவ

ர்களைச் சிறையில் நின்றும் நீக்கிவிடுவீராகில் குமாரதேவர் உம்மீது சண்டைகொடுக்க வரநினைக்க மாட்டார். இல்லையானால் அவர் துரிதமாக அவுணப்பூண்டில்லாமற் களைந்து நம்மையும் வெற்றிவேலினாற் பிளந்து கொல்வது நிச்சயம். ஆகையால் நீர் சீக்கிரம் பிழைக்கும்மார்க்கத்தைத் தேடிக்கொள்ளக் கடவீரெனச் சிங்கமுகன் சொன்ன வசனங்கள் சூரன் செவிகளிற் சுறுக்கிடப்பட்ட மாத்திரத்தில் அவன் அடா! தம்பீ! நல்லயோசனைகளைக் குறித்துக் காட்டினை! வெகு நேர்த்தியாக இருக்கின்றது. இந்தப் பஞ்சைகளுக்குப் பயந்து உனக்கு இந்த ஏழைமதி கிடைத்தவாறென்ன அதிசயம்? பரமசிவம் நமது சம்பத்துக்களுக்கு அழிவு வருமென்று குறித்ததையும் சத்திப்படையானது நம்மை வெல்லுமெனச்சொன்னவாக்கியத்தையும் நான் கேட்டதே இல்லாதிருக்க உனக்கு மட்டும் தனித்துக் காட்டினாரோ? இப்படிப் பயந்தவனென்று முன்னம் தெரிந்திருந்தால் அப்போதே உன்னை இச்சபைக்கு அழைத்திருக்கமாட்டேன். ஆதலால் நீ துரிதமாய் உன்பட்டணம் சேர்ந்து மூலைவீட்டில் ஒளித்துக்கொண்டிரு. நான் இதோ அப்பாலன் முதலியவர்களை ஒரு கணப்பொழுதிற் செயித்து வெற்றிக்கொடியோடு மீளக்கடவேனெனச் சூரன் பலவிதங்களிலும் அவனை அவமதித்து அவன் வாசகங்களைக்கேளாமல் தான் கொண்டதே கொள்கையாகப் பேசியகாலத்திற் சிங்கமுகன் இதனைநினைக்கின்றான். தமயனுக்கு நாம் பிழைக்கும் உறுதிகளைச் சொன்னோம். ஆனால் விதியை வெல்ல யாராலாகும்? வேம்பு எட்டி இம்மரங்களுக்குத் தேனையும் பாலையும் கலந்துவிட்டு வளர்க்கினும் அவைகளின் சுபாவமாகிய கசப்பு நீங்குதலில்லை. ஆதலால் இனிநாமும் இவருக்கு முன்னமே குமாரதேவர் வெற்றிவேலினால் மாளக்கடவோமெனத் தீர்மானித்தவனாய்ச் சீக்கிரத்தில் எழுந்து சூரன் பாதாரவிந்தங்களில் வீழ்ந்து சேவித்து அவன் கோபந் தணியும்படிக்குப் பின்வருமாறு கூறுவதாயினான். அண்ணா! அடியேன்மீது கோபங்கொள்ளவேண்டாம். சிறியேனாதலால் ஏதோதெரியாத புத்தியினாற் சிலகருமங்களைச் சொல்லிவிட்டேன். அக்குற்றங்களைப் பொறுத்து இரட்சிக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்ட காலையிற் சூரன் மனம்பூரித்துத்தம்பியைத் தழுவிக்கொண்டு இதனைச் சொல்வதாயினன். அப்பனே! நீ சீக்கிரம் உன்பதியைச் சேர்ந்து சகலசதுரங்கசேனைப் பெருந்

குகளையும் அழைப்பித்துக் கொண்டு விஜயத்துடன் களித்திருக்கக்க டவாய். ஒருவாறு சிவகுமாரன் சண்டையைக்குறித்து இவ்விடம் சீக்கிரம் வருவான் போலிருக்கிறதென்று அவனுக்குச் செலவுகொடுத் தனுப்பித் தான்சபையைக் கலைத்து அரமனையைச்சேர்ந்து இந்திர போகத்திலும் மேலான செல்வங்களை அனுபவித்திருந்தனன். இவை நிற்க இனித்திருச் செந்திற்பதியில் எழுந்தருளி இருக்கும் நம்சரவணபவன் நடத்திய செயல்களை உரைப்பாம்.

## 3 வது மகேந்திர காண்டம் முற்றிற்று.

———(0)———

உ

வெற்றிவேலுற்ற துணை.

## 4. வது உயுத்தகாண்டம்.

விருத்தம்.

நாரணனென்றுந் தேவு
நான்முகத்தவனு முக்கட்
பூரணன் றானுமாகிப்
புவிபடைத் தளித்துமாற்றி

யாரணமுடிவுந் தேரு
வனாதியாயுயிர் கட்கெல்லாங்
காரணனாய மேலோன்
கழலினைக்கருத்துள் வைப்பாம்.

வீரவாகுதேவர் சூரபதுமனைக்கண்டு வார்த்தையாடித் திரும்பி வந்து பாலசுப்பிரமணியக் கடவுளைச் சேவித்து அவுணராஜன் கருத்தைத்தெரிவித்தவுடன் மறுநாட்காலையில் அவுணர் பூண்டைவேரறக் களைவதாகச்சிவகுமாரன் வாயுதேவனாற்கொண்டுவந்து நிறுத்தப்பட்ட இரதத்தின்பேரிற் சகலதேவரும் புடைசூழ வந்தமர்ந்து அவர்கள் எல்லாரையும் தங்கள் தங்கள் வாகனங்களில் ஏறிவரத்திருவாய்மலர்ந்து தாம் சூரன்பட்டணத்தை நோக்கிப் பிரயாணமாயினர். இவ்வித

மாகத் துணைவர் தேவர்கள் சேனைசமுத்திரமுதலாகச் சூழ்ந்து போற்ற நடுநாயகமாய்க் குமாரதேவர் அவர்களுக்கு மத்தியிற் போவதை வானத்தில் நெருங்கியிருந்த தேவர்கள் கண்டு அளவில்லாத ஸந்தோஷத்தினால் ஆடிப்பாடிப் பஞ்சதருக்களினது புஷ்பங்களை வாரி வாரி ஜெய ஜெயவென்னும் ஓசையெழ இடைவிடாது தேவசேனாபதி யின் பேரிற் சொரிந்தனர். அளவில் அடங்காத பெருமைகளுடன் அனைவரும் சமுத்திரக்கரையைச் சேர்ந்தவுடன் சேனைகளான வைகள் சமுத்திரத்தை ஒரு பொருட் படுத்தாமல் அதில் நடத்துபோவதாயின. பாலசுப்பிர மணியக்கடவுளானவர் வானவழிக்கொண்டு போவதாயினர். இவ்விதம் சொல்லும்போது சூரபதுமன் வாசஞ்செய்யும் மயேந்திரபுரியை அங்கு அருகிற்கண்டு மகாவிஷ்ணு முதலானவர்கள் சுப்பிரமணியக் கடவுளைப்போற்றி இதை விண்ணப்பம்செய்வதாயினர் கர்த்தனே! அதோ சுவர்னமயமாய் விளங்கும் பட்டணத்திற் பாதகர் வாசம் செய்திருப்பதால் நாம் அருகிற் சேராமல் இவ்விடத்தில் தானே பாசறை உண்டாக்கி அதிலிருந்து மேல் நடக்கவேண்டிய காரியங்களுக்குத்தகுந்த யோசனை செய்யவேண்டுமென்று விண்ணப்பிக்கக் குமாரதேவர் உத்தமமென்று பக்கத்தில்வரும் சிற்பியைப்பார்த்து அவ்விடத்தில் விசாலமாகிய பாசறையை விரைவிற் சிருஷ்டிக்கக்கடவாயெனக்கட்டளையிட்ட மாத்திரத்தில் தேவதச்சனானவன் வேண்டிய சகலசௌகரியங்களுடன் சிருஷ்டித்து முடித்து அதற்கு எமகூடமெனப் பெயருமிட்டுக் கர்த்தனைவணங்கி நிற்கச்சிவகுமாரன் பிரமன்விஷ்ணு முதலானவர்கள் சூழ்ந்துவர அந்தப்படைவீட்டைசேர்ந்து இரதத்தை விட்டிறங்கி உள்ளே பிரவேசித்து அதன் வளப்பங்களுக்கு ஸந்தோஷமுற்றுச் சிற்பியின் வல்லபத்திற்கு மெச்சிஅவன்மீது கிருபாநோக்கம் பரப்பிப்பூத வெள்ளங்களை அவ்வவர்கள் சாலைகளிற் போகும்படி செலவுகொடுத்துத்தமக்கு ஏற்படுத்தியிருக்கின்ற சொர்னத்திருமாளிகையிற் போய்ச் சிம்மாசனத்தில் வீற்றிருந்தனர். மற்றத்தேவர்கள் நெருங்கிப் போற்றி அக்கடவுளுக்குப் பணிவிடைகள் செய்திருந்தார்கள்.

இப்படியிருக்க, நாரதமுனிவரானவர் சகலவைபவங்களுடன் சபாமண்டபத்தில் வீற்றிருக்கும் சூரபதுமனிடம்போய் அவனுக்கு

அளவற்ற ஆசிகள் கூறிநிற்க, அதுகண்டு அவன் அவரைநோக்கி விருத்தனுயிருக்கப்பட்ட நீ யாவன் எனக்கேட்க மகாமுனிவர் என்பெயர் நாரதனெனச் சொல்லுவார்கள். இப்போது ஒரு காரணத்தைக் கண்டபடியால் அவசியம் அதைத் தேவரீருக்குத் தெரிவிக்கத் துரிதப்பட்டு வந்தனன். அஃதென்னவெனில், தேவர்கள்சூழச்சிவபிரான் அருளிய குமாரதேவன் சமுத்திரத்தைக் கடந்து இப்பட்டணத்தின் வடபாரிசத்தில் வந்து பாசறையிந்தி ஒன்று அமைந்து அதில்தங்கி இருக்கின்றனன். தேவரீர் அவர்களை அவ்விடம் விட்டுத்துரத்தும்படி கேட்டுக் கொள்ளுகிறேனென்று சொன்ன மாத்திரத்திற் சூரபதுமன் ஆலத்தைப்போற் சிறிப்பற்களைக்கடித்து அனலெழநகைத்து இதனைப்பேசுவதாயினன். ஆயிரத்தெட் டண்டங்களையும் வென்றுரணரங்கசூரனுகிய நாம்வாசம் செய்திருக்கின்ற பலகாவல்களையுடைய இப்பட்டணத்தின் பேரில் ஒருபாலனே போருக்குவருபவன்! அவனையும் அவனுக்கு உதவியாக வந்தவர்களையும் நமது வீராகிவீரனுகிய புத்திரன்பானு கோபனைக்கொண்டு சின்னபின்னப்படக் கொல்லுவிப்பன்! அதை நீயேபார்க்கப் போகின்றுயென்று அவுணருக்கரசன் கோபித்துச்சொல்ல நாரதர்கேட்டுத் தேவரீர் சீக்கிரம் கந்தனைவாட்டிச் சவுக்கியத்திலிருமென்று வெளிக்கு ஆசிகூறினவராய்த்தமது இருப்பிடம் சென்றுர். சூரன், பக்கத்தில் நின்ற தூதுவரைநோக்கிக்கடற் றிறைவனை இக்ஷணம் இங்கு கொணர்வீரெனக் கட்டளையிட்டவுடன் அவர்கள் ஓடிச் சமுத்திரராஜனை இழுத்துவந்து சூரன் முன்விட்டார்கள். சூரன் அவனை உக்கிரமாகப் பார்த்துக் கடற்றிறைவனே! நீநமது கட்டளைக்கு அடங்கி நடப்பவனுகக் காணப்படவில்லை. நம்முடைய பேரில் எதிர்த்து வந்த சிவகுமாரனைப் பூதப்படைகளுடன் இப்பட்டணத்திற்கு வரும்படி வழிவிட்டு உறங்கிக் கிடந்தனையோவெனச் சீறிக்கேட்டகாலத்திற் சமுத்திரராஜன் திகிற்பட்டு வாய்புதைத்து இராஜாதிராஜனே! தேவரீர் குறித்த சுப்பிரமணியன் மகாவிஷ்ணு முதலான தேவர்களுடன் ககனமார்க்கமாய் வந்தனன். பூதவெள்ளங்களும் சேனைத்தலைவர்களும் என்மூலமாகத்தான் சென்றபோதிலும் நான் அவர்கள் பாதங்களின் வலிக்கு ஆற்றுமற் போனேனென்று சொல்லிப்பயந்து நிற்கும் போது சிலதூதர் ஓடிவந்து இராஜாதிராஜனே! விஷ்ணுபிரமன் இந்திரன் முதலான தேவர்கள் நவவீரர்கள் இலக்ஷசர்கள் சேனைத்தலைவர்

கள் இரண்டாயிரவெள்ளப் பூதப்படைகள் சூழச்சிவகுமாரன் வந்துதங்கி இருப்பதை யாங்கள் கண்களாரக்கண்டு வந்தோமென்று சொல்லினர்.

## முதல் நாள் பானுகோபன் யுத்தம்.

அதைக்கேட்ட சூரபதுமனனவன் வடவைவையைப்போற் சீறிச்சரவணபவன் வீருப்பை இந்நிமிஷம் அடக்குகிறேனென்று தூதுவரை நோக்கித்துரிமாய்ப் பானுகோபனை அழைத்து வருவீரெனக் கட்டளையிட அவர்களோடி அவன்பாகத்தில் வணங்கித் தெரிவித்த மாத்திரத்திற் பானுகோபன் பிரயாணப்பட்டுத்தன் பிதாவினிடம் வந்து அடியேனைவருவித்த காரணம்என்ன வென்றுபணிந்து கேட்கச் சக்கிரவர்த்தியானவன் பிள்ளையை அருகில் அழைத்துத் தழுவிக் கொண்டு நீஉன்சேனைகளைக் கூட்டிக்கொண்டு துரிதமாகப்போய் நமது பட்டணத்தின் வடபாரிசத்திற் பாசறைகட்டி அதில் விஷ்ணுவாதி தேவர்களுடன் சண்டைக்குவந்து பூதப்படைகளுடன் தங்கி இருக்கும் சிவகுமாரனாகிய சரவணபவனை மடக்கிச்சாடி வெற்றிகொண்டு மீளக்கடவாயென்று கட்டளையிட்டவுடனே பானுகோபன் பாலசுப்பிரமணியனை நான்திசைத்தோடும்படிக்குச்சாடி மந்திராலோசனைத்து உரியவராய் அங்கு அமர்ந்திருக்கும் மகாவிஷ்ணுவையும் பிரமனையும் தேவரீருக்குப்பயந்து ஒளிந்திருக்கும் இந்திரக்கள்வனையும் பாசக்காற்கட்டி வந்துஉமது சந்நிதானத்தில் அவர்கட்குத்தக்க தண்டனை செய்யும்படிக்குக் கொண்டு வரக்கடவேனென்று வருதிபெற்றுத் தன் அரமனைக்குச்சென்று சண்டைக்குச்சகல சயினியங்களும் தலைவர் சகிதம் சன்னத்தப்பட்டிருக்கும்படி கட்டளையிட்டுத்தான் ஆயுதசாலைபுட்புகுந்து போர்க்கோலங்கொண்டு வீரலெட்சுமியைத் தொழுது வெளிப்பட்டு அண்டங்குலுங்க ஆர்ப்பரிக்குஞ் சேனை வெள்ளங்களைக் கண்டு ஸந்தோஷித்துத் தான் தன் இரதத்திலேறி உட்கார்ந்து அதைத்துரிதமாய்ச் சிவகுமாரன் இருக்குமிடத்திற் சேர்க்கக்கடவாயெனச் சாரதிக்கு கட்டளையிட்டவுடன் அவன்செலுத்த இரதமோடும் அதிர்ச்சியைக் கேட்ட சூரியன்திடுக்கிட்டு இன்னும் நமக்கு என்ன கேடுவிளையுமோ வெனமயங்கி இருக்கின்றபொழுது அளவற்ற வெள்ளம் இரதகஜதுரகபதாதிகள்சூழப்பானு கோபனனவன் வீராவேச

த்துடன்வரும் சிறப்பைப்பார்த்த நாரதரானவர் அதிசீக்கிரத்திற் குமாரதேவரை விழிகளிக்கத்தெரிசித்து அவர் திருவடிகளிற் பணிந் தெழுந்து புகழ்ந்துபோற்றி விண்ணப்பம் செய்வதாயினர். கர்த்தனே! தேவரீர் இவ்விடம் சேர்ந்து தங்கியிருப்பதைத் தூதுவர்மூலம் சூர பதுமன் தெரிந்து தன் மூத்தபிள்ளையாகிய பானுகோபனை யுத்தசன்ன த்தனுப் அனுப்ப அவன் இதோ விரிவருகின்றான். இவனை வெல்வது அரிது. தேவரீரே சற்று வருத்தமெடுத்துக் கொண்டு வெற்றிகொ ள்வது நன்மையாகும் எனப்பணிந்தனர். பாலசுப்பிரமணிய தேவர் சிறுநகை கொண்டவராய் வாளாயுதத்தைக் கரத்திற் கொண்டு கா த்திருக்கும் வீரவாகுதேவரைக் கிருபையாகப் பார்த்தருளி நீ உன் சகோதரர் எண்மர் இலட்சருடன் ஆயிரவெள்ளம் பூதப்படைகளு டன் போய் மயேந்திரகிரியை முற்றுகைபோட்டுக் கோட்டைமதிள் உறுப்புக்கள் கோபுரங்கள் மாடமாளிகை முதலிய அனைத்தையும் துகள்பட இடித்து நாசஞ்செய்யக்கடவாய். அக்காலத்திற் சூரன் புத் திரன் எதிர்த்து வருவானாகில் நீ சீரனைய் விளைத்து அவனை வெற்றி கொள்ளக்கடவாயெனக்கட்டளையிட்டனுப்பினர். அப்படியே தேவர், அவர்கள் அனைவருடன் சென்று கோட்டைமதிளைக் கிட்டினவுடன் பானுகோபனுடன் வந்த சதுரங்க சேனைகளும் நாற்புறங்களினும் சூழ்ந்து கொண்டு சர்வாயுதங்களையும் கரவேகமாகத் தூண்டிப்பூத வீரர்களின் பேரிற் சிறிவித்து நாசப்படுத்தினார்கள். அக்காலையிற் பூதர்கள் மராமரங்களையும் பருவதங்களையும் பறித்துப்பந்துகளைப்போ லவீசி அவுணச்சேனைகளை மடித்தார்கள். அனலனென்னும் இராட்சதச் சேனைத்தலைவன் கோபமுற்றுத் தனதுவில்லில் அக்கினி யாஸ்திரத் தைத் தொடுத்து பிரயோகித்துப் பூதப்படைகளை வாட்டிவதைக்க க்கண்ட இலட்சர்களில்ஒருவனாகிய சிங்கனென்னும் வீரன்கோபமுற் றுத்தண்டாயுதமொன்றைச் சுழற்றி அவனை மோதிச்சாடிய காலையில் இராட்சதவீரன் அவ்வீரனைத் திவ்பாஸ்திரங்களினால் அதிகாயப்ப டுத்த அவன் சலியாமற் பாதகன் தேரிற்பாய்ந்து அவனது ஒருகரத் தைத்திருகி முறித்தெறிந்தான். அவுணவீரன் மற்றொருகரத்திற் கதை கொண்டு சிங்கன் சிரத்தில் மோதினான். பூதசேனாபதி தண்டம் கொ ண்டிருக்கும் அவன் கரத்தைப்பற்றி இழுத்துக் கிறுகிறெனச் சுழற்றி அப்பாதகன் வீறுப்பனைத்தும் குறைத்துக்கடைசியில் அவனை ஓங்கி ப்பூமியில் அறைந்து கொன்றனன்.

அதைக்கண்ட சண்டனென்னும் அவுணவீரன் கோபித்துச்சிங்கன் பேரிற் பாணங்களை விடுத்துவர அவன் இறந்துகிடக்கும்அனலிகரத்தின் தண்டத்தைப்பிடுங்கிக்கொண்டு அவ்வீரன்தேரிற்பாய்ந்து அவன்தோளிற் சாடினன். அத்தாக்கலைச் சகிக்கமாட்டாதவனுய்ச் சாய்பவன் தண்டத்தாற் சிங்கன்மார்பிலும்மோத இருவீரரும் மூர்ச்சித்து வீழ்ந்தனர்.

அதைக்கண்டு முடுகிவரும் மாயனென்னும் அவுணவீரனைப் பூதத்தலைவனுகிய நீலன்கண்டு அவனுடன் பலவிதங்களிற் போராடிக் கடைசியில் அவனை மிஞ்சி அவன்கண்டத்தினைக் கடித்துப்பெருகும் உதிரத்தைக்குடித்து அவன் உயிரைப் போக்கினன்.

முன் மூர்ச்சித்திருந்த இருவீரரும் தெளிந்தெழுந்து பிரமாதப் போராட்டஞ்செய்து கடைசியிற் சிங்கனுல் அவுணவீரனுகிய சண்டன் மாண்டான்.

அதுகண்ட அசமுகனென்னும் இராக்கதவீரன் சிங்கன் மீதில்உருத்துவருவதை மதுவென்னும் பூதத்தலைவன் கண்டு அவனை எதிரில் மறித்து நில்லென்று கோபித்துப்பேசுவதை அசமுகன்கேட்டுவிழிகளில் தீப்பறக்கப் பூதத்தலைவன் பேரில் அதிக்கிரமித்துக்கொடிய பாணங்களை அபரிமிதமாகச் செலுத்தினன். பூதத்தலைவன் நகைத்து அதனைச் சட்டைபண்ணுமல் அப்பாணங்கள் தன் சரீரமுற்றும் பட்டு உதிரவெள்ளம் பெருக்கெடுத்தோட நின்ற விடத்தினின்றும் இராட்சத வீரன் ஏறியிருக்கின்ற தேரிற்பாய்ந்து நின்று கர்ச்சித்த மாத்திரத்தில் இராட்சதவீரன் திடுக்கிட்டு நிலைதப்பிக்கரத்திற் பற்றிய வில்லையும் நழுவவிட்டுக் கிலேசித்திருப்பதைப் பூதத்தலைவன் கண்டு அடா! இராட்சதப்பயலே! நமது கர்ச்சனைக்கு ஆற்றுதவனே என்னுடன் யுத்தம் புரியவல்லவன்? உன்னை நான் ஒன்றும் செய்யவில்லையெனத்தேரை விட்டு நிலத்திற் பாய்ந்தனன். இராட்சதவீரன் வெட்கமுற்று நான் உயிரைவளர்த் திருப்பதினும் இவனுடன் போராடிவென்றுவது மாண்டாவது அபவாதத்தைத் தீர்த்துக்கொள்ளக் கடவேனென்று ஆலத்தைப்போற்சீறிவில்லிற் கடூரமாகிய பாணங்களைத் தொடுத்துப் பூதவீரன்மேற் பிரயோகித்துச் சிருங்கநாதம் செய்

தான். இதனைமதுவென்னும் வீரன்கண்டு அவனுடன்பலவிதங்களிற் போராடி நிற்கக் கடைசியில் அவுணவீரன் நாராயணாஸ்திரத்தையே விஞன். அவ்வஸ்திரம கிட்டிவந்து பூதத்தலைவன் நிராயுதனயும் சிவபத்தனயும் இருப்பதைப் பார்த்து அவனை விட்டுத் திரும்பித் தன்னை விட்ட இராட்சதப் பாதகன் சிரத்தைக் கண்டித்துத் தள்ளி விஷ்ணுவினிடத்திற் சேர்ந்தது.

இந்தச்சம்பவத்தைக் கண்ட இராட்சதச்சேனைகள் கலக்கமுற்று இப்படிச்சண்டை செய்யவல்ல வீரர் இனியாவர் இருக்கின்றனர் என்று புலம்பி வாடினர். பூதப்படையின் ஜெயிப்பையும் தேவர்கள் செருக்கையும் இராட்சதப்படைகள் சஞ்சலங்களையும் கண்டு அவுணவீரர் தங்கள் சேனைசமூகத் தபிரியங்களைக் கூறிப்பூதச்சேனைகளை வளைத்துப்பாணங்களை அமோகமாய் விட்டு அவர்களை நாசஞ்செய்தபோது அவர்கள் சகிக்கக்கூடாமல் திசைகளெங்கும் பறந்தோடி ஒளிக்கத்தொடங்கினர். இதை இலட்சர்களில் ஒருவனகிய தண்டகனென்னும் வீரன் கண்டு நம்மவர்கள் இப்பாடுபடுவதோவென்று சிறித்தனது வில்லிற் கணக்கிறந்த கூரேப்பாணவிதங்களைப் பிரயோகித்துச் சாடும்போது இராட்சதசேனைகளும் சின்னபின்னப்பட்டு மானத்தையும் வீரத்தையும பறிகொடுத்துத் திசாதிசைகளினும் பருவதச்சாரல்களிலும் ஓடிப்பதுங்கினர்.

வீராதிவீரனகிய பானுகோபன் இதைக்கண்டு வடவையைப்போற் கொதித்து இதனைச்சொல்லுகின்ருன். நம்பட்டணத்தைவிட்டுப் புறப்படும்போது இரதகஜதுரக பதாதிகள் இருபதினுயிரம் வெள்ளங்களுடன் வந்தோம் இப்போது நம்மைச்சூழ்ந்திருக்கின்றவர்களைப்பார்க்குமிடத்தில் ஆயிரம் வெள்ளம் சேனைகளிருக்கும்போலிருக்கிறது. இனிநானே பகைவர்களை வாட்டிக்கொல்வேன். இந்த வெற்றியைப் பெருமற்போவேனேயாகில் நான்சூரபதுமன் குமாரனுகமாட்டேனெனச் சபதம்பேசித்தனது வெற்றிவில்லிற் கொடூரமாகிய பல பாணங்களை ஊழிமேகங்கள் ஒன்றுபட்டுவருஷிப்பதைப் போலப்பிரயோகிக்கத் தலைப்பட்டான். பூதப்படைகள் பருவதங்களையும் மராமரங்களையும் பறித்துச்சாடி ஆர்ப்பரித்து மேலிட்டுவருகின்ற அவன் பாணப்பெருக்கைத்தடுத்து ஊங்காரிப்பதைப் பானுகோபன்

கண்டு தனது ஒப்பற்றவில்லின் வலிமையினாலும் புஜபலத்தினாலும் பூதச்சேனைகளை முற்றிலும் அல்லோலகல்லோலப்பட அதப்படுத்த அவர்கள் சகியாதவர்களாய் நிலைகுலைவதை உக்கிரசேனனென்னும் படைத்தலைவன் கண்டு பூதகணங்களைப் பயப்படாதீர்களெனக்கை யமர்த்தி அதிவேகமாய்ப் பாரித்ததண்டமொன்றைத்தன் கரத்திற் கொண்டு போர்க்களத்தை நோக்கிவருவதைப் பானுகோபன்கண்டு தனது வில்லில் ஆயிரக்கோடி பாணங்களைச் சந்தித்துவிட்டு வருகின்றவன் தேகம் தெரியாமல் மறைத்துச் சிருங்கனுதஞ்செய்தான். அவைகள் உக்கிரசேனன்மேல் தாக்கித் துளைக்கச்சக்தி யில்லாமல் முனை மழுங்கிக் கிழேவிழுந்தன பாணங்கள் பயன்படாமல் மழுங்கியதைப் பானுகோபன் கண்டு அவ்வீரனை மெச்சி மழுவாயுதத்தைப் பிரயோகம்பண்ணினான். அதை உக்கிரசேனன் தனது கதையினால் துகள்பட்த்தாக்கி உடனே பானுகோபன் தேரின்பேரிற் குதித்துக் குதிரைப்பந்திகளைக் கொன்று திரும்பினன். பானுகோபன் ஒருபாணத்தால் உக்கிரசேனன் தண்டத்தைப் பொடிசெய்தான். உக்கிரசேனன் பானுகோபன்இரதத்தைவாரிவானத்தில் வீசினான். இரதமானது திரும்பிப் பூமிக்கு அடுத்து வருங்காற் பானுகோபன் அதினின்றுங் கீழேகுதித்து உக்கிரசேனனை வாரிமேலே வீசிப்பிரமதேவரிடம் தான்பெற்ற வேலை அவன்பேரிற் பிரயோகம்பண்ணினான். அது உக்கிரசேனன் மார்பில்தாக்கி உருவியோடிய அளவில் அவன் நிலத்தில் விழுந்து களைத்தனன்.

இச்சம்பவத்தைக்கண்ட தண்டி என்னும் பூதப்படைத்தலைவன் பானுகோபன் மீதில் வந்தெதிர்த்துப் பலவிதப் போராட்டங்கள் செய்து கடைசியில் அவனுடைய பாணத்தால் திகைத்து அசைவற்று நின்று விட்டனன்.

பினாகியென்னும் பூதநாயகன் சிறிப்பருவதமொன்றைப் பறித்துவீசுமுன் பானுகோபன் அவன் மார்பைப் பாணங்களாற் சல்லடைக்கண்களாகத் துளைத்தனன். இதைக்கண்ட பூதசேனைத்தலைவவர்கள் சிறிப்போராடிய சமயத்திற் பானுகோபன் தன்வில்லானது ஏககாலத்தில் இருகுதைகளும் ஒன்றுபட்டிருக்கும் படிக்குக்கரவேக

மாய்க் கொடியகணைகளைச் சோனைமாரிபோற் சொரிந்துசாடி அவர்களைப் பின்னிடைக் தோடும்படி துரத்தினன்.

அதுகண்டு மிகவலியுடைய இலட்சர்கள் இரவுத்திராகாரமாகக் கோபித்துக் கொடியபாணங்களை ஏராளமாகச் சொரிந்தனர்: பானுகோபன் அவைகளை யெல்லாம் கண்டித்து நூறுநூறுயிரம் பாணப் பெருக்கையேவி அவர்களனைவோர்களையும் சல்லடைக் கண்களாகத் துளைக்க அவர்கள் எதிர் நிற்கமாட்டாமற் பின்னிடைந்தனர். இத்தகைய பானுகோபனுடைய திறத்தினை யாவரால் எடுத்துரைக்கக் கூடும்!

பின் நவவீரர்களில் ஒருவனாகிய வீரகோளரி என்பவன் வெகுண்டு கணக்கிறந்த பாணங்களை விட அவைகள் பானுகோபன் மார்பில்தைத்து உருவிப்போக அவன் சற்று வருந்தித் தேறி நாராயணாஸ்திரத்தை யெடுத்து விட்டனன் அதுவேகமாய் வந்து வீரகோளரி மார்பில் தாக்கிப் பிராணச்சேதமில்லாமல் அவனை மூர்ச்சையாகக் கிடத்திப் போய்விட்டது.

இவ்விதம் தன் துணைவனுக்கு நேர்ந்த அபாயத்தை வீரமார்த்தாண்டன் கண்டு பகைவன் முன்தேரைச் செலுத்திவந்து பாணங்களைப் பிரயோகிக்குமுன் பானுகோபன் மிஞ்சிச் சரங்களையேவி வீரமார்த்தாண்டன் நெற்றியில்அழுத்தி அவன்இரதத்தையும் புரவிகளையும் கண்டித்து அவன் மார்புக்கிலக்காகப் பாணங்களை விடுத்தனன். அவை அவன்பேரில் தாக்கி முனைமழுங்கி வீழ்ந்தன. உடனே வீரமார்த்தாண்டன் கோபங்கொண்டு பானுகோபன் பேரிற் பாய்ந்து அவன் வில்லைப்பறித்து ஒடித்தெறிந்தனன். பானுகோபன் வாளை உருவி அவன் மார்பிற்குத்தினன். அவன் சட்டைபண்ணமல் தன் வாளினல் பானுகோபன் வயிரக்கவசத்தைப் பொடியாக்கினன். பானுகோபன் மீளவுந்தன்வாளினல் வீரமார்த்தாண்டன் கண்டத்தில் உருவும்படிக்குச் சொருகிவாங்கிய காலையில் அவன் செத்தவனைப்போல விழுந்தனன்.

பின் வீரராக்கதனென்பவன் வந்தெதிர்த்துப்போர்புரியக்கடையிற் பானுகோபன் வேலானது அவன் மார்பில்தாக்கிய மாத்திர

த்தில் அவன் நிலத்தில் வீழ்ந்து சோர்ந்தான். மீதமான அஞ்சுவீரர்களும் தங்கள் தங்கள் தேரைச்செலுத்தி வந்து பானுகோபனை வளைத்து அகோரமான சண்டை விளைக்கப் பானுகோபனும் கணக்கிறந்த கொடிய பாணங்களைச் செலுத்தி அவர்கள் சரீரமுற்றும் துளைத்து வாட்டியபோது அவர்களில் இருவர் செயலற்று நின்றனர். ஒருவன்மூர்ச்சித்து வீழ்ந்தனன். மற்றிருவர் பயப்பிராந்தியினால் ஓடிப்போயினர்.

இவ்விதமாகப் படைவீரர் இலட்சர் என்னமர் பூதப்படைகள் முற்றும் நிலைகுலைந்து பறக்கும்படிக்கு வெற்றிகொண்டு பானுகோபன் எதிரின்றி வீரபராக்கிரம சாலியாய் இரணகளத்தில் உலவுந் தீரத்தை நந்திகணத்தலைவராகிய வீரவாகுதேவர் தெரிந்து சிவகுமாரன் சரணாரவிந்தங்களைச் சிந்தித்துப் போர்த்தொழிலுக்கு எழுவதாக மனங்கொண்ட வராய்ச்சூரன் குமாரனிருக்கிற இடத்துக்குத் தனது தேரைச்செலுத்தி மேருவையொத்த தனுசைவளைத்து டங்கார வோசைகளைக்காட்டி வருகின்ற தீரத்தைப் பானுகோபன் பார்த்து இவனைச்சுலபமாக நினைக்கக்கூடா தென்று தனது வில்லை நாணேற்றிக் குணத்தொனிசெய்து எதிர்த்து நின்றனன், அப்போது இக்துப்பிரபலச் சண்டையைப் பார்க்கவேண்டு மென்று பிரமன் விஷ்ணு இந்திராதிதேவர்கள் ரிஷிகள் வானவெல்லை முற்றும் நெருங்கி இருந்தனர். பானுகோபன், நற்குணநற்செய்கைகளை உடையவீரவாகு தேவரைப்பார்த்து உன்னைப்பார்க்குமிடத்தில் எமதுநகரத்திற்கு முன்னதாக வந்து பலஅக்கிரமங்களைச் செய்து தப்பி ஓடிப்போனவனாகத் தோன்றுகின்றது, இப்போது சூராதி சூரனாகிய என்னிடம் யுத்தம்செய்யும்படிக்கு நீ வந்து அகப்பட்டுக் கொண்டபடியால் நான் தப்பவிடாமல் உன்னைக்கொன்று அந்தச் சுப்பிரமணியனையும் வென்று அவனைச்சேர்ந்த சகலரையும் சிறைப்படுத்திப் பாரவிலங்கிடவல்லேனென்று சபதங்கள் பேசியகாலையில் வீரவாகுதேவர் அவனைப்பார்த்து வீண்வார்த்தைகளில் ஆவதென்ன? நீ சூரனாகில் என்னோடு யுத்தம்செய்து வெல்வாயெனச் சொன்ன வளவிற்பானுகோபன் கோபங்கொண்டு பலவித சங்கையற்ற பாணங்களைப் பிரயோகம் செய்தான். அவைகளை யெல்லாம் தேவரானவர் அப்போதைக் கப்போது கண்டித்துத் தள்ளினர். இவ்விதம் ஒருவர்மீது ஒருவர்கணைகளைச் சொரிந்தும் கண்டித்தும் விழிகளுக்குப் புலப்படாமல் மறைந்

தும் மீளத்தோற்றியும் இமைப்போதிற் பற்பலவித்தைகளைக் காட்டியும் வீரங்களைப்பேசியும் உருத்துப் பார்த்தும் புஜங்களைத்தட்டியும் சூராவளியைப்போற் சுழன்று சுழன்று போரைச்செய்து வருங்காலையில் வானத்து வேடிக்கை பார்த்திருந்த தேவர்கள் ஓடி ஒளித்தனர். அப்படிக்கான கொடியபோரின் பெருக்கை எத்தகையராலும் விரித்துச் சொல்லக் கூடியதன்று.

இப்படிச்செய்து வருகின்றவேளையிற் பானுகோபன் கைமிஞ்சி வீரவாகு தேவர்கரத்திற் பற்றியிருந்தவில்லை முறித்துத் தள்ளினன். வீரவாகு தேவர் உடனே வேறேவில்லெடுத்து அதில் ஆயிரங்கோடி சரங்களைப்பூட்டி விட்டுப் பாதகன் கரத்தில் விளங்கும் தனுசைக் கண்டிக்கப் பானுகோபன் வேறேவில்லில் ஆயிரம் பாணங்களைத் தூண்டிச் சிவகுமாரன் மார்பைப்புண்படத் தாக்கியபோது அவர்சற்று வருந்தினவராய்க் கோபித்து ஏழு பாணங்களினாற் பானுகோபன் சிரத்தில் விளங்கும் வயிரமுடியைப் பொடிப் பொடியாக்கினர். அவுணவீரன் மனம் வருந்தி வேறுகிரீடம் ஒன்றைச் சிரத்திலெடுத்து வைக்கு முன்னம் வீரவாகு தேவர்மேலும் பாணங்களை வேகமாகச் செலுத்தி அவன் கவசத்தை அறுத்துத் தள்ளினர். பானுகோபன் வாளிகளையேவி வீரவாகுதேவர் நெற்றியில் உதிரம்பெருகப் பெருங் காயப் படுத்தினன். வீரவாகுதேவர் சிறிதுவருந்தி மனவுறுதியைவிடாமற் பகைவன் முகத்திற்கு ஆயிரம், புயங்கள் ஒவ்வொன்றிற்கும் தனித்தனி ஆயிரம் பாணங்கள் பிரயோகிக்க அவைகள் அசுரனுடைய அவ்வத்தானங்களிற் பட்டு உருவிப்போகவே பானுகோபன் மதி மயங்கி வில்லைச்சோரவிட்டுச் சோர்ந்து தேரில் விழுந்தனன்.

இவ்விதமாகச் சூரன் குமாரனுக்குச் சம்பவித்த கேட்டை இராட்சத வீரர்கள் கண்டவுடன் மோசம்வந்ததென வருந்தினவர்களாய்க் கோபமீறித் தங்கள் தங்கள் இரதங்களைத் துரத்தி வந்து வீரவாகு தேவரை வளைத்துக்கொண்டு பிரமாதச்சண்டை விளைக்கத் தலைப்பட்டனர். வீரவாகுதேவர் வந்தநால்வகைச் சேனைகளையும் படைத்தலைவர்களையும் அதப்படுத்தி யுத்தபூமியில் ஒருவரையுங் காணக்கூடாத விதமாய்ச் சங்கரித்துத்தாம் ஒருவர் மட்டும் திரிந்தனர். முன் ஒழிந்திருந்த பூதப்படைகள் இதைக்கண்ட மாத்திரத்திற் சந்தோஷித்து

இனிநமது இறைவனைச் சேரக்கடவோமென்று ஒருவரை ஒருவர் கூவி அழைத்துக்கொண்டு களைத்திருந்த படைத்தலைவரும் எண்மருமிலட்சரும் உணர்ச்சி பெற்றெழுந்து வீரவாகு தேவரைச்சேர்ந்து களித்திருந்தனர்.

அக்காலையில் மயக்கிக்கிடந்த பானுகோபனுக்கு உணர்ச்சியுண்டாகி எழுந்து தன்னைச் சூழ்ந்திருந்த சதுரங்கசேனைப் பெருக்கைக் காணுதவனுய் வீரசிங்கத்தைப்போல் விளங்கும் வீரவாகு தேவரைக்கண்டு சூரனென்பது இந்தவீரனுக்கே அடுக்கும் மற்றவரைச்சொல்லலாகாதென அவரைக் கொண்டாடிப்பின் ஒரு நாழிகைப்போதில் இவனைக்கொல்லாமற் போவனேயாகில் நான்வாழமாட்டேன். அவுணர் குலத்தவனுமல்லேன். இவ்வில்லுடன் அக்கினிப் பிரவேசமாவேனென்று பானுகோபன் கொடியபிரதிக்கினைசெய்து ஜெயகாலியாயிருக்கின்ற வீரவாகுதேவரைவந்து எதிர்த்துப் பலவிதங்களில் இருவரும் போராடியசமயத்தில் அவுணராஜன் இவனைவில்வித்யையிற் கொல்வது கூடாதகாரியமென மதித்து முன்சிவபிரானிடம்பெற்ற மோகஸ்திரத்தை எடுத்துத் தூப தீப நைவேத்தியங்கள் கொடுத்து விட்டனன். இந்த அஸ்திரத்தின் மகிமைகளைப் பூதப்படைகள் கண்டவுடன் வாடி மூர்ச்சித்து விழ்ந்தன. வீரர்களும் தேரைவிட்டுக்கீழே விழுந்துசேர்ந்தனர். எண்மர்களும்தடுக்க வகையற்றவர்களாய்ச்சோர்ந்துவீழ்ந்தனர். வீரவாகுதேவா யாதும்தோன்ருது யோசித்திருக்கும் போது படையானது வேகமாய்ப்பாய்ந்து தேவரை உணர்வழியத் தள்ளிவிட்டது. அதைச் சூரியகாதகனுகிய வீரன்கண்டு சந்தோஷமடைந்து சகலரையும் வென்ருேமென்னும் விருப்பினல் இரணக்களத்தைச்சுற்றிவந்து சோபித்திருக்கின்ற பகைவர்களையெல்லாம் கண்டதுண்டப்படுத்தி இதுசமயம் கொல்வேனெனத் தீர்மானித்துத் தனது வில்லினின்றும் அமோகமாகிய பாணங்களைச்சொரிந்துகொடுமைகளை விளைவித்தகாலையிற் பாசமைவிட்டிற் பிரமன் விஷ்ணு இந்திரன் முதலியதேவர்கள்போற்ற விற்றிருக்கும் சரவணபவன் அதை உணர்ந்தவராய் உடனே ஒரு மோகஸ்திரத்தை உண்டுபண்ணிப் பானுகோபன்விட்ட பாணத்தின் வலிமையைப்போக்கி வருவாயெனக் கட்டளையிட்டு விட்டனர். அப்பாணமானது பலவிநோத மகிமைகளுடன் இரணக்களத்தை நெருங்கியவுடன் அசுரன் தூண்டியிருந்த மாயப்படையான

து தனக்குமோசம் நேருமென்று துரிதமாய்ச் சிவகணங்களின் எல்லையைவிட்டுத்தாண்டிப் பானுகோபனிடம்போய்ச் சேர்ந்தது. மாயைப் படையானது விலகவும் வீரவாகுதேவர் முதலினேர் தெளிவடைந்து சண்முகக்கடவுள் அனுப்பிய மோகனுஸ்திரத்தைக்கண்டு ஸந்தோஷசாகரத்தில் மூழ்கிக் கரங்களைக்கூப்பி ஆனந்தவாரிபெருக்கெடுத்தோட ஜெய ஜெய போற்றியெனத் துதித்தனர். மோகனுஸ்திரமானது திரும்பிக் குமாரசுவாமியாரிடம் போய்ச்சேர்ந்தது.

வீரவாகுதேவர் இந்தநிமிஷம் பானுகோபனைக்கொன்று கோபந்தணிவேனென்று தனக்குப் பாலசுப்பிரமணியதேவர் கொடுத்திருந்த பாசுபதாஸ்திரத்தைக் கரத்தில் எடுத்ததைச் சூரன்குமாரன்கண்டு இதனை நினைக்கின்ருன். சிவகுமாரன் செலுத்திய மோகனுஸ்திரம் வாள்வழிக் கொண்டுவந்ததையும் தம்படை ஒடிங்கித்திரும்பி விட்டதையும் நாம் கண்களாரக்கண்டனம். இனி நம்மாலாவ தென்னவென்று மனதளர்ச்சியடைந்து கோபித்துச் சண்டைகொடுப்பதை மறந்து துக்கசாகரத்தில் அழுந்திப் பின்னும் யோசிக்கின்ருன். இப்போது தூதன் பாசுபதாஸ்திரத்தைச் செலுத்துவானுகில் நம்மை அதுதடையில்லாமற்கொன்றுவிடும். அதைத்தடுத்துப்போராட நாம்சிவபிரானிடம் பெற்றபாசுபதத்தையும் யுத்தத்தைச் சுலமாபெண்ணிக் கொண்டுவராமல்வந்தோம். இவனை வேறுவகையிறற் கொல்வது அரிது. ஆகையால் துரிதமாய் நாம் நகரத்திற்குச்சென்று பாசுபதமுதலிய தெய்வப்படைகள் சகிதம்வந்து இவனை ஜெயிக்கவேண்டும். இனி இருக்கிற் கொல்லுவன் என்றுமாயமந்திர மொன்றை உச்சரித்துவானத்திற்பாய்ந்து மேகவடிவாய் மறைந்து மகேந்திரபுரியைச் சேர்ந்தனன். இதைக் கண்டு தப்பியிருந்த இராட்சதரும் ஓடிப்போனர்கள். வானத்திலிருந்த தேவர்கள் முதல்காள்ஜெயம் நமது நமது என்று வீரவாகுதேவரைப் புகழ்ந்து கொண்டாடி அவர்பேரிற் புஷ்பவருஷம் பொழிந்தார்கள்.

இவ்வெயிற்கப் பானுகோபன் மறைந்துபோனதை வீரவாகுதேவர் பார்த்துப்பாதகன் தப்பிஓடினன். இப்பவும் அவன் உயிர்தப்பிப்போனவனல்ல. நாளையே அவனைச் சமர்க்களத்திற் கொல்லர்கடவேனென்று தமதுதுணைவர் முதலிய பூதவெள்ளங்களுடன் சகலவாத்திய

ங்களும் முழங்கப் பாசறையைச் சேர்ந்து சிவசுப்பிரமணிய தேவரை நெருங்கிச் சேவித்துச்சகல சங்கதிகளையும் தெரிவித்து மற்றவீரர்களுடன் தாமும்தமது விடுதியிற்போய்ச் சேர்ந்தனர்.

மறைந்துபோன பானுகோபனென்பவன் மிகுந்ததுக்கமும் மானமும் கொண்டு தனது அரமனையில் உல்லாசங்களை வெறுத்து நித்திரையில்லாமல் வீரவாகுதேவரை வெல்லும் உபாயத்தைச் சிந்தனைசெய்திருந்தான் நடந்த விருத்தாந்தங்களைத் தூதுவர்களாற் கேள்விப்பட்ட சூரபதுமன் கோபங்கொண்டு நாளையத்தினம் நானே அவர்களைவாட்டி வெற்றிகொள்வேனென விடியும் நேரத்தை யெதிர்பார்த்திருந்தினன்.

## இரண்டாநாள் சூரபதுமன் யுத்தம்

மறுநாட்சூரன் சூரியோதயத்திற்கு முன்எழுந்து ஸ்நானமுதலிய கடன்களை முடித்து மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர்கள் சூழச்சபாமண்டபத்தில் வீற்றிருந்து தன்துகுமாரனது அபஜெயத்தையும் அதினல் உண்டான பழிப்புரையையும் எடுத்துரைத்துத்தாமே பகைவரை வெற்றி கொள்வதாகத் தூதர்களால் தீவு தீவாந்தரங்களிலிருக்கும் சேனைகளனைத்தையும் ஒருநிமிஷத்திற் கூட்டிவரச்செய்து அப்படித்தமதுபட்டணத்தின் வெளிப்புறம் வந்தடைந்த சேனைப்பெருக்கனைத்தையும் தனது கோபுரத்தின் மேலேறிக் கண்களாரப்பார்த்துச் சத்துருக்களை ஜெயித்ததுபோலும் சந்தோஷமாகித் தானும்போர்க்கோலங்கொண்டு அப்பெரிய சேனைகளுக்குச் சிங்கமுகன் பிள்ளை அதிசூரனையும், தாருகன்பிள்ளை அசுரேந்திரனையும் தலைவர்களாய் முன்னடக்க விட்டுத்தான் இந்திரஞாலத்தேரிற் பிரயாணப்பட்டுப் பின்அணியத்திற் சென்றனன். நூறுயிரவெள்ளம் இராட்சத சேனைகளும் உற்சாகத்துடன் பகைவர்கள் எங்கே எங்கே என்று இரணக்களத்தைத் தேடிவரும்போது இந்திரன் அதைக்கண்டு நடுங்கிக்குமார தேவரிடம் ஓடிவந்து சேவித்துப்பாதகனுகிய சூரன் சதுரங்க சேனைகளுடன் தேவரீரைப் பகைத்துச் சண்டைகொடுக்கச் சீறிவருகின்றனன். அடியோங்களுக்கு அனுக்கிரகித்திருக்கின்றபடிக்குத் தேவரீர் எழுந்தருளித் தேவர்கள் குலகாதகனை வென்றுபுராதன எங்கள் அரசுரிமை

களையும் பொன்னுலகவாழ்வையும் கடாக்ஷிக்க வேண்டுமெனப் பல வாறாகப் போற்றி இரக்கும்போது குமாரதேவர் இந்திரன் வருத்த த்தைத் திருவுள்ளத்திற் கொண்டு கிருபையாகப் பார்த்தருளித் தேவ ராஜனே! பயப்படவேண்டாமெனக் கையமர்த்தி வாயுபகவான்கொண் டுவந்த இரதத்தில் ஆரோகணித்துப் பலவாத்தியங்கள் முழங்கவும் வீரவாகுதேவரும் தம்பியரும் இலட்சரும் சேனாதிபதிகளும் தங்கள் தங்களுக்கு உரியவாகனங்களில் ஏறிச்சேனைகளின் மத்தியிற்போகவும், குமாரதேவர் இந்திராதியர் சூழ்ந்து போற்றிவரப் பின் அணியத்தில் வருவதாயினர். முதல் அணியமானது இரணக்களத்தைச் சேர்ந்தவு டன் சூரன்சேனைகள் சிறிப் பூதப்படைகளை வளைந்து கொண்டுவீரா வேசங்களுடன் அதட்டிப்பின் இருதிறச்சேனைகளும் கைகலந்துகொ டிய போரைச்செய்யும்போது குவிந்தபிணமலைகள் இருபக்கத்திலும் அளவில்லை. கடைசியிற் பூதவெள்ளங்கள் அவுணவீரர்களை மடக்கிச் சாடி வெற்றி கொண்டுவரும் சமயத்தில் அதிசூரனென்பவன் தனது தேரை முடுக்கிச் சேனைகளுக்கு முன்வந்து தனதுவில்லிற் சரங்களை அபரிமிதமாகத் தொடுத்து விட்டுப் பூதவெள்ளங்களின் உறுப்புகளை ச்சின்னபின்னமாகக் கண்டித்தனன். உக்கிரனென்னும் பூதகணத் தலைவன் வந்தெதிர்த்துப் பலவிதங்களிற் போராடச் சிங்கமுகன் பிள் ளை இவனை இனித்தேவப்படைகளால் வெல்ல வேண்டுமென உத்தே சித்து அக்கினி யாஸ்திரத்தை விடுத்தனன். உக்கிரன் பார்த்துச் சிவ குமாரனைச் சிந்தித்துப் போற்றி அவர் அருள்பெற்றுத்திரளுகப்பாய் ந்து அந்த அஸ்திரத்தைப்பற்றி விழுங்கினன். இவ்விதமாகவே அவ்வசுர குமாரன் விட்ட வருணாஸ்திரம் வாயுவாஸ்திரம் பிரம்மாஸ் திரம் நாராயணாஸ்திரம் இவைகளைச் சிவசுப்பிரமணிய தேவர் கடா க்ஷத்தினல் உக்கிரன் விழுங்கி விட்டனன். அது கண்டு அதிசூரன் இவன் தேவாதி தேவனாகிய பரமசிவன் உருவாகக் காணப்படுகின்ற தென ஆச்சரியத்துடன் நிற்கின்ற சமயத்தில் உக்கிரன் அரக்கர் சேனைகளைச் சாடத்தலைப்பட்டான். அதிசூரன் பரமசிவனிடம் பெற்ற பாசுபதாஸ்திரத்தை யெடுத்துப் பிரயோகித்ததைக்கண்டு உக்கிரன் தன்கரத்தின் தண்டத்தைக் கீழேபோட்டு ஸ்ரீ பஞ்சாக்ஷரமந்திரத்தை [illegible]சித்துப் பரமசிவன் சரணாரவிந்தங்களைத் தியானித்து நின்று [illegible]னன். அப்போது அந்தப்பாணம் நெருங்கி வந்து இவன் நிரா [illegible]னு விருக்கிறனென்று திரும்பிச் சிவபிரானிடம் போய்ச்சேர்ந்தது.

அதிசூரன் வருந்தித் தன் தேரினின்றும் குதித்துப் பாரித்ததண்டம் ஒன்றினல் உக்கிரன் புயத்தில் வந்து மோதினன். அப்படையைப் பறித்து அதிசூரன் மார்பில் திரும்ப உக்கிரன் மோதிய காலையில் அவன் மார்பு பிளந்து பேரொலியுடன் பூமியில் விழுந்து மாண்டனன்.

அதுகண்ட அசுரேந்திரன் சிறித் தன்வில்லிற் கொடிய பாணங்களைத் தொடுத்து விட்டுப் பூதர்களை வாட்டத் தொடங்கினன். அப்போது கனகனென்னும் சேனைத்தலைவன் வந்தெதிர்த்துச் சற்றுபோராடிக்கடைசியில் தாருகன்குமாரன் பாணங்களுக்கு ஆற்றாதவனுய்த் திகைத்து வருந்தி நின்று விட்டனன். அப்பால் உன்மத்தனும் மந்தனும் சிங்கனும் ஒருவன்பின் ஒருவனுக வந்தெதிர்த் துத் தம் வலியை இழந்து வீழ்ந்தனர். இலட்சர்களிற் சேர்ந்த தண்டனும் சோமுகனும் விஜயனும் ஒவ்வொருவராக எதிர்த்துப்போராடி அசுரேந்திரன் வில்வலிக்கு ஆற்றாதவர்களாய் மயங்கி வீழ்ந்தனர். கடைசியில் இலட்சர்களில் மீந்தவர்கள் அனைவரும் சேர்ந்து அசுரேந்திரனுடன் போராடி அவன் பாணவலிக்கு ஆற்றாதவர்களாய் இரத்தவெள்ளம் பெருகத்திகைத்து ஓடினரென்றால் அவ்வசுர குமாரன் சண்டைத் திறத்தினை என்னவென்று சொல்லலாம்.

இவைகளைக்கண்டு வீரவாகுதேவர் கோபமேலிட்டு அசுரேந்திரன் முன் தன்தேரைத்தூண்டிவந்து அளவிறந்த பாணங்களால் அவன் தேகத்தைத் துளைத்தனர். தாருகன் பிள்ளையும் அவ்விதமே தேவர் தேகத்தைத் துளைத்து அவர் கைவில்லைக் கண்டித்தனன். தேவர், அசுரேந்திரன் வில்லையும் தேரையும் பிளந்தனர். அசுரேந்திரன், தேவர் தேரைக்குதிரைகள் சாரதியுடன் கண்டித்தபோது, வீரவாகு தேவர் கருடனைப்போற் கிளம்பிச் சண்முக தேவரைத் துதித்துத் தமது வாளாயுதத்தால் இராஜகுமாரன் தோிற் பாய்ந்து அவன் வலது தோளை வெட்டித் தள்ளினர். அசுரேந்திரன் மற்றொருகரத்தில் தண்டமொன்றெடுத்துத் தேவர் மேல்மோத அவர் அதைத்தட்டி விட்டு அவன் சிரசில் உதைத்தனர். அசுரேந்திரன் கோபித்துத் தனது வாளை உருவி வரும்போது தேவர் தனது வீரவாளினல் அவன் சிரம் அற்று உருள வீசினர். அவன் பூமி பிளக்க விழுந்து மாண்டனன். தேவர்கள் தம் கரங்களைத்தட்டி ஸந்தோஷித்துத் தேவர் பேரிற் புஷ்பமாரி சொரிந்தார்கள்.

சூரனுனவன் குமாரர் இருவரும் இறந்ததையும்சமுத்திரம்போல் எங்கும் நிறைந்த சேனைகள் மாண்டு மற்றவர்கள் பறந்தோடியதையும் தெரிந்து ஆலம்போற் சிறித்தனது இந்திர ஞாலத்தேரை முடுக்கி, முன் அணியத்திற்கு வந்து தனது மகிமையுள்ள தனுசைவளைத்துக் குணத்தொனியை எழுப்பிய காலையில் அந்த ஓசையானது அண்ட புவனகோடிகள் அனைத்திலும் பன்னிரண்டு தேவவருஷகாலம் முழங்கிக் கொண்டிருந்ததென்றால் அதைக்குறித்து நாம் இங்கு விஸ்தரித்துப் பேசத்தக்கது என்ன இருக்கின்றது! பூதப்படைகளும் அவ்வோசைக்குப்பயந்து பறந்தோடின. படைத்தலைவர்களாகிய நூற்றெண்மரும் தயிரியசாலிகளாய் மேலிட்டுவந்து பருவதங்கள் மரங்கள் தண்டாயுதங்கள் முதலிய படைகளைச் சூரன் பேரிற் பிரயோகித்தார்கள். அவைகளை எல்லாம் சூரன் துகள்படச்செய்து அவர்களேயும் திகைத்துப் பரந்தோடி ஒளிக்கச் சாடினன். அதுகண்ட நூறுயிரம் அணித்தலைவர்களெல்லாரும் வந்தெதிர்த்துப் போராடுவதைச் சூரன் பார்த்து அனேக பாணங்களால் அவர்களையும் சின்ன பின்னப்படவாட்டி யோட்டினன். நவவீரர்களில் ஒருவனுகிய வீரமார்த்தாண்டன் சூரன் முன் பாணங்களைப் பொழிந்தபோது அசுரன் அவைகளைப் போக்கி அவன் நெற்றியிற் காயப்படச் செய்தனன். வீரமார்த்தாண்டன் பின்னும் பாணங்களைப் பிரயோகிக்கச் சூரன் அவன் கரத்தின் வில்லை கண்டித்து மார்பையும்பிளக்க அவன் பதைத்து விழுந்தனன். இச்சம்பவத்தை வீரராக்கதன் கண்டுவந்து பாணங்களைப் பொழியச் சூரன் அவன் வில்லைக் கண்டித்தனன். அவன் உடைவாளாற் சூரன் வில்லிற் பாய்ந்து வெட்டியபோது அதற்கு அது சற்றும் காயப்படாமல் இவன் வாளாயுதம்தான் பொடியாகிப் போயிற்று. அப்போது வீரராக்கதன் தன்கையால் ஓங்கி அவன் மார்பில்அறைய எத்தனப்படுவதைக் கண்ட சூரன் நிராயுதனைக் கொல்லப்படாதெனத் தன்கால் விரலினுல் எற்ற அவன் அண்டப்பித்திகையிற் போய்முட்டித்திரும்பிப் பூமியில் வந்து விழுந்து சோர்ந்தனன். இந்த அபாயத்தைக்கண்ட வீரமாமகேந்திரன் எதிர்த்துவந்து பாணங்களை விடுத்தான். சூரன், அவன் புயத்தையும் மார்பையும் பத்தலாகக்கிழிக்க அவன் சோர்ந்தனன். அதைக்கண்ட வீரதீரன்வந்து போராடச் சூரன் அவன் தேரைப்பொடியாக்கினன். வீரதீரன் தண்டத்தை எடுத்து ஓடிவரும்போது சூரன் அதைப்பொடிசெய்து அவன் மார்பையும் பத்தலாகக்கிழித்த

வுடன் அவன் சோர்ந்து விழுந்தனன். இதை வீரமாமகேசன் கண்டு வேலாயுதம் ஒன்றெடுத்துச் சூரன்மேரிற் பிரயோகித்தான். சூரன் அனேக பாணங்களை விட்டும் அவைகளை அது விழுங்கிக் கொண்டு வந்து அவன் மார்பிற் பாய்ந்து மழுங்கி விழுந்தது. அப்பால் சூரன் கோபங்கொண்டு மறுகணையால் அவன் மார்பைப் பிளந்து வீழ்த்தி னன். வீரகேசரி பின் வந்தெதிர்க்கச் சூரன் அவன் கரவில்லையும் தேர் குதிரை சாரதிகளையும் கண்டித்து அவன் நெற்றியிலும் காயப் படுத்தினன். வீரகேசரி பெரிய பருவதத்தைப் பிடுங்கி எறிந்தான். சூரன் அதைப்பொடிசெய்து அவன் மார்பைத்துளைத்தான். உடனே அவன் சூரன் பேரிற் பாய்ந்து தனது கரத்தால் ஓங்கி அவன் மார்பில் அறைந்தவளவில் வீரராக்கதன் கரமானது பத்தலாய்த் தெறிக்க அவன் சோர்ந்து விழுந்தனன். அவனைச் சூரன் எடுத்துத் திருப்பாற் கடலில் விழ வீசி எறிந்தனன். பின் வீரமாபுரந்தரன் வந்தெதிர்த்துத் தருமராஜன் படையை விடுத்தான். அது வேகமாய் வந்து சூரன் மார்பிற் பட்டுத்தன் வலிகுன்றித் திரும்பி விட்டது. இவைகளாற் சூரன் வரப்பிரசாதங்களைத் தெரிந்து கொள்வீராக, அப்பால்வீரமா புரந்தரன் பிரமாஸ்திரத்தை எடுத்த காலையிற் சூரன் விரைந்து விட்ட பாணங்களால் அவன் மயங்கி விழுந்தனன், அதைக்கண்ட வீரராக்க தன் வந்தெதிர்க்கச் சூரன் அனேக பாணங்களை ஏவினன். அவைகள் அவன் விட்ட பாணங்களுக்கும்மேற் கொண்டுபோய் அவன் மார்பிற் பட்டுருவிப்போக அவனும் சோர்ந்து விழுந்தனன்.

இவைகளைப் புயவன்மை யுடைய வீரவாகுதேவர் கண்டு கோபங்கொண்டு தனது தேரைத்தூண்டி முன்வந்தனர். சூரன் அவருடைய சுந்தரவடிவைக்கண்டு இவன் ஆதியில் தன்னிடம் தூதாகவந்தவனென்றறிந்து கோபித்து இதனைச்சொல்லுகின்றான். அடாபயலே! பெருமையுடைய வீரமா மயேந்திரபுரத்தை நாசம் பண்ணிக்கணக்கிறந்த இராக்ஷதரைக் கொன்று சற்றும் பயமில்லாமல் என் அரிய குமாரனையும் கண்ட துண்டமாகவெட்டிமாய்த்துத் தப்பிப் பிழைத்துப்போன உனக்கு இப்போது நாள் குறுகியபடியால் என்முன்னம் வந்தனை. இதோ உன்பிராணனை எமலோகத்திற்கு அனுப்புவேன். சண்டைக்கு ஆயத்தப்படக்கடவாயெனச் சொல்லிமுடித்தவுடன் தேவர், நீ பற்பலவிதங்களிற் பேசியாவதென்ன? எமதுஇறைவனுகிய பா

லசுப்பிரமணிய தேவர் பரிபூரணகடாக்ஷத்தினுல் எனக்கு அரிதாகிய காரியம் ஒன்றும் இருக்கமாட்டாது. துரிதமாய்ச் சண்டைக்குவரக்க டவாயென்று சொன்னமாத்திரத்திற் சூரன் அதிகக்கோபங்கொண்டு ஆயிரங்கோடி பாணங்களைத் தேவர்மேற் பிரயோகித்தனன். அவை களைத் தேவர் கண்டித்தனர். சூரன் பின்னும் பாணங்களை அமோக மாய்ப் பிரயோகித்தனன். தேவர் பின்னும் அவைகளைக்கண்டித்து வேறு பாணங்களைச் சூரன் நெற்றிக்குக் குறிபார்த்து விட்டபோது அவைகள் வந்து அவன் நெற்றியில் தைத்து முனைகள் ஒடிந்துதுகள் பட்டு விழுந்தன. இதனைத்தேவர்கண்டு நமதுபாணம் இதுவரைதாக் கிய காலத்திற் காயப்படுத்தாமற் போனதில்லை. ஆதலாற் சண்முகப் பெருமாள் திருக்கரத்தில் விளங்கும் வெற்றிவேலன்றி மற்றெவ்வித ப்பாணங்களினுலும் இவன் வச்சிரதேகத்தைப் பின்னப்படுத்தச் சாத் தியப்படாதென நிச்சயித்து, என்னுற் கூடியவரை போராடுவேனெ ன்று தமது பாணங்களாற் சூரன் தேகத்தை மறைத்தனர். சூரன் அவைகளை விலக்கி வேறுஏழு பாணங்களினுல் தேவர் புயங்களைத் துளைத்தனன். அவர் வருந்திப் பின்தயிரியம்விடாமற் சூரன் சாரதி யைச் சல்லடைக்கண்களாகத் துளைத்தனர். அதைக்கண்ட சூரன்தே வரின்தேர் குதிரைசாரதியைக் கொன்று கர்ச்சித்தனன் உடனே தேவர் வேறுதேரேறி வாயுவாஸ்திரத்தைப் பிரயோகித்தனர். சூரன் தனது வில்லை ஊன்றிக்கொண்டிருந்தபோது அவ்வஸ்திரம் அவன் மார்பில்தாக்கிப் பொடியாகி வீழ்ந்தது தேவர்உடனே அக்கினியாஸ் திரத்தை விடுத்தனர். அதுசூரன் மேற்பட்ட மாத்திரத்திற் பொறி ந்து வலியற்றுப் போனது. தேவர் இயமனுஸ்திரத்தை விடுத்தனர். அது சூரன் மார்பில் தாக்கித் தன்வலி இழந்து போனது. தேவர் சூரியாஸ்திரத்தைச் செலுத்தியபோதும் அதுவும் சூரன்பேரிற்பட் டுப் பலிதமின்றிப் போனது. இவைகளைக் கண்டதேவர் அதிசயித்த வராய்ப் பின்னும் வருணுஸ்திரம் இந்திராஸ்திரம் நிருதாஸ்திரம் இந் தமூன்று பாணங்களையும் சேர்த்துப்பிரயோகம் பண்ணினுர் அவை களும் சூரன்பேரிற் போய்த்தாக்கி உருத்தெரியாமல் துகள்பட்டுப் பறந்துபோயின. தேவர், கோபத்துடன் குபேராஸ்திரம் மாயாஸ்தி ரம் இரண்டையும் சேர்த்து விடுத்தனர் அவைகளும் சூரன் மார் பிற்பட்டுத் தங்கள் பெருமைகள் அழிந்து திரும்பின. தேவர் இன் னும் இவன் வலியை அறிவோமென்று பிரமாஸ்திரத்தையும் நாராய

ணாஸ்திரத்தையும் சேர்த்துப் பிரயோகித்தனர்; அவைகளும் அவன் மார்பைத் துளைத்துப் பயன் பெறாமல் திரும்பின. இச்சம்பவங்களைத் தேவர் பார்த்துச் சிவபிரான் அவனுக்குக் கொடுத்தவரத்தை நினைந்து அதிசயித்துச் சூரனென்பது இவனுக்கே தகுமென்று பலவிதங்களாய் யோசித்திருக்கும்போது சூரன் நகைத்து அடா தூதனே! உன் சாமர்த்தியம் இவ்வளவு தானோ! இன்னம் உண்டோ! இனி உன்னை இதோ கொல்லுகிறேனென்றபோது தேவர் மிகக் கோபங்கொண்டு பாசுபதாஸ்திரத்தை யெடுத்து விட்டனர். அது கிளம்பி இன்னும் அனேகம் தேவப்படைகளையும் படைத்துக்கொண்டு ஹுங்காரித்து வரும்போது சூரன் கண்டு இதை மற்றப் படைகளைப்போலச் சாமானியமாய் விட்டிருக்கலாகாதெனத் தானும் தன் பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகித்தனன். இருபடைகளும் எதிர்த்துப் பிரமாதயுத்தம் செய்யத்தொடங்கிய காலத்திற் பிரபஞ்சங்கள் அனைத்தும் அதலகுதலப்பட்டு வாடுவதைப் பிரமனாதியர் கண்டு அவ்வஸ்திரங்களைத் துதித்து, ரெட்சிக்கவேண்டுமெனப் போற்றுவதைஅவைகள் தெரிந்து உடனே அடங்கிதம்மை விடுத்தவர்களிடம் போய்ச்சேர்ந்தன. அப்போது சூரன் நகைத்துத்தேவரைப்பார்த்து இன்னம் உன்வீரத்தைக்காட்டென்று கோடி உக்கிரபாணங்களைப் பிரயோகித்தனன். தேவர் அவைகளைக் கண்ட துண்டமாக்கினர். சூரன்வெகுண்டு முத்தலைப் பாணத்தால் தேவர் வில்லைத் துண்டமாக்கினன். தேவர் வேலொன்றைவிட்டனர். அது சூரன் மார்பிற்பட்டுப் பொடியாகியது சூரன் பாரித்ததண்டமொன்றை எடுத்துச் சுழற்றி யெறிந்தனன். தேவர்தன் தண்டத்தைப் பிரயோகிக்க; அது இராட்சதராஜன் வச்சிரதண்டத்துடன் போராடிப்பொடிப்பட்டு வீழ்ந்தது. பின்பகைவன் தண்டமானது மேலிட்டு வந்து நமது தேவரின் மார்பிற்கொடை யிடியைப்போலத்தாக்க, அவர் சரீரமுற்றும் கலங்கித் தேவர்கள் புலம்பியோடத் தேரில் மெல்லச் சாய்ந்தனர். சூரன் ஸந்தோஷத்துடன் பூதப்படைகளையும் சின்ன பின்னப்படுத்தி வாட்டப்பிரயத்தினப் பட்டபோது அவர்களில் இறந்தவர்கள் போகமற்றவர்கள் ஓடி ஒளித்தனர்.

இவைகளைச் சண்முகப்பெருமான் பார்த்து வாயுதேவனைக் குறிக்க அவன் இரதத்தைத்தூண்டிச் சூரன் முன் நிறுத்தினன். எமது இறைவனாகிய பாலசுப்பிரமணியக்கடவுளைச் சூரன் நிஜ தெரிசனையாக

காணப்பெற்றபடியால் அவன் செய்திருக்கின்ற தவங்களின் முயற்சியை எத்தகைபராலும் கணித்துப் பேசக்கூடுமோ? அவனுக்கு இனி எப்படியானாலும் ஒருகுறை உண்டாயிருக்கக் கூடியதோ? சூரன் குமாரக்கடவுளைத் தெரிசித்தவுடன் பரமேஸ்வரர் குமாரனாகும் இவனென நிதானித்துக்கொண்டு, சுவாமியைப் பார்த்து இதனைச் சொல்லுவான். ஓ! குமாரனே! நீ ஒருவனோ சூரன் என்னும் பேர்படைத்த என்னை வெல்வதாகக் கருதி வந்தனை? உன் பிதாவாகிய பரமசிவனும் மகாவிஷ்ணுவும் பிரமனும் என்னுடன் போர்செய்ய நினையாமலிருக்கும்போது நேற்றுப்பிறந்தபாலனாகிய நீயோ என்னிடம் சண்டை கொடுக்கத்திறமுடையவன்? எனது பிரதாபங்களை முன்பின் யோசியாமல் ஏதோ சில வீரரைக்கொன்று விட்டோமென வெண்ணி மமதைகொண்டு எனமுன் வந்தனைபோலும்? இதோ உன் பாலசேஷ்டைகளையும் விருப்பையும் அடக்கி வாட்டுகிறேனென்று சூரன் சொன்னதைக் குமாரதேவர் கேட்டுக் குறுஞ் சிரிப்புடன் இதனைப் பேசுவதாயினர் உனது சகலபெருமைகளையும் நினைத்து நீ கருவங்கொள்ள வேண்டாம். நாம் அவைகளைச் சிலபோதில் அழித்துவிடவல்லோம். சிவபிரானது நுதல்விழிச்சிறுபொறி ஒன்று சராசரப்பிரபஞ்சங்களனைத்தையும் தகித்து அழிப்பதை நீ கேள்விப்பட்டதில்லையோ? சுத்தவீரர் இளைஞரென்றும் முதியரென்றும் உண்டோ? உன்விழிகளுக்குப் பாலனாகத் தோற்றுகின்ற நாமே வில்வன்மையினால் உன்னை அடக்கி நாசஞ்செய்யாக் கடவோமென்று திருவுளம்பற்றியபோது, சூரனுக்கு அதிகக் கோபமுண்டாகித் தனதுபெருந் நீண்டவில்லை எடுத்துக்குணத் தொனிசெய்தான். குமாரதேவரும் தமது வில்லைக் குணத்தொனி செய்தனர். அதனைக்கேட்ட சூரன் கரவேகமாய்க் கோடிபாணங்களைச் சோனைமாரிபோற் சொரிந்து சுவாமியை இரதத்துடன் மறைத்து விட்டனன் குமாரதேவர், தமது பாணங்களினால் அவைகளைப் போக்கினர். உடனே சூரன் அபரிமிதமான பாணங்களைப் பிரயோகித்துக் கொக்கரிக்கக் குமாரசுவாமி யானவர் அவைகளைக்கண்டித்து மேலும் சங்கையற்ற பாணங்களைத் தூண்டிச் சூரனை மூடினர். சூரன் அவைகளை விலக்கிப் பங்களைக் கடித்துக் கோடா கோடிபாணங்களைப்பூட்டிச் சிவகுமாரன் பேரிற் சொரிந்தான். அவைகளைக் குருபரன் போக்கிச் சக்தி

யை யொத்த ஏழுபாணங்களை ஏவினர். அவைகள் சூரன் புயங்களிற் பட்டு உருவச்சக்தியற்றுத் திரும்பிவிட்டன. இதைலோகநாயகன் கண்டு நகைத்திருக்கும் போது சூரன் கோபித்துச் சரங்களைச் செலுத்தி மேவிட்டு வருவதைக்கண்டு அவைகளைப்போக்கித்தாம் வேறு ஆயிரம் அர்த்தசந்திர பாணங்களாற் சூரன் கரத்தினது வில்லைப் பிளந்தெறிந்தனர். அப்போது சூரன் பிரமன்படையை வீசினன். சரவணபவன் அதைக்கண்டித்துமேலும் சரங்களைச் செலுத்தி மூட, சூரன் வேறுவில்லெடுத்து அவைகளைப் பறக்கடித்து வேறே ஏழுபாணங்களைச் சண்முகநாதர் புயங்களுக்குக் குறிவைத்து விட்டனன். அவைகள் சுவாமியின் தோள்களில் தாக்கிப் பொடியாகி வீழ்ந்தன. அப்போது சூரனது வில்வலிமை வெகு நேர்த்தியென்று முருகக்கடவுள் வேறுபாணங்களினால் அவன் கரவில்லைக் கண்டித்துத் தேரை அசையவொட்டாமல் தடுத்துப் பக்கத்துக்தேர்களையும் சிதைத்துப் பின்னும் பலபாணங்களையேவும் கரவேகத்தைச் சூரன் கண்டு வடவைபோற் சீறி முத்தலைச் சூலத்தை வீசினான். சுவாமியானவர் அதை இரண்டாக வெட்டித்தள்ளி மேலும் பலபாணங்களை யேவித் தேரின் பேரில் விளங்கும் குடைகளையும் கண்டித்துச் சூரன் அணிந்திருந்த ஆபரணாதிகள் முழுமையும் பொடிப் பொடியாகப் பின்னப்படுத்திச் சாடி வரும்போது சூரன் மதிமயங்கித் தனக்குச் சம்பவித்த மானபங்கத்தை நினைந்து நினைந்து தலையிறங்கி வருந்துகின்றதை அவுணச் சேனைத்தலைவர் கண்டு இப்பாலனைக்கொன்று பழி தீர்ப்போமென்று சதுரங்க சேனைகளுடன் ஏக முகமாய் வந்து குமாரசுவாமியை வளைத்து அமோகமாகிய பாணங்கள் முதலியவைகளைப்பிரயோகித்த காலையிற் சிவகுமாரர் தமது திருக்கரங்களிலொன்றில்விளங்கும் சக்கரத்தை விடுத்தனர். அது ஜொலித்துக்கொண்டு சேனாசமுத்திரத்திற் பாய்ந்து எங்குந்தானாய் உலாவிச் சூறாவளிக்காற்றினும் கடுகித்திரிந்து சூரன் சேனைப் பெருக்கைச் சின்னப்படுத்தி வெளியிடமாக்கியது. இவ்விதம் பாலசுப்பிரமணிய தேவர் ஏவிய சக்கரப்படையானது ஜெயப்பிரதாபத்துடன் வானகங்கையிற் படிந்து குமாரதேவர் திருக்கரத்தில் வந்தமர்ந்தது. சூரன் இதைக் கண்ணாரக்கண்டு பிரமித்து இதுவென்ன அதிசயம்! நாங்கள் கற்ற தனுர்வித்தையும் புஜபலபராக்கிரமங்களும் வரப்பிரசாதங்களும் இந்தச் சின்னக்குழந்தையின் முன்னம் அபல

மாகப் போயினவே என்று மங்கிலியத்தை இழந்த கன்னியைப்போல வும் துதிக்கையை யிழந்த யானையைப்போலவும் கண்ணிழந்த குருட னைப்போலவும் வாடிப் பூமியாகிய தேர்மீது இருந்தனன்.

அதன் பின்பு சூரனுக்கு அதிகக்கோபம் உண்டாகி நல்லகாரியம், பற்கள்முழுதும் விழுந்தின்னம் முளையாதபாலகன் வெற்றியும் நமது சூரமும் வெகு நேர்த்தியாக விருக்கிறதென்று பிரம்மாஸ்திரத்தை எடுத்து விட்டனன். அது சமீபித்தவுடன் சிவகுமாரன் திருக்கரத்தில் விளங்கும் வெற்றிவேலானது சரேலென்று எழுந்து மீறி வருகின்ற அந்தப் பாணத்தைக் கவுளீகரம் செய்து தன்னிலையில் நின்றது. அதைச் சூரன் கண்டு நாராயணாஸ்திரத்தை எடுத்து விடுத்தனன். அதையும் வெற்றிவேலானது பாய்ந்து விழுங்கி விட்டது. அப்பாற் சூரன் பாசுபதத்தைப் பிரயோகித்தனன். அதைச் சிவகுமாரன் கண்டு இது நமது பிதாவின் படையாகுமென நிதானித்தவராய்த் தமது திரு க்கரத்தினை நீட்டிக் கொடுத்தவன் பின் எளிதில் வாங்குமாறுபோல ஏந்தி மற்றப்படைகளுடன் தரித்திருந்தனர். இந்த அதிசயங்களைச் சூரன் கண்டு இனிப்பாலன் செய்கையை அறிவோமென்று மவுனி யாய் அசைவற்று நின்றனன். அகன்ற மண்டலாதீஸ்வரனாகிய சூரன் நிலையைச் சண்முகப்பெருமான் கண்டவுடன் மனதில் இரக்கமுற்றுக் கிருபாநிதி யாகையால் இதனைச் சொல்வதாயினர். ஓ! சக்கிரவர்த்தி! இந்திர குமாரன் முதலாகிய தேவர்களை அலைத்துப் பிடித்து வந்து அளவற்ற காலமாய்க் கொடிய சிறையில் வைத்து வருத்துகின்றனை எனத்தெரிந்து அதை நிவாரணம் செய்யும் பொருட்டு நாம் ஒரு தூதனை அனுப்பினோம். அவன் வந்து பேசியவார்த்தைகளை உறுதி யாகக் கொண்டு நடந்தவனுமல்ல. இந்தக் காரணத்தைக் குறித்தே திருக்கயிலையை விட்டு வந்தோம். ஆகையால் நீ இனிமேலாயினும் தேவர்கள் சிறையை விடுதலை செய்வாயாயின் உன்பிராணனை வாங்கா மல் இந்தச் செல்வத்தை அனுபவித்திருக்க விட்டுப்போவோம். இல் லாவிட்டால் உன்னைக்கண்டித்து அவர்களை மீட்டுக்கொண்டு போ வோம். இனி உன் எண்ணத்தைத்துரிதமாகச்சொல்லக்கடவை என் றனர். அப்போது சூரன் மாறுத்தரம் கொடாமல் இவனை என்னுகி ன்றான். இந்தச் சிறுபாலகன், நாம் செலுத்தும் படைகளையும் சேனை

ப்பெருக்குகளையும் தொலைக்கமாட்டுவனல்லது அழிவற்ற நமது தேக த்தை அசைக்கமாட்டுவனோ? என்னைப் பாலகன் வெல்வதரிது. நா னும் அவனை வெல்வதரிது. இவ்விதச் சங்கடங்கள் இருக்கின்றபடி யால் நாம் இப்போதே நமது பட்டணத்துக்குப் போய் நாளைச் சௌ கரியங்களுடன் யுத்தத்திற்கு வரவேண்டுமென்று மாயமந்திரத்தி னூற் சடுதியில் மறைந்து தன் நகரத்தைச் சேர்ந்தனன்.

இந்தச் சம்பவங்களைக் கண்ட பிரமனாதி தேவர்கள் அடங்காத ஸந்தோஷத்துடன் சிவகுமாரன் முன் வந்து கரங்களைக்கூப்பிப் போற்றிச் சூரனை நிமைப்போதிற் கண்டிக்கவல்ல தேவரீர் அவனு டன் விற்போர் செய்வதானது அவன் பிழைத்துப் போகட்டுமென் னும் பச்சாதாபங் கொண்டிருப்பதாகக்காணப்படுகிறது. கிருபைகூர் ந்து அவனை எங்கள் சங்கடங்கள் தீர நாசப்படுத்த வேண்டுமென்று பிரார்த்திக்க, விசாகப்பெருமாள் இனி அவன் யுத்தத்திற்கு வருங் கால் நாம் அவனைப் புத்திர மித்திருடன் நிர்மூலம் செய்வோமென வரக்களித்தனர்.

இவை நிற்கப் பூதப்படைகளெல்லாம் சூரன் பட்டணத்தின் கோட்டை மதிலை வளைந்து கோபுரவாசலிற் காவலாயிருந்த சேனை களை யெல்லாம் நாசஞ் செய்யத் தலைப்பட்டன. அது கண்ட அதி கோரனென்னும் அவுணவீரன் எதிர்த்து வர அவனுடன் பூதவீரனா கிய அமோகனென்பவன் எதிர்த்துப் போராடி அவனைக்கொன்ற னன். அப்பாற் பூதவெள்ளங்கள் வேகமாய்க் கோபுரவாயிலைக் கிட்டிக் கோபுரத்தை வேருடன் பறித்துப் பந்தைப்போல் எடுத்துக் கடலில் விட்டெறிந்து பின் கோட்டை மதிளையும் இடித்துப் பட்டணத்துக் குள்ளே பிரவேசித்து எதிர்ப்பட்ட இராட்சதர்களை மாய்த்துப் பட்ட ணத்தையும் அழித்துக் கோபமாறித் திரும்பி நம் சரவணபவனை வந் தடைந்தன. குமாரதேவர், தேவர்கள் சூழச் சகல சயினியங்களுடன் தமது பாசறை வீட்டிற் சேர்ந்திருந்தனர்.

இவை நிற்க, மறைந்துபோன சூரன் தன்நகரைச்சேர்ந்து இதர போகங்கள் யாவற்றையும் வெறுத்துத் தான்பட்ட அவமானங்களை

நினைந்து நினைந்து மனம் வெந்து வாடி உறக்கமற்றுப் பாம்பைப்போல மஞ்சத்திற் படுத்துப் புறண்டிருக்கும்போது, தோல்வியானதைப் பானுகோபன் கேள்விப்பட்டுத் தன் பிதாவினிடம் வந்து அய்யனே! நான் நேற்றுப் பாலசுப்பிரமணியனைத் தவிர மற்றெல்லோரையும் ஜெயித்து இவ்விடத்திற்கு வரவிருந்தபோது பாசறையிலிருந்தபடி சிவகுமாரன் ஒருபாணத்தைத் தூண்டி என்பாணத்தை நிலைகொள்ளாமல் திரும்பி வரச்செய்தான். உடனே சகலரும் ஜீவந்தராய் எழுந்தார்கள். நான் பாசுபதாஸ்திரம் மறுதினம் கொண்டுபோய் அவர்களை ஜெயிப்பதாக எண்ணிவந்து விட்டேன். தேவரீர் ஒன்றுக்கும் கவலை வைக்கவேண்டாம். நானே அந்தப் பாலசுப்பிரமணியனுடன் எல்லாரையும் சின்ன பின்னப்படுத்தி வரவல்லேன். இல்லையாயின் நான் இப்பட்டணத்திற்குத் திரும்பி வரேன். மரவுரி உடுத்துக் காட்டிற்குத் தவஞ் செய்யப் போகக்கடவேனென்று சபதங்கள் பேசிய காலையிற் சூரன் ஸந்தோஷித்து இதனைச் சொல்லுகின்றான். அப்பனே! மற்றவர்களை வெல்வதை நான் பெரிதாக நினைக்கவில்லை. பராக்கிரமசாலியாகிய என் தம்பி தாருகனையும் கிரவுஞ்சனையும் பிளந்து கொன்ற பகைவன் வலியை அழித்து ஜெயங்கொள்வது மிகவும் அரிது! அரிது! அச்சிறுவனை நானே கொல்வேன். நீ வீரவாகு தேவரைக் கொல்ல வேண்டும். இருவரையும் ஜெயித்துவிட்டால் நமக்குப் பின் பகை இல்லை என்றனன். பானுகோபன் அதற்கு இணங்கி மறுநாள் தான் யுத்தத்திற்குப் போவதாய்ப் பிதாவினிடம் வருதி பெற்றுத் திரும்பி வரும்போது சில தூதுவராற் பூதப்படைகள் வீறிவந்து கோபுரத்தைப் பிடுங்கிச் சமுத்திரத்தில் எறிந்து மற்றும் நடத்திய சம்பவங்களனைத்தையும் கேள்விப்பட்டு உக்கிரமான கோபங்கொண்டு உடனே அவைகளைத் திரும்ப நிருமாணிக்க அவன் கட்டளையிட்டுப் பின் தன் பதிக்குப் போய்ச் சேர்ந்தான்.

## மூன்றும் நாள் பானுகோபன் யுத்தம்.

இவ்விதமாக இராக்காலம் கழிந்து அருணோதயமானவுடன் பானுகோபன் யுத்தத்திற்குச் சிலதகுந்த உதவிகளைத்தேட உத்தேசித்துத் தன் பிதா மகளாகிய மாயையை நினைக்க அவள் உடனே தன்

பேரன் முன் தோன்றினுள். பானுகோபன் அவள் திருவடிகளிற் பணி ந்தெழுந்து அடி ஆயா! பாலசுப்பிரமணியனுக்கும் நமக்கும் சண்டை நேர்ந்த காரணத்தால் முந்தையநாள் நான் தோற்க நேரிட்டது. அதினுல் எனக்கு உண்டாகிய அவமானம் கொஞ்சமல்ல. உயிரை விட்டாலும் நன்ருயிருக்குமென முறையிட்ட காலையில் அவள் பௌத்திரனே! கெடுமதி கண்ணுக்குத் தோன்ருதென்பது நிச்சயம். அந்தப் பாலசுப்பிரமணியனை நீங்கள் சாமானியமாய் நினைக்கவேண்டாம். உங்களுடைய அக்கிரமத்தால் தேவர்களையும் ரிஷிகளையும் பசைத்துக் கொண்டீர்கள் என்று பலவிதங்களிற் சமாதானமாய்ப் போதித்து அவனுக்குப் புத்திசொல்லியும் கேட்பதாயில்லாததைக் கண்டு மாயை என்னுலானது இதுதானென்று ஒரு மோகனுஸ்திரத்தைச் சிருஷ்டித்துக் கொடுத்து மறைந்தனன். அப்பாற் பானுகோபன் அதிக உற்சாகத்துடன் இருபதினுயிரம் வெள்ளம் இராட்சதவீரர்களும் தன்னைச் சூழ்ந்துவர யுத்த சன்னத்தனுய்ப் பிரயாணித்து யுத்த பூமிக்கு வந்து ஒரு தூதனை வீரவாகு தேவரிடம் அனுப்பிச் சீக்கிரம் யுத்தத்திற்கு வரவேண்டும். முன்போலச் சுலபமாய் நினைக்கவேண்டாம். உன்னைக் கொல்லக்கங்கணம் கட்டி வந்திருக்கிறேன் என்று தெரிவித்து வரச்சொன்னுன். அதைக்கேட்ட வீரவாகுதேவர் நகைத்து நம்மிடம் முன் தப்பித்துக் கொண்டோடிய அவனை இதோ கொல்லவருகின்றேனெனக் கூறித் தூதனை அனுப்பிவிட்டுத் துணைவருடன் குமாரக்கடவுளைத் தரிசித்து நிற்க, வீரவாகுதேவர் கருத்தைச் சண்முகக்கடவுள் தெரிந்தவராய், நீ பூதசேனைகளைக் கூட்டிக்கொண்டு பானுகோபனை வென்று மீளக்கடவாய். அப்பாதகன் மாயவஞ்சகங்களைச் செய்வானுகில் நமது வேற்றிவேல் வந்து உங்களைப் பாதுகாத்துத் திரும்புமென்று திருவுளம்பற்ற, வீரன் யுத்த சன்னத்தனுய்த் துரிதமாக நடந்து பானுகோபன் சேனைகளுடன் வந்திருக்கும் இரணக்களத்தை நெருங்கியவுடன் பவுத்திரவான்களாகிய சிவகணங்களும் வஞ்சமே குடிகொண்டிருக்கும் இராட்சதப்பாதகரும் வீராவேசங்களுடன் கொக்கரித்து நெருங்கிச் சபதங்களைப் பேசிச் சண்டை கொடுக்கத் தலைப்பட்டார்கள். அத்தருணத்தில் வானத்தில் வேடிக்கைபார்க்க வந்துற்ற தேவர்கள் இன்றையச்செயம் நமக்காகக் கடவதென ஆசிர்வதித்து மலர்களைச்சொரிந்தார்கள். அப்போது இருதிறத்துச் சேனை

களும் கை கலந்து சரீரமெங்கும் பத்தல்பத்தலாய்க் கிழிந்தும் சக்கை சக்கைபாய் வெட்டுண்டும் சதை சிதைந்தும் நிலத்திற் புதைந்தும் அலைந்தும் உலைந்தும் களைத்தும் இளைத்தும் துடித்தும் பதைத்தும் சோர்ந்தும் மூர்ச்சித்தும் துகள்பட்டு மாண்டு மங்கியும் படாத பாடு கள் பட்டுக் கணக்கிறந்த இராட்சதப்பாதகரும் பூதப்படைகளிற் சிலரும் அழிந்தார்கள். அக்காலையில் இராட்சத சேனைத்தலைவர்கள் கோபித்துப் பூதசேனைத்தலைவர்களுடன் எதிர்த்துக் கொடும் போர் விளைத்து வாட்டிவரும் சமயத்தில், என்மர் இட்சர்களிற் சிலர் முன் வந்து பானுகோபன் சேனைத்தலைவர்கள் செலுத்தும் பாணங்கள் அனைத்தையும் போக்கி அமோகமாகிய கூரிய கடுங்கணைகளைக் கர வேகமாப் பிரயோகித்து இராட்சத சேனைகளைக் கலக்கி மாய்த்து அவர்கள் சேனைத்தலைவர்களையும் சின்னபின்னப் படுத்தி வாட்டிய போது மாண்டவர்கள் போக மற்ற இராட்சதவெள்ளமானது தங்கி நிற்க மாட்டாமல் அதிவேகமாய்ப் புறங்காட்டி ஓடிஒளித்தனர். அதைப்பானுகோபன் கண்டு வடவைபோற் கோபித்து யுத்தபூமியை நோக்கித்தனது தேரைநடத்திக் கொண்டு வந்து பாரித்தவில்லை வளைத்துக்குணத்தொனி செய்து கர்ச்சிப்பதை வீரவாகுதேவர் கண்டு இவன்கருவத்தை அடக்கி அழிக்கவேண்டுமென்று தன் தேரையும் துரத்தி நாணேற்றிய வில்லுடன் முன்வந்து தோன்றினர். பானுகோபன் அதைக்கண்டு வடவை போற்சீறிக் கோடி கோடி அஸ்திரங்களைத் தொடுத்துச் செலுத்த அவைகள் மேலிட்டு வருவதனை வீரவாகுதேவர் கண்டவுடன் தாமும் அமோகமாகிய கணைகளைச் சந்தித்துச் சொரிய, இருவருக்கும் பிரமாதமான யுத்தம் நேரிட்டது. தேவர்கள் எல்லாரும் இந்த அரியயுத்தமானது எவ்வாறுமுடிவாகுமோ வென்று பயப்பிராந்தியுடன் ஒதுங்கி இருந்து பார்த்துக்கொண்டிருந்தார்கள். அப்போது பானுகோபன் தனது பாணங்களினுல் தேவர் தேகத்தினை மறைத்தனன். பாணங்களும் சுறுக்குச்சுறுக்கென்த்தைத்திட்ட அளவில் தேவர் கோபமுற்றுக் கைவேகமாகத்தமதுப் பாணங்களைச்செலுத்திப் பானுகோபன் இரதம் குதிரை சாரதியை அதப்படுத்த, அவன் உடனே வேறுதேர் ஏறுமுன் தேவரானவர் கரவேகமாக மேலும் சில குரூர பாணங்களை ஏவி அவன் மார்பைச் சல்லடைக்கண்களாகத்துளைத்தனர். பானுகோபன் இனி இவனைத் தேவப்படை

களால் ஜெயிக்கவேண்டுமென்று வருணாஸ்திரத்தை எடுத்து விட்டனன். சிவகுமாரன் தனது துணைவர்களைப் பயப்படாதீர்களெனக் கைஅமைத்து அக்கினியாஸ்திரத்தை விட்டனர். அக்கனற்படையானது பகைவன் விட்டகணையைக் கவளீகரம் செய்துகொண்டு மேலிட்டுவர, இராஜகுமாரன் வாயுவாஸ்திரத்தை விட்டனன், அது அக்கினிக்கணையின் வலியை அடக்கிப்பூதப்படைகள் பேரில் வந்தது. வீரவாகுதேவர் நாகாஸ்திரத்தை விட்டனர். அது வாயுவாஸ்திரத்தின் வலியை ஒடுக்கி மேலிட்டுவருவதைப் பானுகோபன் கண்டு கருடாஸ்திரத்தை விட்டனன். அது நாகாஸ்திரத்தை அதைப்படுத்திப் போய் விட்டது. இவ்விதமாய் நாகாஸ்திரமானது ஒடுங்கக்கருடாஸ்திரம் மேலிட்டு வருவதனைத் தேவர்கண்டு கோபித்து ரிஷபாஸ்திரத்தைப் பூசித்துச் செலுத்தியவுடன் அது மீறி எழுந்துசெய்த பராக்கிரமங்களை ஆதிசேஷனாலும் சொல்ல முடியாது. இவ்விதப்பெருமைகளுடன் அது கருடாஸ்திரத்தைக் கவளீகரம்செய்து சீறிவரும்போது பானுகோபன் சீக்கிரம் காலாஸ்திரத்தைப் பிரயோகித்தான். ரிஷபாஸ்திரம் முன்னிலும் அதிக உற்பாதங்களைக் காட்டிவந்து அந்தப் படையையும் நாசம்செய்து விட்டது, பானுகோபன் கறகறெனப் பற்களைக்கடித்துப் பிரம்மாஸ்திரத்தை விடுத்தனன். அது நந்திப்படையைக் கண்டவுடன் நடு நடுங்கிப் பிழைத்தேன் பிழைத்தேனென்று திரும்பி விட்டவனிடம் வந்து சேர்ந்தது. அதைக்கண்ட தேவர்கள் கொண்டாடினார்கள். சூரன்பிள்ளை காலாந்தகனைப்போலச் சீறித் தக்ஷணம் நாராயணாஸ்திரத்தை விட்டனன். அதுநந்திப்படையுடன் எதிர்த்து அகோரயுத்தம் செய்யக் கண்டதேவர் வீரபத்திராஸ்திரத்தைச் செலுத்தினர். அது நந்திப்படையுடன் போராடுகின்ற நாராயணாஸ்திரத்தை வலியடக்கிச் சென்றது, இவ்விதம் தேவப்படைகளெல்லாம் வீணாவதைப் பானுகோபன்கண்டு திடுக்கிட்டுப் பாசுபதாஸ்திரத்தைப் போற்றி எடுத்து விட்டனன். தேவர் அதனைத் தெரிந்து தமது பாசுபதத்தையும் எடுத்து உபசரித்து விடுத்தனர். அவ்விருபடைகளும் ஒன்றுக்கொன்று பின்னிடையாமற் சிலநேரம் விநோதப் போரைக் காட்டிய சமயத்தில் இராட்சதப் பாதகர் சின்னப்பட்டும் தேரணிகள் பொடிப்பொடியாகக் குவிந்தும் யானைகள் வீறிட்டு மாய்ந்தும் புரவிகள் ஓடிமாண்டும் இவ்விதம் சதுரங்கசேனைகளையும் பறிகொடுத்

துப் பானுகோபன் ஏகாங்கியாக நின்றனன். பின் இரண்டு பாசுபதங்களும் திரும்பித் தங்களைச் செலுத்திய வீரர்களிடத்திற் சேர்ந்தன. இத்தனைக்கண்ட பானுகோபன் இனிமாயப்பெருக்கினுல் அல்லது இத்தூதனை ஜெயிக்க ஒண்ணுதென நிதானித்துத் துரிதமாய் மோகன மந்திரத்தைச் செபித்துத்தன் தேகத்தை மறைத்துப் புகை உருக்கொண்டு வானத்தில் எழும்பினன். அதைக்கண்ட பூதப்படைகள் முதல்தினத்தைப் போலவே பாதகன் இப்போதும் பயந்தோடினன். என்பதாகத் தங்கள் கரங்களைக் கொட்டிச் சிருங்காதஞ் செய்திருந்தனர்.

அத்தருணத்தில் வீரவாகுதேவர் தன் துணைவர் முதலான மற்றப் பூதப்படைகளுடன் கர்தசுவாமி விற்றிருக்கும் பாசறையை நோக்கிச் சூரியனும் அஸ்தமானமாகி விட்டமையால் இனி நாளைக் காலையுத்தத்திற்கு வருவோமெனவும் பகைவன் மாயையின் மூலமாய்த்தப்பி யோடினன் எனவும் திர்மானித்துக் கொண்டு செல்வதாயினர். இவைகளை வானத்தில் மறைந்திருக்கும் பானுகோபன் கண்டு இதுசமயத்திற் பகைவரை வென்று ஜெயப்பிரதாபத்தை அடைவேனென்று துணிந்து மாயைதனக்கு அநுக்கிரகம் செய்திருந்த மோகனப்படையை எடுத்து விட்டனன். அது ஆகாயத்தை விட்டுப்பூமிக்கு இறங்கி எவருக்கும் தோற்றுமல் வீரவாகுதேவர் முதலானவர்கள் இருக்கும் இடங்களிற் புகையைப் போலப்பரவி அவர்கள் அனைவோர்களின் உயிரையும் உண்டு பலவிதமாகச் சேனைகள் முதல் யாவரையும் ஒன்றுய்ச்சேர்த்து இறுக்கிக்கட்டி ஆறு சமுத்திரங்களையும் நிமைப்போதிற் கடந்து சுத்தோதக சமுத்திரத்தைச்சேர்ந்து அந்நீர்ப்பெருக்கின் பாதலத்தில் அவர்கள் அனைவோரையும் கொண்டு போய் அமிழ்த்தி அப்படை நாலு மூலைகளிலும் பத்திரமாய்க் காவல் கொண்டிருந்தது. பானுகோபன் அடங்காத ஸந்தோஷத்தனுய்த் தன் பிதாவாகிய சூரபதுமனை வந்தடைந்து அய்யனே! இத்தினம் அடியேன் நமது சத்துருக்கள் அனைவரையும் கொன்று பல பாசங்களினுற் கட்டிச் சுத்தோதகத்தில் அமிழ்த்தி விட்டேன். இனி நாளையத்தினம் பாலசுப்பிரமணியனையும் அவனைச்சேர்ந்து வந்திருக்கும் தேவர்களனைவோர்களையும் பிடித்து வந்து உமது சந்நிதானத்தில் விடக்கடவேனென்று சொன்னவுடன் சூரபதுமன் அடங்காத ஸந்தோஷத்தனுகித் தன்

புத்திரனைக் கொண்டாடி. அவனுக்கு ஆடை ஆபரணாதிகள் எல்லாம் சன்மானித்து நாளையத்தினம் மற்றப் பகைவரையும் வாட்டி. வெற்றி கொள்ளக் கூடவாயென அவனுக்குச் செலவு கொடுத்தனுப்பினன். பானுகோபன் உற்சாகத்துடன் தனது அரமனை சேர்ந்து விடியும் பொழுதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

இவைநிற்கப் பானுகோபன் வஞ்சனைச் செய்கைகளைப் பார்த்துக் கொண்டிருந்த தேவர்கள் துக்கசாகரத்தில் மூழ்கி வாய்விட்டுப் புலம்பி இந்திரனுடன் பாலசுப்பிரமணிய தேவரை வந்து வணங்கி அய்யனே! இத்தினச் சண்டையிற் பானுகோபன் வீரவாகுதேவருக்குத் தோற்றவனாகி மேகத்தில் மறைந்து ஒரு மோகனப்படையைப் பிரயோகித்து வீரவாகுதேவர் முதற் பூதப்படைகள் ஈருகக்கொன்று கட்டிப்போய்ச் சுத்தோதக சமுத்திரத்திற் சேர்த்து விட்டனன். இதற்கென்ன செய்வோமென்று மிகவும் பரிபவப்பட்டுத் துதிக்கின்றபோது குமாரதேவர் பயப்படாதீர்களெனத் தமது திருக்கரத்தில் விளங்கும் வெற்றிவேலாயுதத்தைப் பார்த்து நீ வேகமாகப் போய் அந்த மோகனப்படையை அதஞ்செய்து கடலிற் படிந்திருக்கின்ற நமது வீரவாகு முதலியோரின் மயக்கத்தை ஒழித்து இவ்விடம் கொண்டுவருவை எனக்கட்டளை யிட்டவுடன் அது மகாபாக்கியமென்றெழுந்து முற்காலத்தில் திரிபுராதியரை அழிக்கச் செலுத்திய நகைக்கனலைப்போல விரைந்தோடிச் சுத்தோதகக்கடலின் அருகில் வருவதை மோகனப்படைகண்டு திடுக்கிட்டு ஓடி விலகியது. அத்தருணத்திற் கடற்கரசன் வேலாயுதத்திற் கெதிர்நோக்கி வந்து படைகளுக்கரசே! பானுகோபன் மோகனாஸ்திரத்தைப் பிரயோகித்து வீரவாகுதேவர் எண்மர் இலட்சர் படைத்தலைவர் பூதசேனைகளை மயக்கிப் பிரேதங்களாக்கிக் கட்டிக் கொண்டுவந்து என்னிடத்திற் சேர்க்கச்செய்தான். அக்கொடியபாணமும் இவ்விடத்திற் காவலிருந்தது. இப்போது தேவரீர் வரவால் அது வெதும்பி மாண்டது. அப்பாணத்தை அடியேனுக்கு வாட்டவலி யில்லாததினாலும் அவுணப் பாதகர்க்குட்பட்டும் வாடி யிருக்க நெரிட்டது. ஆதலால் அடியேனை க்ஷமித்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க வேற்படையானது கடலிறைவனை ஆதரித்துப் பின் கடலினிடத்தில் உலாவிவந்தபோது பிரே

தங்களைப்போல் அழுந்திக்கிடந்த வீரவாகுதேவர் முதலானசிவகணங்களுக்கு அறிவுதோன்றித்தங்கள் கண்களை விழித்து ஜெய வுற்சாகங்களுடன் ஜெய ஜெயபோற்றி யென ஆரவாரித்துக்கொண்டுவெளிவந்தனர். அக்காலத்தில் தேவர்கள் பரவசத்தராய்த் தருக்களினது புஷ்பங்களை வாழி! வாழி! யெனக்கூறிச்சொரிந்தனர். வெற்றிவேல் வானத்தில் உலவியிருப்பதை வீரவாகுதேவர் முதலானவர்கள் தெரிசித்தவுடன் அவர்கள் அப்படையரசைப் பலதரம் பணிந்து எதிர்கொண்டு சூழ்ந்து சகலமுந்தெரிந்த நமது இறைவனாகிய முருகக்கடவுள் இரக்கமுற்றுச்செலுத்திய அந்த வேலாயுதப் பெருமையினால் தாம் உயிர் பெற்றெழுந்தனமென்று ஆழ்ந்த கருத்தினால் யூகித்தறிந்து கொண்டு வீரவாகுதேவர் இதனைச் சொல்வதாயினர். ஓ கிரியாமூர்த்தி! தேவரீரைப்பாலசுப்பிரமணியக் கடவுளுக்குலப்பாக இக்காலத்தில்யாங்கள் தெரிசித்துச் சகல துன்பங்களையும் போக்கினோம். முன் கிரவுஞ்சகிரியினிடத்தும் இவ்வாறே தேவரீர்எங்களை இரட்சித்தீர்! இவைகளுக்கு நாங்கள் என்ன கைம்மாறு செய்யப்போகின்றோமெனப் பலவாறு போற்றிய காலையில் வேலாயுதமானது எல்லாம் முருகப்பெருமாள் கடாக்ஷமாகும். நீங்கள் அனைவரும் சண்முகப் பெருமானைச் சீக்கிரம் வந்தடையுங்களெனக் கட்டளையிட்டு அப்படையானது முன்னம் வந்து சரவணபவனுக்குச் சகல சமாசாரங்களையுந் தெரிவித்து முன்போல் அக்கடவுளது திருக்கரத்தில் அமர்ந்து விளங்கியது.

வெற்றிவேலானது சென்றபின் வீரவாகுதேவர் முதலியயாவரும் வானவழிக்கொண்டு சென்று இரணக்களத்திற்கு நேராக வந்திறங்கிச் சூரன் வாசமாயிருக்கும் மயேந்திரபுரியைக் கண்ட மாத்திரத்தில் வீரவாகுதேவருக்கு அதிக கோபம் பிரவேசித்துச் சொல்லுவார். கொடியபோரைச்செய்ய வலியற்றவனாய் வானத்தில் மறைந்து வஞ்சகத்தினால் நம் அனைவரையும் வென்றுபோன பானுகோபனை இப்போதே மடக்கிக்கொன்று என்கோபந் தணிந்தால் அல்லது எமது கர்த்தனிடம் செல்ல விருப்பமில்லை. அது தவறினால் என் உயிரை வைத்திருக்கமாட்டேன். என் தாய் வயற்றிற் பிறந்தவனும் அல்லேன் எனச்சபதம்பேசிய காலத்தில் மற்றவரும் தேவரீர் குறித்த காரியம் தகும் தகும் என்று மனம் ஒருமித்து மயேந்திரபுரியைச் சேர்ந்து

மேற்குக் கோபுரவாயிலைச் சூழ்ந்து இராட்சதர் திடுக்கிட்டுக் கலங்கக் கொக்கரித்தார்கள். அப்போது அந்தவாயிலினிடத்திற் காவல்கொண்டிருந்த வியாக்கிரமுகன் என்பவன் விழிகளில் தீ யெழத் தன்சேனைகளைக் கூவிப்பகைவரை வாட்டும்படிக்குக் கட்டளையிட்டுத் தானும் பின் அணியத்தில் வருவதாயினன். இருதிறத்துச் சேனைகளும் வடவையும் ஆலமும் எதிர்த்துப் போராடுவதற் கொப்பாகக் கொடிய போரைச் செய்தபோது மடிந்த இராட்சதர்கள் போக மற்றவர்கள் ஓட்டம் பிடித்தார்கள். அதுகண்ட வியாக்கிரமுகன் சூலாயுதமொன்றைத் தன் கரத்திற் பற்றியவனாய்ப் பூதப்படைகளைக் கலங்க அடித்தான். அப்போது சிங்கனென்னும் பூதப்படைத்தலைவன் கூரிய சூலமொன்றைத் தன் கரத்திற்கொண்டு அவுணப்பாதகனுடன் இளையாமற் போராடி அப்பால் இருவீரரும் மல்யுத்தத்திற்கு ஆரம்பித்ததிற் சிங்கன் என்பவன் அவுணவீரனைக்கொன்று வீழ்ந்தினன். அதைக் கண்ட பூதவெள்ளமானது ஆர்ப்பரித்து வந்து கோபுரவாயிலை இடித்துத் தள்ளிப் பட்டணத்திற்குள் மேலிட்டுச்சென்று பல பல விதங்களில் அங்கு நாசப்படுத்தத் தொடங்கியது. வீரவாகுதேவர் தமது அக்கினி அஸ்திரத்தையும் வாயுவஸ்திரத்தையும் பிரயோகித்து விட்டனர். அந்தப் பாணங்கள் பட்டணமெங்கும் அக்கினிப் பிரவேசமாக்கிக்கரிந்து போகச்செய்த சமயத்தில் அசுர தூதர்கள்வேகமாகச் சூரபதுமனிடம் போய்ப் பானுகோபன் ஜெயித்து விட்டதாகச் சொன்னவர்கள் அனைவரும் இப்போது அந்தப் பாலசுப்பிரமணியன் கடாக்ஷத்தினால் திரும்ப உயிர் பெற்றெழுந்து வந்தனர். பட்டணத்தின் பொன்மயமாகிய மாடமாளிகை கூடகோபுர முதலானவைகளனைத்தையும் அவர்கள் கொளுத்தி வாட்டுகின்றனர். இன்னம் என்ன தீங்குகள் விளையுமோ அறிகிலோமென் முறையிட்டுக் கொண்டார்கள். அதைக்கேட்ட சூரன் சிறி அண்டப் பித்திகையில் உறங்கிக் கிடக்கும் ஊழிமேகங்களைத் தருவித்து அவைகளை நோக்கி நீங்கள் இந்தப் பட்டணத்தைக் கொளுத்திவாட்டும் அக்கினிப் பெருக்கை ஒரு நொடியில் அவித்து வரக்கடவீர்களெனக் கட்டளை யிட்டான். உடனே அவைகள் சமுத்திர நீரை உண்டு வானத்திற் சென்று வீரவாகுதேவர் நம்மைக் கொல்வதிற் சந்தேகமில்லை சூரப்பாதகனால் நாம் மடிவதிலும் வீரவாகுதேவரால் இறந்தால் இம்மை மறுமைக்கு

வேண்டும் கலங்களை அடையலாமென்று துணிவுகொண்டவைகளாய் யானைப்பிரமாணமாகிய துளிகளை அபரிமிதமாக வருஷித்து அக்கினியின் வெப்பத்தைத் தணியச்செய்து விட்டன. வீரவாகுதேவர் இதென்ன அசுரர் மாயையோ வென்று யோசித்திருக்கும்போது நாரதர், வீரனே இவை சூரன் ஆக்கினையின்பேரில் வருஷிக்கும் ஊழி மேகங்களாகும். ஊழிக்கனற்படையைச் செலுத்துவாயெனக் கட்டளையிட்டுச் சென்ற பிரகாரம் வீரனும் அதை எடுத்து விடுத்தனன். அப்படையானது வெளிப்பட்டு அம்மேகங்களை வளைந்துகொண்டு அவைகளின் நீர்ப்பசுமை முற்றும் வறளச்செய்து வலியையும் ஒடுக்கித் திரும்பி வந்தது. அதனைத் தூதுவராற் கேள்விப்பட்ட சூரன் மிகச்சீற்றமுடையவனாகத் தானே யுத்தம் புரிந்து சத்துருக்களைச் செயங்கொள்ளக் கருதித்தனது இந்திர ஞாலத்தேரைக் கொண்டு வரப் பணித்தனன்.

அதனைச் சூரன் பிள்ளையாகிய இரணியன் தெரிந்து இவ்வாறு பிதாவைப்பணிந்து உரைப்பதாயினன். ஐயனே! எனது வார்த்தைகளைச் சற்று கவனித்துக் கேட்டருள்வீராக! நமது தாயாதிகளாகிய தேவர்களை இம்சிப்பது தருமமல்ல. நமக்கு இந்தச் சம்பத்துக்களைக் கொடுத்த பரமசிவனே இவைகளைத் திரும்பப் போக்குவிக்கவும் வல்லவரல்லவா? அந்தப் பரமசிவத்தினுடைய அளக்கருஞ் செயல்கள் முற்றும் நீரே தெரிந்தவராயும் இருக்கின்றீர். நீர் இப்போது சண்டை தொடுக்க எத்தனித்திருக்கும் சண்முகப் பெருமானுக்கும் அந்தப் பரமசிவனுக்கும் ஒருபேதம் இருப்பதாக நினைக்கவேவேண்டாம். இந்தக் கந்தசுவாமியினுடைய வல்லபங்கள் அனைத்தும் உமக்கு அனுபவத்தில் தெரியவும் வரும். ஆகையினாலே அவரைப் பாலனென்று இகழாமல் அவர் திருவடிகளிற் சேவித்து இன்னும் இந்தச் சம்பத்துக்களை அநுபவித்துச் சுகமாயிருக்கலாமென்று சொன்னவளவிற் சூரனுக்குக் கோபம் பிறந்து இரணியனை உருத்துப்பார்த்து இதனைச் சொல்லுகின்றான். யாரோபயமுறுத்தி உனக்கு உபதேசித்த வார்த்தைகளை இங்கே எனக்கு எடுத்துச்சொல்லவந்தனை. விஷ்ணு பிரமன் இந்திரன் முதலியவர்களும் என் ஏவல்களுக்கு அடங்கிக் கீழ்ப்படிந் திருப்பதனை நீ அறியாயோ? காளகண்ட மூர்த்தியானவர் நேற்றுப்பெ

ற்ற சிறுவனோ என்னை வெல்லப் போகிறான் என்று பற்பல தனது பராக்கிரமங்களைக்கூறி ஆங்காரங்கொண்டதை இரணியன் கண்டு இனிநாமும் சண்முகப்பெருமாள் கையினால் இறந்து நல்லபதவி அடைவதே மேன்மையென்று தன் மனதில் தீர்மானித்தவனாய்ப் பிதாவே! நான் சிறுபிள்ளைத்தனமாகச்சொன்னவைகளுக்கு இவ்வாறு கோபங்கொள்ளலாமா? இதோ நானே போய் அவர்கள் அனைவோரையும் வாட்டிவெற்றிபெற்றுத் திரும்புகிறேனென்று அவனிடம் விடைபெற்றுப்பின் தானும் போர்க்கோலங்கொண்டு புயவலி கொண்டதன் தோழர்களுடனும் சதுரங்க சேனைகளுடனும் புறப்பட்டுச்செல்வதாயினான். அதனை வீரவாகுதேவர் கண்டுவருவது யாரோவென்று ஆலோசித்திருக்கும்போது நாரதர் அத்தேவருக்கு இரணியன்வரவு முதலிய சகலத்தையும் எடுத்துரைத்துப் போயினர்.

உடனே வீரவாகுதேவரும் யுத்தசன்னத்தராய் இரணியனுக்கு எதிர்போவ தாயினர். அவுணவீரர் பூதவெள்ளங்கள் பேரிற் பாணவருஷங்களைப் பொழிய அவர்கள் வெகுண்டு மரங்களையும் மலைகளையும் பறித்து அவர்களைச் சாடிக்கொக்கரித்தனர். அப்போது எண்மர் இலட்சர் படைத்தலைவரும் இராட்சத வீரர்களும் எதிர்த்து அஸ்திர சஸ்திரங்களைக் கொண்டும் தாங்கள் தங்கள் பருவதங்கள் விருட்சங்களைக்கொண்டும் அமோகமாகக் கொடிய போரைச் செய்தனர். வீரவாகுதேவர் சீறித்தமது மகிமையான பல பாணங்களைத் தூண்டிப் பெரும்புறக்கடலுக்கு ஒப்பாக இரைந்து பரந்திருந்த இராட்சத சதுரங்க வெள்ளங்களின் பேரிற் பிரயோகித்த காலையில் அவைகள் யாவும் சின்னபின்னப் பட்டதினின்றும் எழுந்த உதிரவாரியானது பெருக்கெடுத்தோடிக் கட்லிற் பாய்ந்தது. பிணமலைகள் எவ்விடங்களிலும் குவிந்து விளங்கின. அதனை இரணியன் கண்டு பூதரை ஓடிப்பதுங்கும் படிக்குப் பலவாறிலும் சாடுவதாயினான். அதனை நீலன் கண்டு இரணியன் முன் எதிர்த்து வரச் சூரன்பிள்ளை அவன் மார்பை வேலாயுதத்தாற் பிளந்தனன், நீலன் அதைச்சட்டைபண்ணாமல் மராமரம் ஒன்றினால் இரணியன் இரதத்தைச் சாரதிகுதிரைகளுடன் சாடினான். சூரன்குமாரன் மற்றொரு தேரிற்பாய்ந்து அமோகமாகிய பாணகோடிகளினால்நீலன் சரீரத்தைச்சல்லடையாய் துளைத்தனன். அவன் வருந்தாமல் தீரனாய்க் கிரிகளைப்பறித்து இரணியன்பேரில் வீசிவ

ரும்போது அவன் அவைகளைப் பொடிசெய்யப் பூதத்தலைவன் கோபித்து இரணியனுடைய தேரைஎடுத்து வானத்தில் வீசிவிட்டனன். அதுவாயுமண்டலம்வரை போய்த்திரும்பிப் பூமியில் விழுமுன் இரணியன் நிலத்திற்பாய்ந்து மற்றொருதேரிலேறப் போகின்ற சமயத்தில் நீலன் அவன்மார்பில் அறைந்தனன். இரணியன் அஞ்சாமல் நீலனைவானத்தில்வாரிஎறிந்தனன். அவன்பூமியைத் திரும்பவந்தடைந்து தனதுகாலினால் இரணியன் மார்பில் உதைத்துத்தள்ளி அவன் சிரசிலும் மார்பிலும் மிதித்துத்தேகத்தை நறுக்கியபோது அசுரகுமாரன் தப்பிக்க வழியின்றி விழித்துச் சௌரவமாய மந்திரத்தை உச்சரித்தவுடன் அதற்குரிய தேவதை இரணியனைப்போல உருக்கொண்டு பெரிய கோரரூபத்துடன் கொக்கரித்து வீரங்களைப் பேசிக்கொண்டு சண்டைக்குவருவதனை நீலன் கண்டு செத்தபிணத்தின் தண்டமொன்றைத் தன் கரத்திலெடுத்துக் கொண்டு வீறிவந்த மாய வடிவத்தின் சிரத்தின்மேல் மோதினன். மாயவுருவானது வானத்தில் தோன்றி உன்பிராணனை வாங்குகிறேனென்று வீரங்கள் பேசுவதை நீலன் கண்டு கோபித்துக் கதையைச் சுழற்றி அதின் பேரிற்பாய அவ்விடத்தில் அதைக்காணாமல் இது என்னபுதுமை என்றிருக்கும் போது அந்த மாயவுருவானது நீலனைப் பலவிதங்களிலும் வினைக அலைச்சலுக்கு எதுசெய்தும் அவன் பயப்படாமலிருந்த சமயத்தில் முன் விழ்ந்துகிடந்த இரணியன் களைதீர்ந்தெழுந்து அவன் பேரிற் பாணங்களைப் பிரயோகித்துப் புண்படுத்துவதாயினன். அதனை வீரவாகுதேவர் கண்டு ஞானப்படையை யெடுத்துச் செலுத்தினர். உடனே அம்மாயவித்தைகள் அனைத்தும் பறந்தோடி விட்டன. இரணியன் வருத்தமுற்றுப் பின்னும் பாணங்களைப் பிரயோகித்துக் கொக்கரித்தனன். அவைகள் வீரவாகுதேவர் மார்பில்தாக்கி முனைமழுங்கி விழ்ந்தன. இவ்வாறு வீரவாகுதேவருடன் இரணியன் பலவாறுகப் போராடிப்பார்த்தும் ஒன்றும் பலிக்காததைக்கண்டு ஓஹோ! இனி இந்த எமனை ஒத்ததூதன் நம்மைக்கொல்வதிற் சந்தேகமில்லை. நமது பிதா முதலானவர்களும் இனிமாள்வது நிச்சயம். அவர்கள் இறந்த காலத்தில் அவர்களுக்கு ஈமவிதிகளை முடிப்பதற்கு ஒரு புத்திரனும் இல்லாவிடிற் சந்திரர் சூரியர் உள்ளவரையில் தீராப்பழிப்புரை நிலைபெற்றிருக்கும் இதைக்குறித்து என் பிராணனைத்தாங்கி மறைந்திருப்பது கடனாகும் எனத் திர்மானித்தவனாய் அவன் துரிதமாக வானத்

தெழும்பி மேகத்தில்மறைந்து மாயமந்திரமொன்றைச் செபித்து அதின் முயர்ச்சியினால் மீன் வடிவைப்பெற்றுக் கருநீரிற்பாய்ந்து ஒளிந்திருந்தனன். இதனைக்கண்ட வீரவாகுதேவர் வெற்றிச்சங்கத்தினை முழக்கினார். அவ்வோசையைக்கேட்ட பூதப்படைகள் ஸந்தோஷத்தில் மூழ்கி ஆர்ப்பரித்தார்கள். சிலதூதர்கள் இந்தச்சமாசாரத்தைச் சூரனிடம் ஓடித்தெரிவிக்க அவன் மானமும் கோபமும் தன்மனதை வருத்த ஒன்றும் தோன்றாமலிருந்ததருணத்தில் அக்கினிமுகன் என்னும் அவன் குமாரன் அவனிடம் வருவதாயினன்.

## "அக்கினிமுகன் வதம்"

அந்த அக்கினிமுகன் பராக்கிரமங்கள் சிலவற்றை இங்கு சொல்லுவோம். இவன் சிறுபிள்ளையா யிருக்கும்போது திக்குப்பாலகரையும் எண்கிரிகளையும் திசையானைகளையும் பற்றிவந்து பந்தாக விளையாடியும் சூரியனுடைய தேரைப் பிடித்திழுத்து வீதிகளிற் சிறுதேர் விளையாடியும் விஷ்ணுவாகனமாகிய கருடனையும் பிரமதேவன் வாகனமாகிய அன்னப்பட்சியையும் பிடித்து வந்து அவைகளை ஒன்றுடனொன்று சண்டைவிட்டு வேடிக்கை பார்த்தும் சந்திரனைப் பிடித்துக் காவலில்வைத்தும் இத்தகைய அரிய சூரத்தனங்களையும் மகாபாதகங்களையும் செய்பவனும் முகத்தில் எப்போதும் சுவாலை வீசிக்கொண்டிருக்கும் காரணத்தால் அக்கினி முகனென்னும் பேரையுடையவனாகவும் இருந்தான். இந்தப்பாதகன் துக்கத்தின் மூழ்கியிருந்த தன் பிதாவைக்கண்டு ஐயனே! இவ்வித த்துக்கத்துக்குக் காரண மென்னவென்று வினவச் சூரன், புத்திரசிகாமணியே! என்று ஆதிமுதற் சகல சம்பவங்களையும் எடுத்துரைத்தபோது அக்கினிமுகன் மகாக்கோபங்கொண்டு தனது பிதாவைத்தேற்றி இதோ இந்த நிமிஷம் அந்தச் சத்துருக்கள் அனைவோரையும் ஜெயங்கொண்டு திரும்பி வருகிறேனென்று யுத்த சன்னத்தனாய்ப் பிரயாணப் படுவதாயினன். இவ்விதம் நால்வகைச் சேனைகள் தன்னைச்சூழச் சூரன் குமாரனாகிய எரிமுகன் என்னும் வீரன் வேகமாகப் பூதப்பெருக்கின் அணித்தாக வரும்போது சிவகணங்கள் கோபித்துப் பாரித்தோங்கிய பருவதங்கள் விருட்சங்கள் இருப்புலக்கைகள் வளைதடிகள் தண்டாயுதங்கள் முதலாய படைகளைக் கரங்களில் தாங்கிக் கொதித்தேறி விளங்கி இராட்

சத சேனைகளுடன் கைகலந்து வீராவேசங்களுடன் ஒருவரை ஒரு வர் அதட்டிச் சண்டை செய்வதானார்கள்.

அத்தருணத்தில் நந்தியம் பெருமான் அம்சையில் அவதரித்திருக்கின்ற எண்மரும் இலட்சரும் கோபித்து விஷமிட்டகணைகள் முதலானவற்றைச் சோனைமாரிபோற் சொரிந்தார்கள். அவுணப்படைகள் சகிக்கமாட்டாமற் பலதிசைகளினும் ஓடி ஒளித்தார்கள். அதனை எரிமுகன் கண்டு தன் சேனைத்தலைவர்களை ஏவிவிட அவர்களில் ஒருவனுகிய மேகன் என்பவன் முன்னே எதிர்த்து வந்து வீரமாபுரந்தரனிடம் போராடிக் கடைசியில் அவனுடைய வேலாயுதத்தினுல் மாண்டுபோனுன். அதைக்கண்ட இராட்சதர் அஞ்சி ஓட்டம் பிடித்தார்கள். எரிமுகன் கோபங்கொண்டு தனது அளவிறந்த அஸ்திரங்களாற் பூதப்படைகளையும் சேனைத்தலைவர்களையும் இரதங்கள் குதிரைகள் முதலிய யாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்து மிகவும் சின்ன பின்னஞ் செய்து உதிரப்பிரவாகம் பெருக்கெடுத்து ஓடச்செய்தான். சூரன் குமாரனுடைய ஜெபத்தைக் கண்டமகவான் என்னும் பூதவீரன் காலாந்தகனைப்போல வெளிவந்ததனை எரிமுகன் கண்டு அவனுடன் போராடித்தன் விற்சாதுரியத்தினுல் அவன் மார்பையும் பிளந்து கீழேவீழ்த்தினுன். அப்போது அவன் துணைவர்கள் அனைவரும் சிறிப்பல சங்கையற்ற கொடிய பாணங்களை அந்த இராஜ குமாரன் பேரிற்பிரயோகிக்க அப்பாதகன் அவைகளை ஒன்றும் லெட்சியம் செய்யாமற் பாசுபதாஸ்திரத்தை எடுத்துப் பிரயோகித்தனன். எழுவரும் இது அக்கினி யஸ்திரம்போற் காணப்படுகிறதென்று வருணுஸ்திரத்தைப் பிரயோகஞ் செய்தார்கள். அதனைப்பாசுபதம் கவளீகரஞ்செய்து சீறிவந்தஎழுவர் சிரங்களையும் கண்டித்துப் போய்விட்டது. பூதப்படைகள் அதனைக் கண்டவுடன் பலதிக்குகளிலும் பயந்தோடி ஒளித்தன.

அக்காலத்தில் வீரவாகுதேவர் துடிதுடித்துக் கோபங்கொண்டு தன்தேரை முன்னே சண்டைக்கு நடத்தி வந்ததனை அக்கினிமுகன் கோபத்துடன் பார்த்து அவரைப் பலவாருக இகழ்ந்து இதோ உன்னை இப்போது கொன்று விடுகிறேனென்று பேசியதை வீரவாகுதேவர் கேட்டுத் தம்புஜத்தைத் தட்டி நகைத்து உன்வாசகம் வெகு நேர்த்தியாக இருக்கின்றது. பானுகோபனும் இவ்வாறு தான் பேசி

வந்து மோச மாயவித்தைகளைச் செய்தும் கடைசியில் ஆற்றுமற் பதுங்கி ஓடினன், இரணியனும் பேடியைப்போலப் பயந்து கடலில் மறைந்தான். வஞ்சத்தாற் பிழைத்துக்கொண்டிருக்கிற இவர்களுக்கு முன் நீ என்னல் மாளவந்து தோற்றினே. உன் பராக்கிரமத்தைக் காட்டலாமென்ற வளவில் எரிமுகனுக்குக் கோபம் பிறந்து வீரவாகு தேவருடன் கொடிய பாணங்களைச் செலுத்திப்போராடி அவருடைய நெற்றியிலும் காயம் படச்சாடி வெற்றிச்சங்கம் பூரித்தான். வீரவாகு தேவர் அதற்கு இளையாமற் சண்டை தொடுத்த காலையில் அக்கினிமுகன் வாயுவஸ்திரம் இயமாஸ்திரம் சூரியாஸ்திரம் இவைகளை ஏவ, அவைகளையெல்லாம் வீரவாகுதேவர் போக்கி மேலும் பாணங்களைச்செலுத்தி அவன் வயிரமார்பைத் தடாரித்து உருவிப்போகச் செய்தனர் எரிமுகன் சுதறிக்கொண்டு கீழேவிழுந்தான். சில நேரம் சென்று அந்தப்பாதகன் களைப்பு நீங்கி எழுந்து இந்த வீரனைச்செயிக்க முடியாதென்று எண்ணித்தனக்குப் பாலப்பருவத்தில் வரம் கொடுத்திருந்த பத்திரகாளியை நினைத்து அந்தச் சமயத்தில் உதவி செய்ய வேண்டுமென்று அவளை தியானிக்கலாயினன். அந்தத் தேவதையானவள் ஓங்காரித்த அதிர்ச்சியுடன் சிங்கவாகனத்தில் தோன்றி வீரவாகுதேவர்பேரில் மழுப்படையைப் பிரயோகித்தனள். அதைத் தேவர் துண்டமாகவெட்டி எறிந்தனர். காளி கோபங்கொண்டு மற்றொரு சூலத்தைச் சுழற்றி எறிந்தனள். அதையும் தேவர் துகள்படச்செய்தனர். பத்திரகாளி அதைப்பார்த்துச் சீறித்தன் சிங்கவாகனத்தை விட்டுக்குதித்துக் கொக்கரித்து மின்னலைப்போல இடம்வலமாகச் சுழன்று வீரவாகுதேவர் தேரிற்பாய்ந்து வரும்போது தேவர் இடியைப்போலக் கர்ச்சித்து அவள் எட்டுக்கரங்களையும் இறுக்கிப்பிடித்து மற்றத் தன்கரத்தினுற் பிரளய விடியைப்போல அவள் மார்பினிடத்தில் அறைந்த தருணத்தில் அவள் மரண மூர்ச்சையடைந்து தேரில் விழுந்தாள். அப்பாற் சற்றுநேரத்திற் காளியானவள் களை தெளிந்து எழுந்து துக்கமும் மானமும் தன் மனதைவாட்ட வீரவாகுதேவர் கோபந்தணிய இதனைச் சொல்வதாயினள். ஓ வீராதி வீரனே! நான் முன் பானுகோபனுக்குக் கொடுத்தவரப்படிக்கு நான் உன்னோடு எதிர்த்துப் போராடும்படிக்கு வந்தேனே ஒழிய வேறில்லை. நீ இப்போது எனக்குச் செலவு கொடுப்பாயானுல் என் இருப்பிடம்

போய்ச்சேருவேன். நீ இனி அக்கினி முகனைக்கொன்று சுகஜீவியாய் வாழக்கடவை யென்று சொல்லித் தன் இருப்பிடம் போய்ச் சேர்ந்த னள். அதைக்கண்ட அக்கினிமுகன் காளியை இகழ்ந்து பேசி வீர வாகுதேவர் ஏறியிருந்ததேரைத் தன் பாணங்களினுற் பொடியாக்கி த்தள்ளினன். தேவர் கோபங்கொண்டு அசுரன் கையில்லைப் பாணத் தால் வெட்டி யெறிந்தனர். அசுரன் வேறுவில்லெடுத்துப் பிரமாஸ்தி ரத்தைப் பிரயோகித்தனன். அது பலமகிமைகளைக் காட்டி வரும் போது வீரவாகுதேவர் வீரபத்திராஸ்திரத்தைத் தூண்டி விட்டனர். அதைப் பிரமாஸ்திரங் கண்டு நடு நடுங்கி நாணித்திரும்பி விட்டது. உடனே வீரபத்திரப்படை சிறிவேகமாய்ப் பாய்ந்து அக்கினிமுகன் சிரங்கள் பத்தையும் கண்டித்து அவன் பிராணனைக் கொண்டு வான த்திற் கிளம்பி ஆகாயகங்கையில் மூழ்கித்திரும்பி வீரவாகு தேவரிடம் வந்து சேர்ந்தது. தேவர்கள் ஆனந்தக்கூத்தாடிக் கற்பகமலர்களை வாரி வாரி அவ்வையனை வாழ்த்திச் சொரிந்தார்கள். அவுணப்படைத் தலை வர்கள் இருபதினுயிரம் பேர்களும் அந்த வெற்றியைக் கண்டு புலம்பி அழுது பின்ரவுத்திரா காரமாகக் கோபித்து இந்த வீரனைவளைத்துக் கொன்று பழிவாங்க வேண்டுமென்று தேவரைச் சூழ்ந்து கூடிக் கொண்டு பல விதங்களாகப் போராடிய சமயத்தில் வீரவாகுதேவர் காலாந்தகனைப்போற் சீறித் தமது அமோகமாகிய பாணங்களினல் அவர்களனைவோர்களையும் சதுரங்க சேனைகளுடன் ஒரு நொடிப் போதில் மடித்து எங்கும் இரத்த வெள்ளம் பெருக்கெடுத்தோடும் படிக்குச் செய்து விட்டனர். அப்போது பிராணபீதியினுற் புறங் காட்டிப் பதுங்கிக் கொண்டிருந்த அவுணர்கள் தங்கள் வீரமாமயேந் திரபுரியை நோக்கி ஒட்டம் பிடிப்பதானுர்கள். வீரவாகுதேவர் பிர ளய காலருத்திரனைப்போலச் சமர்களத்திற் போரைமுடித்துநாரியை இறக்கி வில்லை யூன்றிக்கொண்டு மனவெழுச்சியுடன் இருக்குந் தரு ணத்தில் இராட்சதப்பாதகரால் வருந்தியிருந்த இலட்சர் படைவீரர் பூதசயினியங்கள் அனைவரும் வந்து அவரைச் சேர்ந்ததோடு முன் அக்கினிமுகனுல் மார்புபிளக்கப்பட்டு வீழ்ந்த வீரமாபுரந்தானும் தன் சோபம் நீங்கித்தன் தமயனுகிய வீரவாகுதேவரை வந்தடை ந்தனன்.

இவ்விதமாக வீரவாகுதேவரைச் சூழ்ந்திருக்கின்ற காலையில் தமது மற்ற ஏழு சகோதரர்களையும் காணாமையால் தேவர் வருத்தத் தினாற் படைவீரர்களைப் பார்த்து இதனைச் சொல்லுவதாயினர். நம் இளையவர் எழுவரும் சூரன் குமாரனால் மாளப்பெற்றனரோ! அல்லது மரணமூர்ச்சை தெளியாமல் தூரத்திற் கிடக்கின்றனரோ! என் ஆசைத்துணைவர் எவ்விடத்திருக்கின்றனர் என்றுகேட்டவுடன், உக்கிரன் என்னும்பூதவீரன் தென்பாரிசத்தில் நூறுயோசனை அளவையிற் பெரியதோர் வடவாலவிருட்சத்தின் அருகே அவர்கள்விழுந்துகிடக்கக்கண்டேன்என்று சொன்னதைக்கேட்டவுடன் தேவர் பதைபதைத்துக் கிலேசித்துச் சகோதரசம்பந்தத்தால் தம்மைச்சூழ்ந்தவர்களெல்லாரும் துக்கிக்கும்படிக்குப்புலம்பி அழுது அத்தலத்தினைக்காட்டென்று சகலரும் தம்மைத் தொடர்ந்து வரச்சென்று அவ்விடத்தில் தம் துணைவர் மாண்டு கிடப்பதனைக் கண்டு அவர்கள் மேல்விழுந்து கல்லும் உருகப் பல பல வாறுகப் பிரலாபித்துக் கடைசியில் அவர்களைத்தாம் எழுப்புவதாக நிச்சயித்து உயிரைக்கொண்டுபோன எமனைக் குறித்து இவ்வாறு பேசுவதாயினர். சிவபிரான் நுதல் விழியிற் சோதிமயமாகத் தோற்றிப் பிரணவப் பொருளைச் சொல்லத்தெரியாத பிரமனைக் காவற் படுத்திச் சிருஷ்டித் தொழிலை நடாத்திய குமாரதேவருடைய துணைவர் என்பதனைக் கூற்றுவன் அறியானோ? மார்க்கண்டேயன், விபுலன், பிங்கலன் என்னும் வேடுவன், குச்சகன் இவர்கள் விஷயத்திற் பட்டபாடுகள் அனைத்தும் தருமனுக்கு யாபகமில்லையோ! சண்முகப் பெருமானுக்கு அந்தரங்கப் பத்தர்களாயிருக்கின்றவர்களுடைய பிராணனையும் நமனனவன் வாட்டிக்கொண்டு போகத்துணிந்தான் என்று இவ்விதங்களாகக் கோபித்துத் தேவரானவர் ஓர் திவ்யபாணத்தை எடுத்து அதின் அலகில் தம்நகத்தினால் இயம தருமனுக்கு இவ்விதம் திருமுகம் எழுதுவதாயினர்: வெற்றி வேலாயுத மூர்த்திக்கு இளவலாகிய வீரவாகு, வைவச்சுதப் பட்டணத்திற்கு அதிபனான செங்கோற் கடவுளுக்கு அறிவிப்பதென்னவென்றால், நமது துணைவர் எழுவர் பிராணனையும் கிரகித்துக் கொண்டு போயினாய்! இது தகுதியோ? உடனே அவர்கள் ஜீவான்மாவை இவ்விடம் சேர்க்கக்கடவையென முடித்து அப்பாணத்தைத் தன் வில்லிற் பூட்டித் தேவர், குமாரதேவரை வாழ்த்திப் பிரயோகித்த

காலத்தில் அது மனோவேகத்திலும் மேலிட்டுப் பறந்து எமபுரம் சேர்ந்து அங்குகொலுவிருக்கும் தருமன் எதிரிற் போய்நின்றது. எமராஜன் அதைக்கண்டவுடன் அதிசயித்து அதைத் தன் காத்தில் ஏந்திவாசித்து மனம் நடுக்குற்று வீரவாகுதேவருடைய துணைவர் இவ்விடம்வரவில்லையே என்று தன் மகிஷவாகனத்திலேறிச் சூறைமாருதத்தைப்போல வெள்ளியங்கிரியைச்சேர்ந்து பூங்காவுகளிலொன்றில் எழுவரும் களித்திருக்கின்றதைக் கண்டு ஐயரே! உமதுதமயன் வருந்தி உங்களைத்தேடி அலைவதாக நீங்கள் இந்த வைபவங்களை அனுபவித்திருப்பது தகுதியோ! மேலும் என்பிராணனுக்கு வந்திருக்கிறது. ஆதலால் துரிதமாய்த் தமயனிடத்திற்கு வரவேண்டுமெனப் போற்ற அவர்கள் சேனைத்தலைவர்களுடன் அத்தலத்தை நீங்கித்தங்கள் சரீரங்களிற் பொருந்தி நித்திரை தெளிந்தவர்களைப்போல் எழுந்தனர். இச்சுபகரத்தைக் கண்ட தேவர்கள் புஷ்பமாரி பெய்தார்கள். எழுவரும் ஓடித்தம் தமயன் திருவடிகளிற் பணிந்த காலையில் வீரவாகுதேவர் ஆனந்தவாரியில் மூழ்கினவராய் அவர்களைத் தழுவி உல்லாசமாயிருக்கின்ற சமயத்தில் தருமராஜன் இளையபெருமாளுக்குச் சமீபத்தில் வந்து சேவித்து அடியேன் மேற்கோபங்கொள்ள வேண்டாமென்று சங்கதிகளை இயம்பி அவருடைய ஆசீர்வாதத்தைப் பெற்றுச் சென்றனன். இச்சம்பவங்கள் அனைத்தையும் பார்த்திருந்த அவுணதூதர்கள் சூரபதுமன் பாதாரவிந்தங்களிற் போய்விழுந்து தங்கள் விழிகளில் நீரைப்பெருக்கிப் புலம்பிச் சுவாமி! தேவரீர் திருக்குமாரனாகிய அக்கினிமுகன் அகோர யுத்தங்களைச் செய்து வீரவாகுதேவரால் மடிந்தனன் என்று சொன்னவுடன் அவனுக்குப் புத்திரசோபம் மேலிட்டுப் பெருங்காற்றின் மோதலினாற்சாயும்பனையைப் போலச் சோர்ந்து குப்புறவிழுந்து புத்திரனை நினைந்து நினைந்து பிரலாபிக்கலானான். அத்தருணத்தில் அக்கினி முகனைப்பெற்ற பதுமகோமளைபந்துவர்க்கங்கள் மந்திரி பிரதானிகள் சேனைத்தலைவர் முதலானவர்கள் முகத்திலும் வாயிலும் வயிற்றிலும் அறைந்து கொண்டு கடல் உடைந்ததை நிகர்த்துக்கதறிய விதங்களைச் சொல்லவும் முடியுமோ?

"மூவாயிரர் வதம்."

இந்தப் பிரகாரம் சூரன் முதலானவர்கள் வருந்துகின்ற செய்தியை அவனுடைய மூவாயிரம் பிள்ளைகள் கேட்டவுடன் அவர்கள்

மானமும் கோபமுங்கொண்டு தங்கள் பிதாவினிடத்திற்கு வந்து அவனுக்குப் பற்பல தயிரியங்களை யெல்லாம் எடுத்துரைத்து அவன் துக்கத்தைப் போக்கித் தங்களுக்கு யுத்தத்திற்குச் செலவு கொடுக்க வேணுமென்று அவனிடம் உத்தரவுவாங்கி அவர்கள் அனைவோரும் போர்க்கோலங் கொண்டு சதுரங்க சேனைகளும் பெரும்புறக்கடலைப் போல ஆர்ப்பரித்துத் தங்களைச் சூழ்ந்து இரணக்களவெல்லைக்குச் சமீபத்தில் மேலிட்டுவருவதனைப் பூதவீரர் கண்டவுடன் பாதகர்மேலும் மேலும் வருகின்றனரென்று மகாக்கோபங்கொண்டு இராட்சதப் படைகளுடன் கைகலந்து பற்பல விதங்களாக அகோரயுத்தஞ்செய்த காலையில் இருதிறச் சயினியங்களிலும் அனேகர் மாண்டார்கள். இதைக்கண்ட மூவாயிரம் இராஜகுமாரர்களுக்கு அதிகக்கோபம் பிறந்து தங்கள் தனுசுகளினின்றும் பாணவருஷங்களைப் பொழிந்து பூதரைவாட்டும்போது பூதத்தலைவர்களும் உக்கிரமாய்த் தங்கள் வில்லுகளில் அளவிறந்த சரங்களைச்சந்தித்து விட்டுப்பெரிய போராட்டம் செய்தார்கள். இலட்சரும் பகைவர் முனையில் வந்து சேர்ந்து தம் பாணங்களை வருஷித்துக் கர்ச்சித்ததனை மூவாயிரவர் கண்டு கோபித்து அவர்கள் ஏறியிருந்த தேர்கள் அனைத்தையும் பொடிப்படுத்திக்கொக்கரித்தனர். அக்காலத்தில் இலட்சர்கோபித்துச் சரங்களைத் தூண்டி மூவாயிரவர் தனுசுகளைக் கண்டித்துப் புரவிகளுடன் தேர்களையும் தும்சஞ்செய்து சிருங்கநாதம் செய்தனர். பின்னும் அவர்கள் மேலிட்டுவருவதனை இலட்சர்கண்டு பலவாறாக அவர்களுடன் தங்கள் சயினியங்களுடன் கலந்து கருங்கடலும் திருப்பாற்கடலும் பகைத்துத்திரைகளை வீசிக்குமுறிப் போராடுவதைப்போல இருதிறத்தவரும் கொதித்து இடசாரி வலசாரியாக யுத்தஞ்செய்த காலையில் மூவாயிரவர் செய்த அனர்த்தங்களினால் வீரர் வலிகுறைந்து விஜயனென்பவனைத்தவிர மற்றவர் பின்னிட்டனர். சிவபிரானுடைய அநுக்கிரகத்தைப் பெற்ற விஜயனென்பவன் மூவாயிரவரைச்சாடிச் சாடிக்கொன்றபோது அவர்களனைவோரும் பிரமனுடைய வரமுயற்சியினாற் பழயபடிக்குத் தேகங்கள்கூடி உயிர்பெற்றெழுந்து வந்து வந்து போராடுவதனால் விஜயன் கைகால் ஓய்ந்து பிரமித்து இதற்கு என்ன செய்வேனென்று கலங்கி எமதையனாகிய சிவசுப்பிரமணியக் கடவுளைத்தியானித்துத் தன்குறைகளை முறையிட்டுப் போற்றுவதைக் கிரு

பாவிதியாகிய சண்முகப் பெருமான் அதனை திருவுள்ளத்திலறிந்து விஜயன் விழிகளுக்கு மட்டும் தோற்றுவதாகி அகோரவீரபத்திராஸ்திரத்தை அளித்து மறைந்தனர். விஜயன் அவ்வஸ்திரத்தைத் தொழுதுவாங்கிய சமயத்தில் மூவாயிரவரில் ஒருவன் மாயப்படையைச் செலுத்திவிட்டனன். அது மேலிட்டுவருவதனை விஜயன்கண்டு தனது வீரபத்திராஸ்திரத்தைப் பூசித்துச்செலுத்தினன். அதுவெளிப்பட்டவுடன் பகைவன் படையினது மாயைப் பெருக்கினையும் கவளீகரஞ்செய்து மூவாயிரம் இராஜகுமாரர்களையும் வாட்டிக்கொன்று வானகங்கையில் முழ்கிவீரனிடந் திரும்பிவந்து சேர்ந்தது. தேவர்கள் அவ்வீரன் புகழைக் கொண்டாடிக் கற்பகமலர்களைச் சொரிந்தார்கள் இக்காரணங்களைத் தப்பியோடிய இராட்சதர் சூரனுக்குத் தெரிவித்தகாலையில் அவன் புத்திரசோபத்தில் அழுந்தி மற்றனைவோர்களுடன் புலம்பிப் பிரலாபித்துக் கொண்டிருந்தான்.

## "தருமகோபன் வதம்."

அந்தச் சமயத்தில் தருமகோபனென்னும் பெரிய மந்திரி வந்து இராஜாதிராஜனைச் சேவித்துத் தேவரீர் திருவுளத்தில் இத்தகைய சோபத்தைக் கொண்டிரானுற் சத்துருக்கள் கரங்களைக்கொட்டி நகைத்து பேசுவார்கள். எது வந்தாலும் லெட்சியமின்றி வெற்றியை அடைய வேண்டிய நம்மவர்கள் உயிரை அஞ்சாமற் கிரகித்துப்போன எமன் எங்கே தப்பிப்போகப் போகிறன். திரும்பச் சிருஷ்டிக்கப் பிரமனும் காத்துக்கொண்டிருக்கிறுன் என்று இவ்விதங்களில் தேற்றிய காலத்திற் சூரன் சோபங்கொஞ்சந்தீர்ந்து பின் திடீரென்றெழுந்து இதோ சத்துருக்களை நானேவென்று திரும்புவேனென்று பாதசாரியாகச் சென்ற சமயத்தில் தருமகோபன் சூரனுக்கு எதிர்சென்றுதாழ்ந்து தேவரீர் அடியேனுக்கு அதைக் கட்டளையிட்டருள வேண்டுமென்று வரதிவாங்கித் தனக்கு இளையமந்திரிகள் சகிதம்யுக்தானனுதனுப்ச் சகல சயினியங்களுடன் பிரயாணித்துத் தனதுபுண்டரீகமென்னும் யானையின் பிடரியில் இந்திரனைப்போல் ஆரோகணித்து வருவதாயினன் அதனை எதிர் பார்த்துக்கொண்டிருந்த பூதவீரர்களின் விருப்பையும் படைவீரர் சொருக்கையும் இலட்சர் கெம்பீரத்தையும் என்மர் சௌரியங்களையும் வீரவாகுதேவர் வீரசிங்கத்தைப்

போல் தனுர்ப்பாணியாய் விளங்குவதனையும் வந்த தருமகோபன் கண்டவுடன் மதிமயங்கி இன்று நாம மடிவது நிச்சயமென்று நினைத்து அப்பால் தன் மனதைத்திடஞ் செய்து கொண்டு சேனைகளுக்கு மத்தியில் நடந்தனன். உடனே இரவும் பகலும் எதிர்த்ததைப்போலக் கொடிய இராட்சதச் சேனைகளும் நல்லொழுக்கமுள்ள பூதப்படைகளும் நெருங்கி வடவைபோற் சீறிக்கடலும் அஞ்சக்கொக்கரித்துச் சண்டைசெய்யத் தொடங்கினர்.

அக்காலையில் இருதிறச்சேனைகளிலும் அனவற்றவர்கள் மடிந்து போனார்கள். பின் மந்திரிகள் சிலருக்கு ஆற்றாமல் இலட்சரிற் சிலர் வலிகுன்றிப் போனதைக்கண்ட வெய்யவனென்னும் பூதவீரன் மற்ற மந்திரிக் கூட்டமனைத்தையும் நிலத்திற் புரளவாட்டி வெற்றி கொண்டனன். புண்டரீகமென்னும்யானையானது கோபங்கொண்டுகுமுறித்த தனது துதிக்கையாலும் கால்களாலும் நாலு கொம்புகளாலும் கணக்கிறந்த பூதர்களை அமோகமாகச் சாடிக்கொன்று வீறுப்புடன்வருகின்றதை இந்திரனென்னும் பூதவீரன் எதிர்த்து ஓர் பாணத்தினால் அதன் மத்தகத்தைப் பிளந்தனன். அந்த யானையின் சோபத்தைக் கண்ட தருமகோபன் இந்திரனுடன் போராடி அவனை மரணமூர்ச்சையாக்கிவிட்டனன். வீரவாகுதேவர் அதைக்கண்டுதருமகோபனுக்கு முன்வர அவன் தனது வேலொன்றையெடுத்து அவர்பேரில் விடுத்தனன். தேவர் கொடிய பாணங்களைச் செலுத்தினர். அவைகள் வேலைப்பொடியாக்கித் தருமகோபன் மார்பையும் ஊடுருவிச்சென்றன. உடனே அவன் மயங்கியிருந்தனன். அதைக்கண்ட புண்டரீகம், தேவருடையதேரின்பேரில் வந்துமோதியது. தேவர் அந்த யானையின் துதிக்கையைப்பிடித்து அதின்மத்தகத்தில் தாக்கிச்சுழற்றி மேலேவீசினர். அதன் பேரிலேறியிருந்த தருமகோபனுடன் அது உயரப்போய்க் கீழேவிழுந்து சோபமடைந்தது. தருமகோபன் மூர்ச்சையடைந்து பின் தெளிந்து வச்சிராயுதத்தைக் கரத்திற்கொண்டு தேவர் மார்பில் வீசினன. வீரன் அதனைத்தமது திருக்கரத்தினாற் பற்றி வலிகொண்டுபகைவன் மார்பில்மோதினர். அத்தாக்கலில் அவன் ஓவென்னும் இரைச்சலுடன் நிலத்தில் விழுந்தான். தேவர் உருத்துத்தமது வலிய காலினால் அவனை உதைத்து உருட்டியபோது அவன் தலைபிளந்து

உதிரங்களைக் கக்கிக்கொண்டு மாண்டனன். அத்தருணத்திற் புண்டரிகமானது சோபம் நீங்கிக்களித்து வீரவாகுதேவரை வந்துபணிந்து அடியேன்மீது கோபங்கொள்ள வேண்டாம் நான் அஷ்டதிக்குயானைகளில் ஒன்று இந்தப்பாதகன் என்னைப் பலவந்தமாகப் பிடித்துத் தனக்கு வாகனமாகக்கொண்டு சகலரையும்வென்று அவர்களைச்சிறையிலும் அடைத்து இம்சித்திருந்தான். இப்போது நான் தேவரீரைத் தெரிசிக்கப்பெற்றுக் கிருதார்த் தனுமானேனென்று அவரிடம்உத்தரவு வாங்கிக்கொண்டு தன்இருப்பிடம் சேர்ந்தது. இச்சம்பவங்களைத் தூதுவராற் சூரன் கேள்விப்பட்டுச் சித்தம்கலங்கி அசைவற்றிருந்தனன்.

"பானுகோபன் வதம்."

சூரன் திகைத்திருக்கின்ற சங்கதியைப் பானுகோபன் கேள்விப்பட்டுத் தன்பிதாவினிடம் வந்து ஐயனே! எனது வார்த்தைகளைச் சற்று கோபங்கொள்ளாமற் கேட்டருளவேண்டும். நான் மாயைப்படையாற் சத்துருக்கள் அனைவோரையும் சுத்தோதகத்திற் சேர்த்து வைத்திருந்ததனைச் சுப்பிரமணியன் தனது வேலினால் தருவித்துக்கொண்டனன். இரண்டாம்நாள் தேவரீரே அவனுடன் யுத்தத்திற்குப் போய்த்தோற்றுத் திரும்பிவந்தீர். தாருகனையும் கிரவுஞ்சனையும் அவன் வேலினாற் பிளந்தெறிந்தனன். பல பிள்ளைகளையும் பந்துக்களையும் வலியமந்திரிகளையும் கணக்கிலடங்காத சதுரங்கசேனைகளையும் அநியாயமாய்ப் பறிகொடுத்தீர். இனிமேலும் குமாரசுவாமியைப் பகைத்துக்கொள்ளாமல் தேவர்களின் சிறையைத் தவிர்த்துக் கிருபாநிதியாகிய கந்தசுவாமியினிடமும் பலவரங்களைப் பெற்று நாம் வெகுகாலம் ஜீவித்திருக்கலாமென்று எடுத்துச்சொல்லிய பானுகோபன் பேரிற் சூரன் கோபங்கொண்டு இன்னும் வலிதுறைந்திருப் பேனாயினும் சீர்த்திகுறையும் படிக்குத் தேவர்களைச் சிறைவிடுவிப்பேனோ! மானத்தைப் இழந்து பழிக்காளாவேனோ! பாலனுக்கும் தூதனுக்கும் பூதங்களுக்கும் அஞ்சி நல்லவார்த்தை சொல்லவந்தாய்! நீ போகங்களை அநுபவித்துச் சுகமாய்ப்போய் உன் அரமனையில் வாழ்ந்திருக்கலாமென்றான். பானுகோபன் விதிவலியை வென்றவர்கள் யாருமில்லையென நிச்சயித்துக்கொண்டு பிதாவே! என்பேரிற் கோபங்கொள்ளவேண்டாம். இதோ நிமைப்போதிற் சத்துருக்களை வென்று வருகிறே

னென்று அவனுக்குத் தேருதலை சொல்லித்தான் போர்க்கோலங் கொண்டு பெரும் புறக்கடலையொத்த சயினியங்களையும் திரட்டிக்கொண்டு யுத்தபூமியில் வந்து சேர்ந்தான்.

அப்போது இருசயினியங்களுங் கலந்து போராடி இராட்சதர்கள் பூதருக்கு ஆற்றாது பின்வாங்கி யோடுவதாயினர். பானுகோபன் அதைக்கண்டு தனது வில்லிற்சோனைப் பெய்யலைப்போலப் பாண கோடிகளைப் பிரயோகித்துப் பூதர்களை நிலைகுலைத்தனன். வீரவாகு தேவர் அந்த வெற்றியையும் இராட்சதசேனைகள் மேலிட்டுவருவதனையும் பார்த்துத் தமது சரவருஷங்களைப் பெய்து பானுகோபனுடைய சதுரங்க சயினியங்களையும் ஏககாலத்திற் சின்னபின்னப்பட வாட்டினர். சூரியகாதகன் கோபங்கொண்டு வீரவாகுதேவருக்குமுன் வந்து அடா தூதனே! நமதுசமுத்திம்போன்ற சதுரங்கசேனைகளையும் முன்பின் பாராமற்கொன்றனை. இதோ உன்னைக் கொல்லுகிறேனென்று ஆயிரங்கணைகளையேவி வீரவாகுதேவர் மார்பில் ஊடுருவிச்செல்லவிட்டான். அதைத்தேவர் பாராட்டாமல் தயிரியமாகக்கர்ச்சித்து ஆயிரம் பாணங்களை யேவிப் பானுகோபன் புயங்களைச் சல்லடையாகத்துளைத்தனர். உடனே பானுகோபன் நூறு அர்த்த சந்திரங்களினுல் தேவருடைய கரவில்லைக் கண்டித்தெறிந்தனன். வீரன்திடசித்தனுய்க் கூரிய வேலொன்றெடுத்துவிட அது பாதகன் நெற்றியில் தடாரித்து உருவிப்போக அவன் கணப்போது மதிமயங்கி நின்றனன். தேவர் வேறு வில்லெடுத்து வாயுவாஸ்திரத்தை விடுத்தனர். பானுகோபன் தெளிந்து வாயுப்படையையே போக்கி அதை மறித்தனன். உடனே வீரன் சிறி ஆக்கினே யாஸ்திரத்தை விட்டனர். பானுகோபனும் அந்தத் தேவபாணத்தையே விட்டு அதைத்தமித்துக் கைவேகமாகச் சூரியாஸ்திரத்தைப் பிரயோகித்தனன். தேவர் அதைக்கண்டித்து விட்டனர். பானுகோபன் சிறிப்பிரமசரோருகப்படையை யெடுத்துவிட அது குமுறிக்கொண்டு வருவதனைத் தேவர் கண்டு தாமும் அதேபடையை யெடுத்து விட்டனர். அவைகளிரண்டுங் கொடிய போரைச்செய்து திரும்பி விட்டன. இராஜகுமாரன் கோபித்து இதனுல் நாசமடையக்கடவையென்று நாராயணுஸ்தியத்தைப் போக்கினுன். தேவர் துரிதமாய்க் கேசவன்படையைப் போக்கினுன். அவ்விரண்டும் சொல்லிமுடியாத போரைச்செய்து மின்னலைப்போல் மறைந்துபோயின.

அதைக்கண்ட பானுகோபன் மனம் வருந்தி ஜகன்மோகன மந்திரத்தை உச்சரித்துத் தேருடன் யாவருக்குந் தெரியாமல் மறைந்து கொடிய பாணங்களை ஒன்றின்மேலொன்றாகச் செலுத்தத் தொடங்கினன். பாதகன் தூவுகின்ற வாளிகளினால் வீரவாகுதேவர் எண்மர் இலட்சர் பூதப்படைகள் தங்கள் தேகமுழுதும் உதிரவெள்ளம் பெருக்கெடுத்து வருந்துவதானார்கள். தேவர் கோபங்கொண்டு ஞானப்படையைப் பிரயோகித்தனர். உடனே இராஜ குமாரன் மாயவஞ்சகங்களெல்லாம் பறந்தோடிப் பானுகோபனும் ஆகாயத்தில் இரதாரூடனாகத் தென்பட்டான். தேவர் ஆகாயத்திற் கிளம்பி அவனைச் சந்தித்து அடா கள்வனே! உன்னைக் கொல்லாமல் விடேனென்று பின் ஒருவர்க்கொருவர் சரமாரிகளைச் சொரிந்து இடசாரி வலசாரியாகச்சுழன்று கடும்போரைச் செய்தகாலையில் ஆகாயவாசிகள் இவர்களின் சௌரியங்களுக்கு'இணைஎவருமில்லை இப்படியுத்தம்எங்கும்கண்டதும் கேட்டதும் இல்லை எனக்கொண்டாடினார்கள். அக்காலையிற் பானுகோபன் மிஞ்சித் தேவர்கரவில்லைக் கண்டித்தனன். தேவர் வேறு வில்லெடுத்து அவன் தேரைப்பொடி செய்தனர். பாதகன் தேவர் மார்பைத் துளைத்துத் தன் தோளைத்தட்டினன். தேவர் வருந்திக் காலாந்தகனைப்போற் சீறிப் பானுகோபன் வயிரமுடியினைப் பொடியாக்கினர். பானுகோபன் தேவருடைய வயிரக்கவசத்தைக் கண்டித்தெறிந்தனன். தேவர் இவன் வில்வன்மை வெகு கேர்த்தியென நகைத்துப் பிறைவாளிகள் ஏழாற்பானுகோபன் கரத்தனுசை வெட்டித் தள்ளினர். பானுகோபன் வேலாயுதத்தைச் சுழற்றி வீரனைக்கொல்லக்கடவையென விட்டெறிந்தான். அது வருவதனைத் தேவர்கண்டு பல பாணங்களை அதன்பேரில்விட்டும் அவைகளை அது கவளீகரஞ்செய்து தம்பிட்ட நெருங்கிவந்தது. உடனே தேவர் தமதுஉடைவாளை உருவிக் குமாரதேவரைச் சிந்தித்து ஓங்கி அந்தவேலை இருதுண்டாக வெட்டித்தள்ளினர். அதைக்கண்ட தேவர்கள் வீரனென்பது உமக்கே தகுமெனத் தேவரைக் கொண்டாடி மலர்களைச் சொரிந்தார்கள். அதனைச் சூரன் பிள்ளை கண்டு மனம்பதைத்து இவன் சவுரியம் வெகு கேர்த்தியென ஆச்சரியப்பட்டுத் துரிதமாய் வரப்பிரசாதத்திற் பெற்ற தன் வாளாயுதத்தை உருவிக்கொண்டு மின்னலைப்போல் இடம் வலமாகச் சுழற்றித்தம்மேல் மேலிட்டுவருவதனைத் தேவர்கண்டு துரித

மாய் அளவற்றபாணங்களைச் செலுத்திப் பாதகன் மார்பைப் பத்த லாகப் பிளந்தனர்.

பானுகோபன் அந்தவருத்தத்திற்கும் அஞ்சாமல் மேன்மேலும் பாய்ந்து வந்து தேவர்கரத்தில் விளங்கியிருக்கும் மேருபோன்ற வில்லை ஓரேவீசலில் இரண்டு துண்டாக்கிப் பின்வாங்கினன். அதைக்கண்டதேவர் வீரனென்பது இவனுக்கே தகுமென்று பின் தமது வாளாயுதத்தை உருவிக்கொண்டு சூறாவளிபோலச் சுழன்று பானுகோபனுடன் வாட்போர் செய்தகாலத்து அவன் கைமிஞ்சித்தேவர் தோளில் வெட்டினன். அக்காயத்திலிருந்தும் கொப்பளித்த உதிரவெள்ளத்தைக்கண்ட தேவர்கள் பயந்து தேவர் இளைப்பரோவென்று வியாகூலப் பட்டிருக்கும்போது வீராதி வீரன் சண்முகதேவர் பாதங்களைத்தியானஞ் செய்து பாய்ந்து தம்வாளாயுதத்தினற் பகைவன் பருத்த தோளைவெட்டி நிலத்தில் தள்ளினர். பானுகோபன் பின்னடையாமல் வாளாயுதத்தை மற்றொருகரத்திற் கொண்டு உருத்துப்பாய்ந்து வருவதனைக்கண்ட தேவர் அவனைமெச்சித் துரிதமாய்த்தம் வாளை வீசி அவனுடைய மற்றக்கரத்தையும் துண்டித்தனர். பானுகோபன் வேறே சண்டைகொடுக்க வகையில்லாதவனாய் மாயைகொடுத்தபடையைப் பிரயோகிக்க நினைந்ததைத் தேவர் தெரிந்தவுடன் அதற்கிடங்கொடாமல் துரிதமாய்த்தமது வெற்றிவாளின் ஓரேவீச்சால் அவன் பாரித்த சிரத்தைக்கண்டித்துத் திடுமென்று பூமியில் தள்ளினர். இந்த ஜெயத்தைக் கண்ட தேவர்களும் ரிஷிகளும் ஆனந்தக்கூத்தாடி மலர்களை வீரவாகுதேவர் பேரிற் சொரிந்து வீராதி வீரனென்பது உமக்கே தகுமெனப் புகழ்ந்தார்கள். பூதப்படைகள் எண்மர் இலட்சர் பகைவன் தேகம் வெட்டுண்டு நிலத்தில் விழுந்ததைக்கண்டு அடங்காத ஸந்தோஷத்தாற் கூச்சலிட்டுக் கூத்தாடி வீரவாகுதேவரை வந்தடைந்து புகழ்ந்தார்கள். தேவரும் மனமகிழ்ச்சியுடன் தம்பியர் இலட்சர் முதலானவர்கள் தம்மைச்சூழ்ந்துவர இரணக்களவெல்லையைக்கடந்துபோய் நவரத்தினமயமாய்விளங்கும் பாசறையைச்சேர்ந்து அங்கு திருச்சபையிற் பிரமன் விஷ்ணு தேவேந்திரன் முதலானவர்கள் சூழ்ந்துபோற்றச் சிங்காசனத்திற் கோடி சூரியப்பிரகாசமாக வீற்றிருந்து வார்த்தையாடிக் கொண்டிருந்த சண்முகநாதரை நேத்திரோற் சவமாகத்தெரிசித்துச் சேவித்தெழுந்து போற்றி நிற்கின்ற

தமதுமனதிற் கினியதோழனைத் தேவாதிதேவன் பரிவாகப் பார்த்து ஐயனே! இரண்டு தினங்களாக மிகவும் வருந்திச் சூரன் பிள்ளை முதலாகிய அவுணவிரரைக் கொன்று உலக உபாதிகளை ஒழித்து நிலை பெறச்செய்தனை. இதைக்குறித்து மிகவும் களித்தனம். ஆகையால் உனக்கு வேண்டும் வரங்களைக்கேட்கக் கடவையெனத் திருவாய்மலர்ந்தனர். விரவாகுதேவர் கர்த்தனே! உமது கடாக்ஷமின்றி ஒருகாரியம் முடிவதுண்டோ! தேவரீர் பாதாரவிந்தங்களைப் பக்தி பூர்வமாக எக்காலத்திலும் வழிபட்டுப் போற்றும் சிறந்தவரத்தினையே விரும்பினேன் என்று வேண்டிக்கொள்ளும் துணைவன்பேரிற் கிருபாகரன் பரிபூரண கடாக்ஷத்தைப் பாலித்து உன்மனக் கருத்தின்படிக்கே தந்தனமென்று அவருக்கு அமுதவாக்களித்தனர். மற்றத் தம்பியரும் அக்குமாரவேளிடத்திற் பற்பல வரங்களைப் பெற்றார்கள்.

இவ்வைவிற்கப் பானுகோபன் களத்திற்பட்டத்தைத் தூதுவராற் சூரன் கேள்விப்பட்டுச் சிங்காதனத்திலிருந்து திடீரெனக் கீழேவிழுந்து பிராணன் நிலைபெறாமல் அலைந்து மரணமூர்ச்சியாய் அசைவற்றுக்கிடந்தனன். சபையோர்கள் பெருந்துக்கத்துடன் அவனுக்கு உபசாரங்களைச் செய்துவர வெகுநேரத்திற்குப் பின்பு அவன் விழிகளைத் திறந்து பார்த்துப் பலவாறாகப் பிரலாபிப்பதானான். அவுணவீரர் சிலர் வெட்டுண்டு கிடக்கின்ற பானுகோபனுடைய தேகத்தை யெடுத்துக்கொண்டு சூரன் முன் வைத்தழுதார்கள். இராஜ பரமேஸ்வரன் புத்திரன் உடலைக்கண்டு" கடந்துளோர்களுங் கடப்பரோமக்கண்மேற் காதல்" என்றபடிக்குத் தேகத்தின்பேரில் அடித்து விழுந்து துக்க சாகரத்தில் அழுந்தி வருந்தியகாரணங்களை இன்னவிதமெனச் சொல்லி முடிவதோ! மகன் இறந்த சங்கதியைக் கேட்டு அம்புபட்டமயிலைப் போலப் பதுமகோமளை யென்பவள் துடி துடித்துப் புலம்பிவாடினள். பானுகோபனுடைய துணைவியரும் பந்துவர்க்கங்களும் கன்றைப்பறி கொடுத்த பசுவைப்போலப் பட்டணத்துச் சனங்களுடன் ஓவெனப் புலம்பிக் கொண்டிருந்தார்கள். அது சமயத்திற் சூரன் ஆபிசாரவேள்வியை முடித்து இறந்துபோன பிள்ளைகள் முதலானவர்களை யெழுப்பக்கடவேன். அதுவரையிற் குமாரன் உடலை எண்ணெய்க் கொப்பரையிற் பதனப்படுத்தக் கடவீர்களெனக் கட்டளையிட்டு மற்றச் சிலதூது

வரைக் குறித்து என்துணைவன் சிங்கமுகனை இந்நிமிஷத்தில் அழைத்து வாருங்களெனப் பணித்தனன்.

## சிங்காமுகாசுரன் வதம்.

உடனே தூதர்கள் ஓடோடியுமோடி ஆயிரஞ்சிரங்களையுடையசிங்கமுகன் வாசஞ்செய்திருக்கும் ஆசுரமென்னும் பட்டணத்திற்குச் சென்று சூரன் தம்பியைவணங்கி அகண்டமண்டலா தீஸ்வரனாகிய தமயனார் தேவரீரை அதி வேகமாக வரும்படிக்கு எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறாரென்றார்கள். அவுணராஜன், அப்படி யென்னபுதுமை யென்றனன். தூதர்கள் பயந்து ஆதியோடந்தமாக நடந்த சவிஸ்தாரங்களை யெல்லாம் விடாமல் எடுத்துரைத்தார்கள் அவைகளைச்சிங்கமுகன் கேட்டுமானமுந்துயரமும்மேலிட்டுப்பெருமூச்செறிந்துதனதுசகலசேனா சமுத்திரங்களுடன்தானும் யுத்த சன்னத்தனாய்ப் புறப்பட்டுத் தன் தமயன் பாதாரவிந்தங்களிற்சீக்கிரம் வந்து சேவித்துத்தேவரீர் இவ்விதத் துக்கத்தையும் அனுபவிக்க வேண்டியகாலம் நேர்ந்ததோவென்று பலவாறாக எண்ணமிட்டு இதனைச்சொல்லுவான். இராஜாதிராஜனே! இப்படிச் சகலரையும் மாளக்கொடுத்துத் தனியனாகத் திகைத்திருக்கின்றீர். தமயனே! கெடுமதிகண்ணுக்குத் தோன்றாமல் இத்தகைய துன்பத்திற் கொண்டு வந்து விட்டது. ஆதியந்த மற்ற சுயஞ்சோதிக் கடவுளை மதியாமற் பாலன்பாலனென்று இகழ்ந்தபடியினாலே தான் இவ்வளவு சீரழிவுகளெல்லாம் நமக்கு வந்துற்றன. நானும் இந்த நிமிஷத்திற் சேனைப்பெருக்குடன் போய்ச் சிவசுப்பிரமணியருடைய வெற்றி வேலாயுதத்திற்குத் தப்பிப் பிழைப்பேனாகில் இவ்விடம் வந்து உம்மைக்காணப் பெறுவேனென்று அவ்விடத்தில் நிற்க மனமில்லாதவனாய் வெளிவந்து தனது மதிப்புக்கடங்காத சதுரங்க சேனைகளுடன் சகல வுலகங்களுந் தத்தளிக்க யுத்தத்தை நாடிவருவதாயினன். அதனைப் பிரமன் விஷ்ணு தேவராஜனாதியர் கண்டு நடுநடுங்கி வெற்றிவேலாயுதக் கடவுளை வந்து வணங்கிச் சிங்கமுகன் இதோ வந்து விட்டான் வந்து விட்டானென அவன் பராக்கிரமங்களையும் எடுத்துக் கூறி இவனைச் சுலபமாக நினைக்கப்போகாது கர்த்தனே! அவன் ஆணவத்தை அடக்கிக்கொன்று எங்கள் மனக்கவலையைப் போக்கியருள வேண்டுமென்று பிரார்த்தித்த காலையிற் சண்முகதேவர் அவ்

வாறே செய்யக்கடவோமென்று அவர்களைக் கைஅமர்த்தி அருகில் நின்ற தம் வீரவாகுதேவரைப் பார்த்தனர். அவர் சுவாமியைச் சேவித்து அடியேனுக்கே துணைவருடன் சென்று மேலிட்டுவரும் பகைவனை இரணக்களக்காளிக்குப் பலிகொடுத்து வரத்திருவருள் செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்த வீரன் தீரத்துக்குமெச்சிப் பகவானுனவர் அப்படியே பாதிச்சயினியங்களை அழைத்துப்போய் நீ வெற்றியுடன் திரும்பக்கடவை யெனப்பணிக்கத் தேவர் உற்சாகத்துடன் அவ்விதமே புறப்பட்டு வருவதனைக் கண்ட சிங்கமுகன் சீறி நெருங்கினன்.

இவ்விருசேனு சமுத்திரங்களும் அடர்ந்து ஒருவருக்கொருவர் பின்னிடையாமற் கடும்போரைச் செய்து இருபக்கத்தினும் அனேகர் மடிந்து குவிந்தார்கள். அத்தருணத்திற் சிங்கனென்னும் பூதவீரன் தண்டமொன்றைக் கரத்திற்கொண்டு இராட்சதசேனைகளை அமோகமாய்ச் சாடிக்கொன்று வருவதைத் தசமுகனென்னும் அவுணவீரன் கண்டு பகைவன் முனையிற் பாய்ந்து கணக்கிறந்த பாணங்களை அவன் பேரிற் சொரிந்தகாலையிற் சிங்கன் அவைகளை யெல்லாம் தன் தண்டத்தால் தட்டிவிட்டுப் பின் ஒரு அடியால் தசமுகன் மார்புக்கவசத்தைப் பொடிசெய்தனன். அவன் கதாயுதத்தைச் சிங்கன் மேல் வீசினன். சிங்கன் நகைத்து அசட்டையாய் நிற்க அது அவன்மார்பில் தாக்கிப் பொடியாய் வீழ்ந்தது. இராட்சதப் பாதகன் இவன் திண்ணியன் போற் காணப்படுகிற தென்று அடாபயலே! இதற்குத் தப்பித்துக் கொள்ளென்று கணிச்சியை எடுத்து வலிகொண்டெறிந்தான். வீரன் பயப்படாமற் பாய்ந்து அதனை ஒடித்தனன். அதனைக்கண்ட பகைவரும் அவன் வலிக்குப் பிரமித்துப் பயந்திருந்தார்கள். தசமுகன் மற்றொருகணிச்சியை எடுத்து வீசினன். சிங்கமுகன் நகைத்துச் சக்கரம் ஒன்றையேவி அதைத்துண்டாக்கினுன். அப்பால் தசமுகன் வேகமாய்ப் பாய்ந்து தனது கதையினுற் சிங்கமுகன் மார்புபிளக்க ஓங்கி அடித்தனன். சிங்கமுகன் அதைப் பொறுத்துக்கொண்டு உடனே அவன் மார்பில் வலிகொண்டறைந்த அறையினுல் தசமுகன் திடீரென வீழ்ந்து வதைத்துக்கொண்டு மாண்டனன். உடனே அருக்கனென்னும் பூதவீரன் அவுணச்சேனைகளைச் சாடிக்கொல்வதனைத் துன்முகனென்னும் அவுணவீரன் கண்டு

இவர்களை மாயைவல்லபத்தாற்கொல்வேனென்று சுந்தரபதங்கமென்னும் மந்திரத்தை உச்சரித்து அதின் முயற்சியினால் ஒவ்வொரு பூதருக்கு நூறு நூறுவராகத் தோற்றிப் படாதபாடுகளைப் படுத்திவைப்பதானதைக் கதிரவனென்னும் மற்றொரு பூதவீரன் கண்டு யோசித்து ஞானப்படையை விட்டுப்போக்கினன். துன்முகன் மாயை ஒழிந்ததற்குக் கோபித்துக் கதிரவனுடன் போராடி அப்பால் இளைத்துப்பூதர்கள் கைகொட்டிச் சிரிக்க ஓர் மாயமந்திரத்தால் மறைந்தோடி ஒளித்தனன்.

அது கண்ட சிங்கமுகன் கோபநகைசெய்து பகைவர்மீது சீறித் தன் தேரைத்துரத்தி வந்து தோற்றுவதைப் பூதர்கள் கண்டு இவன் மகா பராக்கிரமசாலி யென்றாலும் ஒரு கைபார்ப்போமென்று பர்வதங்களையும் மரங்களையும் சூலம்தண்டம் எழு மழு இருப்புலக்கை வளைதடி முதலிய படைகளையும் அபரிமிதமாகச் செலுத்திய காலையிற் சிங்கமுகன் பெருமூச்செறிந்தனன். அந்த மூச்சுவேகத்திற் பூதர்கள் வீசிய விருட்சங்கள் படைகள்யாவும் சுழற்காற்றிற் பட்ட சருகுகளைப் போல நாலுபக்கங்களிலும் சிதறிப்பறந்தோடின. அதைக்கண்ட பூதர்கள் இது வென்னபுதுமையெனப் பிரமித்து மறுபடியும் அமோகமாகப் படைகளைச் செலுத்த அவைகளும் அவன் மூச்சுக்கு ஆற்றாமற் பறந்தோடி வீணாகிவிட்டன. பூதர் கலங்கிவாடினார்கள். தேவர்கள் பட்டவருத்தமும் கொஞ்சமல்ல இப்படிக்கான சமயத்திற் சிங்கமுகன்தன்தேரை விட்டு நிலத்திற் குதித்துச் சூறாவளிபோற் சுழன்று தடவையொன்றுக்குப் பல்லாயிரம் பூதரை வாரி வாரி அற்புதமாகப் பல விதங்களிலுங் கொன்று மாய்ப்பதாயினன். அத்தொகை இவ்வளவெனச் சொல்லிமுடியாது. அந்தச் சமயத்தில் தழற்கண்ணனென்றும் பூதவீரன் முத்தலைச் சூலமொன்றை அவன் மார்பிற்கிலக்காகப் பிரயோகித்தனன். சிங்கமுகன் அதைக்கண்டு நகைமுகனாய்ச் சும்மாயிருக்க அந்தப்பாணம் வந்து அவன் மார்பிற் பட்டுப்பொடியாய் வீழ்ந்தது பூதவீரன் அவன் தவமகிமைகளை மதித்துப் பின்னும் பின்னிடையாமல் தண்டாயுத மொன்றினால் அவன் சாரதிமார்பில் தாக்கிக் கொன்று விழத்தினன். அப்போது சிங்கமுகன் கோபங்கொண்டு தனது பருவிதம் போன்ற தண்டாயுதத்தினால் விரைந்து பூதவீரன் மார்

பில் தாக்கியகாலையில் அவன் சோபமுற்று வீழ்ந்தனன். சிங்கமுகன் வேறு சாரதியை அமர்த்திக்கொண்டு மேலிடுவதைக் கண்ட சுமாலி யென்னும் பூதவீரன் ஒரு பெரிய பருவதத்தைப் பிடுங்கிப் பகைவன் மீதில் விசிக்கர்ச்சித்தான். அது சமீபித்த காலத்திற் சிங்கமுகன் தன் கரங்களொன்றினாற் பற்றித்திரும்ப அதனையே இதிவேகமாய் வீசிய போது அது பேரிடிபோல் சுமாலிமார்பில் வந்துவிழ அவன் நிலத்திற் சாய்ந்தனன். அது தெரிந்த தண்டியென்பவன் தன் பாரித்த தண்டத்தாற் சிங்கமுகன் மார்பில் வந்து தாக்க அசுரன் அதற்குச் சளையாமல் அப்பூதவீரனை அப்படியே தன்காலால் ஆகாயத்தில் எற்றிவிட்டனன் அவன் அண்டம்வரையிற் போய்த்திரும்பி வந்து சிங்கமுகன் தோள்களிடத்துக் குறிப்பாய்க் குதித்து மிதித்து உதைத்துக்கால்கள் ஓய்ந்து பகைவன் புயவலிக்குப் பிரமித்து அவ்வசுரன் கரங்கள்தோறும் பாய்ந்தும் அவற்றிற் பற்றியிருக்கின்ற ஆயுதவிதங்களிடத்துலவியும் பருத்த முடிகள்தோறும் சஞ்சரித்தும் செவிகளில் நுழைந்து நுழைந்து வெளிவந்தும் இவ்விதமாகப் பூதத்தலைவன் வலம் வருவதனைச் சிங்கமுகன் இன்னதெனத்தெரியாமல் ஈஎன்று நினைந்து ஒருகரத்தினால் தடைத்துத் தள்ளியகாலத்துக் தண்டியென்பவன் சரீரம் மிகநொந்தவனாய் வெற்றி வேற்படையின்றி அவன் மாளானென்று அப்புறம் குதித்துப் பின்னிட்டனன். அதைக்கண்ட பூதப்படைகள் மனங்கலங்கி இரணக்களத்தில் தங்காமல் ஓடி மறைந்தார்கள்.

இந்தக்காரணங்களைக் கண்டு எண்மலர் இலட்சர் வருந்தினவர்களாய்த் தமது படைவீரர்களுடன் சூரன் துணைவனை வந்தெதிர்த்துப் பலகோடிபாணங்களைப் பொழிந்தகாலத்தில் அவைகள் சிங்கமுகன் சரீரமுற்றுந்தாக்கிச் சற்றும் அவனைக் காயப்படுத்தாமல் தங்கள் கொடுமைகளடங்கி அவனைச்சுற்றிலும் பருவதங்களுக்குச் சமானமாகக் குவிந்து வருவதைப்பார்த்து அதிகப் பிரமங்கொண்டவர்களாய் இதைவிட நம்மாலாகும் போர்த்தொழில் என்னவென்று இலஜ்ஜையுடன் நிற்கின்றபோது சிங்கமுகன் இடிபோற்கர்ச்சித்துத்தன் தேரைவிட்டு நிலத்திற் பாய்ந்து பூதவீரர்களைப் பலவாறாகத் திரட்டி திரட்டி மடிக்கத் தலைப்பட்டான். எண்மரும் படாதபாடுகளை அவனிடம் பட்டு அவனுடன் சண்டை கொடுக்கப்பயந்து பின்விட்டனர்.

அவுணராஜன் பழயபடிக்குத் தேரிற்பாய்ந்து எதிர்ப்பாரின்றி விற்கரத்தனாய் மண்டியிட்டிருந்ததைக்கண்ட வீரவாகுதேவர் நினைக்கின்றனர். இச்சிங்கமுகன் செயல்கள் மிக அற்புதமாயிருக்கின்றன! நமது பாதிச்சேனைகளை நொடியிற் கொன்றுவிட்டானே! நமதுதுணைவர்களும் இவனுக்கு இளைத்தார்களே! எமது இறைவனை நிறுத்தியான் உத்ததத்திற் செயித்து வருவதாக வந்தேனே! இது சமயம் அபகீர்த்திக்கு இடமில்லாமல் ஒருகைபார்க்க வேணுமென்று தமது தேரைத்துரத்தி வந்து சிங்கமுகன் சதுரங்கசேனைகளையும் முன்பின் பாராமல் அமோகமாய்த் தமது கொடிய சரங்களாற் சின்னபின்னப் படுத்திச் சிருங்காரதஞ் செய்தனர். அக்காலத்திற் சிங்கமுகன் பிள்ளைகள் நூற்றுவரும் வந்து தங்கள் பாணவருஷங்களைச் சொரியத்தேவர் அவைகளைப் போக்கி அவர்கள் கரவிற்களையும் சேரக்கண்டித்துத் தள்ளினர். அதனைக்கண்ட நூற்றுவரும் இவனை விற்போரில் வெல்லல் முடியாதென்று ஓ! வீரனே! உனக்கு விற்போரொன்று மட்டும் பூர்த்தியாகத் தெரியும் போலிருக்கிறது. எங்களுடன் வாட்போருக்கு வாபார்ப்போமென்றார்கள். வீரன் உடனே தனது வாளாயுதத்தை உருவிக்கொண்டு நிலத்திற் குதித்துச் சூறுவளிபோற் சுழன்று சிறிவரும்போது நூற்றுவரும் தங்கள் தங்கள் வாளாயுதங்களைத் தங்கள் கரங்களிற்கொண்டு சூரியனை நேர்ந்த இருளைப்போல அவரைச் சூழ்ந்து நெருங்கித் தேவர் உறுப்புகளை நாடி நாடி ஓங்கி வெட்டும்போது வயிரமலையிற் பட்ட துரும்புகளைப்போல அவர்கள் வாளாயுதங்கள் தெறித்துப் போவதல்லது சற்றுந்தேவர் தமது திருமேனிக்கு வாட்டமின்றிப் போராடுவதைக் குமாரர்கள் கண்டு பிரமித்தவர்களாய் இதனாலும் இவனை வெற்றிகொள்வது அரிதாகையால் அனைவரும் தீரத்துடன் இவன் மேல்விழுந்து கெட்டியாய்ப் பிடித்துக் கசக்கிக்கொல்வதே காரியமென நிதானித்துச் சடுதியிற் சகலரும் தேவர்மேற் பாய்ந்து தம் கரங்களினால் அவரைச் சேர்த்துக்கட்டினர். அந்த வீரர்களின் சௌரிய பராக்கிரமங்களை என்ன சொல்வோம்! அப்போது தேவர் சிறிப்பொங்கித் திமிறி அக்கட்டினின்றும் வெளிப்பட்டவராய்த் தமது வீரவாளை வீசிவீசிக் கவிந்த அக்குமாரர்களின் சிரம் கரம் உரம் முதலிய அவையவங்களை வெட்டி வெட்டி அவர்கள் யாவரையும் காளிக்குப் பலிகொடுத்தனர். தேவர்கள் கொ

ண்டாடி வீரன் நீயே என்று வீரவாகுதேவர் பேரிற் புஷ்பமாரி பெய்து அவரை வாழ்த்தினார்கள். அதனைக்கண்ணாரக்கண்ட சிங்கமுகன் புத்திரசோபத்தால் வருந்திப்பின் கோபித்தவனாய்த் தேவர் தேரின்முன் வந்து தன் விழிகளில் தீப்பொறிபறக்க இதனைச்சொல்லுகின்றான். உன்னை நிதானிக்குமிடத்தில் ஆதியந்த மற்ற சிவகுமாரனாகக் காணப்படவில்லை. நமது சக்கிரவர்த்தியினுடைய பட்டணத்திற்குவந்து சிலகொடுமைகளைச் செய்து திரும்பிய தூதனோ? உன்னைக்கொல்லுமுன் துரிதமாகச் சொல்லக்கடவை யென்றனன். தேவர் நகைத்து அவுணராஜனே! கேட்பாயாக! நான் காளகண்ட மூர்த்தியின் திருக்குமாரருக்கு அடியானாயிருப்பவன். தூதாக வந்து சூரனுக்குப் புத்திகளைத் தெரிவித்தும் கேளாதபடியினாற் பல்லோருடன் அவன் நகரையும் துகள்கண்டு வெற்றியுடன் மீண்டேன். இப்பவும் உங்களை வேரறக்களையக் காத்திருக்கின்றேன், என்பெயர் வீரவாகுதேவனெனச் சொல்வார்கள் என்றார். சிங்கமுகன் அதனை விஷத்தினும் கடுமையாகக் கேட்டு ஏதோ உன்சாமர்த்தியத்தைக் காட்டென்று சொல்லி வாய்மூடு முன்னம் தேவர் தம்பாணகோடிகளைவருஷிக்க அவைகள் சிங்கமுகன் மார்பிற் பட்டுப்பிரயோசன மின்றி வீழ்ந்தன. அத்தருவாயிற் சிங்கமுகன் பாரித்த தண்டமொன்றை வீச தேவர் அதைப்பொடியாக்கி மேலும் சரங்களையேவ அவைகள் சிங்கமுகன் சிரங்களிற்பட்டு உபயோகமில்லாமல் மழுங்கி வீழ்ந்தன, அவுணராஜன் சூலப்படையை விடுக்கத் தேவர்கணைகளை விடுத்தும் அது அவைகளைக் கவளீகரஞ்செய்து மேலிட்டு வீரனைச் சமீபிப்பதை இலட்சரும் தேவர்களும் பார்த்து மனங்கலங்கியிருக்கும் போது தேவர் பரமசிவத்திளிடம் பெற்ற வீரவாளால் அதை ஓரே வீச்சில் வெட்டிதள்ளினர். உடனே மேலும் வீரவாகுதேவர் அதிகக்கோபங்கொண்டு இத்தோபகைவனைக் கொல்லுவேனென்று பரமசிவன் படையைப் பூசித்து விடலானார்.

அந்தப் பாசுபதமானது வெளிப்பட்டவுடன் அதிக மகிமைகளைக்காட்டி மேலிட்டுவருவதனைக் கண்ட சிங்கமுகனுனவனதுபாசுபதத்தையும் எடுத்து விட்டனன். அவைகளிரண்டும் விநோதார்த்தமாகப் போர் செய்து பின் விடுத்தவர்களிடம் சும்மா திரும்பி வந்த

டைந்தன். தேவர் ஆச்சரியப்பட்டு இவனுக்கு இணையாக உலகத்தில் ஒருவரையுங் காணேன்! யாவரையும் வெல்லவல்ல சௌரியபரன் இவனே! இவனதுவரமுயற்சிகள் புகழற்பாலதோ! இவன் வெற்றிப்பாடுகளில் எதனைப் பெரிதாகப் புகழ்வேன்! எமது இறைவனது வெற்றிவேலன்றி இவனைக் கொல்வது நம்மாலில்லை. என்றாலும் இவன் ஆணவத்தையும் சேனைகளையும் அதப்படுத்தக் கடவேனென்று கரேக்கணைகளையேவிச்சிங்கமுகனுடைய சாரதிசிரசைக் கண்டித்துத் தள்ளினர். சிங்கமுகன் தண்டாயுத மொன்றைவீச அது வீரன் மார்பில்தாக்கிப் பொடியாய் வீழ்ந்தது. இளையபெருமாள் பாணங்களைச் செலுத்திச் சிங்கமுகன் தேரைநாசப்படுத்தினர். அத்தருணத்திற் பின் வாங்கியிருந்த பூதர் அனைவரும் வந்து கூடிக்கொண்டு அவுணராஜனுடன் பல விதங்களிற் போராடுவ தானார்கள். சிங்கமுகன் வேறு சேமத்தேரிற் பாய்ந்து தன் ஆயிரங்கரங்களிலும் விற்களைக்கொண்டு பாணகோடிகளைப் பிரயோகித்துப் பூதப்படைகளைத் திரள்திரளாய் நிர்மூலம் செய்வதானான். அப்போர்ப் பெருக்கத்தைத் தேவர்கண்டு ஆங்காரித்துத் தாமும் முனைந்து அவுணராஜன் பாணப்பெருக் கனத்தையும் தம்சரமாரியால் ஒரு நிமிஷத்திற் போக்கடித்தனர். அவ்வெற்றியைக் கண்ட தேவர்கள் கொண்டாடி வாழ்த்தித் தேவர்பேரில் மலர்களைப் பொழிந்தார்கள். சிங்கமுகன் தனது பாணங்கள் நிர்மூலமானதைக் கண்டு அடாபயலே! என் வீரத்தன்மைகள் உனக்குத் தெரியாது. ஆயிரங்கரங்களுடைய நம்மோடு அபலனாகிய இரண்டு கரங்களுடைய நீயோ எதிர்த்து நிர்வகிக்கப் போகின்றாய். இதோ உன்னைக்கொன்று புத்திர சோபந்தணிவேன். ஓடிப்போனாலும் விடேன் என்றவளவில் தேவர் ஓ! அவுணராஜனே! வீண் வார்த்தைகளிற் பிரயோசனமில்லை உன்சேனைகளையும் உன்னையும் தீரமாக உலப்பப்போகின்ற என்வில் திறத்தைப் பார்ப்பாயாக வென்றனர். சிங்கமுகன் அதைக்கேட்டவுடன் ஏககாலத்தில் ஆயிரந்தனுசுகளை வளைத்து அற்புதமான விதமாய்ச் சரங்களை அபரிமிதமாகச் சொரிந்தான். தேவர் அவைகள் அனைத்தையும் நிமைப்போதினிற் போக்கி வெளிசெய்தனர். சிங்கமுகன் கோபித்துத் தேவர் வில்லைக்கண்டித்து மேலும் சரங்களால் அவர் மார்பையுந் துளைத்து விட்டனன். தேவர் சளையாமல் அவுணராஜன் தேரைப்பொடியாக்கினர். உடனே சிங்கமுகன் வேறுதேரேறிச் சரங்

களைத் தொடுக்குமுன் வீரன் துரிதமாய் அவன் கரங்களில் விளங்கும் ஆயிரந்தனுசுகளையும் கண்டித்துத் தள்ளிவிட்டனர். இத்தகையபெருஞ் செயத்தைக்கண்ட விஷ்ணுவாதி தேவர்களும் வீரன் வில்திறத்தை மிகவும் புகழ்ந்து கொண்டாடினார்கள். அவுணராஜன் வெறுங்கரங்களாய் விளங்குவதைக் கண்ட பூதர்கள் கரங்களைக்கொட்டி நகைத்தார்கள், அப்போது இராஜராஜனனவன் பல்லிழந்த நாகம்போல் மானம் மனதை வருத்திக்கொல்லயாதுந் தோன்றாமற் பசபசென்று விழித்துக்கொண்டிருந்து அப்பால் தன்னைப்பெற்ற மாயைஎன்பவள் கடாக்ஷித்திருந்த கொடியபாசத்தை யெடுத்துப் பகைவரனை வரையும் ஒருமிக்கக் கட்டிக்கொன்று வாரிக்கொண்டு போய்ச்சாகரங்களுக்கும் அப்புறத்தில் நிற்கின்ற உதயகிரியிற் சேர்த்துக் காவல்செய்திருக்கக் கடவாயென்று வீசியெறிந்தான். அதுபல உற்பாதங்களுடன் வெளிக்கிளம்பி விஷங்களைக்கக்கி இருண்டுவருவதனைத்தேவர்கண்டு பலஅஸ்திரங்களைவிட்டும் அவைகள் யாவையும் அது கவளீகரம்செய்து கொண்டு அதிவேகமாகவந்து சிவசுப்பிரமணிய தேவரின் சேனைகளையும் இலட்சர் எண்மர் வீரவாகுதேவரையும் நிமைப்போதில் மயக்கிப் பிரேதங்களாக்கித் திரட்டிக்கொண்டு மேலெழுந்து வானவழியாய் வேகத்தினுங் கடிகிச் சாகரங்களைக்கடந்து விஷ்ணு பள்ளிகொண்டிருக்கும் க்ஷீராப்தியின் மத்தியில் மேருவையொத்து விளங்கும் உதயகிரியிற் சேர்த்து அங்குகாவல்கொண்டிருந்தது.

சிங்கமுகன் களத்தில் ஒருவரையுங்காணமற் போனதைக் கண்டு மனதில் அடங்காத ஸந்தோஷத்தினல் தன்தேகங் குலுங்கக் குலுங்க நகைத்துச்சமர்க்களம் முற்றிலுஞ் சுற்றியாவரையுங்காணமையாற் பாலசுப்பிரமணியன் நமது ஜெயத்தைத்தெரிந்து மறைந்து ஓடிவிட்டனனென்று தன் வல்லபத்தைமெச்சிப் பேசியிருக்கும்போது சில அவுணத்தூதர் ஓடி வந்து சுவாமி! ஆயிரம் வெள்ளம் பூதப்படைகளும் அதற்கடுத்த சேனைத்தலைவரும் பிரமன் விஷ்ணு இந்திரன் முதலிய தேவர்கள் சூழ்ந்து போற்றப்பாசறையில் வெற்றிவேலாயுதன் இருக்கின்றான். இதனைக்கண்டு வந்தனமென்றார்கள். அதனைக் கேட்டவுடன் அவுணராஜன் தனது கோரதந்தங்கள் விளங்கச் சிரித்துப்பாசறையிற் பதுங்கி யாயிருக்கின்றான். இதோ நானே அவ்விடம் போய்ப்

பாலனுடன் சகலரையுங் கொன்று இன்றுடன் போரைமுடித்து விடுகிறேனென்று மேரு கால்முளைத்த சைவது போலத்தேவர்கள் பயந்தோட நடந்து போவதாயினன். அக்காலத்தில் வாயுதேவன் மனவருத்தத்துடன் வேகமாய்வந்து வேற்றிவேற்கடவுளினது பாத கமலங்களிற் பணிந்து வீரவாகுதேவர் முதலானவர்களுக்கு நேர்ந்த ஆபத்தைத்தெரிவித்த மாத்திரத்திற் குமாரக்கடவுள் நல்லது சிங்க முகன் எவ்விடத்திலிருக்கின்ரு னென்று கேட்க அவன் இதோ சமீ பித்துச் சயினியங்களுடன் வருகின்ரு னெனக் கேட்டவுடன் சண்மு கதேவர் சீக்கிரம் வாயுதேவனுற் கொண்டுவந்து நிறுத்தப்பட்டதே ரில் தேவர்கள் புஷ்பமாரி தூர்த்துப் போற்றி வாழ்த்த வீற்றிருந்து சதுரங்கசேனைகளுந் தம்மைச்சூழ்ந்துவர யுத்தத்தைக்குறித்துப் புற ப்படலாயினர். இவ்விதம் இரணக்களத்தை நோக்கிவருகின்றதனைச் சிங்கமுகன் கண்டு தன்சேனைகளுடன் எதிர்ப்பட்டான். அப்போது அவுணப்படைகள் கோபமீறிப் பூதப்படைகளுடன் எதிர்த்துப் பற் பலவிதங்களாக வெற்றிப் போராடியசமயத்திற் சிங்கமுகன் கோபா க்கினி மேலிட்டு மாயமந்திர மொன்றை யுச்சரித்துப் பூமி வானம் திசைகள் நிறையத்தக்க கோரரூபத்தைத் தாங்கி ஆர்ப்பரித்துத்தன் இரண்டாயிரங் கரங்களையும் விரித்து சத்த சாகரங்களைப் போல் விளங்கிக்கொண்டிருக்கும் பூதப்படைகளைச் சேர்த்து வாரிவாரிப் பிலத்தைப்போன்ற தன்வாயினிடத்துப் போட்டுப் பெருங்குவைக ளாய் விழுங்கத்தலைப்பட்டான். இவ்விதங்களாக ஆயிரம் வெள்ளம் பூதப்படைகளையும் சிங்கமுகன் தன் வயிற்றில் அடைத்த காரணங் களை அனந்தம் வாய்களைப் பெற்றுப்பல காலம் சொன்ன போதிலும் முடிவதன்று.

இவைவிற்கச் சிலதூதர்கள் மயேந்திரபுரியிற் போய்ச் சூரனைத் தெரிசித்து வணங்கிச் சிங்கமுகன் வெற்றிகளைச் சொன்னமாத்திரத் தில் அவன் பேரானந்தமடைந்து தான் போட்டிருந்த ஆபரணங்க ளெல்லாமல் நகைப்பெட்டிகளையுந் தருவித்து அத்தூதுவருக்குச் சன் மானமாகக் கொடுத்துப் பின் தன் தம்பி சிங்கமுகனுக்குப் படைகளை யும் கூட்டி அனுப்பினன், சூரன் அடங்காத ஸந்தோஷமாகத்தன் துணைவன் வேலாயுதமூர்த்தியுடன் எதிர்த்துச் செய்யும் போரின் திற ங்களையும் கண்டு களிக்கும்படிக்கு விருப்புற்றவனய்ச் சகலஆடம்பர

ங்களுடன் மேருகிரியைப் போன்ற கோபுரத்திலேறித்தன் தம்பியின் பராக்கிரமங்களைக் கொண்டாடிப் பார்த்துக்கொண்டிருந்தான். அக் காலத்தில் இரணக்களத்திற் போர்த்தொழிலைச் செய்யுந் திருவிளையாடலைக் கொண்ட சண்முக மூர்த்தியானவர் பகைவன் முன் தேரைச்செலுத்தி வந்தபோது சிங்கமுகன் நால்வகைச் சேனைகளும் கோபித்தெழுந்து சமுத்திரத்தைப்போல் தேவாஸ்திரங்களைப் பிரயோகஞ் செய்து மேலிட்டுத் தம் மேல்வருவதைக் கண்ட லோகநாயகன் திருநகைசெய்து தனது ஒப்பற்ற வில்லை நாணேறிடடுக் குணத்தொனியெழுப்பினர். அந்த ஓசை இராட்சத சேனைகளின் செவிகளில் நுழைந்த மாத்திரத்தில் அவைகள் நிலைகலங்கித் திகிற்பட்டுத் தங்கள் ஆயுதங்களை நழுவவிட்டுக் குப்புறவிழுந்தன. ஜெபசாலியாகிய சிங்கமுகன் பயந்து சிரக்கம்பஞ்செய்து இவ்வித ஒலியை எழுப்பத்தகுந்தவன் சிவகுமாரனே ஆகவேண்டுமென்று பிரமித்து இச்சிறுவனை நாமே அடக்க வேண்டுமெனத் தீர்மானித்துத் தன் தேரைமுடுக்கிக்கொண்டுவந்து வேலாயுதக் கடவுள் முன் நிறுத்தி எமது ஐயனை உருத்துப் பார்த்து இதனைச் சொல்லுவான். திருநேத்திரதாரியாகிய பரமசிவம் அருளியபிள்ளாய்! நான் சொல்வதை ஞாபகமாய்க் கேட்கக்கடவாய்! பூர்விகமாய் அவுணகுலத் தாயாதிகளான தேவர்களுடைய அக்கிரமங்கள் ஒடுங்க நாங்கள் தண்டித்து அவர்களைச்சிறையில் வைத்தனம். நாங்கள் எப்படிக்கும் வழக்கிட்டு ஒருகாலத்தில் ஒருமித்துப்போய் விடுவோம். இக்காரணங்களைச் சற்றும் யோசியாமல் யாதொரு சம்பந்தமுமில்லாத நீ எங்களுடன் எதிர்த்துச் சண்டைக்கு வரவேண்டிய நிமித்தமென்ன வென்றுவினவியவாக்கியங்களைப்பிரணவவடிவாக விளங்கும் பாலசுப்பிரமணிய தேவர் திருச்செவியிலேற்று, அழகுறச் சிரித்து அவுணர் பெருமானே! நீபேசியது வெகுநேர்த்தி இப்பிரபஞ்சத்திலுள்ள இனர்களை வலிமையினல் துன்பம் செய்து அலைக்கும் கொடிய பாதகரைத் தண்டித்து அடக்கி மன்னுயிரைப் பாதுகாத்து வரும் இறைமையைச் செலுத்திவருவது எமதுசெயல். நல்ல ஒழுக்கங்களையுடைய தேவர்களை இரக்கமில்லாமற் பெண்டு பிள்ளைகளுடன் பலதகாத துன்பங்களுக்கேதுசெய்தலைத்துக்காவற்படுத்தினமையைக் குறித்து நாம்தூது அனுப்பியிருந்தும் நேரிற் சொல்லியும் அவைகளை ஒருபொருட் படுத்தாமலிருந்த படியால் நாம் உங்களோடு சண்டை

செய்து அவர்களை விடுவித்து அவர்களுக்குப் பழயபொன்னுலக வாழ்வைக் கொடுக்க வத்தனமென்றார். சிங்கமுகன் அதனைக்கேட்டுத் தன் சரங்களைத் தட்டிச்சிரித்து ஓ! பாலனே! நீஎங்களை வென்றனை, தேவர்கள் சிறையினையும் மீட்டனை. உன் எண்ணமும் சூரத்துவமும் வெகு நேர்த்தி. பரமசிவத்தினுல் இதுவரை முடியாத இக்காரியத்தைப் பாலனுகிய நீயோ நிறைவேற்றப் போகின்றாய். சிறுபிள்ளை ஆகையால் தேவர்களுடைய முகஸ்துதியில் மயங்கிவந்தனை. என்னுடன் எதிர்த்து ஜெயித்தவர்கள் கிடையாது. தெரியாமற் பெரிய காரியத்தில் தலையிட்டுவந்தனை. நீஉன் பெற்றோர்களிடத்திற் போய்ச் சேர்ந்து அருமையாய் வாழ்ந்திருக்கக் கடவாய் என்றவளவில் சரவணபவன் இவன் உறுதி வெகுநேர்த்தி எனநகைத்து அவுணராஜனே! நமது குழந்தைப் பருவத்தின் திறங்களைச் சற்று பார்ப்பாயென ஒருவயிர வாளியைப் பூட்டிப் பிரயோகித்தனர். அப்பாணமானது தேவர்கள் கொண்டாட ஓடிவந்து பாதகன் மார்பில் தடாரித்துப் பெருவாயிலைப் போலத் திறந்து உதிரம் பெருக்கெடுக்க உருவிப்போன காலையிற் சிங்கமுகன் மிகவும் வருந்தித் திகைத்திருந்தனன். இவ்விதமாக மார்பு பிளந்த மூலமாய்ப் பாதகன் கருப்பத்திற் சஞ்சரித்திருந்த பூதப்படைகள் அனைத்தும் புற்றினிடத்தெழும் ஈசல்களைப் போலப் பலபலென வெளி வந்து கடலும் அஞ்ச ஆர்த்து இரணக்களவெல்லை முற்றும் பரவிவருவதைச் சிங்கமுகன் கண்டு மனம் வருந்தி நாசும்போற் சிறித்தனது கரங்களினுல் அந்தத் துவாரத்தை மூடித் தண்டாயுதமொன்றைக் கந்தசுவாமி பேரில் வீசினுன். அதனை எமது கர்த்தன் கண்டு நான்கு சீலிமுகங்களைப் பிரயோகித்து அதைப் பொடி செய்து சிங்கமுகன்நெற்றிகளையும் துளைத்தூடுருவிப்போகச்செய்தகாலையிற் பாதகன் இரத்தம் பெருக்கெடுத் தோடவாடிப் பிரமித்திருந்து விட்டனன். அக்காலத்தில் மார்பைமூடிய அவன் கரங்களானவைசோர்ந்து தாழ்ந்தன. பூதவீரர் அனைவரும் பின் அம்மார்க்கமாக வெளி வந்து சுப்பிரமணிய தேவரைச் சூழ்ந்து கொண்டானடித்துப் பெருகிவிளங்கினர். சிங்கமுகனுல் முன் பலபல விதங்களிற் பட்டுக்கிடந்த பூதர்கள் அனைவரும் சண்முகப் பெருமாள் கடாக்ஷமகிமையினுல் உயிர் பெற்றும் மூர்ச்சை தெளிந்தும் எழுந்தோடி வந்து தம் இனத்தைச் சேர்ந்து களித்திருக்கும் போது பாலசுப்பிரமணிய தேவர் உதயகிரியினிடத்

திருக்கின்றவர்களையும் தருவிப்பதாகத் திருவுள்ளத்திற் கொண்டு ஒரு சாத்தைச் செலுத்திய காலத்தில் அதுமனோவேகத்திலும் மேற்பட்டு உதயகிரியைச் சேர்ந்து பந்தித்திருந்த பாசப்பிணிப்பைத் துகள்பட வாட்டும்போது வீரவாகுதேவர் முதலானவர்கள் நித்திரை தெளிந்தவர்களைப்போல் எழுந்து திருக்குமாரனைச் சிந்தித்துப் போற்றி அண்டங்கள் அதிர ஆர்ப்பரித்து உடனே வானவழிக்கிளம்பிச் சண்முகப் பெருமான் சன்னிதானத்தில் இறங்கித் தேவதேவனைத் தம் கண்களாரக்கண்டு அவர் திருவடிகளிற் பணிந்து அப்பகவானுடைய பூரண கடாக்ஷத்தைப் பெற்றுப் பூரித்துச் சிறந்திருந்தனர். தேவர்கள் அனைவரும் கர்த்தன் தம்மை நம்பியவர்களிடத்திற் காட்டிய கருணையைக்குறித்துப் புகழ்ந்தார்கள். அத்தருணத்தில் முன்னம் குமாரதேவர் காட்டிய நாஞெலியால் மரணமூர்ச்சை யடைந்திருந்த இராக்ஷதப் பாதகரனைவரும் ஆர்ப்பரித் தெழுந்தவராய் ஆதிதேவனுடைய திருக்குமாரனை வளைந்து கொண்டு கொடிய போராட்டங்கள் செய்வதனைக்குமாரதேவர் கண்டு நகைத்துத் தமது கணக்கிறந்த பாணங்களைச் செலுத்திச் சிங்கமுகனுக்கு உதவியாக வந்த சேனைகளை அதஞ் செய்தனர். லோகநாயகன் படைகளின் மகத்துவங்களை யாவர் என்னென்று புகழ்ந்துரைக்கக் கூடும்! அப்போது சமரபூமிவிளக்கிய அலங்கோலத்தை யென்ன சொல்வோம்! இவ்விதமாய்த் தன் சேனைகளனைத்தும் ஒரு நொடியில் அடைந்த பெரும் நாசத்தைச் சிங்கமுகன் சோபம் நீங்கியெழுந்து பார்த்துப் பாலன் சேவகம் வெகு நேர்த்தியென்று மானமும் கோபமும் மனதைவாட்ட உக்கிரங்கொண்டு குமாரதேவர் பேரிலும் பூதவெள்ளங்களைக் குறித்தும் பத்து நூறாயிரம் சரங்களைப் பூட்டி விட்டான். அதனை எமது கர்த்தன் கண்டு தமது ஆயிரந் திவ்யசரங்களால் அவைகளைப் போக்கிப் பின்னும் பாதகனுடன் போராடி வருகின்றபோது சிங்கமுகனனவன் குமார தேவரின் தேரை நடாத்தும் வாயுதேவன் மார்பைப்பிளந்து கர்ச்சித்தனன். அதனை எமது கர்த்தன் கண்டு நூறுபகழிகளாற்சிங்கன் தேரின் வெற்றிக்கொடியை வெட்டித்தள்ளி அவன் பாகனையும் தேரையும் தும்சப்படுத்தினர். சிங்கமுகன் என்ன செய்வான்? தன்வாகனத்தைப்போக்கிக்கலை இழந்த சந்திரனைப் போலமதிப்பிலடங்காத பெருமிதங்களெல்லாம் குறைந்து நிலத்தில் நின்று எண்ணுதனதல்லாம் எண்ணிப் பின்

பாணவிதங்களை ஒன்றனந்தமாக மேலும் பிரயோகிப்பதாயினன். சுய ஞ் சோதிவடிவுடைய குமாரதேவர் அதைப்பார்த்துப் பாதகன் பாணங்களைப்போக்கி அவன் கரங்களிற் பற்றியதனுசுக்களை யெல்லாங் கண்டித்துத் தள்ளிவிட்டனர். சிங்கமுகன் பின்னிடையாமல் வரப் பிரசாதத்திற் பெற்ற முத்தலைச் சூலமொன்றைச் சிவகுமாரன் மார் பிற்கு இலக்காக ஓங்கிவீசினன். அதனை எமதிறைவன் கண்டித்து மேலும் ஆயிரம் நாராசங்களைச் சூரன் துணைவன் பேரிற் பிரயோகி த்தனர். பாதகன் மந்தரத்தை ஒத்ததண்டாயுதத்தைச் சுழற்றி அப் பாணங்களை விலக்கி மேலிட்டு ஆர்ப்பரித்து வருவதை எமதிறை வன் கண்டு துரிதமாய் அப்பாதகன் தண்டம் பற்றியிருந்த கரத்தி னைக்கண்டித்துத் தள்ளினர். சிங்கமுகன் ஆதியிற் சிவபிரானிடம் பெற்ற வரமுயற்சியினால் மீண்டும் கரமானது முளைக்க உடனே அக் கரத்தினால் விழுந்த தண்டத்தைச் சீக்கிரமாக வெடுத்துச் சுழற் றிச் சிவகுமாரன்மேல் வீசினன். அதனைக்குமாரசுவாமி பொடியாக் கினபோது சிங்கமுகன் வருந்திக் காலபாசத்தை யெடுத்து இதனால் நீ மாளக்கடவாயென விடுத்தனன். வேற்கடவுள் அதைநீறுக்கிவிட்ட னர். சிங்கமுகன் இப்பாலனை இனி என் கரங்களாற் பற்றிப்பிசைந்து கொல்வேனெனத் தன் இரண்டாயிரங் கரங்களையும் திசைகள் முட் டப்பரப்பிக்கொண்டு பாய்ந்துவருவதை எமதையன் தெரிந்து அவ ன் கரங்களனைத்தையும் கண்டித்துத் தள்ளினர். பாதகன் தவமகி மையினால் உடனே கரங்கள் திரும்பமுளைக்க அவன் முன்னம் கண் டித்துக்கீழேகிடக்கும் தனதுகரங்களையெடுத்துக் கிறுகிறெனச் சிவகு மாரன் மீதில் வீசிவீசி வேகமாய்வரும்போது லோகநாயகனும் துரி தமாய்ப் பாதகனுடைய ஆயிரஞ் சிரங்களையும் பின்னும் அவன் இர ண்டாயிரங் கரங்களையும் கண்டித்துத்தள்ளினர். இவ்விதம் மூண்ட மான சிங்கமுகனுக்குத் திரும்பவும் வரமுயற்சியினால் அவயவங்கள் அனைத்தும் கிளைத்துக்கொண்டன. இக்காரணங்களைத் தேவதேவோ த்தமனான சரவணபவன் கண்டு பூர்வத்தில் இவன் யாகத்தில் தன் சிரங்களை அவிகொடுத்த காரணத்தினால் நீங்கிய உறுப்புகள் மீளத் தோற்றுகின்றதென நிதானித்து அதற்கடுத்த காரியத்தை யோசி ப்பதாயினர். அப்போது சிங்கமுகன் குழந்தை வடிவேலரைப் பார் த்து ஓ! பாலனே! நீ இவ்விதங்களில் அளவற்ற காலம் போராடி னும் சூரனுயிருக்கப்பட்ட என்னை ஜெயிப்பது ஒருக்காலும் முடி

யாது அறியாமல் வந்து இப்போது என்னிடம் அகப்பட்டுக் கொண்டாய் உன்பிராணனுக்கும் வந்து விட்டது. தேவர்கள் சிறையைவிடுவிப்பது உன்னால் ஒருபோதும் முடியாது. இந்நிமிஷம் உன்னைக்கசக்கிவாயிற் போட்டுக்கொள்வேனென்றாலும் உன் பிதாவானவர் நம்மிடத்தில் கிருபைவைத்திருப்பவரா யிருக்கின்றார். ஆதலால் சீக்கிரம் உன்பிராணனைத் தப்பித்துக்கொண்டு ஓடிப்போய்விடென்றான். விவேகசூனியனாகிய சிங்கமுகன் வாசகங்களை எமதிறைவன் கேட்டுக்குறுநகைசெய்து அவுணராஜனே! உனக்குக்காலன் பின்னாற்காத்திருப்பதை அறியாமற் பிதற்றுகின்றாய்! விவேகமற்றவனே! இதோஉன் உயிரைவாங்குவதைப் பாரென்று குமரகுருபரன்பேசி முடிந்தவுடன் சிங்கமுகனுக்கு அதிககோபம் பிறந்து இரண்டாயிரம் பருவதங்களைப் பந்துபோலெடுத்து எமதிறைவன் மேல்வீசினன். இறைவன் அவைகளைக்கணத்திற் பொடியாக்கி மேலும் கணைகளால் அவன் வயிரமார்பைப் பிளந்தனர். அந்தக்காயத்தைச் சட்டைபண்ணாமற் பார்ந்து கணக்கிறந்த பருவதங்களைப் பறிக்கத் தொடங்கினான். குமாரசுவாமியார் துரிதமாய் அவன் ஆயிரஞ்சிரங்களையும் கொய்து தள்ளினர். உடனே தலைகள் அவனுக்கு முளைத்து ஒட்டிக்கொள்ள அவன் பருவதங்கள் அனைத்தையும் எடுத்து எமது கர்த்தன்மீது வீசிப்புயாசலங்களைத் தட்டினான். கடவுள் அப்பருவதங்களைத் தூளாக்கி அவன் தோள்களையும் அறுத்துத் தள்ளினர். அவைகள் நிலத்தில் விழுமுன்னம் பழயபடிக்கு மீளவேறு கரங்கள் அவனுக்கு முளைத்துக்கொண்டன. "தவங்களிலும் சிறந்தபொருள் உலகத்தில் ஒன்றுமிராது ஆகையினாலே யாவரும் அப்பேற்றினையே பெற விரும்பவேண்டுமல்லவா?" இக்காட்சியைக்கண்ட திருக்குமாரர் ஒருதிருவிளையாடலைச் செய்யத்திருவுள்ளங்கொண்டு ஓயாமற் சிங்கமுகன் சிரங்களையும் கரங்களையும் தாள்களையும் அளவற்ற தரம் கொய்து கொய்து நிலத்தில் தள்ளிப்பின் அவைகள் திரும்பமுளைக்கும் வேடிக்கைகளைப் பார்த்துப் பார்த்துக் களிப்பதாயினர். பின் மற்றொரு திருவிளையாடலைக் கருதி ஒருசிரம் இரண்டு கரங்கள் நீங்கலாய் மற்றவைகள் அனைத்தையும் கண்டித்துத் தள்ளிப்பார்த்துப் பார்த்துக்களித்து இவ்விதமாகச் சிலபோது விநோதப்போரைச்செய்து கடைசியில் எமதையன் சற்றுகோபித்து உம்மென்று உக்கிரமாய் அதட்டினார். அவ்வதிர்ச்சிக்கு அஞ்சிமுளைத்து வந்த அவயவங்கள் "ஆமையானது மனி

தர் அரவங்கண்ட மாத்திரத்தில் தனது உறுப்புகளை உள்ளடக்கிக் கொள்வதுபோற்'' பழயபடிக்குத் தோற்ருமல் ஒருசிரமும் இரண்டு கரங்களுடனும் சிங்கமுகனிருந்தான். இவ்விதம் பாலசுப்பிரமணியர் ஊங்காரிப்புக்குத் தன் அவயவங்கள் அடங்கிப் போனமையைக்கண்டு அவுணராஜன் திடுக்கிட்டு யாதும் தோன்ருமற் பிரமித்து நின்ருனன். அவுணன் சோர்வைக் கிருபாநிதியாகிய எமது சண்முகப்பெருமாள் கண்டவுடன் மனம் இரக்கமுற்று ஐயோ! இந்தச்சமயத்திலாவது இவன் மனந்திரும்பமாட்டானு வென்று பல நியாயங்களைப் பிரத்தியட்சமாக நிருபித்துக்காட்டியும் பாதகன் அவைகளை அலட்சியஞ் செய்து மேலுங் கோபித்து ஓ! பாலனே! இன்னும் எனது வீரபராக்கிரமங்களைப் பார்ப்பாயென்று மிகப்பருத்த பருவதமொன்றைச் சுவாமியின்பேரில் துரிதமாய் வீசினன். குமரகுருபரன் அதனைக்கண்டித்துச்சும்மாயிருந்தனர். சிங்கமுகனுக்கு அதிக கோபம்பிறந்து ஓ! சிறுபிள்ளாய்! உனக்கு விற்போரே செய்திருக்கத் தெரியுமென்று இகழ்ந்து பாரித்ததண்டாயுதமொன்றை யெடுத்து மூலகாரணராகிய வேலாயுதர் மீது சுழற்றி வீசினன். அவன் மதியாமற் பேசியதைக் கேட்ட சரவணபவனுக்குச் சற்றுகோபமுண்டாகித் தமது கரத்திற் கோடிசூரியப் பிரகாசமாய் விளங்கியிருக்கும் வெற்றிவேலாயுதத்தை வஞ்சகன் உயிரை உண்டுவருவாயெனச் செலுத்தியபோது அது வெளிப்பட்டுச் சீறிப்பாய்ந்து மேலிட்டு வந்திருந்த தண்டாயுதத்தைச் சாம்பராக்கிப் பிரளயகாலத்து இடிவிழுவது போலாகச் சிங்கமுகன் வலிய மார்பில் தாக்கித்தடாரித்து உருவி அவன் பிராணனைக் கிரகித்துக்கொண்டு உதிரமானது பீறிட்டோட முதுகின் மூலமாக வெளிப்பட்டுப் போனது. உடனே அவுணராஜன் ஓ! வென்னும் இரைச்சலைக்காட்டிக் கதறிச்சண்ட மாருதத்திற் பட்டு வேரற்று விழும் வடவால விருட்சத்தைப் போல நிலம்பிளக்கத் திடீரென்று விழுந்து பதைத்து மாண்டனன். வெற்றி வேலானது உடனே ஆகாய கங்கையிலும் தேவர்கள் புட்பமாரியிலும் மூழ்கிக் குமாரக்கடவுள் திருக்கரத்தில் வந்தமர்ந்து விளங்கியது. விஷ்ணுவாதி தேவர்கள் சண்முகபகவன் பெருமைகளைக் கொண்டாடிப் போற்றி மகிழ்ந்த திறங்களை என்னவிதமென்று சொல்லுவோம்! அப்பாற் குமாரதேவர் சகலரும் தம்மை ஜெயவுற்சாகங்களுடன் புடைசூழத்தமது பாசறைக்கு விஜயஞ்செய்து சிவபிரானைப் போற் சிங்காதனத்தில் யாவரும் போற்

றயிற்றிருந்தனர். இவை நிற்கக் கோபுரத்தின்மேல் நிலையில் வீற்றிருந்து தன் துணைவன் செய்கின்ற போர்த்தொழிலைக் கண்டிருந்தவன் திடுக்கிட்டு வெகுநேரம் போராடியிருந்த காரணத்தால் தன் துணைவன் களைத்து விழ்ந்தானோ அல்லது மாண்டானோ யாதுந்தோற்ற வில்லையே என்று திகைத்து விழிகளை மூடாமற் பார்த்திருக்கும்போது சில அவுணதூதுவராற் சிங்கமுகன் போராடிக் கொல்லப்பட்டவிருந்தாந்தங்களைக் கேட்டுத் துயரவெப்பமானது தேகத்தைத் கொளுத்தக்களைத்து விழ்ந்து கடகடெனப் புறண்டு ஓ! வெனக்கதறி என்னுயிர்த் துணைவனாகிய சிங்கமுகனே! பயமும் வீரமும் வலியும் மானமும் பிராணன் முதலிய சகலவளங்களும் போக்கினவனாய்ப் பிரேதத்தினும் கடைப்பட்டுத்திகைக்கின்றேனே! உன்திருமுக மண்டலங்களை என் முன் வந்து சற்றுகாட்டாயோ! என்று பலவாறாகப் புலம்பிப் பிரலாபித்த காலத்தில் இராஜாதிராஜனைத் தேற்ற ஒருவரும்இல்லாமல் வெகுநேரம் வாடிவருந்தி அவன் தானே ஒருவகையாகச் சோபத்தை மாற்றிக்கொண்டு சிங்காசனத்திலிருந்து என் துணைவனைக்கொன்ற சிவகுமாரனை நானே நேரிற் போய்க் கொன்று பழி வாங்குவேனென்று பிரதிக்கினைசெய்து சீறியிருந்தனன்.

## " சூரபதுமன் வதம் ,,

இவ்விதமாகச் சூரன் கோபங்கொண்டு தனது ஆயிரத்தெட்டு அண்டங்கள் தோறும் வாசமாயிருக்கும் நால்வகைச் சேனைகளையும் தூதுவர்களால் அழைப்பித்த காலையில் அவைகளெல்லாம் ஒரே சமயத்திற் கணக்கிறந்த வெள்ளங்களாய்த் திரண்டு அண்டப்பித்திகை நெக்குவிட்டு உதிர ஆர்ப்பரித்துப் பிரளயப் பெருக்கினும் மேலிட்டு வந்து கூடுகின்றதைத் தேவர்கள் கண்டு திகைத்துவாடினர். சூரன் பெற்றிருக்கின்ற சேனைகளின் பெருக்கை நிதானிக்கவுங் கூடுமோ! இவ்வித மகிமைகளையுடைய அந்தச் சேனைகள் வருவதற்கு இடம் பெறாமல் வானவெல்லை முற்றும் அடர்ந்து நிற்கின்றதனைச் சூரன் கண்டுகளித்து உடனே ஆயுதசாலையிற் சென்று போர்க் கோலங்கொண்டு ஆயிரக்கோடி சேமத்தேர்களையும் பரமசிவன் படைத்துக்கொடுத்த இந்திரஞாலத் தேரையும் சிங்கவாகனத்தையும் முந்திக்கொண்டு போகப்பணித்துத் தனது தேரைக்கொண்டுவரக் கட்டளையிட்டனன்.

இப்படி அவனுக்காக கொண்டு வரும்படிக்குக் கட்டளையிட்ட தேரானது ஆதியில் இந்தச் சூரன் யாகத்தில் விழுந்திறந்து பரமசிவ கடாக்ஷத்தினால் எழுந்த காலத்தில் அவனுடன் வெளி வந்த மகிமையையும் இந்திரஞாலத் தேருக்கு ஒப்பான பெருமைகளையும் உடைத்தானதென்று அறிவீர்களாக. இவ்வித இரதத்தைத் துரத்தி வந்து சூரன் முன் நிறுத்திய காலையில் அசுரேந்திரன் அதில் ஆரோகணித்துக் கோபுரவாயிலைத் தாண்டி வெளிவந்ததனைக் கண்ட பெருஞ்சேனைகள் அஷ்டதிக்குகளும் செவிடுபட்டுச்சோர ஜெயம் ஜெயம் என்று ஆர்ப்பரித்து வந்து அவனைச் சூழ்ந்து கொண்டு பூமிதேவி சுமை தாங்க மாட்டாமல் தத்தளிக்க இரணக்களத்தை நோக்கிப் போகின்ற காலையில் தூசிப்படையானது குமாரதேவர் வாசமாயிருக்கின்ற பாசறை விடுதியைக் கீழ்மேலெங்கணும் வளைந்து கொண்டதனை அங்குள்ள சிவகணங்கள் கண்டு தங்கள் ஆற்றல் அடங்கிப் பதை பதைத்துச் சிங்கமுகனால் முதல் நாள் பட்ட வருத்தங்களை நினைந்து நினைந்து வருந்திய விதங்களை என்னென்று சொல்வோம்? மகாவிஷ்ணு முதலானவர்கள் இதனைத்தெரிந்து வருந்தினவர்களாய்க் கர்த்தன் பாதாரவிந்தங்களை வந்து பணிந்து அய்யனே! தேவரீர் சிங்கமுகனை வாட்டிய சேதிகேட்டுச்சூரன் ஆயிரத்தெட்டுஅண்டங்களிலிருந்த சதுரங்கசேனைப்பெருக்குகளையும் தருவித்துக் கொண்டு அதிவீரா வேசத்துடன்வருகின்றனன். அதற்கு முன் தூசிப்படை நமது பாசறையைச் சூழ்ந்து மூடிவிட்டதென விண்ணப்பஞ் செய்து பிரார்த்திக்கப் பன்னிரு புயாசலங்களைப் பெற்ற எமதிறைவனானவர் புன்னகைசெய்து தெய்வீகம் பொருந்திய தமதுதேரைக் கொண்டுவர வாயுதேவனுக்குக் கட்டளையிட்டு அதிற்பகவான் சருவாயுத பாணியாக ஆரோகணித்து விளங்கினர். அதைக்கண்டதேவர்கள் கற்பகமலர்களைவாரிக் குமாரசுவாமியின் பேரிற் சொரிந்து வாழ்த்தினர். பராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவரும் மற்றத் துணைவர்களும் படைத்தலைவர்களும் சருவாயுதபாணிகளாய் இரண்டாயிரம் வெள்ளம் பூதப்படைகளுடன் நம்கடவுளை வந்து சூழ்ந்து இரணக்களம் நோக்கிப் பிரயாணித்துப் போவதாயினர். இவ்வாறு வரவர அவுணப்படைகள் கிட்டிய சமயத்திற் கூட வந்து கொண்டிருக்கும் இந்திரன் முதலான தேவர்கள் அகிலமுழுதும் அடர்ந்து பெருகிவரும் அவுணச்சேனைகளைக்கண்கூசக் கண்டு நடு நடுங்கித் திருத்துழாயணிந்த மகாவிஷ்ணுவை இந்திரன் வணங்கி எமதிறைவ

ஞகிய முருகப்பிரான் மிகவலிபெற்று வீறிவரும் சத்துருப் பாதகப் பெருக்கை வெல்வதற்குப் பலயுகங்கள் செல்லும்போற் காணுகின்றது? சூரனை வெற்றி கொள்ளும் காலம் எப்போது சம்பவிக்கும்? நாங்கள் பொன்னுலகவாழ்வை அடைந்து முகமலர்ச்சிபெற்று வாழுங்காலமும் இனி உண்டாயிருக்குமோ? என்று பற்பலதாவந்த வார்த்தைகளைச் சொல்லி முறையிட்டுக்கொண்டகாலையிற் பரந்தாமன் மகபதியின் துன் பத்திற்கு இரங்கி ஓ! தேவராஜனே! லோககாரணரான குமாரதேவர் பெருமைகளையும் வீரபராக்கிரம உத்தண்டங்களையும் எவ்வளவுந் தெரியாதவனைப் போலக்கிலேசித்து வருந்துகின்றாயே? அக்குழந்தை வேலன் காலமாகவும் அதைக்கடந்த பொருளாகவும் விளங்குவன். சராசரப்பிரபஞ்சங்களைப் படைத்தும் அவற்றின் வினைகளுக்குத் தகுந்தநன்மை தீமைகளை ஊட்டி ஆட்டி உறக்குங்காரண பூதமாகவும் தோற்றுவான். அவற்றுட் படாமற் புறம்பிலும் உலாவுவான். இன்னும் அக்கடவுளுடைய மகிமைகள் முழுதும் யாவரால் கணித்துரைக்கக் கூடும்! தினதயாளுவாகிய இந்தக்குமாரசுவாமி யானவர் பகைவரை நாசஞ்செய்யத் திருவுள்ளத்தில் நினைத்தாராயின் நிமைப்போதிற் சிறுகைபாலாவது கோபக்கனலாலாவது சொல்வன்மையினாலாவது அதப்படுத்தும் சாமார்த்தியத்தைப் பெற்றவர். மேலும் பாலப்பருவத்திற் குரியசிறுவிளையாடலினும் சாம்பலாக்கும் திறமுடையவர். இத்தகைய மகிமைகளை உடைய பாலசுப்பிரமணிய தேவர் நமது பங்கிலிருக்கும் போது என்னகுறைவு நமக்கு உண்டாயிருக்கும்? இந்திரனே! நீ ஒன்றுக்கும் யோசிக்க வேண்டியதில்லை. இந்தச் சூரனைச் சற்று நேரத்தில் இப்பெரிய சயினியங்களுடன் வாட்டிவிடும் வடிவேலரின் திறங்களை நீ பார்க்கலாமென்று அவனைத் தேற்றியகாலையில் தேவராஜன் உற்சாகமா யிருந்தனன், இவர்கள் கருத்தை எமதிறைவன் தெரிந்து சிறுகைகொண்டு சண்டைக்கு ஆயத்தப்பட்டவராய் வருகின்றபோது இராட்சதப்படைகள் வீராவேசங்களுடன் அண்டங்கள் அதிரக்கொக்கரித்துக் கொண்டு மேலிட்டுச் சண்டை தொடங்குவதாயின. அப்போது பயந்திருந்த பூதப்படைகள் அதிகக்களைப்புடன் பகைவருடன் சற்று நேரம் போராடித்தாபரித்து நிற்கக்கூடாமல் முறிபட்டோடி மறைந்தன. அதனைச் சேனைத்தலைவர்கள் கண்டு உருத்திராகாரமாகச் சீறி இராட்சத வீரர்களுடன் எதிர்த்துப் பலவாறாய்ப் பாணவிதங்களைப் பிரயோகித்தும் யாதொரு பிரயோசனத்தையும்

பெருமற் சத்துருக்கள் போருக்கஞ்சி மானம் அழிந்து மதிகெட்டுத் தங்கள் பராக்கிரமங்கள் அனைத்தையும் பறிகொடுத்துப் பின்னிட்டனர். அப்போது வீரர்களாகிய இலட்சரும் எண்மரும் அதி உக்கிரத்துடன் ஒருமுகமாய்க் கலந்து தமது கொடிய பாணவிதங்களைச் செலுத்திக் கொடிய சண்டைகளைச் செய்து தங்கள் மனமும் தேகமும்வருந்திப் பகைவரைச் சற்றும் அசைக்கக் கூடாமல் அவர்களாற் படாதபாடுகளைப் பட்டு மயங்கி மடங்கிப்போயினர். அந்த அபஜெயத்தினைக்கண்ட வீரவாகுதேவர் தயிரியமாக முன்வந்து தமது சரங்களை அமோகமாகச் செலுத்தி ஆயிரங்கோடி சமுத்திரவெள்ளத்தில் ஒருமலை விழுந்து கலக்குமாறு போலச்சற்றுநேரம் சிலராக்ஷதர்களைக்கொன்று பின் தமது கைகால் ஓய்ந்து வில்லுந் தளர்ந்து பிரமித்துப் பாதகரைக் கொல்ல நம்மாலாகாதென்று மனவாட்டத்துடன் திரும்பிப் பாலசுப்பிரமணிய தேவருக்கருகில் வந்து நின்றுவிட்டனர். அத்தருணத்திற் சூரன் நால்வகைச் சேனைகளும் ஆலகால விஷமானது பெருகி உலகங்களனைத்தையும் வளைந்து கொண்டதைப் போல இரைச்சலிட்டு மேலேறிக்கொடிய போர்த்தொழிலை வெகு வெகு வேடிக்கையாகச் செய்து வீறிவரும் அதிசயங்களை எமது பாலசுப்பிரமணிய தேவர் கண்டு சிரித்துத்தமது பருத்தவில்லை எடுத்து நாட்டி வளைத்துக் குணத்தொனி செய்தனர். அக்காலத்தில் எழுந்த பேரொலியானது இராக்ஷதர்கள் செவிகளிற் பட்டமாத்திரத்தில் மனங்கலங்கித் தங்கள் கரங்களிற் பற்றியிருந்த படைகளை நழுகவிட்டு திப்பிரமை கொண்டவர்களாய் நின்றார்களென்றால் அக்குணத்தொனியின் மகிமைகளை நாம் என்னஎடுத்துப் பேசப்போகின்றோம்! இத்தைய கடவுளுக்கு அடிமைத்திறம் பூண்டவர்களுக்கு எவ்வித இடர்கள் தாம்வந்தும் என்ன செய்யக்கூடும்? எதற்குத்தான் அந்த அடியார்கள் யோசித்துப் பயப்படக் கூடியதாயிருக்கும்? தம்மை அடுத்தினர்களை உத்தேசித்து யாவராலும் வெல்வதற்குக் கூடாமலிருக்கும் இங்கச் சூரனுதியரை வாட்டவோர் குணத்தொனியைக் கிளப்பிய உத்தண்ட வீரபராக்கிரமக் கடவுளாகிய ஒப்பற்ற இந்தப்பாலருடைய கிருபைக்கு எந்தப்புண்ணிய சிலர் பாக்கிய முடையவர்களா யிருக்கின்றார்களோ அவர்களே யாவரிலும் பெரியவர்களென்பது நிச்சயம். ஆகையினாலே கலியுகவரதராகி யென்றுந் தமது பக்தர்களிடத்தில்

மெய்யாகவற்புதத்திருவிளை யாடல்களைப்பெருங்கருணையுடன் செய்து காட்டிக்கொண்டே வரும் பரப்பிரமசொரூபியாகிய நம் சிவபிரான் திருக்குமாரரிடம் யாவருந்தங்களை யொப்புக்கொடுத் திகபராசாதகங் களை வருத்தமின்றி இலகுவாக வடைந்துய் வதே மிக மிகவவசியம்.

இவையிற்கக் குமாரதேவரானவர் தமதொப்பற்ற வில்லினிடத்தி ருந்தும்உடனே பாணகோடிகளை யூழிமேகங்களைப்போல்அமோகமாச் சொரிவதாயினர். அவைகள் பேரிரைச்சலிட்டு மகா மகிமைகளுடன் பூமண்டலம் வானவெல்லைஅஷ்டதிசைகள் மற்றப்புவனங்களெங்கணும் நெருங்கிச் சூரனது சதுரங்க சேனைகளையும் வளைந்துகொண்டு சத்த சாகரவெல்லையினும் அவைகளிடையிற்பட்ட தீவுகளெங்கும் அடைக் திருக்கின்ற சேனைப்பெருக்குகளையுஞ் சுற்றிச்சுற்றிஅதிவேகங்கொண்டு தாக்குகின்ற காலையில் அவுணச்சேனைகள் தப்பிப்பிழைக்க வகையில் லாதபடிக்கு அவைகளையெல்லா மொன்றொழியாமற்சங்கரித்து இரண க்களமெங்கும் பிணராசிகளாகக் குவித்தவைகளினின்றும் உதிரப்பிர வாகம் பெருகிக்கருங்கடலையு மீறிச்செங்கடலாக்கி விட்ட நம் சுப்பிரம ணியக்கடவுளினுடைய விற்போர்மகிமையை நாமிங்கெவ்விதமென வெடுத்துப் பேசக்கூடியதா யிருக்கின்றது! இவையன்றியுஞ் சண்மு கக்கடவுள் தூண்டிக்கொடியவாளிகளானவை அதிசவுயரத்தில் விளங் குகின்ற பொன்னுலகத்திலும் பிரமன் விஷ்ணுலோகங்களினும் அண் டவெல்லைகள்தோறும்போயத்திரிந்த விதங்களை யென்னவிதமெனப் புகழப்போகின்றோம்? மகிமைகளுள்ள வப்பாணங்களுடை கங்கண்முற் றுகிரம்பிகாலத்திலிராக்கதர் முதலிய சண்டாளர் களையன்றி மற்ற வுத்தமர்களை நாசப்படுத்தித் துன்பஞ்செய்ய வில்லை. கந்தசுவாமியி னுடைய வற்புதப் பாணப் பிரயோகத்தா லிவ்விதங்களாக வெங்கும் விசாலித்துப் பரந்திருந்த சூரன் படைகளின் றோற்றஞ் சற்றுநேரத் திற் காணுமல் வெள்ளிடமாகிய வதிசயத்தை விஷ்ணுவாதி தேவர் கள் கண்டற்புதசித்தரா யடங்காத ஸந்தோஷத்துட னனந்தக்கண் ணீர் பொங்கச் சரவணபவ னளவுக்கடங்காத பெருமைகளை நினைந்து நினைந்தக்குமாரரைப் போற்றிக் கொண்டிருந்தார்கள். நவவீரரிலட் சர் படைத்தலைவர் பூதர்களுந் தங்கள் பயங்களை பொழித்ததிகமகி ழ்ச்சியுடன் தம் தேகங்கள் பூரிக்கக்குமாரசுவாமியைக் கிட்டிவந்து தெரிசித்துப் போற்றிச் சூழ்ந்தனர்.

அப்போது சூரன் கட்டளைப்படிக்கு மேல் அண்டங்களினின்றும் வந்து நெருங்கிய சதுரங்கசேனைகள் மண்ணின் எங்கும் இடமின்றி நிறைந்து அண்டவாயில்கள் மூடப்பட்டு அவைகளுக்கு வெளியே பெருக்கெடுத்துத் தேக்கிக்காலம் பார்த்துத் தங்கியிருந்த மற்றச் சதுரங்கசேனை வெள்ளங்கள் முன் சென்ற சயினியங்கள் அதப்பட்டதை அறிந்து ஆகாயகங்கையானது கீழ்நோக்கி வருமாறுபோலப் பூமண்டலத்தில் வந்து முன்னிலும் பதின்மடங்கு அதிக நெருக்கமாக எத்தலங்களிலும் எள்ளிட விடமில்லாமல் அட்டகாசங்களைச் செய்து வந்து கூடிச்சூரனைக்கண்டு சேவித்துத் தம்மவர்கள் நாசப்பட்டதைக் குறித்துப்பரிபவப்பட்டுப் பகைவன்வீறுப்பை நிமைப்போதில் அடக்கிப்பூதர்களையும் சாப்பிட்டுவிடுகிறோமென்று பற்பலசபதங்களைப்பேசிக்கோடி சூரியர் தோற்றம்போல் விளங்கியிருக்கும் குழந்தை வடிவேலரிடம் திரும்பி வந்து எமது சிவகுமார சுவாமியைக் கண்டு அதிபாலனாக இருக்கப்பட்ட இவனோ இத்தலமெங்கும் நிறைந்திருந்த நம்மவருடைய சதுரங்கசேனைப் பெருக்கனைத்தையும் சற்று நேரத்தில் மாய்க்கும் திறமை பெற்றவன்! இது வெகு அதிசயமென்று பேசிக்கொண்டு சூரியனை மூடிய பனிப்படலத்துக்கு ஒப்பாக நமது சுயஞ்சோதிக்கடவுளை வந்து சூழ்ந்து கொண்டு உருத்திரா காரமாக அவர்கள் போர்த்தொழிலைச் செய்ய எத்தனித்த காலையில் தேவர்களும் நவவீரர்கள் யாவரும் பயப்பீதியினால் வருந்தியிருக்கின்ற தனைக்குமரகுருபரன் கண்டு சிறுநகை செய்து தமது சாரதியை நோக்கிச் சூரன் படைகள் மிகுத்துக்காட்டும் தலங்கள் தோறும் நமது தேரை வாட்டா காரமாகச் சுழற்றி வரக்கடவையெனப் பணித்தனர். அவன் மகாசாமர்த்தியத்துடன் இரதத்தைத் திருப்பி அவ்வவ்விடங்கள் முற்றிலும் மின்னலைப்போலச் செலுத்துவதாயினன். அந்தத்தெய்வீகம் பொருந்திய இரதமானது கண்ணிமை கொட்டுவதன் முன்னம் பளிச்சுப்பளிச்செனத் தோற்றப் பூமண்டலம் முழுதும் வட்டணைவந்தும் திசாதிசை களுக்கப்புறம் ஓடியும் வானவெல்லையை வலம் வந்தும் சத்த சாகரப்பரப்பினும் அவற்றினிடையிற் பட்ட தீவுகளிலும் மற்றத்தலங்களெங்கும் கறகிறெனச் சுழன்று சுழன்று திரிவதாக வருகின்றபோது குமாரதேவர் தமது வில்லினின்றும் அதிகக்கொடுமைகளுடைய பாணகோடிகளை ஒவ்வொரு தொடையில் ஆயிரக்கோடி

கோடா கோடிக்கணக்கிற் சொரிந்து சூரனுடைய நால்வகைச் சேனைகள் அனைத்தையும் சின்னபின்னம் செய்தகாலையிற் பற்பல விதங்களாக மாண்டு குவிந்த இராட்சதப் படைகளின் மிகுந்த சுமையைப் பொறுக்கமாட்டாமற் பூமிதேவியானவள் தத்தளிக்க அதைத்தாங்கியிருக்கும் ஆதிசேஷன் பணமகுடங்களும் நெக்குவிட்டு விழிகள் பிதுங்கி விஷங்களைக்கக்கிப்படாத பாடுகளைப்பட்டான். அக்காலத்தில் உதிரப் பிரவாகமானது பிரளயவெள்ளத்திலும் மேலிட்டெழுந்து அலைகளைவீசி ஆர்ப்பரித்துக் கடலை எதிர்த்துக்கொண்டு ஓடியது. அப்போது இந்த வேடிக்கையைப் பார்த்துக்கொண்டிருந்த தேவர்கள் முதலானவர்கள் பிரமித்து அம்மம்ம இதென்ன அற்புதமாகவிருக்கின்றது! எமது இறைவனாகிய சிவகுமாரன் காண்டீபத்திலிருந்து வெளிப்படும் சரங்களின் விரைவைப் பார்க்குமிடத்துச்சக்ரவேகத்தையோ வாயுவேகத்தையோ மனோவேகத்தையோ எதனை முந்திப்பேசலாகு மென்றுபெரும் அற்புதத்தைக் கொண்டு புகழ்ந்தனர்.

இப்படியிருக்கும்போது மற்றைய அண்டங்களில் அடைபட்டிருந்த சயினியங்கள் பிரளய வெள்ளத்திலும் மேலிட்டு இரைந்து வந்தெதிர்த்துப் பலவகைக்கொடிய அஸ்திரசஸ்திரங்களைச் சோனைமழையைப்போலச் சொரிந்து சொரிந்து வாதாடி வருகின்றதைச் சிவசுப்பிரமணிய தேவர்கண்டு அதிகக் கோபங்கொண்டவராய்த் தமது திட்சண்யமுள்ள கொடிய பாணகோடிகளை அமோகமாகப் பிரயோகித்து அவர்களைக் கண்டதுண்டமாகக் கண்டித்து வாட்டியபோதிலும் மீட்டும்மீட்டும் அவர்கள் மாரிகாலத்திற் புற்றிளிடத்திலிருந்து திரளாய்வரும் ஈசலினது பெருக்கினும் அதிகரித்துப் பெருத்து வந்து வந்து போராடுவதை எமது கர்த்தன் நிதானித்து அதனை நிறுத்துவதாகத் திருவுள்ளத்தில் எண்ணித் தமது சரமாரிப் பெருக்கினால் அண்டவாயில்களை அடைத்ததுமல்லாமல் தம்மாற் கண்டிக்கப்பட்ட பிணமாமிசாதிகள் உதிரப்பிரவாகத்திற் கலந்துபோக இடமில்லாமல் அலைந்து தேக்குவதையும் பிணமலைகளாதியானவை ஓங்கி விண்ணகம் வரையில் மூடநிற்பதையும் அவைகளால் நவகிரகங்கள் வானவழிச் செல்லக்கூடாத விதத்தையும் பிராணிகளுக்கு உண்டாயிருக்கும் மனவருத்தங்களையும் தெரிந்து தமது தாதையைப்போலச் சிவசுப்பிர

மணியக் கடவுளானவர் தமது செந்தாமரைத் திருவிழிகளினற் சற்று கோபங்கொண்டு பார்த்தகாலையில் அதினின்றும் மீறி எழுந்த தீப்படலமானது தாக்குறுதலாற் சடசடத்த தொனிகளுடன் பிணமலைகள் முதலானவை தகிக்கப்பட்டு நீருய்ப்பூமியில் அடங்கவும் உதிரவாரியானது சுவறிமறைந்து திரிலோகங்களிற் பெருத்திருந்தலால் நாற்றம் நீங்கிச் சீவராசிகளனைத்தும் தாங்கள் பட்டிருந்த சஞ்சலங்களைப் போக்கிக்களித்துச் சிவகுமாரன் பெருமைகளைப்புகழ்ந்து வாழ்த்தின. இப்படி நிமைபோதிற் கொளுத்தி நீருக்கி மறைத்த வடிவேலரானவர் இவைகளின் மத்தியில் நின்ற சூரனை மாத்திரம் வாட்டாமல் விட்டதை யோசிக்குமிடத்தில் இது வொரு திருவிளையாடலாகத் தோற்றுகின்றதென விஷ்ணுவாதி தேவர்கள் அதிசயித்துச் சுவாமியை வாழ்த்தினர். அத்தருணத்திற் சூரன் இந்த அனர்த்தங்களனைத்தையுங்கண்டு அதிசயித்து நமது பகைவனையும் அவனைச்சேர்ந்த வீரர்களையும் நிர்மூலப்படுத்தித் தேவப்பயல்களை அலைத்துச் சிறையிற் சேர்க்கும் படிக்கு நானொருவனே சற்றுநேரத்திற் செய்து முடிப்பேனெனநினைத்துக் கோபாக்கினிமேலிட்டுக் தன்தேகத்தையும்மனத்தையும் வாட்ட விழிகள் சிவந்து தீப்பொறிகளை யிறைக்கவடவைபோற் சீறித்தன் தேரைத் தூரத்திக்கொண்டு பூதர்கள் மேற்கவிந்து வரும்போது வாயுதேவனும் சண்முகப்பெருமான் தெய்வீகத் தேரைமுடுக்கி அவுணர் பெருமான் முன்புவரும்போது சுவர்னமயமாக விளங்கியிருக்கின்ற இரதத்தின் மத்தியிற் சரவணபவன் ஞானசூரியன் தோற்றத்தைப் போல விளங்கிக் கொண்டிருக்கும் திருமேனியினது வனப்பையும் சிரோரத்தின மயமாய்ச் சொலித்திருக்கும் வயிரமுடிகள் கவிந்தசண்முகார விந்தங்களின் பொலிவையும் துவாதசாதித்தர்களுக்கொப்பாக விளங்கியசைகின்ற பன்னிருமகர குண்டலங்கள் துலங்கும் செவிகளின் கோலத்தையும் கிருபைக் கிருப்பிடமாகிய குளிர்ந்த பார்வையைப் பரப்பும் விழிகளின் குணாதிசயங்களையும் நவரத்தினமயமாகச் சோடித்திரா நின்றவாகுவலயங்களைச் சூடிப்பருவதா கிருதியாகத்திரண்டு காட்டும் புயங்களின் காட்சியையும் ஆசானு பாகுவாய் நீண்டிருக்கும் திருக்கரங்களின் தோற்றத்தையும் அவற்றினிடத்தில் வெற்றி வேலாயுத முதலிய படைகளின் விளக்கத்தையும் வீரபராக்கிரம வுத்தண்டங்களையும் மற்றுமிராநின்ற சிறப்புகளையும் இராஜாதிராஜனானவன் தன்எதிரில் நேராகத்தெரிசித்தபோதினும் பிராரத்துவ

வினையிற் சம்பந்தப் பட்டவனாய்ப் பூர்வத்தில் தக்கப் பிரஜாபாலகன் தனக்குச் சகலசெல்வங்களையுங் கடாக்ஷித்தபரமனை மதியாமல் இகழ்ந்து சிவதண்டனைக்கு ஆளாகி மயங்கியதைப்போலச் சூரன் பால சுப்பிரமணிய தேவரைப்பார்த்து இதனைச் சொல்லுகின்றான். நாம் பலநாட்கள் தேகமும் மனமும் வருந்தி அரியதவங்களைச் செய்ததைக்குறித்துச் சடாமண்டல தாரிபாகிய சிவபிரான் நமக்கு கொடுத்திருக்கின்ற வரங்களின் முயற்சியினாற் சலனமற்று இக்காயத்துடன் எக்காலத்தும் இருக்கவல்லோம். மகாவிஷ்ணு முதலிய தேவர்கள் கனவிலும் நம்முடன் பகைக்க நினையார்கள். இஃதன்றியும், இதுவரையில் நம்முடன் சண்டை கொடுத்தவர்கள் இறந்ததல்லது பிழைத்துத் திரும்பினவர்கள் யாவருமில்லை. அப்படிக்கு மாண்டவர்களைக் கணித்துச் சொல்லவும் போதுமோ! இவ்வித ஜெயப்பிரதாபங்களை நாம் பெற்றிருப்பது உனக்குத்தெரியாதோ? கேள்விப்பட்டது மில்லையோ? நமது பணிவிடைகளைச் சிரசாகவகித்து நடந்து வந்து இப்போது கள்ளனைப் போல ஒளிந்து திரியும் இந்திரனாதி தேவர்கள் ஏதோசில காரணங்கள் சொல்லியதை நீ சிறுபிள்ளையாதலால் மெய்யெனக் கருதிமுன் பின்யோசித்துப் பாராமல் மேலிட்டுவந்து சேற்றினிடத் தகப்பட்டுக் கொண்டு வெளிவரவகையறியாமற் சிக்கி விழிக்கும்யானைக்கன்றைப்போலத் திகைக்கின்றனை. மேலும் பெரும்புறக்கடலினும் மேலிட் டடர்ந்திருந்த எமது நால்வகைச் சேனைப் பெருக்கனைத்தையும் சற்றும் இரக்கமற்றுக் கொன்றது மன்றி இரண்டு புஜங்களைப் போல எனக்கு இருந்த துணைவரையும் என் சௌரியபராக்கிரமங்களையும் மதித்துப்பாராமல் உனது வேலினால் எறிந்தாய். அல்லாமலும் நமது மனம் வருந்தி வாடும்படிக்கு ஜெயசாலிகளாகிய பிள்ளைகளையும் சேனைத்தலைவர்கள் மந்திரி பிரதானிகள் வர்க்கங்களைக் கொல்லுவித்தனை. இக்காரணங்களை நினைக்க நினைக்க எமக்குச் சோபமேலிடுகின்றபடியால் நமது கோபதாபங்கள் தணியும்பொருட்டு உன்னை அதப்படுத்துவதன்றி நீ அதிபாலகனென்று நாம்விட்டுவிடுவோ மென்று எவ்வளவும் நினைக்கவேண்டாம். புறந்தந்து ஓடியபோதினும் பழிபாதகத்திற்கு அஞ்சாமல் தொடர்ந்து திகைக்கும் படிக்குச் சாடுவதன்றியும் உனக்குப் படைத்துணையாக வந்து சூழ்ந்திருக்கின்ற தூதன் முதலாகிய வீரரை யெல்லாம் அதாகதப்படுத்திப் பூதரென்னும் பேரில்லாமல் உன்சயினியங்களைச் சாம்பலாக்கி உனக்கு மந்திரலோசனைக்

குவேண்டும் உதவிகளைச் செய்யத்தொடர்ந் திருக்கின்ற மகாவிஷ்ணு முதலாகிய தேவர்களைச் சின்ன பின்னப்பட வாட்டி இக்காலத்தில் நம க்கு நேர்ந்திருக்கின்ற கோபக்கனலைத் தணிப்போமென்று தன்கிளைக ளுடன் நாசப்படவிருக்கின்ற சூரன் பேசிய வாசகங்களனைத்தையும் குமாரசுவாமியார் தம் திருச்செவிகளி லேற்று நகைத்தவராய்க் கொடிய செய்கைகளை நடத்திவரும் கயவனே! நீ வியர்த்தமாகிய வாக்கியங்களை ஆடினை. உன்கருத்தின் வண்ணம் முடிவதொன்றேனு மில்லை. ஆதலால் வயிரமலைக் கொப்பாகிய உன்மார்பைத் துளைக் கும்படிக்கு நாம் செலுத்த விருக்கின்ற கூரிய அலகைப்படைத்த பா ணகோடிகளானவை உன் அகந்தையை அடக்கி மறுமொழி சொல் லுமென்று நிர்மலக்கடவுளாகிய சிவகுமாரன் திருவாய் மலர்ந்த வாக் கியங்களைக் கேட்டமாத்திரத்தில் அவுணர்பெருமானுக்கு அதிகக்கோ பம் பிரவேசித்து வடவையைப் போலச் சிறி நல்லகாரியம் உன் விரு ப்பை இந்த நிமிஷத்தி லடக்குகிறேமென்று தங்கக்கட்டுகள் பூண்ட மேருவை யொத்தவில்லை யெடுத்து நிறுத்தி நாரியைமாட்டிக் குமுகு மெனக் குணத்தொனி யெழுப்பிய தருணத்தில் அச்செய்கையைக்க ண்டு பூதவீரர்களனைவரும் பாற்கடலிலெழுந்த விஷத்தைவளைந்து கொண்ட தேவர்களைப்போலச் சூரனைச் சூழ்ந்து கொண்டார்கள்; இவ்விதமாகச் சிவகணங்களும் அவர்கள் தலைவரும் மேலிட்டு வீரா வேசங்களுடன் தமது விற்களை வளைத்துக் கடூரமாகிய பாணகோடிக ளைச் சோனை மாரிபோற் சொரிந்து தண்டாயுதங்கள் வேலாயுதங்கள் சக்கரப்படைகள் மராமரங்கள் பருத்தமலைகள் இவைகளினாலும் சாடி அவர்களாற் கூடியவரையில் அகோரயுத்தங்களைச் செய்து வருவதை ச்சூரமகாராஜன் கண்டு நகைத்தவனாய்ச் சாங்கோபசங்கக் கணக்கி னும் மேலிட்ட சரவருஷங்களைப் பெருக்கித்தன்னை மூடவருகின்ற பகைவர்படைகயா நிமைப்போதிற் கண்டித்தழித்து மேலும் அமோக மாகிய கணைகளைச் சந்தித்துவிட்டுப் பூதப்படைகளைக் கண்டங்கண்ட மாகச் சித்திரவதைசெய்து நிர்மூலப்படுத்திய காலத்திற் பூதசயினி யங்கள் காணுமற்பறந்தோடின. அதைக்கண்ட தேவரானவர் மேலிட் டுவந்து தமது அமோகமாகிய பாணவிதங்களைச் செலுத்திச் சூரனை க்காணக்கூடாமல் மறைத்தனர். அவுணராஜன், நகைமுகனாய் அவை களை மதியாமற் சும்மாபார்த்திருக்க அப்பாணகங்களனைத்தும் அந்த அசுரன் பேரிற்பட்டு மழுங்கித் தெறித்து வீழ்ந்தன. அப்பாற் சூரன்

தன்தேரைச் சக்கிராகாரமாகச் சுழற்றிக்கொண்டு கோடா கோடி சுடு சரங்களை ஒவ்வொரு தொடையில் தூண்டிவிட்டுப் பூதசயினியங் களைச் சின்னபின்னப்பட வாட்டத்தொடங்கிய காலையில் எண்மரும் இலட்சரும் தேகமுற்றினும் உதிரம் பெருகியோடப் பிரமித்து மதிம பங்கி எதிர்த்து நிற்கமாட்டாமல் மானமழிந் தோட்டம் பிடித்தார் கள். வீரவாகுதேவர் அதனைத்தெரிந்து சடுதியில் தமது உடைவாளை உருவிக்கொண்டு சூரன் தேரிற்பாய்ந்து அவன் கரத்தில் விளங்கியி ருந்த மகத்தாகியவில்லைத் திடீரென இருதுண்டாக வெட்டிக் கர்ச்சி த்தனர். நூற்றெட்டு யுகம்வரையில் யாவராலும் அசைக்கக்கூடாமற் பலவெற்றிகளைப் பெற்றிருந்த சூரனுடையதனுசை ஒருநிமைப்போதி ல் வெட்டிபெறிந்த நமது தேவருடைய சௌரிய பராக்கிரமத்தை யெ ன்னவெடுத்துச் சொல்லுவோம்! தனது ஒப்பற்ற வில்முறிந்ததினுற் சூரனுக்குண்டான மகாக்கோபத்தில் அவன் தன் கரத்தையோங்கி வீராதிவீரன் மார்பில் அறைந்தனன். உடனே தேவர் மார்பானதுபத் தலாய்ப் பிளந்து இரத்தம் பீறிட்டோடக் களைத்து இரதந்தட்டியில் விழுந்து விட்டனர். சூரன் அவரை யெடுத்து வானத்திற் சுழற்றி வீசி னன். அவர் அண்டப் பித்திகைவரையிற் போய் மீளும்போது வாயு வின் பரிசத்தாற் களை தெளிந்து நிலத்திற்குச் சமீபத்தில் வந்தகாலை யிற் பாய்ந்துபோய்ப் பாலசுப்பிரமணியர் பக்கலில்வந்து சோர்வுடன் நிற்பதாயினர். சூரன் வேறுவில்லைக் கரத்திற்கொண்டு விளங்கினன்.

அதனைக்கண்ட எமதிறைவனாகிய சிவசுப்பிரமணியக் கடவுள் வீரகாளியும் திடுக்கிடும்படிக்கான விற்குணத் தொனிசெய்து முற் பட்டுவருங் காலையிற் காலாந்தகனை யொத்த சூரன் கோபித்துக் கை மிஞ்சி இருபத்து நூறுயிரம் கணைகளைப் பிரயோகித்து அவைகள் ஒன்றனந்தமாகப் பூமண்டல முற்றும் பரவிச்சாடும் அனர்த்தங்களை த்தேவர்கள் கண்டு நடுங்கியிருக்கும்போது குமாரதேவரானவர் தமது தனுவினிடத்தில் அமோகமாகிய வாளிகளைத் தொடுத்துப் பிரயோ கித்துப் பாதகன் எங்கும் நிறைத்த சரப்பெருக்கனைத்தையும் ஒன் றெழியாமற் கண்டித் தெற்றினர். இவைகளைப் பார்த்த சூரன் வயி ரங்களைப் பேசிப் பாலன் விருப்பை அடக்குகிறேனென்று எமதிறை வனிடம் நெருங்கிச் சரவருஷங்களைத் தூண்டிக் கர்ச்சித்தனன். குமா ரதேவர் அவைகளைக் கண்டித்து நிலத்தில் வீழ்த்தினர். இவ்விதம்

களாக இருவீரர்களும் பின் வாங்காமற்கொடிய போர்த்தொழிலை நடா த்திவரும் அற்புதக்காட்சியைக் கண்டிருந்த தேவர்கள் முதலியோர் திகைத்து அம்மம்ம! இவ்வீர்களுடைய பராக்கிரமமே பராக்கிரமம். இவர்கள் தேர்கள் போகுமிடங்களை யறியக்கூடவில்லை யென்று புக ழ்ந்திருந்தார்கள். அது சமயத்திற் சூரன் கைமிஞ்சி முருகன் தேரில் நாட்டியிருந்த வெற்றித் துவசத்தை மிக்கவொலியெழ வெட்டித் தள் ளித் தக்ஷணத்திற் சங்கோபசங்கமாகக் கணைகளைச் சொரிந்து முருக ப்பெருமாளின் தோற்றந்தெரியாமற் சகலரும் பிரமிக்க மூடிக்கொக் கரித்து வெற்றிச்சங்கத்தையெடுத்துப் "பம்பம்" என்று அண்டமதிர ஊதிமுழக்கினன். அப்போது வடிவேலருக்குச் சற்று கோபம் பிர வேசித்துப்பகைவன் தம்மை மூடியகணைகளை நிமையிற்பேக்கிமீட்டும் ஏழு கோடி சீலி முகங்களைப்பிரயோகித்துச் சூரனுடைய மகத்தான தேரைச் சக்கைசக்கையாகப் பேர்த்தெறிந்து அதிற்பூட்டிய புரவிகளை யும் பாகனுடன் கண்டித்துத் தள்ளினர். இவ்விதம் சூரன் பங்கப்பட் டதைத் தெரிந்த பூதசேனாதிபதியாகிய பானுகம்பன் சுரிமுகச்சங்கங்க ளைத்தனது ஆயிரம் வாய்களினிடத்துச் சேர்த்துப் "பம்பம்" என்று தொனித்தனன். மகாவிஷ்ணுவும் தமது பாஞ்சசன்னியத்தை முழக்கினர். அப்பால் ஆதிதேவன் தேரின்மீதில் துவசமில்லாமையைக் கண்டதேவர்கள் வருத்தமுற்று அக்கினி தேவனைப்பார்த்து ஓ! வீரா திவீரனே! துரிதமாய் எமதிறைவன் இரதத்தின் உச்சியில் வெற்றிக் கொடியாக நீநின்று அசையவேண்டுமெனக் கேட்டுக்கொள்ள அக்க னற் கடவுள் பூரிப்புடன் அப்பணிவிடையைச் சிரசாகவகித்துத் தக்ஷ ணத்தில் அழகிய சிறகையும் சிவந்த கொண்டையையும் படைத்திருக் கின்ற கோழிக்கொடியின் உருக்கொண்டு தேவதேவோத் தமனுடைய திருத்தேரினிடையில் நின்றுயர்ந்து தனது நீண்ட கண்டத்தைத் தூக்கி அண்டங்களதிரச் "சொக்கநாதா" என்னும் பேரோசையெழ க்கூவினன். அதைக்கண்ட சூரன் தனது சிரத்தையசைத்து மூக்கில் விரலைவைத்துப் பக்கத்தில் நின்ற வேறுசேமத் தேர்களிரென்றிற் சிங் கத்தைப்போலத்தாவி மண்டி போட்டிருந்து இதனை யோசிப்பதாயி னன். இந்தச்சிறுவனுடைய உதவிதேவப்பயல்களுக்கு இத்தலத்தில் அல்லது விண்ணிடத்திற் கிடையாது, ஆகையால் அவர்கள் கருவ த்தை இந்த நிமிஷத்தில் அடக்குவேனென்று தன் சாரதியை யெச்சரி த்து வாயுமண்டலம் மேகமண்டலம் முதலியவற்றைக் காற்றினும்

கடுகித்தாண்டித் தேவர்களிருக்கின்ற விடத்திற்குப் போய் அவர்கள் பேரிற்சோனை மாரியைப்போல் ஆங்காரித்துச் சரங்களைப் பிரயோகித்து வாட்டுகின்ற அசுரனுடைய சூழ்ச்சியினைச் சிவகுமாரன் தெரிந்தவராய்த் தாம் இரணக்களத்தில் இருந்தபடிக்கே கரவேகமாகச் சரங்களைப் போக்கிப் பாதகனுடைய பாணப்பெருக் கனைத்தையும் நிர்மூலப்படுத்தியவுடன் சண்முகதேவர் வாயுதேவனைக் குறித்துத் தமது தேரைச் சூரன்முன் ஆகாயத்திற்கொண்டு போய் நிறுத்தித் தேவர்கள் பட்ட வருத்தங்களைச் குமாரதேவர்கண்டு இரக்க முற்றுத்தமது திருக்கரத்தை நீட்டி ஓ! தேவர்களே! இனிப்பயங்கொள்ள வேண்டாம்! மனவருத்த மற்றிருக்கக் கடவீர்கள்! பாதகனை இதோ வாட்டுகின்றன மெனத் தேறுதல் சொல்லுவதைச் சூரன் கேட்டு உருத்திராகாரமாய்க்கோபித்து ஒருபாலனோ நம்மைக்கொல்ல வல்லவனென்று உடனே கொடிய சரங்களைப்போக்கிச் சரவணபவனை மூடி "கியாவு" மெனச் சிங்கநாதஞ் செய்தனன். எமதிறைவன் அவைகளை யொருநிமையிற் போக்கினர். பின் ஒருவரோடொருவர் பாணங்களை மேலிட்டிறைத்தும் வீரங்களைப்பேசியும் வெற்றிபெற வேண்டுமென்கிற வீராவேசத்தினுற் சக்கிராகாரமாய் மூதண்டகோளகை முதலிய தலங்களிற் சாரிகை திரிந்து மிகவற்புதமாய்க்கடூரமாகிய யுத்தங்களைச் செய்வதானுர்கள். மகாதிரனுகிய சூரமகாராஜன் தன் கைவல்லபத்தினுற் சருவசங்கார காலத்தில் ஊழிமேகம்பரவி அக்கினி மழையைப் பொழிந்து உலகங்களை வாட்டுமாறுபோலச் சுயஞ்ஜோதிமயமாகிய நம் கடவுள் மீதிற்கொடிய சரவருஷங்களைப் பொழிந்து மேலும் மத்திமத்தியில் அனந்தகோடி மழுப்படை முத்தலைச்சூலம் கப்பணம்பிண்டி பாலம் கவண் கொழுப்படை வச்சிராயுதம் வேற்படை எழுவாயுத முதலிய ஆயுதங்களையுங் கரவேகமாகத் தூண்டினன். இத்தகைய அவுணராஜன் கற்றிருக்கின்ற விஞ்சைகளின் முயற்சிகளையும் விற்சாதுரியங்களையும் கரவேகங்களையும் எவராலும் சொல்லிமுடிவதன்று. அத்தருணத்திற்சிவகுமாரன், சூரன் ஆரோகணித்திருந்த மேருவுக் கொப்பான இரதத்தைப் பொடியாக்கிப் பூட்டிய புரவிகளையும் சாரதியையும் கண்டித்துத் தள்ளினர். சூரன் சிரோரத்தினத்தைப் பறிகொடுத்த நாகம்போல் வாடிக்கரத்திற் பற்றிய வில்லுடன் நிமைப்போதிற் பூதவெள்ளங்கள் தங்கியிருக்கு மிடத்தை நோக்கி நிலத்திற் பாய்ந்து தனது அமோக பாணங்களால்

அவைகளை அல்லோலகல்லோலப் படும்படிக்கு வாட்டி நாசஞ்செய்வ தானான், சிவகுமாரன் பாதகன்செய்கை வெகு நேர்த்தியெனத் தாமும் கீழேகொடிக்குள் தேரைநடத்தி வந்து சூரன் முன் நிறுத்தி அசுரன் சரங்களின் கொடுமைகளை மாற்றினார். சூரன் அதிற் கோபித்து அனந்தகோடி சுடுசரங்களைக் குமாரதேவர்பேரிற் பிரயோகிப்ப தானான். எமதையன் அவைகளைப் போக்கிமேலுங் கொடிய சரங்களைச்சூரன் புஜங்களுக்கு இலக்காக விட்டபோது, அவைகள் அவுணராஜன் வயிரம்போன்ற தோள்களில் தாக்கித்துகளாய் நாற்றிசையினும் பறந்தன. அதைக்கண்ட அவுணராஜன் பெருமூச்செறிந்து எவர்களும் பார்ப்பதற்கு அஞ்சும் நமது தோட்களில் இப்பாலனோ கணைசெலுத்துவனென்று பற்களைக்கடித்து எமதையன் பேரில் வேகமாய்ப்பாணங்களைத் தூண்ட, அவைகள் நெருங்கிப் பகைவன் தோளிற்பட்டவுடன் சாம்பலாய்த் தகிக்கப்பட்டு வீழ்ந்தன. தக்ஷணத்தில் எமதையன் சிலகணைகளை இராஜராஜன்பேரிற் செலுத்தினர். அசுரன் அவைகளைக்கண்டித்து அமோகமாகிய திவ்யவாளிகளைப் பொழிந்து பூதப்படைகளையும் படைத்தலைவர்களையும் மற்ற வீரரையும் நிலைகுலைத்துச் சாடிக்கொல்வதானான். அச்சூரன் திறத்தைச் சிவகுமாரன் கண்டு துரிதமாகத் தமது சரங்களால் அவைகளைப் போக்கிச் சூரன்வலியவில்லைப்படாலு மென வெட்டித் தள்ளினர். அது நிலத்தில் விழுமுன் சூரன் வேறுவில்லைக் கரத்திற் கொண்டு கர்ச்சித்து மாயமந்திர முயற்சியினாற் சடுதியில் வானத்தில் மறைந்திருந்து பூதர்களைப் பாணகோடிகளாற் சாடிவருத்துவதை எமதையன் தெரிந்து துரிதமாய்த்தமது திருத்தேரை விண்ணகத்திற் செலுத்திக்கொண்டு போய்ப்பகைவன் மாயப்போரை வாட்டியகாலத்து அசுரன் மாயவித்தையாற் கீழேயுள்ள போர்க்களத்தில் தோன்றிப் பூதசயினியங்களைச் சாடிக்கொல்வதானான். சிவகுமாரன் தக்ஷணத்தில் தமது தேருடன் நிலத்திலிறங்கிப் பூதசேனைகளைக் கவிந்து வருத்தும் அசுரன் பாணங்களைக் கண்டதுண்டப் படுத்தினர். பகைவன் உடனே தன் உருவை மறைத்துக் கடலின் எல்லையில்தோன்றிச் சரவருஷங்களாற் சிவகணங்கள் முதலானவர்களைத் திகைக்கும்படி சாடுவதைக் கந்தசுவாமியார் தெரிந்து அத்தலத்தை நொடியிற் சேர்ந்து அவன் படைகளை வாட்டினர். அவ்வேளையிற் சூரன் ஒரு மாயமந்திரத்தால் தன் உருவத்தை மறை

த்து அண்டகடாக வெல்லையிலும் சேஷனாதிய நாகர்வசிக்கும் பாதலத்திலும் மகம்மேருவின் சிகரங்களிலும் மகா விஷ்ணுவுக்கு இருப்பிடமாகிய வைகுந்தநகரிலும் மாறி மாறிப்போய் அங்குள்ளவர்களை யும் தனது கொடிய சரமாரிப் பெருக்காற் சாடும்போது எமதையனும் சலியாமல் அப்பாதகன் சென்ற விடங்களி லெல்லாம் விடாமல் தொடர்ந்து அவன் பாணங்களை அதப்படுத்துவதான மகிமைகளை நாம் இங்கு என்ன எடுத்துப் பேசப்போகின்றோம்! அத்தருணத்திற் சூரன் பெரும்போரைச் செய்து செய்து நிருவகிக்கமாட்டாமற் களைத்துத் தன் உருத்தெரியாமல் மறைந்து அண்டகோளகையின் மேற் புறத்திலிருக்கின்ற வாயிலுக்கு அருகிற் போகும்போது பாலசுப்பிரமணியதேவருந் தொடர்ந்து கொடியபோரைச் செய்து சூரன் இரதத்தைச் சாரதி குதிரைகளுடன் தும்சம்பண்ணித் தள்ளினர். அவுணராஜன் திகைத்து அப்பால் தனது இந்திரஞாலத் தேரை நினைக்கத்தக்ஷணத்தில் அது எதிரில் வந்து நின்றது. அதில் அவன் தாவியேறி முன்னம் சரவணபவன் அவுனச் சயினியங்களை மேலும் வரவொட்டாமல் அண்டவாயிலைச் சரங்களால் அடைத்து வைத்திருந்த வல்லபத்தைக் கண்டுசூரன், குமாரசுவாமியுடன் போரைக்கொடுத்துக்கொண்டிருந்த படிக்கு அந்தவாயிற் சரக்கூடத்தையும் அதம்பண்ணினவனுய் அதின் மேற் புறத்திற் பெருக்கெடுத்து ஆரவாரித்திருக்கும் தனது நால்வகைச் சேனசமுத்திரங்களையும் பார்த்துத்தன் கரங்களை நீட்டி வாருங்கள்! வாருங்கள்! என்று புவனங்கள் அதிரும்படிக்குக் கூக்குரலிட்டு அழைத்த காலையில் அச்சேனைப் பெருக்குகள் அண்டவாயிலைக்கடந்து பெருமுழக்கத்துடன் விண்ணிடமெங்கும் மூடிச்சிவகுமாரனைக் கண்டு வளைந்து கொண்டு அகோரமாகிய யுத்தங்களைச் செய்யத் தொடங்கின. அதனைச் சரவணபவன் தெரிந்து பகைவர் அனைவரையும் ஒருமுனையில் ஒடுக்கத் திருவுள்ளத்திலெண்ணிக் கோபப் பார்வையைச் சிறிது தம்மையெதிர்த்து வந்த சேனைக்கூட்டங்களில் நாட்டிய மாத்திரத்தில் எழுந்த சுவாலைக் கனலால், ஆணவத்தால் நல்லுணர்வைப் போக்கி மயங்கியிருக்கும் சூரன் சதுரங்கசேனைப் பெருக்கனைத்தும் பக்கென்றெரிந்து சாம்பலாயின. இவ்வித நாசத்தையடைந்த காலத்தில் மற்றைய அண்டங்களிலிருந்து வெளிவந்த சயினியங்களிற் சில வடவைபோல் ஆரவாரங்களைச் செய்துகொண்டு விண்மண் திசாதிசைகளில் நெருங்கிவந்து

பாலசுப்பிரமணியக் கடவுளைச் சூழ்ந்து கொடிய பாணவிதங்களா லும் மாயைப் பெருக்குகளாலும் கடும்போர் செய்து வருவதனைச் சிவகுமாரன் கண்டு தமது கோபக்கனலால் அவர்களனைவோர்களை யும் சாம்பலாக்கி மடித்தனர். பின்னும் மேலே அண்டங்களில் வழி பெறுமல் அடைபட்டிருந்த நால்வகைச் சேனைப் பெருக்கானது கடையுக வெள்ளத்தினும் மேலிட்டு வீறிவந்து குமாரசுவாமியை நெருங்கிச் சீறியெதிர்த்ததனைக் கார்த்திகேயன் கண்டு சகல பகைவ ரையும் ஒழிப்பதாகத் திருவுள்ளத்தி லெண்ணித் தமது திருக்கரங் களில் விளங்கிக் கொண்டிருக்கும் கைவேல் கணிச்சி சூலம் சக்கரம் தண்டம் இத்தகைய சிறந்த ஆயுதங்களைக்குறித்து நீங்கள் நாற்றிசையி னும் விரைவிற்போய்ச் சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் ஒன்று பட்டுப் பெருகுமாறு போலப்பரந்து சூழ்ந்து வாதாடிவரும் சூரன் சதுரங்க சேனைகளின் விரிவனைத்தையும் தும்சப்படவாட்டி, வருவ தற்க் கிடம்பெறுமல் மேலே அண்டங்களில் தேக்கிட்டிருக்கின்ற நால் வகைச் சயினிய வெள்ளங்களையும் பற்பல வுருக்கொண்டு வளைந்து சின்ன பின்னப்படச் சாடியபின்பு நம்மிடத்திற்கு வரக்கடவீர்களெ னக் கட்டளையிட்டுச் செலுத்தினர். அந்தத்தெய்வீகம் பொருந்திய ஆயுதங்கள் அனந்த கோடிவிதங்களில் வெளிப்பட்டு ஆயிரத்தெட்டு அண்டங்களிலும் சடுதியில் நுழைந்து நுழைந்து அத்தலங்களில் நெருங்கியிருக்கின்ற இரதகஜ துரகபதாதி வெள்ளங்க ளனைத்தையும் அதாவதப்பட வாட்டிக்கொன்று திரும்பி வானகங்கையிற் படிந்து குமாரதேவருடைய திருக்கரங்களில் வந்து பழயபடிக்குவிளங்கியன. இவ்விதமாகச் சரவணபவன் தூண்டியபடைகளால் தன் சேனைகள் பாக்கியில்லாமல் நாசப்பட்ட வேடிக்கைகளைச் சூரன் கண்டு மண்டி யெரிந்து இப்பாலனைக் கணப்போதிற் கொல்லக்கடவே னென்று தனக்குச் சிவபிரான் அருளிய சக்கரப்படையை முருகேசன்பேரில் வேகமாய்ச் செலுத்தினன். குமாரசுவாமியார் தமது திருக்கரங்களி லொன்றை நீட்டிவட்டாகாரமாய்ச் சூரியனுக்கொப்பாகச் சொலித்தி ருக்கும் சக்கரத்தை வா! வா! வென்றழைத்துப் பற்றி நகைமுகராயிரு ந்தனர். இப்படிக்குத் தனது அருமைச்சக்கரம் முருகேசன் வசப்பட் டதைச் சூரன் கண்டு திகைத்து இந்தப்பாலனை மாயையால் வெல் வேனென்று பற்பல வுருக்களைக் கொண்டு எங்குந்தானுக நின்று கொடிய பாணப்பெருக்குகளைச் சொரிந்து சுழன்றுசுழன்று பிரபலச்

சண்டை செய்வதனைக் குமாரதேவர் தெரிந்து தமது ஞானப்படையை விட்டுப் பகைவன் மாயைத்திறங்களனைத்தையும் வாட்டி அவனைத்தனியனாக விட்டனர். அப்போது சூரன் மனந்தளர்ந்து தேரிலிருந்தபடியே சற்று நேரம் யோசித்திருந்தனன். அதனைக்கண்ட தேவர்கள் சந்தோஷப் பெருக்காற் குமாரசுவாமி மீதிற் கற்பகமலர்களை இறைத்துப் போற்றினர். இப்படிப் பகை வருடைய வீறுப்பைக்கண்ட சூரன் மின்னலைப்போலத் தேருடன் மறைந்து அண்டகோளகை மேல்வாயிலினருகில் தோன்றிக் கொக்கரித்துச் சூரனுறற் சண்டைக்கு வரக்கடவை யெனக் கூவிப் புஜங்களைத்தட்டி நின்றதனை எமதிறைவன் தெரிந்து துரிதமாய்த் தமது தேரை அத்தலத்திற் கொண்டுபோய்ப் போரால் அசுரனைச்சிக்குப் படுத்தும்போது சடுதியில் அவன் மற்றொரு அண்டத்திற் பாய்ந்தனன். சண்முகரும் சலியாமற் சூரன் முன்னம் நேர்ந்து தமது படைகளால் அவனைத் திகைக்கும்படி சாடும்போது பாதகன் அதனைக் கடந்து தன் காவலிற் பட்டமற்றைய வண்டங்கள்தோறும் பாய்ந்து பாய்ந்துவரச் சரவண பவனும் அவனைவிடாது பின் பற்றிப்போய் அகோரயுத்தங்களைச் செய்து வரும்போது சிவகுமாரனுடைய தோற்றங்காணாத காரணத்தாற் பிரமனாதிதேவர்கள் மனச்சோர்வுடன் ஸ்ரீவிஷ்ணுவைச்சேவித்து வேலாயுதமூர்த்தியானவர் பாதகனைவிடாமற் பின்பற்றி மேலே யண்டங்களினும் போயினர். சூரன் மாயையினால் என்ன கொடுமை விளைகின்றதோவெனத் தாயைப்பிரிந்த கன்றைப்போலக் கிலேசிப்பதைக் கேசவன்கண்டு நகைத்தவராய் ஓ! தேவர்களே! பயப்படவேண்டாம். தேவாதிதேவனாகிய சிவபிரானே சண்முகாரவிந்தங்களைக் கொண்டு இப் பிள்ளைப்பருவத்தனாய் வந்தவ னல்லது வேறு அவன் மகிமைகளைச் சொல்லயாவராலாகும்! சற்றுநேரத்தில் அப்பாதகனைக்கலந்து குமரேசன் வரவிருக்கின்றதை நீங்கள் கண்டு களிப்பீர்களென்று பரந்தாமன் சிவகுமாரன் மகிமைகளைப் பலவிதங்களி லெடுத்துச் சொல்லத்தேவர்கள் களித்திருந்தார்கள். இவையிற்கச் சூரனானவன் தனது இந்திரஞாலத்தேரைச் செலுத்தி ஆயிரக்கோடி அண்டங்கள்தோறும் மின்னலைப்போல மாறிமாறி உலவுகின்ற காலத்திற் குமாரக்கடவுளும் பின்வாங்காமல் அவனைத்தொடர்ந்து தமது அமோகப் பாணங்களாற் போராடிச் சூறைக்காற்றைப் போலத்தங்கள் தேர்களைத் திருப்பித் திருப்பி ஒருவரோடொருவர் நெருங்கிச் சண்டைகொடுத்த

விதங்களை என்னசொல்வோம்! இவ்விதங்களில் வாதாடிய சூரன்கடை டசியிற் சமுத்திரமத்தியில் விளங்கும் தனதுவிரமாமயேந்திரபுரியை ச்சமீபித்தனன் சரீரநிழலைப் போற்குமாரசுவாமியும் அவ்விடம் அவனை அதிக உக்கிரத்துடன் தொடர்ந்தபோது அத்தலத்திற் கூடியிருந்த பெரும்புறக்கடலைப் போன்ற சதுரங்கசேனைகளானவை தமது சக்கிரவர்த்தியை வாதாடிவரும் இந்தப்பாலன் வீறுப்பை அடக்குவோமெனப் பலவிதங்களில் வந்து போராடுவதைக் கண்ட எமதையன் அவர்களைக் கோபித்துப்பார்த்தனர். அதனால் அவர்களனைவோருஞ்சாம்பலாயெரிந்து போனார்கள். தேவர்கள் அம்மம்ம! இத்தகைய சேனைப்பெருக்குகளை யெல்லாம் இவ்விதம் யாவரால் நாசப்படுத்தக் கூடுமெனக் குமாரசுவாமியை வாழ்த்திக் களித்திருந்தார்கள். இவ்விதமாய்க் குமாரதேவருடைய சிற்றவழலினால் தனது பட்டணத்துச் சயினியங்கள் யாவுந் தகிக்கப்பட்ட காலையிற் கோபம் சொலிக்கச் சூரன் நின்ற காட்சி யெப்படிக் கிருந்ததென்றால், முன் அகஸ்தியர் கடலைப் போசனஞ் செய்தகாலத்து வடவைதனித்து விளங்கியதிற் கொப்பாக விருந்தது. இவ்விதமாகச் சூரன் ஒருதுணையுமின்றித் தான் ஒருவனாய்ப் பாலன் சவுரியங்களை யெல்லாம் எண்ணமிட்டு இனியென்னால் முடிக்கவேண்டிய காரியங்கள் ஒன்றையுங் காணேனென்று சிந்தைநொந்து தனது தாயாகிய மாயையை நினைத்தனன். சுமாலியென்னும் பருவதச்சாரலிற் பரமனைக்குறித்துத் தவகங்களைச் செய்திருந்தவள் கடிகிச்சூரன் முன்தோன்ற அவன் அவளிடம் தனக்குண்டாயிருக்கும் அபஜெயங்களையும்மனச்சஞ்சலங்களையும்தற்கால நிலைமை வரையிலெடுத்துரைத்து மாண்டவர்களனைவோரும் ஓரேசமயத்திலெழுவதற்கு ஒரு சூழ்ச்சியைச் சொல்லக்கடவாயெனப் பிரார்த்திக்க, மாயையானவள் அப்பாமகனே! உன்னை யொத்தவன் இக்காலத்தில் யாவையும் யாரையும் இழந்து இப்படித் தனித்திருக்கவும் பெறுவதோ! இன்னமும் தேவர்களை விடுதலைசெய்து மகதைஸ்வரியங்களையனுபவித்திருக்க நினையாமற் சண்முகப் பெருமானுடன் பகைத்துச் சண்டை செய்வதாய் நினைந்திருப்பதாகக் காண்கின்றது? ஆதிதேவனே இந்தப் பிள்ளை வடிவங்கொண்டு தோற்றி யிருக்கின்றனன், தலையிலெழுத்தை மாற்றினவர் கிடையாது. தீர்காலோசனை செய்து நடந்து கொள்ளக்கடவாய். இவைநிற்க, உன் கருத்தின்படி யிறந்தவர்களை யெழுப்பப் பெரும்புறக் கடலினருகிற் குளிர்ந்த கிரணங்களை

விசுஞ்சஞ்சிவி விளங்கியிருக்கும் மந்திர கூடபருவதத்தைத் தருவிப் பையாயின் உன் எண்ணங் கைகூடுமெனச் சொல்லிச் சூரன் நினைவு பேதியாத காரணத்தால் அவனை வெறுத்துக்கொண்டு தன்னிருப் பிடம்போய்ச் சேர்ந்தனள். அவுணர்பெருமான் தன் மனச்சஞ்சலங் களைப்போக்கிச், சஞ்சிவி கொண்டுவர வேறொருவரு மில்லாமையால் தனது சிங்கவாகனத்தை நினைத்து அது வந்தவுடன் தான் ஏறியிருந்த இந்திர ஞாலத்தேரை விட்டுக்குதித்து அந்த மிருகராஜன்பேரில் ஆரோகணித்துக் கொண்டு இரதத்தை நோக்கி, நீவிரைந்து சென்று சஞ்சிவி உண்டாயிருக்கும் பருவதத்தை நிமிஷத்திற் பெயர்த்தெடுத்துக்கொண்டுவரக் கடவாயெனக் கட்டளையிட்டனன். மகத்துவம்பொருந்திய அத்தேரானது அசுரமகாராஜன் கருத்தின்படிக்குப்போய்நிமைப்போதில் மந்திரகூடத்தை வேருடன்பறித்து மீண்டு வீரமாமயேந்திர புரிக்குச் சமீபத்தில் வந்தபோது சஞ்சிவியின் பரிசம்பட்டு இரணக்களமுற்றும் பரந்தவாயுவினது முயற்சியினால் அதுவரையிற் குமரக்கடவுளால்மாண்ட சூரனது சதுரங்கசேனைகளும் மற்றப் பிரமுகர்களும் குபிலென்றெழுந்து கொக்கரித்து அட்டகாசங்களைச் செய்து அண்டகோளகை வெள்ளிடைகள்தோறும் எள்ளிடவிடமில்லாமல் நெருங்கி நின்ற விதங்களைச் சொல்லி முடிவதன்று. சிங்கமுகன், பானுகோபன், வச்சிரவாகு, மூவாயிரவர், தருமகோபனாதி மந்திரி பிரதானிகள், சேனைத்தலைவர் யாவரும் உயிர் பெற்றெழுந்து தங்கள் தங்கள் பகைவரைத்தேடி எங்கேயெங்கே யென்று உக்கிரத்துடன் கிளம்பிவர இந்திரஞாலத் தேரானது தனது இறைவனாகிய சூரன் முன் வந்து மின்னலைப்போல நின்றது. சூரன் தன்தேரின் மருந்தின் மகிமையினால் இறந்த சகலரும் சிவந்தரா யெழுந்தனரென்று தன் தாயைப்புகழ்ந்து தரித்திரனுக்குக் கஜேந்திர சம்பத்துக் கிடைத்ததுபோலத் தன்னை மறந்து சற்று நேரத்திற் பகைவரை வாட்டுகிறேனென்று வீறுப்புடனிருந்தனன். தேவர்கள் அவன் உற்சாகத்தைக் கண்டுதிகைத்து மயங்கிப்பலபறவைகளின் உருக்களைக்கொண்டு திசாதிசைகளிற் பறந்து பரந்தொளித்தனர். வீரவாகு தேவராதியர் அற்புதமடைந்து ஏதோகாரணந் தெரியவில்லையென்று நடுங்கி யசைவற்றிருந்தனர். இவ்வுற்பாத விளைவை நமது கடவுளாகிய பாலசுப்பிரமணியதேவர் தெரிந்து சுவாலைவீச நகைத்து இன்னமும் இவர்கள் செய்கையை அறிவோமெனப் பார்த்திருந்தனர். அக்காலையில் உயிர் பெற்றெழுந்த சிங்கமுகனாதியர்

கள் சூரனைக்கண்டு வணங்கி ஓ! தீரனே! தேவரீர் இவ்விடத்தில் வேடிக்கை பார்ப்பதாகத் தங்கியிருந்து அடியேங்களுக்குச் செலவு கொடுப்பீராகில் இந்தப்பாலகனைத் திசைதப்பியோடப் பறக்கடித்து மற்றப் பகைவர்களையும் ஒரு நொடிப்போதில் வாட்டித் திரும்புகின்றோமென அவுணராஜனிடம் வருதிபெற்று முருகப்பெருமானை நோக்கிப் பூதர்கள் யாவருந்திகைத்துவாட அதிக உத்தண்டங்களுடன் மேலிட்டுவருந்திறங்களை எமது சரவணபவன் தெரிந்து கோபித்துச் சதாசிவமூர்த்தியின் அம்சையில் தோன்றிய பாசுபதத்தை யெடுத்துப் பூசித்துப் பிரயோகித்தனர். அந்தப் படையானது கோடி சூரியப்பிரகாசமாய் வெளிப்பட்டுப் "பக்பக்" கென்றெரிந்து அளவிறந்த தேவாஸ்திரங்களை உண்டாக்கிக்கொண்டு தோன்றியிருந்த அவுணராஜன் வர்க்கங்களுடன் மற்றயாவரையும் பாக்கியில்லாமல் ஒரு நொடிப்போதில் நாசப்படுத்திய தன்றி இந்திரஞாலத்தின் பேரில் விளங்கியிருந்த சஞ்சீவி மலையையும் பிளந்து நாசப்படுத்தி வானகங்கையிற் படிந்து பரிசுத்தமாய்த் திரும்பி நமது குமரக்கடவுளின் திருக்கரத்தில் வந்தமர்ந்து விளங்கியது. அந்தத் தெய்வீகப் படையினது மகத்துவங்களை ஆதிசேஷனும் பேசப்படாதெனின் ஒருநாவுடைய யெம்மாலெப்படியாகும்! இவ்விதம் சகலவளங்களையும் திரும்பப்பறிகொடுத்துக் கொடியபாதகன் எண்ணமிட்டிருப்பதைக் கண்ட வீரவாகு தேவராதியரும் தேவர்களும் குமாரசுவாமியைக் கொண்டாடிக் கூத்தாடிய திறங்களையாம் இங்கு என்ன வெடுத்துரைக்கப் போகின்றோம்? அவுணர்பெருமான் துக்கசாகரத்திலழுந்திப் பின் தனது இந்திரஞாலத்தேரைகுறித்து, இந்தசிறுவனைச் சூழ்ந்திருக்கும் பூதவெள்ளங்களையும் அவர்கள் தலைவர்கள் எவரையும் இந்தநிமிஷத்தில் உன் மாயப்பெருகினால் மயக்கிச்சேர்த்து வாரிக்கொண்டுபோய் அண்டவெல்லையினுச்சியில்வைத்து நாம் மறுகட்டளையிடும்வரை காத்திருக்கக் கடவாயெனப்பணித்த காலையில் அந்தஇரதமானது பூமண்டலப்பரப்புமுற்றும்விரிந்துபெரும் இருளை மூடிப் பகைவர் மதியை மயக்கிப் பிரேதங்களாகத் தள்ளித் தன்னிடத்திற் சேர்த்துக்கொண்டு சரேலென வானத்திலெழுந்து அண்டத்தின் உச்சியிற் கொண்டுபோய் வைத்திருந்தது. அந்தத்தேரின் காரணங்களை ஒருவகையாகவும் சொல்லிமுடிவதோ! இவ்விதமாகப் பாலசுப்பிரமணிய தேவர் ஏகாங்கியாக நிற்பதை அவுணர்பெருமான்கண்டு தன் தேகங்குலுங்கக் குலுங்கநகைத்தனன். அதனை எமதி

றைவன் தெரிந்து கோபங்கொண்டவராய் ஒரு திவ்யபாணத்தை யெ டுத்து விட்டனர். அப்படையானது வெற்றி வேலாயுதத்தை யொப் பச்சொலித்து நிமைப்போதில் அண்டமுகட்டைச் சேர்ந்து இந்திர ஞாலத்தேரின் வலியையடக்கி அதனைத் தள்ளிவந்து சரவணபவன் சந்நிதானத்திற் சேர்த்தது. எமதிறைவன் அதனிடத்துள்ள தம்மவர் கள்பேரிற் கிருபாநோக்கம் பாலித்தனர். உடனே யாவரும் மயல் ஒழிந்து எழுந்து சரவணபவனைச் சேவித்துப் போற்றிச் சூழ்ந்திருப் பதாயினர். முருகக்கடவுள் இந்திரஞாலத்தேரைப் பார்த்து, நீநம்மி டத்தில் இனிச்சேர்ந்திருக்கக்கடவையென்த் திருவாய்மலர்ந்த பிரகாரம் அது திருக்குமாரன் ஆக்ஞைப்படிக்குச் சூரனிடம்போகாமல் நின்று விட்டது. சூரனுக்கு அதிகக் கோபம்பிறந்து அண்டங்களதிரக் கர்ச் சித்துத் தனது பாரித்ரவில்லிற் சுடுசரங்களைப் பூட்டிவிட்டுச் சிவகுமா ரன் தேரைநடாத்தும் வாயுதேவனின் சரீரமுற்றும் உதிரம் பெருகத் துளைத்து வாட்டினன். சிங்காரவேலர், வாயுதேவனிடத்திற் கிருபாநோ க்கம் பாலித்தவராய்த் தக்ஷணத்தில் ஒரு திவ்யபாணத்தால் யாவ ருங்கொண்டாடச் சூரன் கரவில்லைத் திடீரென இருதுண்டாக்கித் தள் ளினர். அவுணர்பெருமான் அதிக உக்கிரத்துடன் சிவகடாக்ஷத்திற் பெற்ற முத்தலைச் சூலமொன்றை யெடுத்துச் சிங்கவாகனத்தில் ஆரோ கணித்துத் தூண்டிக்கொண்டு குமாரதேவரின் இரதத்தின் அருகில் வர, அந்த மிருகராஜன் கடிகிப்பாய்ந்து தனது கூரிய நகங்களையுடைய வலியகால்களாற் சரவணபவன் இரதக்குதிரைகளைப் பதைபதைக்க அறைந்து உதிரப்பிரவாக மெடுக்கச்செய்து விட்டது. சூரனும் அது சமயத்தில் தனது சூலத்தை வலிகொண்டு சிவகுமாரனைப் பின்னப்படு த்துவதாகப் பிரயோகித்துக் கர்ச்சித்தனன். அது தாவிப்பல தேவா ஸ்திரங்களையும் பூதகணப்பெருக்கையும் சிருஷ்டித்துக்கொண்டு யாவ ருந் திடுக்கிடவரும்போது எமதிறைவன் சங்கையற்ற பாணங்களை அதின் பேரில்விட்டும் அவைகளை யெல்லாம் அது கவளீகரஞ்செய்து கொண்டு மேலிட்டுவருவதைக் குமாரசுவாமியார் தெரிந்து தமது வெற் றிவேலாயுதத்தைப் பிரயோகிக்க அது வெளிப்பட்டுச் சூலத்தின் முத் தலைகளையுஞ் சேர்த்துப் பிடித்திழுத்து வந்து கந்தசுவாமியினிடஞ் சேர்த்து விட்டது. அந்த மகிமையைக்கண்ட தேவர்கள் ஓ! தேவாதி தேவா! பக்தவற்சலா! துரிதமாகச் சூரனைக்கொன்று எங்களை இரட்

சிக்க வேண்டுமென்று போற்றுகின்றபோது சூரன் ஒரு மோகனமந்திரத்தை உச்சரித்துக் காத்திரதேகத்தையும் பரந்த சிறகையும் வயிரத்தையொத்த மூக்கையும் கூரிய நகப்பந்திகளையும் வேகத்தையுங் கொண்ட ஓர் சக்கிரவாகப்பட்சி உருக்கொண்டு பூமண்டல முற்றும் தத்தளித்துப் பிளக்கத்தக்கதாகப் பூதசயினியங்கள் மத்தியில்தாவி அவைகளை நிலைகுலையப் பலவாறுகச் சாடிமாய்த்தும் சாரதியாகவிருக்கின்ற வாயுதேவனைக் குப்புறவிழுந்து களைக்கச்செய்தும் தேர்ப்புரவிகளைத்தாக்கியும் தேவர்களைத்திகைக்கச் சாடிப்பறக்கடித்தும் இவ்விதங்களிற் காற்றுடியைப்போலச் சுழன்று சுழன்று போர் புரியும்போது கிருபைக்கடலாகிய எமதிறைவன் பிராணிகள்படும் உபத்திரவத்திற்கிரங்கிக் கோபநகைகொண்டு அவுணராஜன் விஞ்சை வெகு நேர்த்தியெனப் பல கோடிசரங்களை அவுணராஜன்பேரிற் பிரயோகித்தனர். அவைகளனைத்தையும் அசுரபட்சியானது தனது சிறகடி மோதலினுலும் கூரிய நகங்களினுலும் உறுதிபெற்று விளங்கும் மூக்கினுலும் நாசப்படத்துள் பமித்தினது மல்லாமல் மேலிட்டும் வந்து பூதர்களை அமோகமாய்ச் சாடிக்கொல்வதனைச் சர்வாந்தர்யாமியாகிய எமதிறைவன் பட்சி உருக்கொண்டு போராடுகின்ற சூரனை நம்மை யொத்தவன் தேரிலிருந்து வாட்டுவது நீதிக்கடாதென்று இந்திரன் மீதில் தமது விழிகளைப் பரப்பிய மாத்திரத்திற் கர்த்தன் திருவுள்ளக் குறிப்பைத்தெரிந்து அவன் மகாபாக்கியமென்று தக்ஷணத்திற் பசியதோகையை வாய்ந்த பருத்தமயிலின் உருவைக்கொண்டு சத்தசாகரங்களும் நாசப்படத்தக்கதாப் பறந்து சண்முகவேலர் சந்நிதானத்தில் வந்து வணங்கி நின்றனன். சண்முகப்பெருமான் அவன் பக்திவிசுவாசத்திற்குக்கிருபாநோக்கம் பாலித்துத் தமது திருத்தேரை விட்டிறங்கி வீறி நிற்கின்ற மஞ்ஞைவானகத்திற் கம்பீரமாக வீற்றிருந்து சூரன் புள்ளுருக்கொண்டு விண்ணுலகத்தில் உலாவுமிடங்களில் அதைச்செலுத்திப்பிரசண்டமாருதத்தைப்போல அவுணர்பெருமானை மடக்கிப்போர்த்தொழில்செய்ய எத்தனித்தனர். இக்காரியங்களைத் தெரிந்த சூரன் இந்தப்பாலகன் சூழ்ச்சி வெகுநேர்த்தியெனச் சீறி ஆர்ப்பாட்டங்களுடன் தாவித் தோகைவாய்ந்த இந்திரனைப் பகைத்து அவன் உடல் முற்றும் உதிரம்பெருக்கெடுத் தோடப்பற்பல விதங்களிற் கொடுமையாகச் சாடினுன். மகபதியும் அவைகளைச் சட்டைபண்ணுமற் சூரன்போகும் கதிமாறித் திகைக்குப்படிக்குச் சாடி உரப்பியசமயத்

தில் எமதையன் தமது வாகனத்திற்கு நேர்ந்த துன்பத்திற் கிரங்கிப் பின் தியெழுகைகைத்துத் தமது பாணகோடிகளைச் செலுத்திச் சக்கிர வாகனத்தின் தலை விழிகளைப் பின்னப்படுத்தித் தேகத்தில் ஊசிநாட்ட விடமில்லாமல் துளைத்து உதிரத்தைப் பெருக்கியும் கால்களை முறித்தும் இறகுகளை ஒடித்தும் இவ்விதங்களிற் சாடினார். புள்ளுருப்பெற்ற சூரன் பதைபதைத்து நடுநடுங்கி மிகவும் வருந்தியபோதிலும் வீராதிவீரனுகையாற் சற்றும் இளையாமல் வேலாயுதப் பெருமாளுடைய கரத்தில் விளங்கும் நெடிய வில்லை கட்டித்தொடிக்க நினைந்து அதிவேகமாய்த் தனது வாயைத்திறந்து மேலிட்டு வருகின்றதனைச் சிவகுமாரன் தெரிந்து அவன் சமீபித்த மாத்திரத்தில் தமது திருக்கரங்களிலொன்றினல் வாளாயுதத்தினை ஒருவிசை விதிர்த்தோங்கிப் பகைவன் கொண்டிருக்கும் பறவை உருவானது இருகூருய் விழத்தக்கதாக வீசினர். அழிவற்ற வயிரதேகம் பிளக்கப்பட்டதனைத் தேவர்கள் கண்டு சுவாமியின் வீரத்தன்மைகளைக் கொண்டாடி மலர்களைச் சொரிந்து களியாடல்களைச் செய்த விதங்களைச் சொல்லி முடிவதன்று. அதனைச்சூரன் தெரிந்தவுடன் தக்ஷணத்திற் பூமண்டலமெங்கும் பரந்து வானவரையில் உயர்ந்து காட்டும் மணல் மேட்டின் வடிவைக்காட்டி யாவரும் நடுங்கத் துளியைப் பெருக்கி நின்றனன். சிவகுமாரன் அந்த மாயவஞ்சனையைத் தெரிந்தவராய்த் தமது ஏழுபாணங்களைப் பிரயோகித்துப் பெருஞ்சலப் பெருக்கால் நிமைப்போதில் அதனை முற்றுங்கரைத்து உருத்தோற்றுமல் அழித்து விட்டனர். அத்தருணத்திற் சூரன் பெருவெள்ளத் தோற்றங்கொண்டு பேரொலியுடன் அலைகளைவீசி சமஸ்தமும் பிரமைகொள்ளப் பரந்து காணப்படுவதைச் சண்முகர் பார்த்து வெகு நேர்த்தியென்று நகைத்து நூறு பாணங்களைப் பிரயோகித்தனர். அவைகள் ஊழித்தீ போல் மண்டி யெரிந்து பாய்ந்து சூரன் மாயைச் சலப்பெருக்கனைத்தையும் கிரஹித்து மீண்டன. இதனைப் பாதகன் தெரிந்து ஊழித் தீயின் உருக்கொண்டு அண்டகோளகை பரியந்தங் கொழுந்து விட்டெரிந்து கொடுமைகள் செய்து நின்றனன். குகநாதன் ஆயிரம் சரங்களைப் பிரயோகிக்க அவைகள் வெளிப்பட்டுத்தீயின் காரணம் எவ்வளவுந்தோன்ருமல் நிமைப்போதில் நாசஞ்செய்து மீண்டன. சூரன் பெருமூச்செறிந்து பிரசண்ட மாருதவடிவைத் தாங்கி ஓ வென்னும் இரைச்சலைக் காட்டிப் புவனங்கள் தத்தளிக்க மோதிவருகின்றதனை லோகநாயகன்

கண்டு பதினுயிரம் பாணங்களைச் செலுத்தினர். அவைகள் அந்த வாயுவின் பெருக்கை உண்டு பரிசமறப் போக்கிவிட்டன. இதனை வாசிக்கும் நமது நண்பர்கள், மகாவீரதீரனுகிய இந்தச் சூரனுடைய மகத்தாகிய மாயவஞ்சகத் திரங்களின் பெருமிதங்களை நிதானித்துக் கொள்வார்களென நம்புகின்றோம். அம்மாயைகளெல்லாம் நம்மை ஆட்கொண்ட குமரக்கடவுளுக்கு முன் என்ன செய்யக்கூடும்? அம்மாயைகள் அனைத்தையும் நிமையிற்பறக்கடிக்கவல்ல இத்தகையகுமார சுவாமியினுடைய கிருபைக்குப் பாத்திரமாயிருக்கப்பட்ட மேலோர்களின் பெருமைகளை நாம் என்ன விதமென்று எடுத்துப்பேசுவோம்! இவை நிற்கச் சூரன் நான்குதினம் வரையில் ஊண் உறக்கமற்று இவ்வித அகோரயுத்தங்களைச் செய்து பின் ஒரு நூதன ரூபத்தாற் சிவகுமாரனை வெல்லக்கருதி முத்தொழிலை நடாத்தும் பிரமனுகவும் விஷ்ணுவாகவும் உருத்திரனுகவும் தோற்றங்கொண்டு பல கொடிய அஸ்திர சஸ்திரவிதங்களை யேகோபித்துச் சொரிந்து பல தேவர்களின் வடிவங்களையும் அசுரர்களின் உருவங்களையும் பூதர்களின் உருக்களையும் பஞ்சபூதங்களாகவும் ஒரேசமயத்தில் உண்டாக்கி அண்டமதிரக் கர்ச்சித்துப் பலவகை மொழிகளைப் பேசி மகா ஆர்ப்பாடங்களுடன் வந்தகாலையில் எமது குமாரசுவாமியானவர், தேவர்கள் படுந்துயரங்களுக்கு இரங்கினவராய் ஆயிரம் திவ்ய பாணங்களை மந்திரபூர்வமாகச் செலுத்த அவைகள் மகா மகத்துவங்களுடன் ஒன்றனந்த கோடிகளாகப் பெருகிப் பாதகன் கொண்டிருக்கின்ற மாயாரூபங்களனைத்தையும் கண்டித்துப் போக்கிச் சூரன் திடுக்கிட்டுத் தியங்கத்தனிமையில் அவனை விட்டு, விண்ணவர் கர்த்தனுடைய வீரபராக்கிரமங்களுக்கு அதிசயித்துத் துதித்துக் கொண்டாடும்படிக்குத் திரும்பிவந்தடைந்தன. இப்படிக்குச் சகலமுயற்சிகளும் மங்கி எண்ணமிட்டுக் கொண்டு நிற்கின்ற சூரமகாராஜனைச் சிவகுமாரன் பார்த்துத் தயவாய்த் திருவுள்ளம்பற்றுவதாயினர். அவுணர் பெருமானே! கேட்பாயாக! காருண்ட கரிய மேக சமோகங்களிடத்திலிருந்து சொலித்தடங்கும் மின்னற் கொடிகளைப் போல நமது முன்னம் பற்பல உருவங்களைக்கொண்டு வாதாடிவந்த உன் முயற்சிகள் அனைத்தையும் நாம் ஏவிய பாணங்கள் நிமைப்போதில் நாசஞ்செய்ததை நீ கண்டாய்! நிலைபெருதவஞ்சகப் போரைச்செய்து வெல்ல நினைந்த பேதாய்! எக்காலத்தும் சலனமற்று நித்தியமாக விளங்கும் நமது பேருருவைக் காட்டுவோம், தெரி

சிக்சக்கடவாயெனத் திருவாய்மலர்ந்தருளிச் சத்த சாகரங்கள் பெரும் புறக்கடல் சூழ்ந்த பூமண்டலம் அதிற்பட்டதிசைகள் தீவுகள் விண் ணுடுகள் எறும்புமுதல் யானை யீருகச் சொல்லாகின்ற எண்பத்து நான்கு லெட்சம் சிவபேதங்கள் முப்பத்துமுக்கோடி தேவர்கள் நாற் பத்தெண்ணுயிரம் ரிஷிகள் கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர் பன் னகர் உவனர் கின்னரர் கிம்புருடர் ஏகாதசவுருத்திரர் துவாதசாதித் தர் சூரியர் சந்திரர் முதலிய நவக்கிரஹங்கள் இருதுக்கள் காலங்கள் முதலிய சமஸ்தமும் ஆதிதேவனுகிய சண்முகப்பெருமாளின் திருமே னியில் அமைந்ததலலது வேறென்றில்லை யெனச்சகலரும் திருஷ்டா ந்தமாகத் தெரிசித்துக் கிருதார்த்தராதற் பொருட்டு விஸ்வரூபத்தைக் கொண்டருளினர். இவ்வித மிகுந்த பிரகாசத்தை எறிந்து விளங்கும் திருமேனியின் பொலிவைத்தவத்தையுடைய தேவர்கள் தெரிசித்த மாத்திரத்தில் மனம் நடுங்கிச் சோர்வடைவதனைச் சிவ சுப்பிரமணிய க்கடவுள் தெரிந்து அவர்களில் இரக்கமுற்றுப் பேரொலியெழப்பயப் படாதீர்கள்! பயப்படாதீர்கள்!எனத்தமது திருக்கரத்தை யமைத்துக் கிருபாநோக்கம் பாலித்தவுடன் தேவாமுதத்தாற் களைதீர்ந்தவர்களைப் போல அவர்கள் மனங்குளிர்ந்து களித்திருந்தனர். அத்தருணத்திற் சிவகுமாரன் சொரூபக்காட்சியைச் சூரன் கண்டு பிரமித்துத்தன் செய லற்று நின்றுவிட்டனன். சண்முகப்பெருமாள் அவனிடத்தில் இரக் கமுற்றுச் சிறிது ஞானவுணர்ச்சியை அவனுக்கு அநுக்கிரகம் செய்த னர். நல்லறிவு தோற்றிய மகிமையினுற் சூரன் இவ்விதங்களில் நினைப் பதாயினன்: இது வென்ன பெரிய ஆச்சரியம்! நாம் இந்தக் குமாரசு வாமியைப் பாலன் பாலனென்று பேசி யேசி நமக்குத்தகுதியாகிய காரியங்களை யெல்லாங் கைவிட்டு மதிமோசம் போனேம், யாவருக் கும் மூலகாரணமாகிய தேவன் இவனல்லது வேறொருவரில்லை, இதில் எவ்வளவும் பிசகில்லை, இக்காரணங்களை முன் நமக்கு எடுத்துச்சொ ன்ன வீரவாகுதேவரல்லாமல் நம்முடையதுணைவர்களின்பேச்சுக்களை க்கூட நாம் மகதயிஸ்வரியச் செருக்கால் அலட்சியமல்லவா செய்திரு ந்து விட்டோம்,இக்காலத்தில் நாம்செய்ததவப்பெற்றுல் தேவதேவோ த்தமன்இவனென்று நிஜதெரிசனையாகக் கண்டு கொண்டோம், இனி நமக்கு ஒருகுறைவில்லை, மனதிற்கு அமையாத தெவிட்டாத இத்தெள் ளமுதின் பெரிய காட்சியைப் பூர்த்தியாகத் தெரிந்து புகழ்வதற்கு அனந்தகோடி கற்பகாலஞ்செல்லும், இக்காட்சிமிகவும் பிதிக்கிடமாக

வும் இருக்கிறது, இத்தகைய மனோவாக்குக்கெட்டாத குமரன் என்னையும் ஒரு பொருளாக மதித்துச் சண்டைகொடுக்க நேர்ந்ததை யோசிக்க இதுவுமொரு திருவிளையாடலாகவும் அருள்திறமாகவுமே காணப்படுகின்றது, நமது வலது பாரிசப்புயமும் நேத்திரமும் துடிக்கின்றனவே, யாவருக்கும் எட்டாத இந்தப் பரம்பொருளை நாம் உள்ளங்கை நெல்லிக்கனியைப்போல் இக்காலத்தில் காணும்படிக்குப் பாக்கியம் பெற்றோமாகையால் நாம் இனிக் காலதாமதம் செய்யாமல் இந்தத் தேவனை இப்போதே நமது பாதங்கள் வருந்தப் பலதரம் பிரதட்சணம் வந்து சிரமானது பூமியிற்படிய வணங்கிக் கரங்களைக்கூப்பி இந்தச் செனனத்துக்கத்தைப் போக்கிச் செல்வச் செருக்காற் செய்திருந்த பழி பாதகங்கள் அனைத்தையும் ஒழித்துக்கொள்ளவேண்டும், இந்தக் கடவுளை நமது வாயார வாழ்த்தி அவனுக்கு அடிமைப்படவேண்டுமென்று முயற்சித்த காலையில் எமது குமரக்கடவுளானவர் சூரனுக்கு அனுக்கிரஹித்திருந்த போதவுணர்ச்சியை மாற்றித்தாமும் பழய திருக்குமார வடிவங்கொண்டு மஞ்ஞைவாகனத்தில் அழகுறப் பொலிந்து விளங்கித் தோன்றுவதாயினர். அவ்விதம் தனக்கு முன்னே தோன்றி நின்ற குமாரதேவரைச் சூரன் கண்டவுடன் ஆ! நாம் என்ன காரியஞ் செய்ய துணிந்தோம்! நன்றாயிருந்தது! வெகு நேர்த்தி நேர்த்தி! இந்தப்பாலனுக்கு அஞ்சியோ நமது வீரபராக்கிரமங்களை மதித்துப்பாராமல் இவனை வணங்கியிருப்பேனென்று சுவாமியின்பேரில் அடங்காத கோபங்கொண்டு நீ என்னை ஒரு மாயவித்தையை காட்டி வஞ்சிக்க வந்தாயோ! இதோ பாரென்று ஒரு மாயமந்திரத்தை உச்சரித்துப் பூமண்டல முற்றும் தத்தளித்து வாட, வீங்கிய இருட்பெருக்கை யுண்டாக்கித், தான் ஒருபாரித்த காத்திரமுள்ள தேகத்தைக்கொண்டு விண்ணவர் கூட்டத்தை வாரி வாரி வாயிற் போட்டுக்கொள்ளக் கருதி முயற்சித்த காலத்தில் தேவர்கள் நடுநடுங்கி நிலைகுலைந்து மதிமயங்கி அந்தச்சமயத்தில் ஞான நாயகனைக் குறித்துப் பலவாறு கூப்பிட்டுப் புலம்பி முறையிடுவதானார்கள். தேவாதிதேவனாகிய எமது பாலசுப்பிரமணிய தேவர் அவர்களுடைய முறைப்பாடுகளைத் திருச்செவிகளிலேற்றுத் தமது ஒப்பற்ற வேலாயுதத்தின் மீதில் விழிகளைப் பரப்பி வஞ்சனையால் தேவர்களை வருத்துகின்ற இக்கொடிய பாதகனை நிமைப்போதிற் போய் அவன் சரீரத்தை இருகூறாகப் பிளந்து மீளக் கட்வாயெனச் செலுத்தினர். உடனே அந்தப் படையானது அளவிற

ந்த மகிமைகளுடன் வெளிப்பட்ட மாத்திரத்திற் பரந்திருந்த சூரனு டைய மாயை இருட்படலமானது பளீரென நீக்கம்பெற்று முன்போல விளக்கம் பெற்றிருந்தது. சூரனுளவன் வேற்படையானது தன் மீதில் அதிக விருப்புடன் நெருங்கி வருவதைக் கண்டுமமது வச்சிரதேகத் தை இந்தப்படையென்ன செலுத்தப்போகிறதென்று விசாலமாய் ஆழ்ந்திருக்கும் சமுத்திர மத்தியிற் பாய்ந்து மண் விண் திசைகளை மூடத்தக்க பருத்த மா விருட்ச வுருக்கொண்டு நின்றனன். இவ்வித மரத்தினது உருவைக்கொண்டிருந்த சூரன் மற்றொரு சூழ்ச்சியை நினைந்து யாவும் யாவரும் நிலை குலையத்தக்கதாக வளைந்த கழுத்தும் நீண்டமூக்கும் வெண்மையாய்த் தழைத்த சிறகுகளினால் மூடப்பட்ட காத்திர தேகத்தையும் நீண்ட கால்களையுமுடைய கொக்கின் உரு வைத்தாங்கி அந்த விருட்சத்தின் மத்தியில் ஓங்கி யிருக்கும் கிளையில் நிற்பதாயினன். இவைகளை அறிந்த வேற்படையானது அதிகக் கோ பங்கொண்டு பூமண்டல வெல்லை முற்றிலும் சத்தசாகரப் பரப்பி னும் பெரும்புறக்கடலின் எல்லையினும் விண்ணாடுகளினும் வானத்தை அளாவநிற்கின்ற மேரு முதலிய குலகிரிகளினும் அஷ்டதிசைகளி னும் அண்டமுகடு பரியந்தமும் அனற்கொழுந்துகளைக் கற்றை கற் றையாக வீசிக்கொண்டு பிரளயகாலத்து உருத்திரனைப்போல வந்து தழைத்தோங்கி நிற்கும் மாவிருட்சத்தின் அடியிற்பாய்ந்து தடாரித்து உருவி அண்டங்கள் அதிரும் ஓசையெழ அதனைப் பிளந்து இருகூறாக் கித் தள்ளியது. மாவின் உருக்கொண்டு நின்ற மகாவீரத்தன்மையும் பெருமைகளும் உடைய வஞ்சகனானவன் பேரொலியெழ அரற்றிக் கொண்டு பின்னப்பட்டு விழுந்தபோதினும் காளகண்ட மூர்த்தியினது வரப்பேற்றால் மாண்டவனல்லாமல் தனது உடைவாளை யுருவிக்கொ ண்டு சண்டை செய்வதையே முக்கியமாக நினைத்து மேலிட்டுச் சீறி வரும்போது வேலாயுதமானது உருத்திராகாரமாகக் கொதித்து வச் சிரதேகத்தைக்கொண்ட அந்தச்சூரன் வலியமார்பிற் பாய்ந்து அவன் தேகத்தை இருகூறாகப் பிளந்துத்தள்ளி ஜெயப்பிரதாபத்தைப்பெற்ற தாகக் கிளம்பி வானகங்கையிற் படிந்து திரும்பி எமது கர்த்தன் திரு க்கரத்தில் வந்து யதாப்பிரகாரம் விளங்கியிருந்தது. தேவர்கள் தேகம் பூரித்து ஆனந்தப்பரவசராய்த் தங்கள் வஸ்திரங்களை வானத்தெறிந்து கூத்தாடி ஜெயஜெயவெனப் போற்றிக் குமாரதேவர் பேரில் தேன்க ளுறுத பஞ்சதருக்களினது புஷ்பமாரிகளைப் பெய்தார்கள் சூரன் இர

ண்டு கூறுக வெட்டுண்டு விழுந்த தன் உடலைமீட்டும் மகத்தாகியசேவலாகவும் மயிலாகவும் உருவகப் படுத்திக் கொண்டு மகா பல பராக்கிரமங்களைக்காட்டிச் சிவ குமாரனுக்கு எதிரிற் கூக்குரலிட்டு வந்தனன். பாலசுப்பரமணியக் கடவுள் சக்கிரேஸ்வரனாகிய சூரனது காரணங்களையும் அவனிருக்கின்ற கோலத்தையும் கண்டவுடன் அதிகப்பிரியமும் இரக்கமும் அவனிடத்தில் உண்டாகிப் பூர்த்தியாகத் தமது கிருபாநோக்கத்தைப் பாலித்தனர். அதன் முயற்சியினால் தக்ஷணத்திற் சூரன் சத்துருத்துவத்தையும் கோபதாபங்களையும் நீக்கிப் பாபரகிதனாய்ப் பத்திவிசுவாசத்துடன் அடங்கி ஒடுங்கிச் சகல வீறுப்புகளையும் ஒழித்துக் குளிர்ந்த பார்வையைக் காட்டி நின்றனன்.

பிரம்மஹத்தியாதி தீங்குகளைச் செய்துவரும் மகாகர்மிகளேனும் தீன சரண்யனான நமது குமாரதேவருடைய திருமுன்பு நேரப் பெறுவாராயிற் பரிசுத்தவான்களாய் மெய்ஞான சம்பத்தைப் பெற்றுமேலான சாயுச்சிய பதவியையடைந்து வாழ்வார்களென்பதைச் சொல்லவும் வேண்டுமோ? இச்சரித்திரத்திற் சிரத்தையுடைய நமது நண்பர்களே! நூற்றெட்டு யுகங்களாகச் சிவகாருண்யமின்றிப் பரமசிவ பக்தியும் தவவிரதங்களும் உடைய தேவர்களையும் மகத்துக்களையும் முனிபுங்கவர்களையும் மானிடர் முதலியோரையும் அலைத்துவருத்தியதன்றிப் பாலசுப்பிரமணியரிடத்திற் சற்றும் மதிப்பின்றிப்பகைத்து ஆறுதினங்கள் வரைமகாயுத்தங்களைச் செய்திருந்த சூரனுமல்லவோ கிருபைக்குப் பாத்திரமாய்ச் சாசுவதப் பேற்றை யடைந்து வாழவிருந்தனன். ஆதலால், அந்த தேவாதிதேவன் மகத்துவங்களை நாமோ கண்டறிந்து சொல்லக்கூடும்! இத்தகைய முருகன் பெருமிதங்களை விருப்பமுடன் படிக்கும்படிக்கும் கேட்கும்படிக்கும் அமைந்த நமது நண்பர்களைப் போன்ற புண்ணிய சீலர் இவ்வுலகினிடத்தில் ஒருவரும் இருக்க மாட்டார்கள். அந்தத் தேவாதி தேவனுடைய சரித்திரங்களை எம் சிற்றறிவுக்கு எட்டியவரையிற் சுருக்கி யெழுதிவந்த சிறந்த பலப்பிராப்தியினால் அடியேனும் கிருதார்த்தனானேன். இதற்குக் காரணம் இராமநாதபுரம் ஸ்ரீமத் ஹிரண்யகர்ப்பயாஜி ரவிகுல ராஜா முத்துவிஜய ரகுநாத பாஸ்கர ஸேதுபதியவர்களே. இவ்வள்ளற் பிரபு அவர்கள், நமக்கு இத்தகைய பெரிய நன்கினைச் செய்தவர்களாகின்றார்கள். யாம் அந்த ஞான சொரூபியாகிய வேந்தரவர்கள் பால் நன்றியு

டையோ மாக அதிக மனவுற்சாகத்துடன் மற்றைய சரித்திரங்களை யுங் கூடியவாறில் ஈங்கெடுத்துரைப்பாம்.

மேற்குறித்த படிக்குத் தமது திருமுன் பவுத்திரமாய் வந்தடைந்த கோழியின் மீது கார்த்திகேயன் கிருபாநோக்கஞ்செய்து நீ நமது தேரின்மீது துவசமாக நின்று கூவக்கடவையெனத் திருவாய் மலர்ந்தனர். சேவலானது உற்சாகத்துடன் அப்பணி விடையைச் சிரசாக வகித்து விண்ணிற் பறந்து வெற்றிக் கொடியினுருக்கொண்டு மகத்தாக யாவரும் புகழ விளக்கம்பெற்று நின்றது. உடனே குமாரசுவாமியானவர் தேவராஜன் உருவமாகிய மயிலின் பிடரியினின்றும் பாய்ந்து பயபக்தியுடன் ஒடுங்கி நிற்கின்ற சூரன் உருவகித்திருக்கும் கலாப மயில் வாகனத்தின் மீது வீற்றிருந்து நீ நம்மைச்சுமந்து உலவக்கடவாயெனத் திருவாய் மலர்ந்து பூவட்டமெங்கணும் வானவெல்லை முற்றும் அதனைச் செலுத்தி மகாமகிமைகளுடன் உல்லாசமாக யாவருங் கொண்டாட உலவுவதாயினர்.

இவ்விதம் மயிலின்பேரில் உலாவிவந்த சத்திகரத்தலத்தனாகிய குமாரதேவன், சூரன் பட்டணத்தை அடுத்த சமர்க்களவெல்லையைச் சேர்ந்து தேவராஜனையும் அக்கினி தேவனையும் பார்த்து, அவர்கள் முன் கொண்டிருந்த உருவங்களை மாற்றத் திருவருள் செய்தனர். அப்போது பூதவெள்ளங்களும் எண்மரும் இலட்சரும் படைத்தலைவர் முதலானவர்களும் அதிகஆவலுடன் மும்முறைவலம்வந்து கடவுளைப் பணிந்து போற்றி ஆனந்தப் பரவசராயிருந்தனர். மகாவிஷ்ணு முதலிய தேவர்கள் சரவணபவன் தமதிடத்துக் கொண்ட கருணைப் பெருக்கை நினைந்து நினைந்து களிமிகுதியால் ஓ! சண்முக சுந்தரனே! இனி நாங்கள் மற்றொரு தேவதைகளைப் புகழவறியோம். எங்களைத் தேவரீரே வழியடிமைகளாகக் கொண்டாளவேண்டுமென்று பற்பல விதங்களாகத் துதித்துப் போற்றிய காலையிற் கந்தசுவாமியும் அவர்களிடத்திற் கிருபாநோக்கமாக இனி யாதுக்கும் அஞ்சாதீர்களென ஆதரித்தனர். சூரனுயிர் மாண்ட காரணத்தால் அண்டபுவனங்கள் சராசரங்களனைத்தும் பேரானந்தப்பட்டு விளங்கிக்கொண்டிருந்த வென்றால் அதின் மகிமையை நாம் என்ன எடுத்துரைக்கப் போகின்றோம்?

## "இரணியன் புலம்பல்."

அந்தச்சமயத்திற் சிலஅவுணத்தூதர் இரணக்களத்தை விட்டோடிச்சூரன் பட்டத்துத்தேவியாகிய பதுமகோமளை யென்பவளைக்கண்டு வாய் குழற ஓ! மாதாவே! சூரமகாராஜன் பாலசுப்பிரமணியன் செலுத்திய வேலினுற் பிளப்புண்டு இரணக்களத்தில் விழுந்தனனென்று புலம்பும் சத்தமானது அவளுடைய செவிகளில் விஷத்தைப்போலச் சென்றேறிய காலத்தில், இடி முழக்கத்தைக் கேட்ட நாகத்தைப் போலப் பதைபதைத்துத் துடித்து மகாபதி விரதையாகையினாலே உடனே அவள்பிராணனை இழந்தனள். சூரனுடைய மற்றையத் தேவியர்களும் துக்கசாகரத்தில் அழுந்தி வாசனைக்கட்டைகளால்உண்டாக்கப்பட்ட அக்கினிக்குண்டத்தில் மூத்தவளுடைய திருமேனியை மூழ்கவிட்டுத் தாங்களும் அதிற்பாய்ந்து மேலானபதவியை அடைந்தார்கள். மற்றப் பதிவிரதா சிரோமணிகளாகிய அவுணராஜர் பத்தினிகளனைவோரும் அவ்விதமே தங்கள் தங்கள் கணவர்களின் பிரிவைச் சகியாதவர்களாய் அந்த அக்கினிக் குண்டத்திற் பாய்ந்து பாய்ந்து மடிவதானார்கள். இவைகள் அனைத்தையும் யீனுருப்பெற்றுச் சமுத்திரத்தில் முன் ஒளிந்திருந்த இரணியனென்பவன் தெரிந்து மிகவும் வருந்தி வானவழியாக இரணக்களம் வந்து தனது பிதாவைக் குறித்துப் பலபல துயரமொழிகளைப் பேசிப் பிரலாபித்து மனத்தளர்ச்சியடைந்து பெருமூச்செறிந்து பின் திடுக்கிட்டுப் பூதவீரருக்குச் சற்று தெரியுமாயின் நம்மையும் க்ஷணத்திற் கொன்றுவிடுவார்களென்று தனது உருத்தோற்றுமல் மறைந்து குலகுருவாகிய சுக்கிராச்சாரியரிடத்திற்குப் போய்வணங்கி அவரைக்கொண்டு மாண்டவர்களனைவருக்கும் திலதர்ப்பணமாகிய கடன்களைச்செய்து முடித்தவுடன் குரவனிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு, செல்வமானது மமதையில் தள்ளித் துக்கத்துக்கு உதவியாகவிருந்து துன்பத்தில் தள்ளுவதால் அதைவிடப்பகைவேறில்லை யெனத்துணிவுகொண்டு தவவேடத்தைத் தாங்கிச் சிவபிரானைச் சித்தத்திலிருத்தித் தவம் செய்திருப்பதானுன்.

## "தேவர்கள் சிறை மீட்சி"

இவைநிற்க, வேலாயுதமூர்த்தியானவர் தமது ஒப்பற்ற வீரவாகுதேவரைக் கிருபையாகப் பார்த்து வீராதி வீரனே! சிறையிற்பட்

டுவருந்தியிருக்கும் சயந்தனாதி தேவரைத் தருவிக்கக்கடவை யெனக் கட்டளையிட்ட மாத்திரத்தில் தேவரானவர் தமது துணைவர்களுடன் சூரன்பட்டணத்துக்குட் பிரவேசித்து விலங்குபூட்டப்பட்டு வருந்தி யிருக்கும் தேவர்க ளனைவோருக்கு முன்தோன்றி அவர்களுக்குப்பால சுப்பிரமணியதேவர் சூராதியரைக் கொன்ற சுபச்சமாசாரங்களை ச்செவிகளுக்கு அமுதாகச் சொல்லி அவர்கள் விலங்குகளை விலக்கி ச்சிறையைவிடுவித்துச் சண்முகநாதன் திருமுன்பு சந்தோஷத்துடன் அழைத்து வந்து சேர்த்தவுடன் தேவர்களனைவரும் சரவணபவனை மயில்வாகன ரூடராகத் தங்கள் கண்கள் களிக்கக்கண்டு மும்முறை வலம்வந்து தங்கள் விழிகளில் ஆனந்தவாரி பெருகக்கரங்களைச் சிர மேற்குவித்துப் பலதரம் விழுந்து வணங்கிப் பலவாறுகப் போற்றி நிற்கின்றகாலையிற் குமாரதேவர் அவர்களைக் கிருபையாகப் பார்த்து இனிநீங்கள் யாதொரு துன்பங்களுமில்லாமற் பழயபடிக்குப் பொன் னுலகைச் சேர்ந்து வாழ்ந்திருக்கக்கட வீர்களெனத் திருவாய்மலர்ந்த வுடன் அவர்கள் கொண்ட ஸந்தோஷப் பெருக்கினையாம் என்ன வெடுத்துச் சொல்லுவோம்! இந்திரனும் தன் புத்திரனைக்கண்டு ஆலி ங்கனஞ்செய்து மகிழ்ந்தனன். சண்முகக்கடவுள், அவுணப் பாதக ரால் மாண்டுபோயிருந்த பூதர்முதலானவர்கள் அனைவரும் உயிர் பெற்று வருவதாகத் திருவுள்ளத்தில் நினைத்தவுடன் அவர்கள் அவ் விதமே உயிர்பெற்றெழுந்து வந்து குகேசனைப் பணிந்து களிப்புற் றிருந்தனர். சரவணபவன் தமது அருகில் நிற்கின்ற வருணராஜனை நோக்கி, நீ சூரன்பட்டணத்தை முற்றும் அழித்துவருவாயெனக்கட்ட ளையிட்டனர். அவன் வெளிப்பட்டு அவ்விதமே வீரமாமயேந்திர புரி யின் உருமுற்றிலுந் தெரியாமல் தனது ஜலப்பெருக்கால் அதிலிருந் த அவுணப்பெண்களுடன் தும்சம்பண்ணி அழித்துச் சுவாமியினிடம் சேர்ந்து பணிந்து தேவர்களனைவரும் கொண்டாட நின்றனன். இப் படிக்குச் சகலமும் முற்றியவுடன் குமரகுருபரன் மயில்வாகனருட ராய்ச் சகலருந் தம்மைப் புடைசூழ்ந்து வரத்திருச்செந்திற் பதியை அந்திப்போதில் வந்தடைந்தனர். ஆங்கு தேவர்கள் சுந்தர சண்முக ரைப் பணிந்து, சுவாமீ! கொடியபாதகரால் நாங்கள் நன்னெறிகளை யிழந்த பல ; திங்குகளைத் தேடிக்கொண்டனம். இப்போது தேவரீ ரைப் பூசித்து வழிபடும் வரபாலனத்தைத் தரவேண்டுமென்று போ ற்றுதற்குக் கிருபாமூர்த்தியும் இணங்கினர். உடனே தேவர்கள் சுவா

மிக்குத் திருமஞ்சனமாட்டிச் சகல ஆடையாபரணாதிகளாலும் புஷ்ப மாலைகளாலும் அலங்காரஞ்செய்து பலகாரவகைகளையும் பழவர்க்கங் களையும் நிவேதித்துச் சாம்பிராணித்தூபம் கற்பூர நிராஞ்சன முதலிய சுடர்களைக் காட்டிச் சோடசவுபசாரங்களையும் விதிப்படிக்கு முடித்த பின்பு தினதயாபரனை மும்முறை வலம்வந்து அவரது திருநாமங்கள் முதலியவைகளாற் போற்றி நிற்கின்ற தேவர்களிடத்தில் எமது தேவாதிதேவனாகிய வேலாயுதமூர்த்தியானவர் அதிகப்பிரியத்துடன் ஓ! தேவர்களே! உங்களுக்கு இன்னமுங் குறைபாடுகளிருப்பினும் எத்தகைய வரங்கள் வேண்டினும் சந்தேகமில்லாமற் கேட்டுக்கொள் ளக் கடவீர்களெனக் கிருபையாகத் திருவாய்மலர்ந்தருளினர். (இக் கதையைப் படித்துக்கேட்கும் நமது நண்பர்களே! குமரக்கடவுளது இந்தத் திருவருள் வாசகத்தைக் கவனித்தீர்களா? நாமும் இது சம யத்தில் அந்த வேலாயுத மூர்த்தியினிடத்தில் எதைக்குறித்துப் பிரா ர்த்தித்துக் கேட்டுக்கொள்வோம்? அந்த அறிவுள்ள தேவர்களைப் போலவே சகல பேறுகளையுந்தரக் கூடியதாயுள்ள நமது ஆண்டவ னாகிய சண்முகப் பெருமாளின் சரணாரவிந்தப் பக்தி யொன்றினையே நமக்கு அக்கடவுள் திருவருள் செய்ய வேண்டுமென்று நாம் முக்கிய மாய்ப் பிரார்த்தித்துக் கொள்ள வேண்டும்.) இவைநிற்கத் தேவர் கள் தேவதேவோத்தமன் வாக்கியங்களைக்கேட்டுப் பலதரம் பணி ந்து சுவாமி நாதக்கடவுளே! எங்களைவருத்திக் கொடுங்கோலைச் செய்து வந்த சூரனை வம்சநாசமறக்களைந்து அளவற்ற காலமாகவரு ந்திக் கொண்டிருந்த எங்கள் துன்பங்களைப்போக்கிப் பெருவாழ்வைத் தந்தீர்! இத்தகைய பூர்த்தியாகிய திருவருளைப் பெற்ற வெங்களுக்கு இன்னம் வேறொருகுறையும் உண்டாயிருக்கப் பெறுமோ? ஆகையால் எங்களுக்கு இத்தேகம் உள்ளமட்டும் தேவரீருடைய திருவடிகளுக்கு அன்பு செலுத்தத்தக்க இப்பேற்றினைத் தந்தருள வேண்டுமென்று பிரார்த்திக்கக் குமாரசுவாமியும் மகிழ்ந்து அவ்வாறே அவர்களுக்குக் கிருபைசெய்தனர். இவ்விதமாகப்பொழுது விடிந்தவுடன் குமாரதேவர் தேவசிற்பியால் அங்கு ஓர் விசித்திர ஆலயமொன் றமைக்கச்செய்து அதில் தமது பிதாவைப் பூசிக்கக்கருத்துக்கொண்டு சிவலிங்கப் பிரதி ஷ்டை செய்து தேவர்கள் யாவரும் கண்டுகளிக்கப் பூசனைவழிபாடு களியற்ற அங்குயாவரும் மகிழவீற்றிருந்தனர்.

4,வது. உயுத்தகாண்டம் முற்றிற்று.

ஸ்ரீசுவாமி நாதஸகாயம்.

## "5-வது. தேவகாண்டம்"

விருத்தம்.

இருப்பரங் குறைத்திடுமெஃக வேலுடைப், பொருப்பரங் குணர்வுறப் புதல்விதன் மிசை, விருப்பரங்கமரிடை விளங்கக்காட்டிய, திருப்பரங்குன்றமர் சேயைப் போற்றுவாம்.

### "திருப்பரங்குன்றம் சேர்ந்தது"

சிவகுமாரன் தமக்கினிய சிவப்பரஞ்சுடரைப் பூசித்து வழிப்பட்டவுடன் சகலரும் தம்மைப்புடைசூழ்ந்துவரத் திருப்பரங்குன்றத்தை வந்தடைந்து அவ்வரையின் பேரிற் சரவணபவன் ஏறிய சமயத்தில் அவர் தேவசிற்பியை நோக்கி ஓ! மயனே! துரிதமாய் இந்த விடத்தில் எமக்கும் மற்றத்தேவர்கள் முதலானவர்களுக்கும் தகுந்த விடுதிகள் முதலிய சிறப்புகளை நிருமிக்கக் கடவையென்றவுடன், தேவதச்சனும் அவ்வாறே யாவையும் நிருமாணித்துக் கந்தசுவாமியைப் போற்றிநிற்கக் குமாரதேவர் சிற்பியை மெச்சிப்பின் யாவரும் போற்றத் தமக்கு அமைத்துள்ள ஆலயத்துட்பிரவேசித்துத் திருச்சபையின் சிங்காரமண்டபத்திற் சிங்காதனத்தில் எழுந்தருளியிருந்தனர். அப்போது பராசரிஷி புத்திரர்கள் தம் எதிரிற் கரங்களைக் கூப்பி மெய்ப்பத்தியுடன் நிற்பதற் கிரங்கிக் கந்தசுவாமியார் அந்த அறுவருக்கும் ஞானயோகத்தைப் போதித் திரட்சித்தனர். அத்திறங்களை இருஷிபுத்திரர்கள் பூர்த்தியாகத்தெரிந்து சீவன் முத்தராய் விளங்கிச் சண்முகனைக் கொண்டாடி யிருந்தார்கள். இவை நிற்க, நாம் இனித் தெய்வயானையம்மனை முருகப்பெருமானுக்கு இந்திரன் பாணிக்கிரஹணஞ்செய்து கொடுத்ததனைப் பேசுவோம்.

### "தெய்வானையம்மையின் திருமணமுயற்சி."

நீணசரணியனுமிய வெற்றிவேலாயுதக்கடவுளுக்கு மிக்கசவுந்தரியவதியான தனது புத்திரி தெய்வயானை அம்மையை மணஞ்செய்விக்க இந்திரன் கருதினவனாய் இச்சுபவார்த்தையை விஷ்ணுவாதியரிடம்

தெரிவித்தனன். இதைக்கேட்டு அவர்கள் இது தகும்தகும் என்று ஸந்தோஷசித்தராய் ஓ! இந்திரனே! நீ அதைத்துரிதமாய் முடிக்கும் முயற்சிகளைச் செய்யக்கடவையெனக் கட்டளையிட்டனன். இந்திரனு னவன் அடங்கா மகிழ்ச்சியுடன் மேருச்சாரலில் வாசஞ் செய்திருக்கி ன்ற தனதுபத்தினிஇந்திராணியையும் தனது சுபுத்திரியையும் சீக்கி ரம்அழைத்துவரத் தூதுவருக்குக்கட்டளையிட்டனன். அவர்கள்வேக மாய்ச்சென்று இந்திராணியைவணங்கிச்சூரசம்ஹாரம் நடந்து சிறையி ற்பட்ட தேவர்களெல்லாரும் மீட்சியடைந்து ஸந்தோஷித்திருக்கின்ற சுபச்சமாசாரத்தைச்சொல்லி, அவருடைய கணவர் இந்த நிமிஷத்தில் அவரையும் புத்திரியையும் அழைத்துவரக் கட்டளையிட்டனர் என்ற னர். கற்புக்கரசியானவள் அடங்காச் சந்தோஷத்தோடு அக்காலத்தி லிருந்த தேவர்கள் இனங்கள் சூழத் தன்னைக் காவல்கொண்டிருந்த அயிராவதத்தின் பேரிற் புத்திரிசகிதம் ஆரோகணித்துத் திருப்பரங் குன்றத்தை அடைந்து இந்திரன் மாளிகையிற் சேர்ந்தவுடன் அரம் பையர் முதலினோர் அதிக ஆவலுடன் புலோமிசையை யெதிர்சென்று வணங்கி அழைத்துப்போயினர். புத்திரனாகிய சயந்தனும் ஓடி வந்து தன்தாயைக் கட்டிக்கொண்டான். இந்திராணி தேகப்பரவசங்கொண் டு அப்பாமகனே! சரவணபவன் கடாக்ஷத்தால் இயாவரும் கொடுமை களினின்று வாழ்ந்தீர்களோவென்று பேசியிருக்கும்போது, புலோ மிசை வரவைத்தெரிந்த இந்திரனும் தன்னை அறியாத ஸந்தோஷப் பெருக்கினோடும் விழிகளிக்க அவளைப்பார்த்துப் பெண்ணரசே! நம தையன் கிருபையினால் நாம் சவுக்கியத்திலிருக்கும் நாள் நேர்ந்தது. இனி மனச்சஞ்சலங்களைப் போக்கியிருக்கக் கடவையென்று வார்த் தையாடிப் பின் தவமுயற்சியிற் பெற்றெடுத்த தெய்வயானை அம்மனி டத்திற் கொஞ்சிச் சுபகரவார்த்தையாடி அவர்களை விட்டு விஷ்ணுவா தியரிடம்போய் அவர்கள் யாவரும் ஒருங்குசேர்ந்துவரச் சிவகுமாரன் திருச்சபை சேர்ந்து அறுமுகவனைப்பணிந்து போற்றி இந்திரன் விண் ணப்பஞ் செய்கின்றான்: அப்பனே! எங்களனைவோரையும் மனமகிழ் ச்சியுடனிருக்கக் கடாக்ஷித்த தீனதயாளனே! அடியேன் விரதபலத்தி னாற் புத்திரியாகப் பெற்றிருக்கின்ற தெய்வகுஞ்சரியைத் தேவரீருக் குத் திருக்கல்யாணஞ்செய்து கொடுக்க விருப்புற்றேன். அந்த வரத் தைக் கடாக்ஷிக்கவேண்டுமெனப் பிரார்த்தித்து நின்ற காலையிற், கும ரக்கடவுளானவர் தேவராஜனுடைய பக்திக்கிரங்கி ஓ!இந்திரனே! முன்

அப்பெண் கொடியானவள் நம்மைத்திருக்கல்யாணம் செய்யும்பொருட்டுநம்மைக்குறித்து அரியதவ விரதங்களைச்செய்திருக்கின்றனள். இப்போது நம்மைக்குறித்திருக்கும் இரண்டு பெண்களுடைய வேண்டுகோளை யுத்தேசித்து நாம் அவர்கள் பால் அப்பேற்றினைக் கடாக்ஷித்திருக்கின்றோம். ஆதலால் நாளைக்கே உனது கருத்தின்படிக்குத் திருமணவினையை முடிக்கும் முயற்சிகளைச் செய்யக்கடவாயெனத் திருவாய் மலர்ந்தனர். அதைக்கேட்ட இந்திரன் மனம் பூரித்துக் கந்தசுவாமியினிடம் விடைபெற்று வந்து சாரணர்களைக் கூவி ஓ! தூதர்களே! நமது திருக்குமாரத்தியைப் பாலசுப்பிரமணிய சுவாமியாருக்கு நாளையத்தினம் பாணிக்கிரஹணஞ்செய்து கொடுக்கவிருப்பதால், நீங்கள் துரிதமாய்த் திரிமூர்த்திகளுக்கும் முதன்மை பெற்ற சிவபிரானிடத்திலும்,முசுகுந்தச் சக்கிரவர்த்தியினிடத்திலும்,மற்ற வரசர், குறுநில மன்னர்,பிராமண சிரேஷ்டர்,தவத்தர்,தேவரினங்கள், திக்குப்பாலகர், சத்தரிஷிகள், முதலான திரிலோகங்களிலுள்ள அனைவர்களிடத்திலும் இச்சுபச்சமாசாரத்தைத் தெரிவித்து அவர்களைப் பெண்டுபிள்ளைகள் முதலானவர்களுடன் இக்குன்றிற்கு வந்து சேரும்படிக்கு நாம் வேண்டிக்கொண்டதாகச் சொல்லிவரக் கடவீர்களெனக்கட்டளையிட்டனுப்பிப்,பின் மயனைத்தருவித்து மணத்திற்குத்தக்க கல்யாணமண்டபம், வருபவருக்கு விடுதிகளாதிய சகலவளங்களையும் நிருமிக்கக்கட்டளை யிட்டனன். தேவதச்சன் அவ்விதமே அவைகள் யாவற்றையும் மனப்பூரிப்புடன் குறைவின்றிச்செய்து முடித்தனன். மகபதியானவன் அவைகளைக் கண்டுகளித்துத் தக்ஷணத்தில் வானகங்கை ஓமத்திரவியங்கள் முதலியவைகளையும் இன்னம் கல்யாணச்சடங்கிற்கு வேண்டிய சகல அலங்காரங்களையும் சித்தப்படுத்திக்கொண்டிருந்தனன். இவை நிற்க, நாம் முன் குறித்த முசுகுந்தச் சக்கிரவர்த்தியினுடைய வரலாற்றைச் சிறிது எடுத்துரைப்பாம்.

## “ முசுகுந்தன் சரித்திரம் ”

பரமேஸ்வரனும் பார்வதியும் திருக்கயிலாயத்தின்சாரலில் உல்லாசமாக உலவிவந்து ஓர் வில்வமரத்தடியிற் சந்தோஷ வார்த்தைகளாடிக்கொண்டிருக்குஞ் சமயத்தில், அம்மரக்கிளைகளில் உண்டாயிருந்த பலமுகக் கூட்டங்களிலொன்று முன்னைய நல்வினைப்பயனால் வில்வ

ப்பத்திரங்களைப் பறித்து அம்மையப்பர் சிரங்களில் இடைவிடாமற் போட்டுக்கீச்சுக்கீச்செனக் கதறிப் பற்கள் விளங்க நகைத்துக் களித்திருந்தது. அதுதரும் உபத்திரவத்திற்குப்பரமேஸ்வரி சகியாமற் கோபித்துப்பார்த்தபோது, சிவபிரான் ஓ! நாயகி! நம்மிடத்திற் பிரீதியுடன் அருச்சனைநடாத்திவரும் முசுக்கலுக்கரசின்மீதுகோபிப்பார்களோவென்று அதிகப்பட்சத்துடன் அம்முசுவின்மையலை ஒழித்துக்கிருபாநோக்கம் பாலித்த மாத்திரத்தில், அதற்கு ஞானமுண்டாகித் துரிதமாய் அன்னை அப்பரை வலம்வந்து, தான் செய்தகுற்றத்தை மன்னிக்கப் பிரார்த்தித்தது. பகவான், நீசெய்தது குற்றமாக மாட்டாதென்று அந்த முசுவைப்பிரியமாகப் பார்த்து, நீநம்மிருவரையும் அர்ச்சனைசெய்தபடியாற் பூமண்டலமுழுமைக்கும் சக்கிரவர்த்தியா யிருக்கக்கடவையெனத் திருவாய்மலர்ந்தருளினர். அறிவு பெற்றிருந்த மூசானது, ஓ! விஸ்வநாதனே, அடியேன் தமது திருவடிச்சேவையையே இச்சித்திருக்கின்றேனென விண்ணப்பஞ் செய்ய, முசுவினிடத்திற் கயிலாசபதி கிருபைகூர்ந்து, நமது வாக்கியம் பொய்ப்படாதாகையாற் சிலகாலம் நீ சக்கிரவர்த்தியாயிருந்து பின் நம்மைச்சேர்ந்து மகிழ்ந்திருக்கக்கடவையெனத் திருவாய்மலர்ந்தனர். முசுவானது, தேகம்பூரித்து விடைபெற்று அச்சோலையைக்கடந்து பூமண்டலத்திற்கு வந்து மனுச்சக்கிரவர்த்தியின் மரபிற் சத்தியத்தைக் கைவிடாத அரிச்சந்திரனென்பவனின் சகோதரியாகிய மங்கலவதியென்னும் பட்டத்துத்தேவிக்கு முசுமுகத்துடன் சுந்தரமானிட தேகத்தைப் பெற்றுப் பிறந்து வளர்ந்து, முசுகுந்தச் சக்கிரவர்த்தியென்னுந் திருநாமத்துடன் கருவூரை இராஜதானியாகக்கொண்டு, சூரபதுமன் ஆணைக்கடங்கித் தருமபரிபாலனங்களைத்தாழ்வற நடத்தி ஆண்டுகொண்டு வந்தனன். பாலசுப்பிரமணியதேவர், சூரனை வம்சநாசப்படுத்தியதை முன்னமே இந்தச்சக்கிரவர்த்தி தெரிந்து, தனது சகல துன்பங்களையும் போக்கி மகிழ்ந்திருந்தனன். இவை நிற்க, இந்திரனால் அனுப்பப்பட்டிருந்த தூதர்கள் மகோற்சவத்தை ஒருவரொழியாமல் தேடித் தெரிவித்த பிரகாரம், அவர்கள் அனைவோரும் ஒரு முகத்தில் திருப்பரங்குன்றத்திற் கூடி, இடம்பெறாமல் அதன்பேரிலும் மற்றவிடங்களினும் நெருங்குறத்தங்கிக்கல்யாண மகோற்சவத்தை யெதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

## "அம்மையை அலங்கரித்தல்."

அப்போது ஸ்ரீமகாலெட்சுமியும் சரஸ்வதியும் அரம்பாஸ்திரீகள் முதலியோர் சூழ, இந்திராணி வாசஞ்செய்யும் தலத்திற்சேர்ந்து தெய்வயானை அம்மையைக்கண்குளிரக்கண்டு சேவித்து ஏ! அம்மணி! நீவெற்றிவேலாயுதக் கடவுளுக்குத் தேவியாயிருக்கின்றதால் எவ்வுலகங்களுக்கும் இறைவியாவாயென, அந்த அம்மனைச் சூழ்ந்துகொண்டு இயற்கையாயிருக்கின்றஅழகிற்குச் செயற்கையினாற் சிலகோலங்களை அலங்கரிக்க விருப்புற்று, அவ்வம்மையின் கூந்தலிற் சுகந்தத்தயிலங்களைத் தடவி, வானகங்கையினாலும் பன்னீரினாலும் திருமஞ்சனமாட்டி, வெள்ளை வஸ்திரத்தைக்கொண்டு ஈரந்துடைத்துத், தெய்விகம் பொருந்திய பீதாம்பரத்தை மெல்லிய விடையினிடத்தில் உடுத்தி, நறும்புகையூட்டிக் கூந்தலையுலர்த்தி, நாயகியார் அளகபாரத்தைப் பொற்சீப்பினாற் சிக்கறுத்துச் சீர்ப்படுத்திப் பின்னலிட்டு, அதிற் புஷ்பங்களை அழகுறச்சொருகி, விழியிமைகளினும் புருவங்களிடத்தும் மையையிட்டு, நெற்றியிற் சாந்துப்பொட்டிட்டு, அதின்மேற் சுட்டியைத்தொங்கவிட்டுச், சந்திரப்பிறை சூரியப்பிறை அரசிலைத்தோங்கல் சடையணிவிதங்களை அளகபாரத்தைச் சூழ்வரத்தரித்து, வயிரக்குழைகளைத் தொங்கட்டங்களுடன் செவிகளிற்பூட்டிக், கழுத்தில் முத்தாரம் சரப்பளி மோகனமாலை மதாணிப்பதக்கம் காறைவிதங்களைத் தரித்துத், தோள்களிற் புயவணிகளைச் சேர்த்துக், கரங்களில் வயிரவளைகள் கங்கண விதங்களைச்சாற்றி, விரல்கள்தோறும் மோதிரங்களைத் தரித்துத், தங்கக்கலசத்தைப் பழித்துத்தேமற் பரந்ததரம்பியிருக்கும் கொங்கைகளின்மீது கலவைகளைப்பூசிச் சிந்தூரத் தொய்யலெழுதிச் சொர்ணப்பட்டிக்கச் சணிந்து, பஞ்சதருமலர்களினாற் சோடித்திருக்கின்ற தண்டமாலையைச்சாத்தி, அம்மையின் பாதாரவிந்தங்களிற் செம்பஞ்சுக்குழம்பிட்டுச் சித்திரங்களையெழுதிப் பொற்பாடகம் சதங்கைதண்டை இவைகளைச்சூடி, விரல்கள்தோறும் மோதிரம் பீலிமுதலிய அலங்காரங்களைப் பூட்டி, இவ்விதங்களில் அழகுக்கரசியாக விருக்கின்ற தெய்வ நாயகியாருக்குச்சிங்காரங்களை மனப்பூர்வமாகச் செய்து முற்றியவுடன் அன்னையாரைச் சோடித்துள்ள பீடத்தில் எழுந்தருளச்செய்து, திருஷ்டிப்பரிகாரமாக அஞ்சுகிற அவிகளைச் சுற்றி நாற்புறங்களிலும் வீசி ஆலஞ்சுற்றி முடித்துப், பூரண சந்திரனைச் சூழ விருந்த நக்ஷத்திர

களைப்போலக் கல்யாணப்பெண்ணை வளைந்துகொண்டு சுபசோபனங் களைப்பாடி மகிழ்ந்திருந்தனர்.

## "பாலசுப்பிரமணிய தேவரை மணச்சாலைக்கு அழைத்து வருதல்"

அப்போது தேவராஜன் வேண்டுபவைகள் அனைத்தையும் பூர்த்திசெய்து கொண்டு பிரமனை வணங்கிச் சுவாமீ! திருமணத்திற்கு யோக்கியமாகிய முகூர்த்தகாலத்தை ஆராய்ந்து சொல்ல வேண்டுமெனப்பிரார்த்திக்கப்,பிரமன் நகைத்துச் சுயஞ்சோதிக் கடவுளுக்கு ஒரு வேளையைக்குறிக்கவும் வேண்டுமோ! எக்காலமும் நன்மையாகவே இருக்கும், ஆயினும் ஆராயுமிடத்தில் இத்தினம் மிகவும் சுபகரமாயிருக்கின்றது, துரிதமாய் நடப்பிக்கலாமென்று இந்திரனுடன் தேவர்களனைவரும் சென்று முசுகுந்தச் சக்கிரவர்த்தி முதலிய சகலருஞ் சூழ்ந்து போற்றச்சிங்காசனத்தில் விளங்கியிருக்கும் சரவணபவனைத்தெரிசித்து வணங்கிப்,பிரமனானவன் தேவாதி தேவனே! திருமணப்பந்தருக்கு எழுந்தருள வேண்டுமெனப் பிரார்த்தித்தனன். சிவகுமாரன் நகைமுகராய் உங்கள் எண்ணப்படிக்கு நடத்தக் கடவீர்களென்று யாவரும் தம்மைப் போற்றிச் சூழ்ந்து வரச் சகலவாத்தியகோஷங்களுடன் தமது மயில்வாகனத்தி லாரோகணித்து விசாலமாகிய பலதெருக்களைக் கடந்து கலியாணச்சாலை முகவாயிலினிடத்தில் வரும்போது பூரணகும்பங்களைத் தவத்தரும் பிராமண சிரேஷ்டரும் கரங்களிலேந்தி மந்திரங்களைச் செபித்துத் தீர்த்தத்தை எமது கர்த்தன் மீதிற் புரோட்சித்து வாழி! வாழி! என ஆசி கூறினர். அரம்பையர், ஆலங்களை யேந்திச் சோபனங்களையும், நாகக்கன்னியர், கற்பூரமேந்திச் சுபங்களையும் பாடினர். மணக்கோலம் பூண்ட எமதையன் இவ்விதங்களாக மயில்வாகனத்தை விட்டிறங் கியவுடன் இந்திராணியானவள் தன்கரங்களைக் கூப்பிக்கொண்டு தன் கணவன் கட்டளையின் படிக்கு நடந்து வந்து பொற் பள்ளயத்திற் சரவணபவன் திருவடிகளைச் சேர்த்து ஆவின் புதியபாலினாற் கழுவிமுன்றனையால் ஈரத்தைப்போக்கிச் சந்தனக் காப் பிட்டுச் சுகந்த கற்பகமலர்களைச் சொரிந்து தூபதீபங்களைக் காட்டித் தேகப்பரவசத்தளாய் மகிழ்ந்து வணங்கி

ஆலத்தை மும்முறை குமாரதேவர் திருமுன்பு சுழற்றி நாணத்துடன் தேவகன்னியர் சூழத் தன் னிருப்பிடம் சேர்ந்தனள்.

சிவகுமாரன், இந்திராணியிடத்திற் கிருபாநோக்கம் பாலித்து, மகாவிஷ்ணு பிரமனுடைய கரங்களைப் பற்றிக்கொண்டு பிரகாசித்திருக்கும் கல்யாணமண்டபத்திற்சென்று,யாவரும் "ஜெய ஜெய" "ஜெய ஜெய" வெனப்போற்றச் சிங்காதனத்தில் எழுந்தருளியிருந்தகாலத்திற் சரவணபவன் கட்டளைப்படிக்குயாவரும்தங்கள் தங்கள் ஆசனங்களில் அமர்ந்து மகிழ்ந்திருந்தனர். அப்போது இந்தத் திருக்கல்யாணவைபவங்களைப் பரமேசுரன் திருவுள்ளத்தில் அறிந்து,பராசத்தியுடன்சிவகணங்கள் முதலியோர் சூழத் தமது திருக்கயிலையைவிட்டு வானவழியாகத் திருப்பரங்கிரிக்கு நேராகவருவதனை அறிந்த குமாரசுவாமியானவர், தக்ஷணத்தில் சிங்காதனத்தைவிட்டிறங்கி யெதிர்கொண்டு, விமானத்தை விட்டிறங்கிச் சமீபித்துவரும் தமது தாய்தந்தையரை அதிக ஆவலுடன் சேர்ந்து திர்க்கதண்டஞ்செய்தெழுந்து பன்னிருகரங்களையுங்கூப்பிக்கொண்டு துதித்துநிற்க, அம்மையும் அப்பரும் தமது ஒப்பற்ற திருக்குமாரனிடத்திற் பரிபூரணகடாக்ஷம் பாலித்து அவரைப் பெருமகிழ்ச்சியுடன் தழுவிக்கொண்டு பக்கங்களிற் போற்றி நிற்கும் மற்ற அனைவோர்களிடத்தினும் அருட்பெருக்கைச் செய்திருக்குஞ் சமயத்தில், எமது வடிவேலர் பிதாவை அன்னையுடன் கல்யாணமண்டபத்திற் கழைத்து வருவதாயினர். அத்தருணத்திற், பரமன் திருவுள்ளப்படிக்குச் சூரியனைபோலப் பிரகாசமாயுள்ள ஓர் விமானம் வந்திறங்கியது. அதிற் குமாரதேவர் நடுவிலும் பார்வதிபரமேஸ்வரர்அவருடையஇருபக்கங்களிலும்விளங்கவீற்றிருந்தகாட்சியைத்தேவர்களும் மற்றவர்களுந் தெரிசித்துக்களித்தனர். அப்போது பிரமன் ஓ! லோகநாயகனே! அடியோங்கள் மானபங்கப்பட்டுச் சிறுமைகளையடைந்து வருந்தியதற்கிரங்கிப் பாலசுப்பிரமணிய தேவரைப் படைத்தருளினீர். அத்திருக்குமாரரானவர் சூரனை வம்சநாசமறக் கொன்றொழித்துச் சயந்தன் முதலியோர் சிறையையும் மீட்டு இத்தலத்திற் கெழுந்தருளி யிருக்கின்றனர். இந்நன்றிக்குத் தக்க கைம்மாறு ஒன்று மில்லாமற் போனபோதிலும் யாங்கள் இக்காலத்திற் பெற்ற ஸந்தோஷத்திற்காகத் தேவேந்திரன் தவத்திற்பெற்ற பெண்கொடியை இத்தினம் பாலசுப்பிரமணியக் கடவுளுக்குத் திருக்கல்யாணஞ்செ

ய்து கொடுக்க யெத்தனித்து, அதற்கமுத்த முயற்சிகளை இதோ நிறை வேற்றி யிருக்கின்றோமாகையால், ஐயனே! அதற்குச் செலவு கொடுத் தனுப்ப வேண்டுமென்று பிரார்த்திக்கச், சிவபிரான் நகை முகராய்ப் பிரமனைநோக்கி, நீங்கள் எத்தனித்த சுபகாரியம் நன்மையாக விருக்கி ன்றதால் இச்சம்பிரமத்தைப் பார்த்துப்போக நாமும் உமையுடன் இவ்விடம் வந்தனம் துரிதமாய் முகூர்த்தத்தை நடத்தலா மெனத் திருவாய்மலர்ந்தனர். உடனே பிரமனால் தூண்டப்பட்ட இந்தி ரன் அதிக சந்தோஷத்தோடும் தன் விடுதியைச் சேர்ந்து தேவகன்னி யர் முதலான சுந்தரவதிகள் சோபனங்களைப்பாடிச்சூழ, அதின் மத் தியிற் பிரபையுடன் வீற்றிருக்கும் தன் பெண்ணைக்கிருபையாகப் பார் த்து, என்னைப்பெற்ற தாயே! குலக்கொழுந்தே! யாங்கள் ஈடேறவந்த தவ அமுதே! வருகவருக! என்றழைத்த காலையில் தெய்வகுஞ்சரி யார் அதிக ஸந்தோஷத்துடன் பீடத்தை விட்டெழுந்து திருவடிச் சிலம்பு சப்திக்கப்பாதங்களை மிருதுவாகப் பெயர்த்துவைத்து ஸ்ரீமகா லெட்சுமி சரஸ்வதி கரங்களைக் கைலாகுகொண்டு தேவகன்னியர் சுப ங்களைப் பாடிவர எதிரில் நிற்கின்ற பிதாவின் அருகில் வந்த மாத்திர த்தில் அவன் முகத்துடன் முகத்தைச்சேர்த்து முத்தமிட்டுஅவளைத் திருமணச்சாலைக்கு அழைத்து வந்தனன். அப்போது தேவர்கள் கற் பகமலர்களைச்சொரிந்து பணியவும், தவசிரேஷ்டர்கள் அட்சதைகளை இறைத்துத் தாயே! வாழி! வாழி! என்றுஆசிகளைச்சொல்லி வணங்க வும், சபையோர்கள் "ஜெயஜெய" வென்றேத்தித்தொழவும், இவ்விதக் களியாடல்களுடன் வந்த தெய்வகுஞ்சரியார், எதிரிலிருந்த அணையில் வீற்றிருக்கின்ற உலகமாதாவையும் ஆதிதேவனையும் தெரிசித்தவுடன் அருகிற் போய் அவர்களது பாதகமலங்களிற் பணிந்து மத்தியிற் சுயம் பிரகாசமாய் விளங்கும் வெற்றிவேலாயுத மூர்த்தியைப் பார்த்தவுடன் பெண்ணரசியானவள் நாணந்தலைக்கொண்டு வெட்கி அன்னத்தை யொப்பப் பக்கதில் ஒதுங்கினள், அத்தருணத்திற் சிவபிரான் தம்மை வணங்கிய மருகியிடத்திற் கிருபானோக்கம் பாலித்தனர். பார்வதியா ரும் தமது திருக்கரத்தை நீட்டிமருமகளைச் சேர்த்தணைத்துப் பக்கத் திலிருக்கின்ற திருக்குமாரனையும் மற்றொரு கரத்தினால் அணைத்துச் சென்று, இருவரையும் எதிரிலிருக்கும் பீடத்தில் உட்காரவைத்து ஆசீர்வதித்துத் தமதிருப்பிடம் வந்தனள். கல்யாணப்பெண்ணும் மாப் பிள்ளையும் ஒருமைப்பட வீற்றிருந்த காட்சியானது, சிவபிரான் பராச

த்திசமேதராய் எழுந்தருளிய தோற்றத்தை ஒப்பக்காட்டியது. அக்கோலத்தை விஷ்ணுவாதி தேவர்களும் மற்றவர்களும் கண்டு போற்றி ஆனந்தப் பரவசராயிருந்தனர். அம்மை யப்பரும் மனப் பூரிப்புடன் மங்களவாசிகளைக் கூறினர். இந்திரன் தன்தேவியை யெச்சரிக்க, அவள் திருமஞ்சனம் கற்பகமலர் தூபதீப முதலிய வஸ்துக்களுடன் தன் கணவன் பக்கத்தில் வந்து நின்றனள்.

## "மணச்சடங்கு"

அக்காலத்திற் பிரமன் பணித்தபடிக்குத் தேவராஜன் தன் திருத்தேவியுடன் குமாரதேவருடைய சந்நிதானத்திற்போய் வேதவிதிப்படிக்குப் பாதபூசையைச் செய்யத் தொடங்கினவனுய்ப் பொற்றட்டிலிடத்தில் ஐயன் திருவடிகளைச் சேர்த்துப் தன் தேவியானவள் நாணமிகுதியினல் தலையைக்கவிழ்ந்தபடி பொற்கலசமதூரகங்காதீர்த்தத்தை மெல்லச் சொரிந்துவரச் சுத்தி செய்து தனது உத்தரியத்தினல் ஈரத்தைப்புலர்த்திக் களபகஸ்தூரிக்குழம்பை அப்பிப் பஞ்ச தருக்களினது புதிய மலர்களைக்கொண்டு அர்ச்சித்துச் சாம்பிராணித் தூபத்தைக் காட்டிக் கற்பூர நிராஞ்சனம் கொடுத்துச் சோடசவுபசாரங்களுடன் பூஜையை நிரப்பியவுடன், தேவராஜன் மனப்பூரிப்போடு பாலசுப்பிரமணியக் கடவுளினது திருக்கரங்களில் தெய்வநாயகியாரின் அஸ்தங்களைச் சேர்த்து, இந்த அருமைப் பெண்ணரசியைத் தமக்குத் திருத்தேவியாகக் கொடுத்தனன், அங்கீகரித்து அன்பாய் ஆண்டு இரட்சிப்பது உமதுகடனெனவேண்டி, இந்திராணிவிட்ட வானநதிப்புனலினல் தாராதத்தஞ் செய்து வணங்கினன். (இந்தச் சரித்திரத்தைப் பக்தியாகக் கவனித்து வரும் நமது நண்பர்களே! தமது திருவடிகளுக்கு அன்பு பூண்டவர்களுக்கு இகபரசெல்வங்களைக் கடாக்ஷித்துச் சாரூபபதவியையும் தந்தாளவல்ல சரவணபவன், தேவராஜன் தன் குமாரத்தியைத் தாரைவார்த்துக் கொடுக்க மனமகிழ்ச்சியுடன் ஏற்றனனெனில், அவன் திருவிளையாடல்களின் பெருமிதங்களையாவராற்கணித்துப் புகழக்கூடும்!) இவைநிற்கப் பிரமதேவன் எழுந்து மானசத்தினல் நியமித்த மங்கிலியத்தைத் தேவப்பிராமணர்கள் ஆசிகளைச்சொல்லி வேதங்களை ஓதத்தக்கதாகச் சிவசுப்பிரமணியக் கடவுளினது திருக்கரத்திற் கொடுத்தவுடன், குமாரதேவர் அதன் சூத்திரங்

களை இருகரங்களினுற்பற்றிக்"கணகண"எனத்தேவதுந்துமிகள்முழங்கவும் வேதாகமங்கள் துதித்து வாழ்த்தவும் அந்தத் திருமங்கிலியத்தை எமதன்னையாரின் திருக்கழுத்தில் தரித்து மும் முடிபோட்டுத் திவ்ய மலர் மாலை ஒன்றையெடுத்துத் தமது திருத்தேவியாரின் சிரத்துக்கணியாகத் தரித்தனர். அச்சுப காலத்தில் தேவேந்திரன் தன் இஷ்டசித்தியைப் பெற்றுக் களித்தவனுய்ப் பலவர்க்கம் முதலிய சிறந்த வஸ்துக்களைத் தருவித்துத் தங்கப்பள்ளையங்களில் நிரப்பிச் சண்முகப்பெருமான் திருமுன்பு வைத்துத்,தேவரீர் இவைகளைப்புசித்து அடியேனை இரட்சிக்கவேண்டுமென நிவேதித்தனன். அக்காலையில் மங்களவாத்தியங்கள் அண்டங்கள் அதிர்ந்து திசைகள் செவிடுபடத் "தாம் தாம்"என்று முழங்கின. சகலரும் அந்தமணக்கோலத்தை விழிகளும் மனங்களும் களிக்கத் தரிசித்துச் சந்தோஷசாகரத்தில் மூழ்கினவர்களாய், இத்தினம் ஜென்மசாபல்யரானேமென்று பலவிதங்களில் துதித்திருக்கும்போது, பிரமதேவன் ஓமங்கள் முதலியகருமங்களை முடித்து அத்தீயிலிருந் தெடுத்த மையை மாப்பிள்ளையைக்கொண்டு பெண்ணின் திருநுதலில் இடுவித்தான். பின்பு மகா விஷ்ணு, அறுமுகவனைப் பீடத்திலிருந்தெழுப்ப மகாலெட்சுமியும் தெய்வநாயகியாரைக் கிளப்பிச் சுவாமியினுடைய திருக்கரத்தை நாயகியார் பிடித்துக்கொண்ட பிரகாரம் தீக்குண்டத்தை மும்முறை வலம்வரச்செய்து அவர்கள் வடபாரிசத்தைச் சேர்ந்தவுடன் பாலசுப்பிரமணியதேவர் தமது மனைவியின் திருப்பாதத்தைக் கரத்தினுற் பற்றியெடுத்துஅம்மியின் மீதில்வைக்க,முருகப்பெருமானுக்கும் அம்மைக்கும் வானத்தின் அருந்ததியைக்காட்டி இவ்விதமாக யாவருடைய சாட்சியாகவும் திருக்கல்யாணம் கிரமமாக முடிந்தவுடன் பெண்ணும் மாப்பிள்ளையும் உமாபரமேஸ்வரரை மும்முறை வலம்வந்து சேவித்தனர். பரமனும் பராபரையும் மனமகிழ்ந்து பல ஆசிகளைச்சொல்லித் தம்பதிகளை இன்று முதல் நமக்கிருக்கின்ற முத்தன்மைகளையும் நீங்களிருவரும் பெற்றுச் சகலராலும் பூசித்து வணங்கப்பட்டு என்றும் மங்களமாய் வாழ்ந்திருப்பீர்களென வாழ்த்தினர். அதைக்கண்ட சகலரும் சண்முகநாதனையும் தெய்வநாயகியாரையும் முன்னிலும் அதிகப்பக்தியுடன் தங்கள் இஷ்டதேவதைகளாகக்கொண்டு அவரவர்கள் தம் தேவியருடன் மும்முறை வலம்வந்து வந்தனைவழி பாடுகளைச்

செய்யச்,சிவகுமாரன் அவர்களிடத்திற் பரிபூரணகடாக்ஷம் பாலித்த வர். தமது திருக்குமாரனுக்கு நடந்துவரும் சிறப்புகளைக் கண்டு மன மகிழ்ச்சியுடன் உமாபரமேஸ்வரர் அத்திருச்சபையை விட்டு யதாப்பிர காரம் தமது திருக்கயிலாயத்தைச் சேர்ந்திருந்தனர். லோகநாயகன் திருத்தேவியுடன் சென்றதை அனைவரும் தெரிந்தவுடன், மாதாபிதா வைப் பிரிந்த புத்திரரைப்போல மனம் வருந்திப்,பின் அந்த அம்மை அப்பரைத் திரும்பக்கண்டு களிப்பவரைப் போலச் சிங்காதனத்தில் வீற்றிருக்கின்ற குமாரதேவரைத் தெய்வானைப் பிராட்டியாருடன் தெரிசிக்க, அவர்கள் உமாபரமேஸ்வரர் கோலமாகவே அவர்களுக்கு தோற்றக்கண்டு அதிசயித்து ஆனந்தப்பரவசராய் மனக்கவலைகளைப் போக்கிச் சரவணபவன் சுயஞ்சோதிப் படிவத்தைக் காணுந்தோறும் பேரானந்தக் கூத்தாடிப் பலவிதங்களில் அவன் பெருமைகளைப் பாடி வழுத்துவதாயினர். அப்பாற் சண்முகப்பெருமாள் தமது பிரியதேவி யுடன் அரியணையை விட்டிறங்கிச் சகலசம்பிரமங்களுடன் தமது திரு க்கோவிலிற் பிரவேசித்து மகாவிஷ்ணு பிரமன் இந்திரன் மற்றுமுண் டானவர்கள் யாவருக்கும் கிருபைசெய்து, தத்தமது பதவிக ளுக்கு அவர்கள் போவதாகச்செலவு கொடுத்தனுப்பி விட்டுத்,தம் பரி சனரை வாயில்கள் தோறுமிருந்து போற்றிவரக் கட்டளையிட்டு, அடி யேனையின்றெடுத்த அன்னையுடனே அந்தப் புரத்தைச்சேர்ந்து,சராசர ப்பிரபஞ்சங்கள் தழைத்தோங்கும் படிக்குப்பள்ளியறையிற் ,பஞ்சணை மெத்தைகளை விரித்து அவைகளில் மலர்ப்பாயலைப் பரப்பி மற்ற விசேஷங்களுடனும் சோடித்திருக்கின்ற பொன்மஞ்சத்தில் எழுந்த ருளித், தேவியுந் தாமும் சரசசல்லாபங்களைச் செய்து சுரதலீலைகளி னால் இன்ப நலங்களை அனுபவித்துக் களித்திருந்தனர். மகாவிஷ்ணு பிரமனாதியதேவர்கள் தங்கள் தங்கள் நகரங்களிற் சேர்ந்து மனவெ ழுச்சியுடனிருந்தனர். தேவேந்திரன் அதிகஸந்தோஷத்துடன் முசுகு ந்தச்சக்கிரவர்த்தி முதலியவர்களை உபசரித்துப் பல உபசாரவார்த் தைகளைச் சொல்லி அவர்களெல்லாருக்கும் செலவு கொடுத்தனுப்பிப் பின் மனதிற் கினிய இந்திராணியுடன் போக போக்கியங்களை அனுப வித்துக் கொண்டு சயந்தனுடன் சிலதினம் அத்தலத்திற் பலதேவர் கள் தனக்குப் பணிவிடைகளைச் செய்துவர வாசமா யிருந்தனன்.

"விண்குடி யேற்றல்"

அப்பால் ஒருதினம் பாலசுப்பிரமணியக்கடவுள் இந்திரனைப்பழையபடிக்குப் பொன்னுலகத்திற் பட்டாபிஷேகஞ் செய்து வைக்கத் திருவுள்ளத்திலெண்ணி அக்கருத்தைத்தம் தேவிக்குத் தெரிவித்துத் தம்பதி சகிதராய் அந்தப்புரத்தைக்கடந்து சபாமண்டபத்திற்கு வந்து,வீரவாகுதேவர் முதலானவர்கள் போற்றிச் சூழ வீற்றிருந்தகாலையில் இந்திரன் மனவுற்சாகத்துடன் விரைவில் வந்து கர்த்தனைப்பணிந்து நிற்கக்குமாரதேவர் அவனிடத்திற்கிருபைகூர்ந்து தேவராஜனே! இத்தினம் தேவலோகவாழ்வை உங்களுக்குப் பழயபடிக்குத் தருவோமெனத் திருவாய்மலர்ந்து, வந்தடைந்த மகாவிஷ்ணு பிரமன் முதலான சகலதேவர்களையும் தங்கள் தங்கள் வாகனங்களிலேறி வரக்கட்டளையிட்டுத் தாம் வாயுதேவனாற் கொண்டுவரப்பட்ட இரதத்திற் பிராட்டியாருடன் எழுந்தருளி வானவழியாக, முன்பானுகோபனாற் சுட்டெரிக்கப்பட்ட பொன்னுலகைச் சேர்ந்து, தேவசிற்பியால் அதை முன்னிலும் அதிகவளங்களுற அமைக்கச்செய்து, தேவேந்திரனைச் சபாமண்டபத்திற் சிம்மாசனாதிபதியாக வீற்றிருக்கச் செய்து, பிரமனைக்கொண்டு அவனுக்கு மவுலிசூட்டும் படிக்குச்செய்து, தேவர்கள் யாவரும் அவனைப்போற்றிக்களிக்கச்செய்த சமயத்தில் இந்திரன் தனது சிம்மாசனத்தை விட்டெழுந்து வந்து குமாரதேவரின் சரணாரவிந்தங்களிற் பன்முறைபணிந்தெழுந்து பலவாறாகப் போற்றி நின்றனன். சண்முகசுந்தரன் ஓ! தேவராஜனே! இனி எக்காலமும்மனமகிழ்ச்சியுடன் திரிலோகாதிபதியாய் முன்போற் சகலரும் போற்றிவணங்க அரசுசெலுத்தி யிருப்பாயெனக் கடாக்ஷித்துத் தமக்கு அவ்வுலகத்தில் அமைத்துள்ள திருமாளிகையிற் சேர்ந்து விஷ்ணுவாதியருக்குச் செலவுகொடுத்தனுப்பித் தெய்வநாயகியாருடன் அந்தப்புரஞ்சென்று லீலாவிநோதங்களை அனுபவித்துக் கொண்டிருந்தனர்.

"கந்த வெற்படைதல்"

இவ்விதம் சகலரும் சவுக்கியத்தி லிருக்கின்றபோது, ஒருநாள் வெற்றிவேலாயுத மூர்த்தியானவர் அந்தப்புரத்தை விட்டுத் திருச்சபையில் வீற்றிருந்ததனை மகாவிஷ்ணு பிரமனாதியர் போதவுணர்

வில்தெரிந்து, வண்டினங்கள் பூவின்தேனை நோக்கிவருமாறு போல அவனுடன் வந்து குமாரதேவரைப் பணிந்து போற்றுகின்றவர் மீது கந்த சுவாமி யார் கிருபா நேக்கம் பாலித்து, நாம் இன்றையத்தினம் கந்த மாதனத்தைச்சேர்ந்து அங்கு சிலகாலமிருக்க நினைத்திருக்கின்றோ மெனத் திருவாய்மலர்ந்து அவர்களுக்கு விடைகொடுத்தனுப்பித் தாமும் பிராட்டியாரும் வாயுதேவன் கொண்டுவந்த இரதத்தில் ஆரோகணித்துத் தம்துணைவர்முதலிய பூதகணங்களுடன் பொன்னுலகை விட்டுப் பிரயாணப்பட்டுத் திருக்கயிலாயத்தைச் சேர்ந்து தமதுமாதாபிதாக்களைச் சேவித்துத் தமது கருத்தை அவர்களுக்குத் தெரிவித்து அவர்களுடைய ஆசிர்வாதத்தைப்பெற்றுக்கொண்டு வெள்ளியங்கிரிக்கு அடுத்திருக்கின்ற கந்தபருவதத்தில் விளங்கியிருக்கும் ஆலயத்துட் பிரவேசித்துப் பூதகணங்கள் திசாதிசைகளினும் பரந்து காவல் கொண்டிருக்கத் தம்பதிசமேதராக அங்குள்ள சபாமண்டபத்தின் சிங்காதனத்தில் எழுந்தருளி யிருந்தனர்.

## "இந்திரபுரி விருத்தாந்தம்"

இவையிற்கப் பொன்னுலகத்தில் அமர்ந்து, தேவகுலகுருவாகிய பிரகஸ்பதி பகவான் மந்திராலோசனைப்படிதிரிலோகங்களையும் சகல சிறப்புகளுடன் ஆண்டுவந்த இந்திரனென்பவன், ஒருநாள்தான் அசுரராற்பட்ட பாடுகளையும் கேவலங்களையும் நினைத்துச் சஞ்சலித்துத்தனது செல்வங்களை அநித்தியமென்று வெறுத்துக் கொண்டு தவவேடம்பூண்டு காட்டிற்குச் சென்று பரமசிவத்தைக் குறித்துத் தவஞ்செய்யும் மனமுடையவனா யிருந்த ;குறிப்பினைத் தெரிந்த பிரகஸ்பதி பகவானானவர், அஹா! மோசம் வந்தது! இதற்கொரு நிவாரணத்தை நாம்தேடவேண்டுமென ஒருதந்திரத்தை மனதில் தீர்மானித்து இந்திரனுக்கு உலோகாயுத மதத்திற்குரியவிஷயங்களைச் சவிஸ்தாரமாக வெடுத்துப்போதிப்பதாயினர். ஓ! புரந்தரனே! பொறி புலன்களை அடக்கி ஆசையை நீக்கிச் செய்கைகள் அழிந்து வினைக்கூடாகிய தேகவாசனையை நீக்கி நித்தியத்தைத் தரவல்ல பேரின்பவீடொன் றிருக்கின்றதென்றும் சில சபலசித்தர் சொல்வதுண்டு. அதனைக் கண்டவர்களைக் காட்டக்கூடுமோ? இம்மையில் உள்ளங்கை நெல்லிக்கனி போலத் திருஷ்டாந்தமாய் அநுபவித்துக் களிக்கும்போக போக்கியங்களையே

உண்மையாக உலகங்களிற் சாதாரணமாய் வசனித்துக் கொள்ளவேண்டிய தன்றி வேறென்றுண்டா யிருப்பதில்லை. ஆதலால், பொய்க் கானலை நீர் எனக்கருதி அதிலிச்சை கொண்டு கரத்திலகப்பட்ட சிறந்த தேவாமுதத்தைக் கமரிற் கவிழ்த்து மோசம் போனவரைப்போலச் சிலர் நித்திய வீட்டைப்பெறக்கருதி இம்மையிற்பிரத்தியட்சமாய்க் கண்ட பிரயோசனத்தைப் பலோத்காரமாக இழக்கும் படிக்கிருக்கும் உன் எண்ணம் வெகுநேர்த்தியாக விருக்கிறது. ஓ! தேவராஜனே! தன்மனதிற்கினிய சுந்தரமுள்ள மங்கையரை அம்சதூளிகா சயனத்திற் சரசசல்லாபங்களினாற் சுரதலீலைகள் செய்து ரமிக்கும் பெரும்பேரின்பமே மோக்ஷசாம்பிராச்சியமாமென்று இன்னும் மதனசாஸ்திரக் கிரமங்களனைத்தையும் பிரகஸ்பதி பகவான் தேவராஜன் மனமுருகப்பேதித் தெடுத்துப் போதித்தபோது, மகபதியானவன், தான் கொண்டிருந்த பழயவெண்ணங்களை முற்றுந்துறந்து காமவலையிற்சிக்குப்பட்டு மதன சாஸ்திரப் பிரகரணங்களை வேதமொழிகளாக நிச்சயித்துக் கொண்டு, இடைவிடாது பல நாட்கள் இந்திராணியைக் கலந்தனுப வித்திருந்தனன். அத்தருணத்திற் பிரகஸ்பதிபகவானுடைய உதவியைக்கொண்டு இந்திரப் பட்டத்திற்குரிய வயிரமுடியைச் சுமந்து அரசாண்டுவந்த இந்திரகுமாரனானவன், தன்குருவைத்தொழுது விஷ்ணுபிரமனாதிதேவர்களும் அளவில்லாத தவசிரேஷ்டர்களும் மற்றைய முனிவர்களும், மிகுந்த தவமகிமை பொருந்தியுள்ள சூரபதுமனாற் கொடிய துன்பங்களைத் தொன்று தொட்டு அனுபவிக்க நேரிட்ட காரணமென்ன? அதனைத் தேவரீர் வரன்முறையாக அடியேனுக்கு அனுக்கிரஹஞ் செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்கத் தேவகுருவானவர் சொல்லத் தொடங்கினர்.

## 5 வது தேவகாண்டம் முற்றிற்று.

உ

வேற்றிவேலுற்ற துணை

## 6-வது தட்சகாண்டம்.

### விருந்தம்.

மாயையின் வலியோனாகி மன்முதலோரை வென்மே
யாயிரத் தோரெட்டண்ட மரசுசெய்துக நூற்றெட்டுக்
காயமதழி வின்ருகிக் கடவுளர்க் கலக்கண்செய்த
தியசூர் முதலைச்செற்ற குமரன்ருள் சென்னிவைப்பாம்.

## "தக்கன் பரத்துவத்தைத் தெளிந்து தவத்தால் வரம்பெறல்"

உலகங்களிற் சிறந்து விளங்கும் சத்தியலோகத்திற் பிரமன் கொலுவிற்றிருக்குஞ் சமயத்தில் அவன் பிள்ளைகளில் ஒருவனாகிய தக்கனென்பவன், பிதாவைநோக்கி, திரிமூர்த்திகளிலும் மூலகாரணக்கடவுளைத் தெளிவிக்க வேண்டுமெனக்கேட்கப், பிரமன் நகைத்துக்குமாரனே! விண்டுவும்யானும் பூர்வத்தில் நாம் நாம் பிரமமென்று அஞ்ஞானப் போரிட்டிருக்கின்ற காலத்தில், அக்கினி வடிவாய் எங்கள் இருவர் மத்தியில்தோன்றி எங்கட்கு நிச்சயந்தெளிவித்த பரமசிவனே மூலகாரணன். இதை நிச்சயமாகக் கொள்ளக் கடவாயென்றருளக் கேட்ட தக்கன், மேலும் பிதாவைநோக்கிச் சகலத்தையும் சங்கரிக்கும் சிவன் உங்களுக்குக் கர்த்தனாகும் காரணமென்னவென வேண்டப் பிரமன், குமாரனே! நீவேதசாஸ்திரங்களைப் பூரணமாக வாசித்தும் பரத்துவ நிச்சயத்தினை அறியாமல் மயங்கினை. அழித்தற்குரிய தொழிலை நடாத்தும் பரமன் முதன்மையாகும் காரணமென்னெனில், என்னையும் கேசவன் முதற்சகலத்தையும் ஊழியிலொடுக்கு கின்றவன் அவன் ஆகையினாலே, முதற் சிருஷ்டிப்பவனும் அவனே ஆவனல்லவோ? மேலும், விண்டுவையும்என்னையும் தமதுபுயங்களில் உண்டாக்கி உலகங்களை அழித்துக்காக்குந்தொழிலை அடியேங்களுக்குக் கட்டளையிட்டதன்றியும்; உங்களிடத்திற் பிரியாது வாசஞ்செய்வோமென்றருளி அவ்வாறே எங்கள் மூலமாக எறும்பு முதல் யானை ஈறாக விளங்கும் பிராணிகளைத் தோற்றுவித்துப் போஷிக்கின்றான். அவன் அருளிய அழிவில்லாத வேதங்களில் மூலகாரணனுக் குரைத்த உண்மையினை மற்றவருக்கும் உரியனவாகப் பேசுவது உபசாரமாகும். அவ்வாறே மற்றச் சிவராசிகளையும் அவைகளுக்குக் காரணமாகிய பஞ்சபூதங்களையும் வேதம் துதிக்கும். திருஷ்டாந்தமாகப் பிராமணரை யாமெனத் துதிப்பாரும் உளரல்லவோ? யாவராயினும் எவ்வெவரை எவ்விடையங்களில் துதிக்கினும், அது மூலகாரணனான சிவனையே சேரும். அவ்வாறேவேதங்கள் துதிப்பதனைத்தும் சிவபிரானுக்கே உரியதாம். குமாரனே! இவைகளை நீமுன்னமே தெளிந்தும், ஈசன்மாயையிற்பட்டு உழலுகின்றனை. வேதங்கள் சிவனைப் புகழ்ந்ததைப்போல என்னையும் விண்டுவையும் மற்றெவரையும் உண்மையாகத் துதித்த துண்டோ? இதனை

ச்சோதிப்பையாயின் தெளிவடைவாய். அவன் அனுக்கிரஹம் பெரு மல் முத்தி பெற்றவ ரொருவருமில்லை. அவனன்றி வாழ்ந்த தேவரைக் காட்டவல்லமோ? இது சத்தியம். ஆகையாற் குமாரனே! அந்தக் கர்த்தன் பாதகமலங்களிற் சரணமடைந்து வாழக்கடவாயெனப் போதித்தனன். தக்கன் அய்யம் நீங்கித்தன் பிதாவை நோக்கி இனி அவனைக்குறித்துத் தவங்களைச் செய்து இஷ்டகாமியங்களைப் பெறுவேன். அதற்குத் தகுதியாகிய இடமொன்றைக் காட்டி எனக்குச் செலவுதர வேண்டுமெனக் கேட்கப் பிரமன் முன்மனதினால் தான் சிருஷ்டித்த மானதமடுவின்பெருமைகளைத் தெரிவிக்கத் தக்கன்பிதாவைச்சேவித்து அவ்வாவியின் கரையைச்சேர்ந்து பரமசிவத்தைக் குறித்துப் பதினாயிரமாண்டுகள் அகோரதவத்தைச் செய்திருந்தனன். பரமசிவன் அதனைத்திருவுள்ளத்திற் கொண்டு உமையவள் சமேதராய் அவன்முன் எழுந்தருளி வேண்டும் வரங்களைக் கேட்பாயெனத் திருவாய் மலர்ந்தனர். தக்கன் மேலான மோக்ஷத்தை நினையாமல் ஊழ்வசத்தனாய்ச்சுவாமீ! திரிலோகங்களினும் என் ஆணைசெல்லவும், தேவரீரை வந்திப்பவர் அனைவரும் என்னைப்பணிந்து போற்றவும், உம்மையல்லது மற்றத் தேவதைகளை மனதினும் கருதாமலும், விண்டுவாதியர் அடியேன் கட்டளையில் அடங்கி நடக்கவும், மனதிற்கினிய புத்திரரைப்பெறவும், அகண்ட சாம்பிராச்சிய செல்வங்களை அடையவும், அழிவில்லாத நித்தியத்துடன் எக்காலமுங் களித்திருக்கவும், கடாக்ஷிக்க வேண்டும். இஃதன்றியும், உமது இடப்பாகத் தமர்ந்த பராசத்தியார் என்பெண்ணாகவும், நீர்பிராமணவடிவா யெழுந்தருளி அவளை மணஞ்செய்யவும் வேண்டுமென விண்ணப்பஞ் செய்ய, பரமேஸ்வரன் மகிழ்த்து உன் கருத்தின்படியே தந்தோம். ஆனால், உன்மனம் நமது மெய்ப்பத்தியில் திரியுமாயின் நமது வரமும் இரியுமென்றருளித் தம திருப்பிடஞ் சேர்ந்தனர்.

## "தக்கன் அரசும், பிள்ளைகளைப் பெறுதலும்"

பின்பு, தக்கன் மகிழ்ச்சியுடன் தன்பிதாவை நினைக்க, அதனைப் பிரமன் அறிந்து நமது புத்திரன் பரமேஸ்வரனிடத்தில் மேலான காரியங்களைக் குறித்து வரத்தைக்கோருமல், ஆணவமலத்துக் கேதுவான செல்வத்தைப் பெற்றான். ஐயோ! இனியென் செய்யலாமென்று

குமாரன் பெற்றவரத்திற் கஞ்சி, விருப்படைந்து நிற்கின்ற தக்கனெதிரில் துரிதமாயெழுந்தருளி ஆசிர்வதித்தனன். அதனை அவன் அங்கீகரியாது, பிதாமகனை நோக்கி நாம் இருக்கயோக்கியமான நகரமொன்றை விதிப்பாயென்றவுடன், பிரமன், தன் நகருக்குமேலான சிறப்புகளோடுங் கூடிய தக்கமாபுரியென்னும் பேருடன் ஓர்நகரத்தினை நிருமித்துத் தன் குமாரனுக்கு அறிக்கையிடத், தக்கன் அதிற் பிரவேசித்துச் சகல தேவர்களும் தன்னைப் புடைசூழ்ந்து போற்றிவர, விளக்கம் பெற்ற சிங்காதனத்தில் வீற்றிருந்து, திரிபுவன சக்கிரேஸ்வரனாக அரசு செய்திருந்தான். சிலநாளைக்குப் பின்பு, கற்பிலும் வனப்பிலும் உயர்ந்த பிரமன் பாதத்தில் உதித்த வேதவல்லியென்னுங் கன்னிகையைத் தக்கன் மணந்து, சேடன் சிரோரத்தினங்களை வெளியிட்டதைப் போன்ற ஆயிரம் பிள்ளைகளைப் பெற்றனன். அப்பிள்ளைகளைத் தக்கன் நோக்கி, நீங்கள் பரமசிவனைக் குறித்துத்தவம் செய்து படைக்கும் பேற்றையடைந்து வாக்கடவிர்களெனப் பணித்தனன். அவர்களனைவரும் மானதத்தீர்த்தக் கரையைச் சேர்ந்து தவஞ்செய்யத் தொடங்குவதானார்கள். இதனை நாரதன் அறிந்து அவர்களுக்கு முன்தோன்றி, அஞ்ஞானத்துக்குக் காரணமாகிய படைப்பின் தொழிலில் அவர்கள் மனம்வைக்கக்கூடாதென்றும் எப்போதும்சாஸ்வதமாகிய முத்தியைப்பெறப் பரமனைநோக்கித் தவம் செய்யற்பாலதென்றும் அவர்களுக்கு அத்தவத்திற் குரியவைகளையும் மந்திரபூர்வமாகப் போதித்து அவர்களை ஆசிர்வதித்து அந்தரகமனமாகச் சென்றனன். பின் அவர்கள் நாரதன் குறித்தவாறே அரியதவங்களைச் செய்து பரமசிவ கடாக்ஷத்தினால் நித்தியபதவியைப் பெற்றார்கள். இப்பால், தக்கன் தன் பிள்ளைகள் செய்தி தெரியாமல் வருந்திப் பின் ஞானவுணர்ச்சியினால் நாரதன் செய்கையைத் தெரிந்து வாடினவனாய் மீட்டும் ஆயிரம் பிள்ளைகளைப் படைத்துத் தவஞ்செய்ய அனுப்பினன். அவர்களிடத்திலும் நாரதன் தோன்றிப் பேரின்ப வியலை அவர்கள் மனதிற்படும்படிக்கு நன்கெடுத்துணர்த்த, அக்குமாரர்களும் ஏகமனதாய்ச் சித்தத்தைச் சிவத்தின் பாதகமலங்களில் நிறுத்தி அவனருளாற்சாயுச்சிய பதவியையடைந்தனர். இக்காரியங்களைத்தக்கன் உணர்ந்து கோபித்து இவ்வாறு மோசஞ்செய்த நாரதன் ஓரிடத்தில் நிலையின்றிக்கலகங்களையுண்டாக்கி வருந்தியலையக் கடவதெனச்சபித்து இனிப்பெண்களை

ப்பெற்றுச் சிருஷ்டிமல்கச்செய்வது தகுதியென்றெண்ணி இருபத்தாறு குமாரத்திகளைப் படைத்துப் பிருகுமரீசி புலத்தியன் ஆங்கிரசு புலகன் வசிஷ்டன் அத்திரி முதலான தவத்தருக்களித்து அவர்களால் சிருஷ்டி விருத்தித்து வருங்காலத்தில் தக்கன் மீளவும் இருபத்தேழு பெண்களைப் பெற்று அவர்களனைவோரையும் சந்திரனுக்கு வதுவை செய்து கொடுத்து மருகனை நோக்கி உன்தேவியரனைவரையும் அபேதமாகத்தழுவிக்களித்திருப்பா யெனச் சொல்லியனுப்பினன்.

## "தக்கன் சந்திரனைச் சபித்தல்."

சந்திரனும் அவ்வாறே சிலகாலம் அப்பெண்மணிகளைச் சுகித்து வந்து அப்பால் அதிரூபவதிகளான கார்த்திகை ரோகணியென்பவர்களிடத்தில் மட்டும் அதிகமையல் கொண்டு மற்றவர்களை நினையாமலும் பாராமலுந்திரிய, மற்றப்பெண்கள்மனம் பொருமக் கோபித்துத் தம்பிதாவினிடம் வந்து துகித்து முறையிட்டுக் கொண்டார்கள். அச்சொற்களைக் கேட்ட தக்கனுக்கு அதிகக்கோபமுண்டாகிச் சந்திரனைத்தினம் ஒருகலையாகக்குறைந்துமங்கிப்பலரும் இகழவருந்தக்கடவனென்று சபித்தவுடன், அக்கொடுமை மேலிட்டுச் சந்திரனது கலைகள் தினமொன்ருகப் பதினைந்து வரையில் தேய்ந்து ஒருகலைமாத்திரம் இருக்கச் சந்திரன் வருந்திவாடித் திகைத்து வெட்கித் தேவராஜனிடத்துக்கோடி, ஓ! சினேகிதனே! தக்கன் சாபசம்பந்தத்தினுல் என் கலைகளனைத்தும் மாறி, ஒன்று மாத்திரம்நிற்கின்றது. அதுவும் இத்தினம் நீங்கும். அப்பால் நானிருந்தும் என்னபிரயோசன மென்று முறையிட்டுக் கொள்ளத் தேவேந்திரன்சோமனை விசனித்து நோக்கி நண்பனே! முன் திருக்கயிலாயத்திற்கு நாமிருவரும் சென்றிருந்தபோது, பயற்றுண்டை வாழைக்கனி மாங்கனி பலாக்கனி கரும்பு முதலியவற்றை விநாயகமூர்த்திதிருத்தியாகப் புசித்து வயிறுபருத்து ஊர்த்த சுவாசம் விட்டிருப்பதை நீகண்டு நகைத்தாய். அதைக்குறித்து அக்கடவுள் சீறி உன்னையாவரும் பாராமலிருந்து நிந்திக்கும்படி சண்டாளத்துவமடையக் கடவதெனச் சபித்தார். உனக்குற்ற அந்தத் துன்பத்தினைப் பிரமனுதியர் கயிலாசபதியினிடம் தெரிவித்துப் பிரார்த்தித்துக் கொள்ளப் பரமசிவன் உனக்கு அந்தச் சாபம் வருடம்

ஒருமுறை மட்டும் வரும்படிக்கு அநுக்கிரஹித்திருந்தார். அவ்வாறே ஆண்டுகள் தோறும் ஆவணிமாதம் பூர்வபட்சத் தமாவாசை சென்ற நான்காந்திதியில் உலகத்தார் உன்னைத் தெரிசித்த சண்டாளத்துவத்தைப் போக்கிக்கொள்ள விக்கினகர்த்தனைப் பூசித்து வருகின்றனர். அப்பழியுடன் மேலும் நீ இப்போது தக்கனால் ஒருகுறையைப் பெற்று உனது பெயரும் பிரகாசமும் மேம்பாடும் அடங்கினாய். ஆதலால், துரிதமாக நீ பிரமனிடம் இதனைப் போய்த் தெரிவித்துக்கொள்வா யெனக் கட்டளையிட்டனன். அவ்வாறே சசியானவன், மனோவதிக்குப் போய்த் தேவர் தபோதனர் சூழ்ந்துபோற்ற ஆயிரம் இதழ் விரிந்த பொற்றாமரைப் பீடத்தெழுந்தருளிய பிதாமகனைச்சேவித்துத் தன் மாமனால் தனக்கு நேர்ந்த இன்னலை விண்ணப்பஞ்செய்து இரந்து நின்றனன். பிரமன் ஆலோசித்துச் சந்திரனை நோக்கித், தக்கனானவன் தன்னையே பரத்துவமாக நினைந்து வீறுப்படைந்திருக்கின்றான், எனக்கடங்கி வார்த்தையாடவு மாட்டான். ஆகையால், நீ பரமேஸ்வரனைச் சரணடைந்து உன்மனக்கவலையை முறையிட்டுக்கொள்வதே உனக்கு க்ஷேமகால மெனக் கட்டளையிட்டனன். கறுத்து உருமாறிய சந்திரன் தாமதியாமற் கயிலையைச் சேர்ந்து நந்திதேவாருள் பெற்று ஆலயத்துட் சென்று பரமனைக்கண்டு விழிகளில் ஆனந்தவாரி பெருகச்சேவித்துப் போற்றிய போது, பரமேஸ்வரன், சந்திரனை நோக்கி, நீ மிகவும் வருந்தி வருங்காரணமென்ன வெனத்திருவாய் மலர்ந்தனர். சந்திரன், பரமசிவத்தை வணங்கிச்சுவாமி! கடினசித்தனாகிய தக்கனிட்ட சாபத்தால் இக்கதியானேன். தீனதயாபரனே! கிருபையுற்று இந்த ஒருகலை நிற்கவும், மற்றயவைகளுஞ்சேர்ந்து விருத்திக்கவும் கடாக்ஷிக்கவேண்டும், தேவரீரேயல்லது வேறுகதிகாணேன் என்று பிரார்த்திக்கும் சந்திரனிடத்திற் சிவபிரானுக்குக்கிருபை உண்டாகிப் பயங்கொள்ளவேண்டா மெனத் தேற்றி, அந்த ஒருகலையினையுந் தமது திருமுடியினில் தரிப்பதாயினர். உடனே தக்கன் சாபம் சந்திரனை நெருங்கப் பயந்தோடியது. அக்காலையிற் பரமேஸ்வரன், ஓ! சந்திரனே! நீ நமது சிரத்தின்கண் வதியப்பெற்ற மகிமையினால் அழிவுறமாட்டாய், இனி மற்றைய கலைகளும் மாறிய வாறே தின மொன்றாகப் பட்சங்கள் தோறும் தேய்ந்தும் நிறைவெய்தியும் வருமென்றருளச் சந்திரன் தன் மனக்குறை நீங்கிக் கர்த்தனை வணங்கி விடைபெற்றுப் போய் முன்போலத்தன் செய்கை

யினை நடத்தியிருந்தனன். பின்பு இக்காரணங்களைத் தக்கன் அறிந்து கோபித்து நானிட்ட சாபத்தைச் சிவனோதடுக்க வல்லன்! பஞ்சகிருத்தியங்களை நடத்தியிருப்பவனென்று கருவிர்தானே! அல்லது நான் அவனிடத்திற் செல்வத்தைப் பெற்று அவனைத் தொழவில்லை யென்று இக்கருமத்தை முடித்தானே! என்று பல நிந்தைகள் பேசுவதைத் தபோநிதியாகிய புலகர் கேட்டு மனம் பொறாமல் ஓ! தக்கனே நீ ஒப்புவமையற்ற பரமேஸ்வரனை இகழாதே! சிவனையிகழ்ந்தோர் ஒருபோதும் ஈடேறவறியார்கள்! இது வேதவாக்கியமாம்! ஆகையால் அக்கடவுளைப் பக்தியாக வழி படக்கடவாய். தம்மைச் சரணடைந்தவரை ஆதரித்தல் அப்பெருமானுடைய வியற்கை யாதலாற் சந்திரன் சாபத்தைப் பக்குவமாய் விலக்கி, உன்வார்த்தையும் பொய்க்காமல் அவனுக்குக் கலைதேயவும் வளரவும் கிருபைசெய்தனர். உன்மருமகனாகிய சந்திரனுக்கு இவ்வாறு நேர்ந்ததற்கு நீ ஸந்தோஷப்பட வேண்டாமோ? இனிப் பரமசிவமும் உனக்கு மருமகனாக விருக்கின்றார். இதனைத் தீர்க்கமாக யோசித்து நடந்து கொள்வையாயின் உன் கீர்த்தி நிலைபெற்றிருக்கு மெனப் பலவாகக் கர்த்தன் பெருமைகளைப் யெடுத்துக் காட்டத் தக்கன் கோபந்தணிந்து தேவேந்திரனாதியர் போற்ற அரசு செய்திருந்தனன்.

## "உமை தக்கன் மகளாய் வருதல்"

திருக்கயிலாயத்திற் சோதிமயமாகிய பரமேஸ்வரன் கொலுவிருக்குஞ்சமயத்திற் பார்வதி தேவியானவள் பக்கத்தில் நின்றெழுந்து ஆதிதேவனைத் தொழுது கர்த்தனே! உமது நிச்சய ஞானத்தைப் போதிக்க வேணுமென்று வினவப் பரமன் திருவாய்மலருவதாயினர். உருவம் குணம் செய்கை யின்றி எங்கும் நிறைந்த சிவமானது நால்வகைத்தோற்றதாலான எழுவகைப்பிறப்பின் ஜீவபேதத்தினது விடையங்களை மாயை அறிவைக்கொண்டு ஊட்டுவிப்பதாகவும், சொருபஞான மறைப்பைத் தமது சத்திமூலம் கருணைசெய்து தெளிவிப்பதாகவும், இவைகளுக்குக் காரணமாய் அருவுருவத்தைத் தாங்கியிருப்பதாகவும், வேதாகமமூலமாக அதிகாரிகள் பிரயோசனத்தையடைய அருளிச் சதாசிவவுருவாய்த் தத்துவங்களைக் கடந்து நிற்பதாகவும், தமதருளாற் பிரணவமுதிக்கத் திரிமூர்த்தி சொருபங்களாய் முத்தொழில் நடாத்

தும் அரியசெயல்களனைத்தையும் பரமேஸ்வரன் தெளிவாக உமைக்கு அருளிச்செய்தனர். அதைக்கேட்ட சுந்தரியானவள் களித்தவளாய்த் தேவரீர் அருள் எனது உருவென்பதை உண்மையாகக் கண்டனன். ஆகையால் யாவும் என்னிடத்தில் தோன்றின வென்று மகிழ்ந்த போது, கர்த்தன், பெண்ணே! உன்புகழை நமது சந்நிதானத்திற் பெருமையாக வியந்து கூறினுய்! இப்போது நாம் உயிர்கள் தோறும் உலவி அவைகள் தெளிவு பெறச் செய்வதினின்றும் நீங்கியிருந்து உனது உயிரும் உணர்ச்சி பெருததனைக் காட்டுவோமெனக் கர்த்தன் தமது அருள்திறத்தினை நடத்தாதிருந்தனர். அப்போது அள வற்ற வுயிர்த்தொகை யனைத்துஞ் சடமாய் ஓவியம்போல் உணர்வ ற்று மாய்ந்து போயின. இதனைப்பார்ப்பதியார் கண்டு நடுங்கிப் பர மனைச் சேவித்து அடியாளுடைய பிழையினைப் பொருத்தாள வேண்டு மென வேண்டினள். கர்த்தன் மனமிரங்கித் தமது அருளைப்பெற்ற உருத்திரகோடிகளுக்கு உணர்வுண்டாக்க, அவர்கள் படைப்புமல்குவ தாகத் திருவிடைமருதூரிற் பரமசிவத்தை விதிப்படிக்கு வழிபட, அவர்கள் கோரிக்கைப்படிக்குச் சகல பிரபஞ்சங்களும் ஈசுரன் அரு ளால் முன்போல் நிலைபெற்று விளங்குவதாயின.

அத்தருவாயில், உருத்திரகணங்கள் கர்த்தனைச் சேவித்து அடி யோங்கள் பூசித்தவாறே இரவில் தினந்தோறும் யாராயினும் அருச் சிப்பாராயின் மாசிமாதப் பூர்வபட்சத்துச் சதுர்தசியில் விளங்கும் சிவராத்திரிப் புண்ணியகாலப் பலனைத்தந்தருள வேண்டுமெனத் துதி க்கப் பரமன் அவ்வாறே அவர்களுக்குக் கடாக்ஷித்துக் கயிலைக்கெழுந் தருளினர். பிரமனுதி தேவர்கள் கயிலையங்கிரியிற் சேர்ந்து பரமனைத் தொழுதுதேவரீர் அனுக்கிரஹமில்லாது அறிவழிந்து நெடுங்காலம் சடமாய்ப் பவத்தில் ஆழ்ந்தோம். அதற்கு நிவாரணங் கட்டளையிட வேண்டுமென வேண்டச் சிவபிரான் அந்தப் பாதகம் உமையவளைச் சேரும் எனக்கட்டளையிட, விண்டுவாதியர் மகிழ்ந்து தங்கள் பதவி களிற் சேர்ந்திருந்தனர். அக்காலையிற் பராசத்தியார், சிவபிரானைத் தொழுது சிவராசிகளுக்கடுத்த வினைகள்என்னைச் சேருங்காரணத்தை அருளவேண்டுமெனப் பிரார்த்திக்க, பரமன், நீஉன்னைப் புகழ்ந்த யேதுவினுல் யாம் விகற்பித்து உயிர்களிடத்து உலவாது நீங்கினம். அவை உணர்வற்றுப் பின் நமது அனுக்கிரஹத்தா லெழுந்தன. ஆத

லால், அப்பாதகம் உன்னை அணுகியது. மேலும் உன்னையல்லது அத்தனை பிராணிகள் அதனைத்தாங்க வறியுமோவென்று, ஆதியில் தக்கனுக்கு அளித்தவர பாலனத்தை நிறைவேற்றக் கருதிச் சொல்லியதைக்கேட்டுப் பார்ப்பதியார் நடுங்கி அறிவில்லாதவள் பிழையினை மன்னித்து அப்பாதகம் நீங்குமாறு போதிக்கவேண்டுமெனப் போற்றக் கர்த்தன் இரக்க முற்றருளுவார். நீகாளிந்திமடுவிற் பிரணவவடிவாகிய வலம் புரிச்சங்கின் உருவமாய்த் தவஞ்செய்பக்கடவை. சிலநாளில் தக்கன் அவ்விடம் வந்து உன்னையெடுக்கக் குழந்தையாகுவை அவன் மகிழ்ந்து தன்தேவியிடம் உன்னை யெடுத்துக்கொடுக்க நீவளர்ந்து அஞ்சாவதாண்டு அடைந்து அறிவுதோன்றி நம்மைக்குறித்துத் தவஞ்செய்வை. அப்போது நாம் வந்து உன்னை மணஞ்செய்து இங்கெழுந்தருளுவோமென்றருள, உமைசம்மதித்துக் காளிந்திமடுக்கரையில் வலம் புரிவடிவாய்த் தவஞ்செய்திருந்தனள்.

யமுனைக்கு அடுத்திருக்கும் காளிந்திமடுவில் புரசனங்கள் அனைவரும் மாசி மகஸ்நானத்திற்குச் செல்வதைத் தக்கன் அறிந்து நல்வினைப்பலனால் தானுந்தன் தேவியுடன் சென்று மடுவில் மூழ்கிவரும்போது, பராபரையானவள் தாமரைமலரிற் சங்கு உருப்பெற்றிருப்பதைக் கண்டுகளித்து அவ்வன்னையைத்தக்கன் கரத்திலேந்திப் பார்வதியாரே சிவபிரான் அனுக்கிரஹித்திருந்தபடி நமக்குப் புத்திரியானளெனத் தெளிந்து தன்தேவியினது கரங்களில் உலகமாதாவைக் கொடுக்க, அவள்தேகம் பூரித்து வாங்கித்தன் கொங்கைகளிற்சுரந்திழியும்பாலை அக்குழந்தைக்குஊட்டி மகிழ்ந்தாள். தக்கன் தனது தேவியுடன் தன் அரண்மனை சேர்ந்து முன்போல் அரசுசெலுத்தி யிருந்தான்.

## "உமை தவம்புரிதல்"

வேதவல்லி யானவள், பராபரையைத்தன் பெண்ணாகப் பாவித்துச் சகல சீருடன் போஷித்து வரும்போது, அம்மனுக்கு அஞ்சாவது ஆண்டுவந்துற்றது. அப்போது, லோகமாதா வானவள், தாய்தந்தையரை நோக்கி, நான் சிவனைச்சேரத் தவஞ்செய்யத் தக்கசாலையை நிருமித்துத் தரவேண்டுமென, அவர்கள் இந்த அற்புதவம்மையின் செயல்களை அறிந்தவர்களாய் அதற்கிணங்கித் தமதரண் மனைக்கு

அருகிலொரு கன்னிகாமாட மொன்றமைத்து அதிற் பார்ப்பதியா ரைத் தவஞ்செய்யும் படிக்கு அளவிறந்த பணிவிடைத்தோழிப்பெ ண்களுடன் கூட்டியனுப்பி விப்பதானர்கள். பார்பதியார் அதில் தங்கிப்பரமசிவனைக் குறித்துப் பன்னிரண்டு வயது வரைக்கும் தவ ஞ்செய்து வந்தனர். அப்பாற், பரமசிவன், தக்கமாபுரியில் இவள்தவ ஞ்செய்திருக்கும் இடத்திற்கு வந்து அவளுடைய அனுமதியின் பேரி ற்கன்னியா மாடத்திற்குட் சென்று பார்ப்பதியாரின் வழிபாடுகளைப் பெற்று அவளை ஆசிர்வதித்து நான் உன்னைத் திருமணஞ் செய்து கொள்ள வந்தேனென்றார். இதனைத்தேவியார் கேட்டவுடன் தமது இருசெவிகளிலும் கரங்களை வைத்து மூடிச்சிவநாமங்களை யுச்சரித்து லோகநாயகனைக் கடிமணஞ்செய்யக் கருதித்தவஞ் செய்யும் என்னை க்குறித்து நீர் இவ்வார்த்தை சொல்லலாகுமோ! சீக்கிரமாக இவ்வி டம் விட்டு அப்பாற்போம்! என்று சீறிச்சொன்னாள். கபடப்பிராம ணர் நகைத்துப் பரமசிவன் உன்னை மணஞ்செய்வது அரிது! அரிது! என் வீணுக்த்தவஞ்செய்து மெலிந்து போகின்றாய்? என்றதைக் கேட்டுத் தேவியார், கர்த்தன்காட்சி கொடாமற் போவாராயின் வலி திற் பிராணனை விட நிச்சயித்திருக்கின்றேன், இது சத்தியமாகும், நீர் பித்தனுநலாற் பாதக வாக்கியங்களைப் பேசுகின்றீர், புறம்பிற் போம்! போம்! என்று கோபித்துச் சொல்லி, விரைந்து சென்று பக்கத்திலோரிடத்தி லிருந்தாள். பரமசிவன், அம்மனுடைய குணங் களுக்கு மகிழ்ந்து பராபரைக்கு மட்டும் தமது கோலத்தைக் காட்டின னர். அச்சேவையைக் கண்ட பார்ப்பதியார், நடுநடுங்கி விழிக ளில் ஆனந்தவாரி பெருகப்பரமசிவன் பாதாரவிந்தங்களிற் சேவித்து, அடியாள் அறியாது செய்தகுற்றத்தைப் பொறுத்தாள வேண்டுமெ னப் பிரார்த்தித்தனள். பரமசிவன், தேவியைப் பயப்படவேண்டா மென்று ஆதரிக்க, அம்மை, பரமனை விழியிமையாது பார்த்து மனங்கு ழைந்துருகி நிற்பதனைத் தோழியர் பார்த்துப் பிராமணன் மாயா வாதி போற் காண்கிறதென்று தக்கனிடம் ஓடி அதைத்தெரிவிக்க அவன் பரமசிவன் எழுந்தருளினுரென்று ஆனந்தக் கூத்தாடி என் புத்திரியை இனி லோகநாயகனுக்கு மணஞ்செய்து கொடுப்பேனென நிச்சயங்கொண்டான்

## "திருமணம்"

அதன்பின்பு பரமசிவனுக்கும் தன் பெண்ணுக்குந் திருமணஞ் செய்ய அன்றையத்தினமே நாள்பொருத்தமாயிருக்கக் கண்டு தக்கன் சந்தோஷித்து மகோற்சவத்திற்குத் தேவரிஷிகளானவர்களைத் தூதுவர்மூலம் சீக்கிரந் தருவிப்பதானான். தனது பட்டணத்தையும் அரண்மனையையும் தேவலோகமும் நாணும்படிக்கு முன்னிலும் அதிகமாக அலங்கரிக்கக் கட்டளையிட்டுத் தன்புத்திரி தவஞ்செய்யுஞ் சாலையிற் பரமசிவனைப் போய்த் தெரிசித்துக் கரங்களைக் கூப்பித்தேவாதி தேவா! அடியேனுடைய புத்திரியைப் பாரியாகத் தத்தஞ்செய்துகொடுக்கப் பெற்றுப் போகவேண்டுமெனப் பிரார்த்தித்துக் கொண்டான். பரமசிவன், கிருபையாய் எழுந்தருளித் தக்கன் மாளிகையுட் பிரவேசித்துக் கல்யாணமண்டபத்திற் பிரமனாதியர் போற்றச் சிம்மாசனத்தி லெழுந்தருளி யிருந்தனர். அக்காலத்திற் பார்ப்பதியாரை அலங்கரித்துத் தேவகன்னியர்சூழ இலக்குமியும் சரஸ்வதியும் பரமேஸ்வரனிடப்பாகத்திற் சேர்த்தார்கள். சகலவாத்தியங்களும் மங்கல வாழ்த்துக்களும் ஓங்கப் பரமேஸ்வரன் திருக்கரத்திற் பார்ப்பதியாருடைய கரகமலங்களைத் தக்கன் சேர்த்துத் தேவாதிதேவனே! இக்கன்னிகையைத் தேவரீருக்குப் பாரியாகக்கொடுத்தேன். நீங்கள் செல்வமாக வாழ்ந்திருப்பீர்களென்று, தன்பத்தினி சலம்வார்க்கச் சகலதேவர்களுங் கொண்டாடக் கன்னிகா தானஞ்செய்தான். அச்சுபத்தினை யாவருந்தெரிசித்துக் கொண்டாடி யிருக்குஞ் சமயத்திற் காரணகர்த்தன் சடுதியில் மின்னலையொத்து மறைந்தனர். உமையவள், பக்கத்தில் தமது நாயகனைக்காணமல் உற்சாகம் நீங்கி அக்கினியிற் பட்டதங்கம் போலத்தயங்கி யிருக்கும்போது யாவரும் அம்மையைத் தேற்றியிருந்தனர். அதனைந்தக்கன் கண்டு வடவையைப்போற் கோபித்து யாவருங் கலங்கத் தேவாதிதேவனை இழிவாகப்பேசி மகாவிஷ்ணு வாதியர்க்குச் செலவுகொடுத்தனுப்பிப் பரமசிவன் செய்த காரியத்தை யெண்ணியெண்ணி மனதில் வன்மத்துடன் அரசுசெலுத்தி யிருந்தான். இப்பால் பராபரை முன்போலத் தவஞ்செய்திருப்பதாயினள். அக்காலத்திற் சிவபிரான் ஒருசுபவேளையில் தவவேடம் பூண்டவராய் உமையவள் தவச்சாலைக்குவர, எமது இறைவி அவரைக்கண்டவுடன் தமது கர்த்தனுக்கு அன்பரென அவரை விசுவாசத்துடன் எதிர்செ

ன்று சேவித்து உபசரித்தனள், கர்த்தன் அவள் அன்பிற் கிரங்கிப் பராசக்தி நீங்கிய பாகராய் ரிஷபவாகனத்தில் தமது சுயரூபத்துடன் தோன்றி லோகநாயகியாரைத் தமது திருக்கரத்தை நீட்டி யெடுத்து விடையின் மீது தமது வாமபாகத்தில் இருத்திக்கணநாதர் சூழத் தமது திருக்கயிலைக்கு எழுந்தருளினர். இக்காரணத்தைக் கண்ட தோழியர் தக்கனிடந்தெரிவிக்க, அவன் ஆறிய அக்கினியினிடத்தில் நெய்யை ஊற்றியது போலக்கோபித்துப் பரமசிவனைப் பல பல தூஷணங்கள் பேசிச் சிவனை நினையாமலும் மதியாமலும் ஐஸ்வரிய கர்வத்திற் பட்டு இறுமாந்திருந்தனன்.

## "தக்கன் கயிலை போய் மீளல்"

அதுசமயத்தில், விஷ்ணுவாதியர், தக்கன், பரமசிவத்தை மதியாமையினாலே சிவகடாக்ஷத்தாற் பெற்ற மகதயிஸ்வரியத்தை அனுபவியாமல் நாசமடைவானெனத் தீர்மானித்துப் பின்னுந் தாங்கள் தக்கனுக்குப் பயந்து பரமசிவனைப் போற்றும விருக்கச் சம்பவிக்கு மென்றுஅதற்கொரு சூழ்ச்சியைத் தீர்மானித்துக் கொண்டு, தேவர்கள், தக்கன் முன்வந்து சேவித்து நிற்கின்ற காலத்தில் அவர்களிற் பிதாமகன் தன்குமாரனைப் பார்த்து ஏ! பிள்ளாய்!உன்புத்திரியையும் மருமகனாகிய பரமசிவனையும் நீ நினையாமலும் பாராமலும்இருக்கலாமோ? குற்றம்பார்க்கிற் சுற்றமேது? கோபமுள்ள விடத்திற்குணமும் உண்டாயிருக்குமென்பதனை நீயோசித்து அபிரத்தை விட்டுக்கயிலாசபதியை வழிபடுவாயாகில் மேலான கீர்த்தியைப் பெறுவாயென்றனன். தக்கன் அதற்குடன்பட்டுப் பரிசனங்கள் சூழ இரதாரூடனாய்த் திருக்கயிலையைச் சேர்ந்து ஆலயத்திற் பிரவேசிக்க முயன்ற சமயத்தில் அவ்விடத்திற் காவல்கொண்டிருந்த பூதகணங்கள், நீசிவத்துரோகி! உள்ளேசெல்ல லாகாது! அதற்காக இங்கேகாத்திரு! இல்லாவிட்டால் திரும்பிப் போகலாமென்றதின் பேரில் தக்கன் வெட்கிக் கோபத்துடன் திரும்பித் தன் பதிக்குவந்து தேவர்களை வருவித்து, ஓ! தேவர்களே! என்னைமதியாத பித்தனையும் அவன் பாகத்தமர்ந்த வளையும் இத்தினமுதல் நீங்கள் துதிக்கவும்சேவிக்கவும் வேண்டுவதில்லை. இக்கட்டளையை மறுப்பீராயின் உடனே உங்கள் பிராணனை வாங்கிப் போடுவேனென்று கோபித்துச் சொல்லத் தேவர்கள் தக்கனைவணங்கி

உமது உத்தரவுக்குப் பிசகுண்டோ! அவ்வாறே செய்யக்கடவோம் என்று விடை பெற்றுத் தங்கள் பதவிகளிற் போய்ச்சேர்ந்தார்கள்.

"பிரமன்யாகஞ் செய்தல்"

இவ்வாறு அளவற்ற காலஞ்சென்றபிற்பாடு பிரமதேவன் இஷ்டசித்திகளைத் தரவல்ல யாகமொன்று செய்வதாகக் கருத்துக்கொண்டு கயிலாசபதியினிடஞ்சென்றுசுவாமீ! அடியேன் ஒருயாகத்தை நடாத்த நினைந்தேன். தேவரீர் எழுந்தருளி அதைப்பாதுகாத்து ரக்ஷிக்க வேண்டுமெனப் பிரார்த்தித்துக்கொண்டான். பசுபதியானவர், நமது உருவாகிய நந்திவருவானென்று அனுக்கிரஹித்தனர். பிதாமகன் கயிலையை நீங்கித் தக்கமாபுரிக்கு வந்துதன்பிள்ளையைக் கண்டு நான்எத்தனப்பட்டிருக்கும் வேள்விக்கு நீ உன்பந்துவர்க்கங்களுடன் வந்து நடப்பிக்க வேண்டுமென்று சொல்ல, தக்கனும் அதற்கிணங்கி யிருந்தனன். பிரமன் மனைவியைச்சேர்ந்து க்ஷத்திரயாகத்தைத் தொடங்கினன். இச்சமாசாரத்தை விஷ்ணுவாதியர் தெரிந்து தக்கனுடனும் யாகத்துக்கு வந்துசேர்ந்தனர். பிரமன் அவர்களுக்கு உபசரணை செய்துஅவர்களை ஆசனங்களில் வீற்றிருக்கச் செய்து யாகச்சடங்குகளைத் தொடங்கினன். அப்போது யாகத்தின் அவிப்பாகத்தைப் பெற்றுவரும்படிக்குப் பரமேஸ்வரனால்அனுப்பப்பட்ட நந்திதேவர் அளவற்ற கணங்கள் சூழ வெழுந்தருளுவதாயினர். அதனைக்கண்ட பிரமன் திக்கென்றெழுந்து நந்திதேவரையெதிற்கொண்டு சேவித்தழைத்து வந்து ஒருதிவ்ய பீடத்திலிருக்கச் செய்தனர். தக்கன்விழிகளிற் கனற்பொறி சிதறப்பார்த்துச் சுடலையிற் கூத்தாடுஞ்சிவனுக்கு அடிமைகளான நந்தியையும் மற்றக்கணங்களையும் இங்கு வரும்படிக்குச் சொன்னவர்கள் யார்! என்றுபலமொழிகள் பேசித் தன் போதவுணர்வினால் உள்ளதை யுணர்ந்து பிரமனைச்சீறி நீ இதனைச்செய்தது தகுமோ! பிதாவானதாற் பிழைத்தாய்! அல்லது உன்தலையை வெட்டியிருப்பேன்! எலும்பு சிரம் சர்ப்பம் இவைகளையணிந்து சுடலைச்சாம்பலைப் பூசிச்சுடுகாடே யிடமாகத்திரியும் பித்தன், வேதவிதிப்படிக்குப் பவித்திரமாக நடத்தும் யாகத்தில் அவிபெறத்தகுமோ! இனி நாராயணனையே பரமாகக்கொண்டு அவருக்கு அக்கிர பூசைசெய்து முதல் அவிப்பாகத்தைக் கொடுத்து மற்றவர்களுக்கும் வரன்முறையாக நடத்தக்

கடவாயென்று சொல்லியதனை நந்திதேவர் கேட்டுக் கண்களில் அக்கினிப் பொறிபறக்கத் தக்கனைப்பார்த்து உமாபரமேஸ்வரரை யிகழ்ந்த உன்வாயைத் துளைத்து நாவையரிந்து விடுவேன்! ஆனால் கர்த்தன் அனுமதி யில்லாததினால் மன்னித்தேன்! இனி இகழ்வை யாயின் உன்சிரத்தைவெட்டித் தள்ளுவேன்! எனச்சொல்லிப்பின் பரமேஸ்வரனை நீக்கியாகஞ்செய்கின்றவன் சிரம் அறக்கடவது! உனதுசெல்வப் பெருக்கனைத்துஞ் சிலதினத்தில் அழிந்து போகக்கடவது! வசைபேசிய உன்தலை அற்று ஆட்டுத்தலை பெறக்கடவாய்! உதாசனிப்பதை மாறுமல் விரும்பிக்கேட்ட இந்தேவர்கள் ஒருதரம் இறந்தும் பிறந்தும் பின்பு அளவற்றகாலம் சூரனென்னும் அசுரனால் வாதைப்பட்டு அழுந்தக்கடவர்! எனக் கொடிய சாபமிட்டுத் தம் கணங்கள் சூழக் கயிலைக்குப் போய் இச்சம்பவங்களைக் கர்த்தனுக்கு விண்ணப்பித்திருந்தனர். நந்திதேவர் போனபின் விஷ்ணுவாதிதேவர்கள் விபரீதம் விளைந்ததென்று வருந்தினார்கள். பிரமன், தான்தொடுத்த யாகத்தை முடிக்கவும் அஞ்சி நிறுத்திவிட்டான். இவைகளைக் கண்ட தக்கன் உள்ளேபயம் வருந்த வெளிக்கு ஸந்தோஷித்தவனாயெழுந்து தன் நகரத்தையடைந்தான், மற்றத்தேவர்கள் மனவாட்டத்துடன் தங்கள் தங்கள் பதங்களிற் சேர்ந்திருந்தார்கள்.

### "ததீசி முனிவர் தக்கனுக்குப் புத்தி கூறல்"

முற்கூறிய பிரமயாகம் சிதைந்தநாள் முதல் யாவரும் வேள்வி தொடங்கப் பயந்திருந்தார்கள். அக்காலத்தில் தக்கன் நான் வேள்வி செய்கிறே னென்று மயனைக்கொண்டு சகலவளங்களுடன் பெரிய யாகசாலை நிருமிக்கச்செய்து அரக்காகப் பரமசிவனைத் தவிரமற்றச் சகலரையும் தூதுவர் மூலந்தருவித்து வெகு சம்பிரமத்துடன் வேள்வி தொடங்குவதாயினன், தேவராதியர் யாவரும் இந்தயாகத்தில் என்னவிளையுமோ வென்று பயந்து வருந்தியிருந்தார்கள். தக்கன் தூதுவரை நோக்கி நீங்கள் இந்தவேள்வி விஷயத்தை அறிக்கையிடப்போனவிடங்களில் யாவராயினுந் தடைசொன்ன துண்டோ என்று வினவினன். சாரணர்கள், சுவாமி! அகஸ்தியன் சனகன் அத்திரி வசிஷ்டன் பிருகு ததீசி துருவாசன் பாரசன் இவர்கள் உமதுயாகத்தை

இகழ்ந்து சம்மதமில்லாமற் பேசினார்கள் என்றார்கள், தக்கன் அதைக்கேட்டுக் கோபநகை செய்திருந்தான்.

இவ்விதமாகச் சகலரும் நெருங்கியிருக்கின்றசமயத்திற் பரமேஸ்வரன் மீது சமர்க்கெழுந்த விஷ்ணுவை வென்ற ததீசி மகாரிஷியானவர்மனம் பொறுமல் அளவற்ற சிஷர்கள் சூழ யாக சாலையிற் பிரவேசித்து வருவதனைத் தக்கன் கண்டு நமது ஆணைக்கஞ்சி இவன் வந்தானென்று அவர்மீதிருந்த கோபந்தணிந்து வாரும்! வாரும்! என்று அவரைத்தம் அருகிலிருந்த ஆசனத்தில் இருக்கச்செய்தவுடன், ரிஷியானவர் தக்கனைப் பார்த்து என்னை வரவழைத்த காரணமென்ன? இவ்விடத்தில் நீ நடத்துங் கிரியையாது? உன் எண்ணம்யாது? என்றுவினவ, தக்கன் சிவன் என்பெண்ணைக்கல்யாணஞ்செய்து என்மனம் வருந்தப் பெண்டியக்கமறைந்து போனது தெரியுமே? பின்என்னை அறியாமல் அக்கன்னிகையைக்கூட்டிக்கொண்டுபோய்விட்டான். இவைகளைநான் பாராட்டாமல் அவர்களைப் பார்த்துவரலா மென்று கயிலைக்குப் போனேன். அப்போது மரியாதை யில்லாமல் தயைதாக்ஷிணிய மற்று வாயிற் காக்கும் பூதரால் என்னைத் தடைசெய்வித்தான். அதன்பின் என்பிதா ஒருயாகஞ்செய்யத் தொடங்கினர். அதிற் சிவனுக்கு அவிகொடுக்காமல் தடுத்தேன். அப்போது அவ்விடத்தில் வந்திருந்த நந்திகோபித்துச் சபித்துப்போனான். அதற்குப் பயந்து தொடங்கிய யாகத்தை எனது பிதா நிறுத்திவிட்டார். ஆதலாற் சிவனுக்கு அவியில்லாமல் நானிப்போது இந்தயாகத்தைத் தொடங்கி முடிக்க நினைத்தேன், விஷ்ணுவாதியர் இதோ வந்திருக்கின்றார்கள். இதுதான் சங்கதியென்று சொன்னவுடன் ரிஷிபுங்கவர், பாவம்மேலிடுங்காலமாயிற்று. இக்கொடியவன் செய்கையும் கர்த்தன் செயலும் ஒத்திருக்கின்றதென வெண்ணி நகைத்தனர். தக்கன் ரிஷியை நோக்கிக் கோபித்து நீ சிவனுக்கு அன்பனோ? என்றனன். ரிஷிசொல்வார்:—உருத்திரமூர்த்தியை ஆதியென்றறியாதவனே! ஆதியந்தமில்லாத எமது கடவுளுக்கு ரூபநாமக்கிரியைகளில்லை. இதனைவேதங்கள் சொல்லும். அஞ்ஞான விருளில் மூழ்கிய சீவராசிகள் வினையை நீக்கக் கிருபையுற்று முக்குணங்களையும் வகித்து ஆத்துமாக்களுக்குப் பழைய உணர்வை விளக்கிப் பிரமனாதியரைச் சிருஷ்டித்து அவர்களுக் குரியபணிவிடைகளைக் கட்டளையிட்டுச் சங்காரகிருத்தியத்தைத் தாமேவகித்த

னர். அதேதெனென்றால், கணக்கிறந்த சிவராசிகளை உண்டு பண்ணவ ல்ல பிதாவாகியதமக்கல்லது மற்றவர்களுக்குஅத்தொழில் முடியாது. அவரை ஐந்தொழில் முதல்வனென்று வேதங்கள் சொல்வது உனக் குத்தெரியாதோ? அத்தகைய பரமசிவ கடாக்ஷத்தால் நீ இச்செல்வ த்தைப் பெற்றும் உனக்கு நாசமடையக் காலம் வந்தமையினால் அத னைமறந்தாய். நீயும்உன் சுற்றத்தாரும் பிழைக்கவேண்டு மானாற் பர மேஸ்வரனுக்கு முதல் அவியைத்தந்து யாகத்தை முடித்துக் கீர்த்தி யடையக்கடவா யென்று பலவாகச்சொல்லினர். அவைகளைக் கேட்ட தக்கன், நீ சொல்லிய மேலான பரம், மயானத்தின் எலும்பையும் சிரங்களையும் சாம்பலையும் அணியுமோ? பிரேதத்தை யேந்தித்திரியு மோ? வராகத்தின் கோடும் ஆமை ஓடும் தரிக்குமோ? உலகம் அழிய உயிர்களைச் சங்கரிக்குமோ? புலித்தோல் உடுக்குமோ? யானைத்தோ லைப் போர்க்குமோ? கொடிய அனல் மான் சூலம் ஏந்திப்பிச்சைக் கு எங்கும் உழலுமோ? பேயனைப்போல் பேய்கள் சூழச்சுடலையில் ஆடுமோ? பூதங்களைப் படையாகக் கொண்டு உலவுமோ? காளமா நாகங்களைப் பூஷணமாகச் சூடுமோ? கருவெண்தலையைச் சிரத்திலே தாங்குமோ? வேற்றுருக் கொள்ளுமோ? மாட்டின்மீ தேறுமோ? ஆலத்தை உண்ணுமோ? ஒருத்தியைச் சடையிலும் மற்றொருத்தி யை இடையிலும் இருத்துமோ? பிள்ளைகளையும் பெறுமோ? தாமத குணத்தைப் படைக்குமோ? இன்னம் அளவற்ற துர்க்குணங்களைக் கொண்ட உங்கள் ஈசன் பரமாய் எப்படியிருப்பன்? அவனுக்கு இக் தச்சிறந்த யாகத்தில் அவிப்பாகம் தரமாட்டேன். இதனை உறுதியா கக்கொள்ளக் கடவையென அஞ்சாமல் தக்கன் சொல்லியகாலத்து ரி ஷிஸ்ரேஷ்டர் சிற்றநகைகொண்டு ஓ! மூடனே! நீயாதும் அறியாதவனை ப்போல அயிஸ்வரியக் கர்வத்தினால் மங்கினாய்!

பரமசிவன் சருவசங்காரங்கள் தோறும் மாயன் எலும்புகளையும் பிரமன் சிரங்களையும் கேசங்களையும் உபவீதமாக அணிவர். அவர்கள் தேகங்களைச் சூலத்திலேந்தித் தமது நெற்றிவிழித்தீயில் தகித்து அந்நீற்றைப் பூதியாக அணிவர். மாதவன், பூமியைச் சுருட்டிப்பாதல த்தில் மறைத்த இரணியாக்ஷன் என்னும் அசுரனை வராகவுருவமெடு த்துத் தனது கூரிய தந்தங்களினாற் பாய்ந்து கொன்று பூமியை முன் போல்விளங்கச்செய்து அச்செய்கையிற் கர்வித்துத் தானே பரமெ

னமதித்துப் பூமியைத் திரும்பவும் தனது கோட்டினாலே தூக்கிப் போட்டு உபத்திரவம் விளைத்த காலையிற் பரமேஸ்வரன் அந்தக்கோடு களைப் பறித்துத்தமது திருமார்பிற் பிறைபோ லணிந்து கொள்வதா யினர்.

முன் திருப்பாற்கடல் கடையும்போது, விஷ்ணு, ஆமைரூபமெடு த்து அகந்தைகொண்டுசிரமானது, வானத்தை முட்டவோங்கிப்பாய் ந்ததிற் பூமிதத்தளிக்க நேரிட்டது. அப்போதுசிவபிரான் அந்தஆமை யின் ஓட்டைப்பறித்துப் பன்றிக்கொம்புகளுடன் தரித்துக்கொண்ட னர். இனிச்சிவபிரான் ஐயமேற்றதைச் சொல்லுகின்றோம்.

ஆதியில் தாருகாவனத்து ரிஷிகள் பரமசிவனிடத்திற் பிரயோச னமில்லையென்றும், யாகங்கள் செய்தலேமோக்ஷம் அடைதற்குக்கார ணமென்றும் நினைத்து, அவ்வாறே நடத்திவருகின்ற போது, இவர் கள் செய்கைகளைக் கயிலாசபதியறிந்து விஷ்ணுவை வரநினைந்தனர். விஷ்ணு, அந்நிமிஷத்திற் பரமன் முன்வந்துசேவித்து நிற்கச் சிவபிரா ன் தமது எண்ணத்தை மாதவற்குக் குறித்துக்காட்டி நீ பஞ்சசத்தி களிலொன்றாகிய உருவைக் கொள்ளென்று திருவாய் மலர்ந்தனர். அவ்வாறே மாயன் மோகினி யுருவெடுக்கக் கண்டு பரமசிவனும் சிற ந்த பிச்சாடனவேடங்கொண்டு இருவருந் தாருகாவனத்தின் ரிஷிக ளையும் அவர்கள் பத்தினிகளையும் நிலைகுலைக்கும்படிக்குச் சென்றார் கள். இவ்விருவருடைய வனப்புகளை அவ்வனத்தின் ஸ்திரீ புருஷர்கள் கண்டு காமவெறி தலைக்கேற வுழன்று கடைசியில் ரிஷிகள் இது கயி லாசபதியின் செய்கையென அறிந்து பரமேஸ்வரனைக் கொல்ல வெத் தனித்து அதற்கடுத்த அபிசார வேள்வியைத் தொடங்கினார்கள். அதினின்றும் பார்க்கக்கோரமாகிய புலியொன்று கிளம்பி அவர்கள் ஏவலின் பேரிற் பரமசிவத்தை யெதிர்த்துவர, அவர் அதைப்பற்றி யுரித்து அதின் தோலை உடையாகக் கொண்டனர், ரிஷிகள் பொங் கிச் சூலமொன்றை உண்டாக்கி விட்டனர். எமது கர்த்தன் அதைப் பற்றித் தம் கரத்திலேந்தினர். அவர்கள் மான் ஒன்றைச் சிருஷ்டித் தனுப்பினர். அதனைப் பரமன் தமது இடக்கரத்தில் தாங்கினர். பின் அளவற்ற காளமா நாகங்களை அவர்கள் சிருஷ்டித்து அனுப்ப, அவை களைப் பரமன் தமக்கு ஆபரணங்களாக அணிந்தனர். முனிவர் அள

வற்ற பூதவெள்ளங்களை யேவினர்கள். அவைகளைப் பசுபதி தமக்குச் சேனைகளாகிக் கொண்டனர். தவர்கள் தம் வேள்வியினின்றும் வெண்தலையொன்றைச் சிருஷ்டித் தனுப்பினர். அதனைக்காள கண்டர் தமது சிரத்திலணிந்து கொண்டனர். ரிஷிகள் சிறித் தாங்கள் கற்ற அதர்வண மந்திரங்கள் அனைத்தையும் ஒருவகைப்பட நிருமிதது எம தையனை நாசஞ்செய்யப் போக்கினர்கள். அதனைச் சிவனார், நமது செவிக்கின்பமாய் இசைபாடி யிருப்பாயெனத் தமதுகரத்திற் கொண்டனர். தவத்தர் கோபித்து முயலகனென்னும் அரக்கனை உண்டு பண்ணி வேள்வித்தியையுங் கூட்டி யனுப்பினர். லோகநாயகன் தமது திருக்கரத்தினை நீட்டி அவ்வேள் வித்தியை மழுவாக யேந்தியும் முயலகனைத் தள்ளிப்பாதங்களில் மிதித்தும் நின்றனர். இச்செய்கைகளை ரிஷிகள் அறிந்துபொறாமையினாற்சங்கரா! நீ நாசமடையக்கடவாய்! என்று அளவற்ற சாபங்களை யிட்டனர். அவைகள் பரமனிடத்தில் நெருங்காமற் பறந்தன. அப்பால் ரிஷிகள் சோபமுற்று நீங்காத பாவமும் பழியும் பூண்டு பூமிக்குச் சுமையாய்ப் பிணம்போல்நின்றார்கள். பரமேஸ்வரன் அயர்ந்த ரிஷிகளிடத்தில் அன்பாய் அவர்கள் மயக்கத்தைத்தவிர்க்க, அவர்கள் நல்லுணர்வுபெற்று மனங்குழைந்தவராய்க் கரங்களைக் கூப்பிக் கர்த்தனே! அறிவில்லாமற்செய்த வெங்கள் கொடுமைகளைப் பொறுத்தாட்கொள்ள வேண்டுமென்று பரமன்பாத கமலங்களிற் சேவித்துப் போற்றத் தேவதேவன், நமது பஞ்சாக்ஷரத்தை நீங்கள் ஜெபித்துந் தவத்தைச் செய்விரெனக் கட்டளையிட்டுப் பின் விஷ்ணுவுக்குச் செலவு கொடுத்தனுப்பித் தமது திருக்கயிலைக் கெழுந்தருளினர்.

பூர்வத்திற் கபாசூரன் என்னு மோரசுரன் பிரமனை நோக்கித் தவஞ்செய்து பெற்ற வர முயற்சியினால் தேவர்களை வாட்டிப்பின் பூலோகத்திலும் வந்து கொடுமைகளை விளைத்தனன். அப்போது மானிடர் காசித்தலத்தையுற்று விஸ்வநாதரிடம் அடைக்கலம் புகுவதானார்கள். அப்போது அக்கடவுள் பிரளயகால ருத்திர வடிவுகொண்டு இளம்பியானைருபியானஅந்த அவுணனைத்தமதொருபாதத்தினாலுதைத்துக் குப்புறத்தள்ளி அவன் சிரத்தை மற்றொரு பாதத்தினால் மிதித்துக்கொண்டு கூரிய நகத்தினால் அவன் பிடரியைக் கீறித் தோலை உரித்துப் போர்த்துக் கொண்டனர். அகந்தையிற் சிறந்த தக்கனே! இனிப்பிரம கபால மேந்தியதனைக் கேட்பாயாக!

முன்னொருகாலத்தில் மகாவிஷ்ணுவையும் பிரமனையும் தேவர்கள் வந்து வந்தித்து ஆதியந்தமில்லாத பிரமமாவது யாது? என்று விண்ணப்பித்துக்கொள்ளப்பிரமன் நான்தான் பிரமம் என்றனன். பக்கத்திலிருந்த திருமால், பிரமனை நோக்கி, உன்னைப்படைத்த நானே முதற் காரணனென்றான். இவ்வாறு இருவருக்குங் கலகம் நேர்ந்தபோது வேதங்களும் குடிலையும் வெவ்வேறு உருக்களைத் தாங்கிவந்து அவர்களுக்குச் சிவமேபரமெனச் சொல்லின. அவ்வாக்கியத்தையும் அலட்சியஞ்செய்து பிரமனும் மாலும் ஒருவரோடொருவர் பெரும்போர் விளைத்தனர். அப்போது சிவபெருமான் அவ்விருவருக்கும் மத்தியிற் சோதிவடிவாய் நின்றனர். அதனைக்கண்ட இருவரும் இது சிவச்செயலென்றுணரவில்லை. கர்த்தன் அச்சோதிமத்தியில் உமாபரமேஸ்வர முகூர்த்தமாய்த்தோற்ற, விஷ்ணு தெளிவடைந்து அதைப்போற்றி நின்றனன். பிரமன் அகந்தைப்பட்டு நிற்கச் சிவபெருமான் வயிரவமூர்த்தியை யுண்டுபண்ணி அவரைக்கொண்டு பிரமன் நடுச்சிரத்தைக் கிள்ளிக்கரத்திற் கொள்ளக் கட்டளை யிட்டனர். உடனே பிரமன் அகந்தை யொழிந்து தாழ்ந்தனன். இனி எமதையன் வேற்றுருவெடுத்த காரணத்தைப் பகருகின்றேன்.

முன் ஒருகாலத்தில் தேவராஜன் தான்திரிலோக சக்கிரவர்த்தியென்றும் கொடிய தயித்தியரை வென்றேமென்றும் தனக்கு நிகரில்லையென்றும் மமதையடைந்தவனாய்க் கயிலாசபதியைத் தெரிசிக்க வந்தனன், எமது கர்த்தன், பாகசாதனன் கர்வத்தைப் போக்கத் திருவுள்ளத்திற்கொண்டு பாரிடவேடந் தாங்கி ஆலயமுகப்பில் வந்துநின்றனர். மகபதி அவரைப்பார்த்து தாஷ்டீகமாக நிற்கின்ற நீ யார்? கர்த்தன் சமயமென்ன? சொல்லென்றான். அதற்குப் பரமன் மாற்றுரையாடாமல் உக்கிரமாய்ப் பார்த்து நிற்க, மகபதி அதிகக்கோபங்கொண்டு தனது வச்சிராயுதத்தை அவர்பேரில் வீசியெறிந்தனன். அப்படை பரமன்பேரிற் பட்டுத் தூளாய் வீழ்ந்தது. பின்பு, கர்த்தன் அந்த வடிவை மாற்றிக்கணத் தரசாகித்திரிபுராதிகளை யெரித்த நகை தோன்றப் பயங்கர ரூபத்துடன் நின்றனர். அதனை மகவான்கண்டு பயந்து அடியேன் அபராதத்தினைப் பொறுக்க வேண்டுமென்று சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து வேண்டிக்கொள்ளத் தயாநிதியாகிய எமது கடவுள் தமக்கு அப்போது உண்டாயிருந்த சீற்றத்தைச் சமுத்

திரத்தில் வீசி அவனிடத்திற் கிருபைசெய்து அவனுக்குப் படையும் விடையுங் கொடுத்தனுப்பினர்.

இப்பால் சமுத்திரத்தினிடத்தி லெறியப்பட்ட கோபக்கனலான து ஒரு புத்திரனுய் விளையாடி யிருப்பதனைக்கண்ட கடலரசன் காத லித்து அக்குழந்தையைப் போஷித்து வரும் நாளையில் ஒருநாள் அப் பாலன் பசியினல் வீறிட்டழ அவ்வொலியின் அதிர்ச்சியைப் பிரமன் கேட்டு அதிசயமடைந்து சமுத்திரராஜனிடம் வந்தனன். அவ்வரசன் தன் குழந்தையை ஆசிர்வதிக்கும் படிக்குப் பிரமன் மடியில் வைத்த னன். அப்பாலன் தன் கரத்தை நீட்டிப் பிரமனுடைய நான்கு தாடி களையும் பற்றி வலிக்க, அவ்வுபாதியினல் அவன் வருந்தினவனுய்க் குழந்தையை யெய்த்து மெல்லெனத் தன்னை விடுவித்துக்கொண்டு கடற்கிறைவனிடம் அப்பிள்ளையைத் திரும்பக் கொடுத்துப் போத வுணர்வைப் பெருக்கி அறிந்து ஓ! சமுத்திரராஜனே! இந்தச் சிசுவைச் சுலபமாக நினைக்கவேண்டாம். இவன் பரமசிவத்தின் சீற்றவுருவா வன். தேவர் வர முயற்சி இவனுக்குத் தேவையில்லாமல் யாவருக்கும் மேலான அரசை வகிப்பான். சிவனல் அல்லது இவன் மாளான். இவனுக்குச் சலந்தரனென்று பேரிடுவென்று தன்னிருப்பிடஞ் சென் ருன். பிற்பாடு சலந்தரன் தேவர்களை வெற்றிகொண்டு விருந்தையெ ன்னும் அசுரகன்னியை மணந்து சலந்திரபுரமென்னும் பட்டணத்திற் கொடுங்கோலரசு செலுத்தி வந்தான். அக்காலத்தில் இந்திராதி தே வர்கள் மகம்மேருவில் தனக்குப் பயந்து ஒளித்திருப்பதாக அறிந்து சலந்தரன் சலங்கொண்டு அவர்கள் மேற்படையெடுத்துவர விஷ்ணு அதை அறிந்து வந்து அவ்வசுரனுடன் போராடித் தோற்றுப் பின் வாங்கினன். தேவர்கள் வேறுகதியில்லையென்று கயிலாசபதியினிடஞ் சென்று முறையிட்டுக் கொண்டார்கள். அப்போது பரமசிவன் ஒரு விருத்தப் பிராமண வடிவங்கொண்டு சலந்தரன் முன்தோன்றி, நீ கயி லாசபதியைச் செயிக்க முடியாது தேவர்களைவிட்டுப்போய் விடென்ற னர். அசுரன்னது புஜபலங்களைச் சற்று இருந்து பாருமென்றனன். அப்போது இவ்விருத்தர் தமது பெருவிரலினல் நிலத்தில் வட்டமாகக் கீற, அது ஒரு சக்கிராயுதமா யிருந்தது. கிழவர் அசுரனை நோக்கி, சல ந்தரனே! உனது சாமார்த்தியத்தைப் பார்க்கவேணும், இந்தச் சக்கிர த்தை யெடுத்துச்சிரத்திலே தாங்கமாட்டுவையோ என்றனர். அவன்

நகைத்து விருத்தரே! எனக்கு இதனைத்தாங்குவது அரிதோ! இதோ பாருமென ஹுங்காரித்து அச்சக்கரத்தை வருந்தப்பட்டு எடுத்துத்தன் சிரத்தில் வைத்தான. அத்திகிரி உடனே சலந்தரனுடைய உடலை இருகூறாகப் பிளந்து தள்ளியது. அவனைப் பின் பற்றிவந்த சேனைகளையும் பரமேஸன் தமது நுதல் விழித்தீயினலெரித்துத் தேவர்கள் கொண்டாடத் தமது இருப்பிடஞ்சென்றனர்.

இப்பால் சலந்தனுடைய மனைவியாகிய விருந்தை யென்பவள் பேரில் ஆதியில் மயல்வைத்திருந்த விஷ்ணு இதுதருணமென்று தவவேடம் பூண்டு சலந்தரன் அரண்மனை நந்தவனத்தில் இருந்தனன். கன்னிகையானவள் தன்கணவன் பிரிவாற்றுமையினல் மனம்நொந்து பூஞ்சோலை பிரிடத்தில் வர, விஷ்ணு தமது துவாரபாலகரை யேவ அவர்கள் இரண்டு புலிகள் உருவாக அவள் எதிர்த்து சீறிப்பாய்ந்தனர். அவள் நடுங்கி ஓடி அங்குள்ள கபடச்சன்னியாசியைக் கண்டு அபயமென நெருங்கினள். அச்சந்நியாசி புலிகளை அதட்டித் துரத்திவிட்டான். அப்போது விருந்தை, பெரியவரை நோக்கிக் கயிலைபோன என் கணவன் பிழைத்திருப்பதும் இறந்ததும் நீர் ஞானதிருஷ்டியினுற் பார்த்துச் சொல்லவேண்டு மென்று பிரார்த்தித்தாள். தவசி தனது துவாரபாலகரைத் தூண்ட அவர்கள் குரங்கு ரூபிகளாய்ப் போய்ப் பிளப்புண்டு கிடந்த சலந்தரன் உடலைக்கொண்டு வந்து விருந்தைமுன் வைத்தார்கள். அதைக்கண்டு அவள்பதைபதைந்துவிழுந்து மரணமூர்ச்சையாகினள். அக்காலத்திற் சந்நியாசி தன் ஆசைதீர அவளை எடுத்துத்தன் மார்பில் அணைத்து அவளுடைய சோபத்தை மாற்றினன். விருந்தை தெளிந்து பெரியவரைப் போற்றித்தன் கணவனை உயிர் உண்டாக்கிப் புருஷப்பிச்சை தரவேண்டு மெனப் பிரார்த்தித்தனள். அந்தத்தவசி நல்லதென்று சலந்தரன் உடலைச்சேர்த்து அதில்தான் பிரவேசித்து எழ, விருந்தை ஓ! பிராணநாயகரே! வந்தீரோவென்று நமஸ்கரித்து இருவரும் தம் மாளிகையிற் சேர்ந்து சரசசல்லாபங்களுடன் வெகுகாலம் சுகித்திருக்கும்போது ஒருநாள் முகுந்தன் நித்திரை செய்கையிற் பரமசிவனது கட்டளைப்படிக்கு விஷ்ணுவினது கோலந் தோற்றியதை விருந்தை கண்டு திடுக்கிட்டு நமது பதிவிரதாதன்மைக்குப் பங்கம் வரச்செய்தானென்று கோபித்துக் கற்புடையவளாகையால் விஷ்ணுவை யிவ்வாறு சபிப்பதாயினள். புலியாகவந்தவுன்வாயிற்

காப்போர் உனக்குவயிரிகளாக அரக்கர் குலத்துதிக்கக்கடவர். நீயும்பூமியில் அரசர் குலத்திலவதரித்து என்னை வஞ்சித்தபடியே உன்பத்தினியை அவ்வசுரர் மாயைசெய்து கொண்டுபோக நீகுரங்கினங்களைச் சேர்த்துக்கொண்டுவனங்கள் முதலியவிடங்களில் அலைந்துழந்து உலகர் இகழ்ந்து பழிகூற இருக்கக்கடவை யென்று சாபமிட்டு எரியில் விழுந்து இறந்தனள். விஷ்ணு அவளிடத்துற்ற இச்சையினால் வருந்தி அவள் இறந்த சுடலைப்புழுதியில் விழுந்து புரண்டு பிரலாபித்திருந்தான். தேவர்கள் பரமசிவத்தினிடம் விண்டுவுக்கு நேர்ந்த துன்பத்தினை விண்ணப்பித்துக் கொண்டார்கள். பரமன் நகைத்து உமையவளைநோக்க, அவள் ஓர் விரையைப் பிரமனிடங் கொடுத்துக் கேசவனெதிரில் நாட்டச் செய்தனள். பிரமன் அவ்விதஞ் செய்தபோது அது துளசியாகமுளைத்து உடனே விருந்தையிலும் ரூபமுள்ள பெண்ணாக நிற்கத் தாமோதரன் அவளைக்கண்டு மோகித்துத் தனக்கு அவளைப் பாரியாகத்தன் சிரத்தில் வைத்துக்கொண்டு வைகுந்தஞ்சேர்ந்து வாழ்ந்திருந்தனன். அது முதல் திருத்துழாய் விஷ்ணுவுக்கு உவப்பாயிற்று. அப்பால் விண்டுவானவர், சலந்தரனைப் பிளந்த சக்கரத்தைப் பெறக்கருதிப் பரமசிவத்தைப் பூசித்து வருகையில் ஒருதினம் சகஸ்திர நாமார்ச்சனைக்கு ஒரு கமலங் குறைவுபடக்கண்டு தன் கண்மலரை யிடந்து சாத்திப் பூசிக்கக் கர்த்தன் இரங்கிக் கண்ணன் விரும்பியபடி அவனுக்குச் சக்கரத்தையும் கடாக்ஷித்தருளினர். அன்று முதல் விஷ்ணுவுக்கு நேமியான் என்னும் பேர் விளங்கியது.

ஓ! தக்கனே! இனிச் சங்கரன் ரிஷபமேறியதனைச் சொல்லுவோம். சதுர்யுகங்கள் இரண்டாயிரம் சேர்ந்தது ஒருநாள். அது முப்பது கூடியது ஒருமாதம். அது பன்னிரண்டு சேர்ந்தது ஒரு வருஷம். அதுநூறு நிறைந்தாற் பிரமன் தனக்கு நூறு வயதாகிப் போன்றுவன். அக்காலம் விண்டுவுக்குஒருநாள். இந்த கணக்குப்படிக்கு முற்குறித்தவாறே நூறுவருஷம் சென்றால் அவரும் இறப்பர். அண்டங்கள்இடியும். சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் பிரசண்டவாயு மோதுதலினால் ஓங்கி யெழுந்தெங்கும் மூடிக்கொள்ளும். அக்காலத்திற் பரமசிவன் ஏகனுய்த்தமது அக்கினி விழியினாற் சகலத்தையும் நீறுக்கி விளக்குகின்ற அவ்விமத்திலே சத்திகண்டு களிக்க ஆனந்த நிருத்தஞ் செய்வார். அச்சமயத்தில் தருமதேவதை இறவாமலிருந்து

ஏற்றின் உருவாகிப் பரமனைப் பிரார்த்தித்துக்கொள்ள அவர் அதை வாகனமாகக்கொண்டு விளங்குவர். இதனாற் கர்த்தனுக்குக் குறையுண்டோ? பேதாய்! இனி விஷம் உண்ட கதையைக் கேட்பாயாக!

ஆதியில் தேவரும் அசுரரும் அகோரயுத்தங்களைச் செய்து இருதிறத்தவரினும் மிகுதியாக மாண்டு இளைத்த காரணத்தை யோசித்து இனி ஆயுளைவிருத்தி செய்துகொண்டு நீடித்துச் சண்டைதொடுத்து ஜெயாபஜெயத்தை அறியவேண்டுமெனநிச்சயித்து அதற்கு விஷ்ணுவின் சகாயத்தைக்கொண்டு திருப்பாற்கடலில் மந்தரத்தை மத்தாக நாட்டி வாசுகியை தாம்பாகப்பூட்டித் தேவர்கள் ஒருபுறமும் அசுரர்கள் ஒரு புறமுமாக அதைப்பற்றி யிழுதுக்கடலைக்குமுறக்கடையும்போது அவ்வருத்தத்தை வாசுகி சகிக்க மாட்டாமல் தனது ஆயிரம்வாய்களினின்றும் விஷத்தைக் கக்கினன். அக்கடுவானது சமஸ்தத்தையும் சாம்பலாகத் தகித்து வருவதைக்கண்டு விஷ்ணுவானவர் அவ்விஷத்திற்கு நேராக அதட்டிச்செல்ல, ஆலம்வெகுண்டு தாக்கி அவருடைய வயிர நிறத்தேகத்தைக் கரியநிறமாக்கிவிட்டது. விஷ்ணுவாதியர் பயந்தோடிக் கயிலாசபதியினிடம் முறையிட்டுக்கொள்ள, அவர் தமது பக்கத்திற் காத்திருக்கும் ஆலால சுந்தரனைக்கொண்டு அவவிஷத்தைத் திரட்டி வரச்செய்து அதனைத்தமது உள்ளங்கையில் திவலைப் பிரமாணமாக வேந்திப் புசித்துத் தமது கண்டத்தில் நிறுத்தினர். அவ்விடத்தில் அது நீலமணியைப் போலப் பிரகாசித்திருந்தமையாற் பரமனுக்குக்காளகண்ட மூர்த்தியெனப் பேர் விளங்கியது. இனிக்கங்கையை யெம்பரமன் தாங்கிய வைபவத்தினைச் சாற்றுவாம்.

முன்னொருகாலத்தில் திருக்கயிலாயப் பூங்காவிற் பரமசிவமும் உமையம்மையும் வேடிக்கையா யெழுந்தருளி யிருக்கும்போது, பார்வதியார் ஒரு திருவிளையாடலைக்கருதி கர்த்தனின் விழிகளைத்தமது திருக்கரங்களினால் மறைத்தனள், அக்காலத்திற் சூரியன் சந்திரன் அக்கினி பிரகாசியாமல் அடங்கின, உலகம் இருளிற்பட்டுத்தமோறியது. இறைவன் அவ்விடரைப்போக்கத்தமது நெற்றிக்கண்ணைத் திறந்தனர். அதினால் உலகம் விளங்கியிருந்தது. இதனை லோகநாயகியார் கண்டு பயந்து முடியகைகளை வாங்கும்போது விரல்களினிடத்துப் பெருகும் வியர்வை, கங்கைகளாகிப் பெருகி உலகங்களை அழித்து ஓடியது.

பிரமனாதியர் அதைக்கண்டு பரமனைப் பிரார்த்திக்க, அவர் அவ்வெள்ளத்தைத் தமது சடைகளில் விளங்கும் ஒரு உரோமத்திற் சுவறச் செய்து அடக்கினர். பிரமனாதியர், கர்த்தனைத்தொழுது இப்பவுத்திரமாகிய கங்கை எங்கள் உலகங்களிலும் சிறிது பெருகக்கடாக்ஷிக்க வேண்டுமெனப் பிரார்த்தித்தனர். பரமசிவன் அவ்வாறே சில திவலைகளைப் பிரமன் விஷ்ணு இந்திரன் வேண்டியபடிக்கு அள்ளி அவர்கள் கைகளில் தெளித்தனர். அவர்கள் தங்கள் தங்கள் உலகத்தில் அத்தீர்த்தங்களை விட்டார்கள். உடனே அவைகள் பரமபதத்தில் விரசாநதியென்றும் சத்தியலோகத்தில் மானததீர்த்த மென்றும் இந்திரலோகத்தில் தேவகங்கை யென்றும் ஆறாய்ப்பெருகின. இவைகளிற் பிரமலோக கங்கையைப் பகீரதன், சிவனார் சடையின் மூலமாகப் பூமியிற் கொண்டுவர, அப்பரிசத்தால் இறந்திருந்த சகரர் மோக்ஷத்தில் நித்தியமாயிருக்கப் பெற்றார்கள். இனிப்பராசத்தியை வாமபாகத்திற் கொண்ட நம்சிவப்பரஞ்சுடரின் செயல்களை அறைவாம்.

முன்னொரு சருவசங்காரம் முடிந்தபின்பு சிவத்தால் உதித்த பிரமன் படைக்க நினைந்து சனகன் சனற்குமாரன் சனந்தனன் சனாதனன் என்னும் நான்கு குமாரர்களை நிருமித்தான். அவர்கள் படைப்பின் தொழிலின்றிப் பேரறிவால் யோகியரானார்கள். பிதாமகன் இக்குறையை விஷ்ணுவினிடம் விண்ணப்பிக்க அவர் பிரமனை அழைத்துக்கொண்டு பரமசிவனைத் தெரிசித்துப் பிரமசிருஷ்டி ஓங்கும்படிக்குப் பிரார்த்தித்துக் கொண்டனர். சிவபிரான் அவர்களிருவரையும் மாய்த்து நீறுசெய்து தமது இடது புயத்தைநோக்க அதிலிருந்து உமையவள் உதித்தனள். அவளிடத்திலிருந்து விஷ்ணு பிரமன் சனகாதியர் உண்டானார்கள். கர்த்தன்அவர்களைநோக்கி இனிப்பிரமசிருஷ்டி மல்குமென்று அருள்செய்து அனுப்பினர். பின்பு சிவகடாக்ஷத்தாற் பிரபஞ்சாதி சிருஷ்டிக்கிரமங்கள் உண்டாகிப் பரவின. இனிக் கர்த்தன் பிள்ளைகளைப் பெற்றகாரணத்தைத் தெரிவிக்கின்றோம். ஓ! தக்கனே! நீ கேட்பாயாக!

முன்னொரு காலத்தில் தேவராஜன் இராக்ஷதர்களை யெல்லாம் வாட்டிப் பொன்னுலகத்திற் களித்திருந்தனன். தோற்றுப்போன அசுரராஜன், தன்னை அடைந்து தனக்குற்ற துர்ப்பாக்கியத்தை முறை

யிட்டு அதற்கோர் வகையைக் கோரிநின்றபோது பார்க்கவன், ஓ! அரசனே! உன்குலத்தில் உதித்தகன்னி ஒருத்தியை வசிஷ்டன் மாபில் வந்த மகதரிஷியைக் கலக்கச்செய்தால் கஜமுகாசுரன் பிறப்பான், அவனைக்கொண்டு அசுரகுலம் விருத்தியடையுமெனக் கட்டளையிட்டனன். அசுரன்களித்து விபுதையென்பவளை இணக்கி மகம் மேருவில் தவஞ்செய்திருக்கும் மகதஷிரியினிடம் அனுப்புவதாயினன். அவள் புறப்பட்டுப்போய் அந்தரிஷியின் தவநிலைமையைக் கண்டு இவரை எவ்வாறு நாம் கூடுவோமென்று கவலையடைந்து அந்தத் தவசிக்கு நேரில் தானுந்தவஞ் செய்திருந்தனள். இக்காலத்தில் ஒருசமயம் ஒருகுஞ்சரம் பிடியைக்கூடிக் களிப்பதை அந்த ரிஷிகண்டு தவமுயற்சியை மறந்து காமநோய் மிகுதியால் துன்புற்றிருப்பதை விபுதை அறிந்து இது தான் நமக்கு நல்லசமயமென்று அந்த ரிஷியின் பாதங்களில் வந்து பணிந்து நின்றனள். ரிஷி அவள் வடிவைக்கண்டு அதிக மயல் கொண்டு அவள் சம்மதத்தின் பேரில் அவளைப்பெண் யானையாகவரும்படிக்கு வேண்டினர். அவள் அவ்வாறே வந்து காமவினைவைக்காட்ட, ரிஷியுங்களிறாக வடிவெடுத்தவளைப் புணர்ந்தனர். அவர்கள் இருவரும் இன்பமுற்றியவுடன் நாலுகோடுகளும் துதிக்கையும் விளங்கப் பருவதா கிருதியாகிய திரேகத்துடன் கரங்களில் வாளும் கேடகமுங்கொண்டு கயமுகாசுரன் உதயமானான். அக்கன்னிகையின் வியர்வையில் அளவற்ற இராக்ஷதர்கள் ஆயுதபாணிகளாகப் பிறந்தார்கள். கயமுகன் துணைவர்களுடன் கூடிக்கொண்டு வடவை பிரசண்டவாயுவுடன் கலந்தெழுந்தாற் போலச் சஞ்சரிப்பதானான். சுக்கிரபகவான், கஜமுகனைக்கண்டு ஆசிர்வதித்துப் பரமசிவனைக்குறித்துத் தவஞ்செய்துவர மந்திரோபதேசஞ்செய்தனுப்பினன். அவன் அவ்வாறுகவே தவஞ்செய்து கயிலாசபதியினிடம் அரிய பெரியவரங்களைப் பெற்றுத்தனக்கு யாரும் நிகரின்றித்திக்கு விஜயஞ்செய்து தேவர்கள் முதல்யாவரையும்தன் வயப்படுத்திக்கொண்டு பூமியின்கண்வந்து இராக்ஷதசிற்பியைக்கொண்டுபொன்னுலகமும்நாணத்தக்கதாக மதங்கபுரமென்னும்ஓர்நகரத்தை நிருமித்துஅதிற்பிரவேசித்துச் சபாமண்டபத்தில்வீற்றிருந்து பிரமன்தினம் பஞ்சாங்கம் சொல்லிப்போகவும் இந்திரனுதிதேவரும் காமதேனுவும் கற்பகதருக்களும் சங்கநிதி பதுமநிதி சிந்தாமணியும் அரம்பாஸ்திரிகளும் ஏவல்களைச் செய்து வணங்கக் கொடுங்கோலரசு செலுத்தி வருங்காலையில் ஒருதினம் தேவேந்திரன்

முதலானவர்களை நோக்கி இன்றுமுதல் நீங்கள் நம்முடைய சபைக்குவரும்போ தெல்லாம் சிரத்தில் மூன்றுதரம் குட்டிக்கொண்டு கரங்களை மாறி இருசெவிகளையும் பற்றி மூவிசை இறங்கி யெழக்கடவீரெனக் கட்டளையிட்டான். அவ்வாறே அவன் ஆணைக்கஞ்சி நித்தியமும் நடந்து கொண்டு துயரக்கடலில் அழுந்திவருந்திய தேவேந்திராதியர் இதனைப்பிரமன் விஷ்ணுவினிடம் முறையிட்டுக் கொள்ள, அவர்கள், அவர்களைத் தேற்றித்திருக்கயிலைக்கு அழைத்துப்போய் ஆதிகர்த்தனிடந் தங்கள் துன்பங்களைத் தெரியப்படுத்திக் கொண்டனர். பரமகிருபாநிதியாகிய சிவபிரான் அவர்களிடத்திற் கருணைகொண்டு நாம் ஒரு பிள்ளையைப்படைத்தனுப்பி உங்கள் இஷ்டப்படிக்குக் கயமுகனைச் சம்ஹரிப்போமெனத் திருவாய்மலர்ந்தருளி அவர்களுக்கு விடைகொடுத்தனுப்பித் தாமும் உமையவளும் பூங்காவிலுள்ள மண்டபத்திற் பிரவேசித்தார்கள். பார்வதியார் அம்மண்டபத்திலுள்ள சித்திரத்தைப்பரமன் அருளின்படிக்குப் பார்க்க, அதில் முதலெழுத்தாகிய ஓங்காரமானது குஞ்சரமும் பிடியுமாக உருக்கொண்டு புணரக்கண்டு தேவியார் பரமசிவத்தைத் தொழுது இது என்னகாரணமென்று வினவினள். பரமசிவன், பெண்ணே! உனது நோக்கம் பட்ட காரணத்தினால் பீஜாக்ஷரம் இவ்வுருவைப்பெற்றுப் புல்லியது உனது பெருமைகள் நாமேயறிவோம் என்ற சமயத்தில் அவ்விரண்டும் இன்பமுற்றி முன்போலச் சிறந்து குடிலையில் அடங்கின. உடனே நாலு கோடுகளும் நீண்ட துதிக்கையும் பருத்தவயிறும் குறியதாள்களும் பெற்று ஒருமைப்படச்சிந்திப்பவர் உணர்வாய்ப் பரிபூரணமாய் எங்கும் நிறைந்து சகலரும் தொழுது போற்று முயற்சிபெற்றுப் பரமசிவமே யென விளங்கிப் பிள்ளையார் அவதரித்துச் சிவசத்தியினது பாதங்களிற் சேவிக்க அம்மையும் அப்பரும் அவரைவாரித்தழுவி முத்தமிட்டு ஐயனே! யாவராயினும் முந்தி உன்னை நினைந்து ஒருகருமத்தைச் செய்வாராயின் அவர்கள் மனோபீஷ்டங்கள் முற்றுப்பெறக் கடவது. அடியார் விக்கினங்களைப் போக்கியாவருக்கு மேலாக விளங்கக்கடவாய் என்று வாழ்த்தி, குமாரனே! கயமுகனைச்சங்கரித்து முகுந்தனாதியரின் இடுக்கண்களைப் போக்கு விப்பாயெனப் பூதப்படையை உண்டாக்கித்தந்து விஷ்ணுவாதியர் வந்து தொழ விக்கினகர்த்தனைத் தமது முதற் கோபுரவாயிலில் வீற்றிருக்கச் செய்தனர்.

இவைநிற்க, ஒருதினம் கேசவன் பரமசிவத்தினிடம் போயிருக்குங்காலையிற் பரமன் பரமேஸ்வரியை நோக்கி நாம் இருவரும் பகடை ஆடுவோம். அதற்குப்பந்தயம், நீ தோற்பையாயின் உனது பணிகளையெல்லாம் எனக்குத்தருக. நீ வென்றால் எமது அணிகளாகிய சர்ப்பம் பிறையாதியானவைகளைப் பெற்றுக்கொள்கவென்று சொல்லித் தோற்புக் கெலிப்புக்குவிஷ்ணுவைச் சாட்சியாக வைத்துக்கொண்டு ஆடினர். அப்போதுசிவம்,யாதுகாரணத்தாலோஅம்மைக்குத் தோற்றும், உமையை நோக்கிநகைத்து நீ நமக்குத் தோல்வியுற்றபடியால் உனது ஆபரணங்களைத் தருகவெனக் கேட்டனர். அம்மன், கர்த்தனுடன் வாது தொடுக்க அஞ்சிக்கரியவனைச் செயம் யாருக்கெனச் சொல்லக் கேட்க, மாயன், பரமசிவனே வென்றாரெனக்குறித்தனன். உடனே பராசத்தியார் கோபமடைந்து நீ அழிவழக்குச் சொன்னமையாற் பாம்பாகக் கடவதெனச் சபித்தனள். உடனே விஷ்ணு அவ்வடிவந் தனக்கு நேரக்கண்டு பயந்து பரமசிவனை வேண்ட, அவர் பயப்படவேண்டாம் நீ தெற்கேயுள்ள ஒருபாலைவனத்தின் வடவாலவிருட்சத்தின் பொந்தில் தவஞ்செய்திருப்பாயாயின் விநாயகன், கயமுகனைவென்று அம்மார்க்கத்தில் வரும்போது இவ்வுருமாறுமென்று அருளிச்செய்தனர். விஷ்ணு அவ்வாறே தங்கியிருந்தனன். இப்பால் தேவேந்திராதியர்,விநாயகமூர்த்தியிடம்வந்து சேவித்துக்கயமுகனைவாட்டி எங்களை ரக்ஷிக்கவேண்டும். தினம் அவனைக்காணப்போகும்போது சிரங்களிற் குட்டி இருசெவியும்பற்றி மும்முறைவணங்கி எழும்படிக்குப் புதியகட்டளையிட்டு இம்சிக்கின்றானென முறையிட்டுக்கொள்ளக் கணபதி அவர்களுக்கு அபயங்கொடுத்து அசலனென்னும் பூதன் மீது ஆரோகணித்துச்சகலபூதப்படைகளுடன்கயமுகன் அரசுசெய்திருக்கும் மதங்கபுரத்தை நோக்கிச்சென்று அந்த அசுரனுடன் கொடியபோராட்டஞ் செய்து கடைசியில் தமது ஒரு கோட்டை முறித்துச் செலுத்திக் கயமுகனை இருகூறாகப் பிளந்து தள்ளினர். அவன் உதிரம்பெருகித் தோய்ந்த இடம் இக்காலத்திலும் செங்காடென்னும் பேருடையதா யிருக்கின்றது. பின்பு கயமுகன் சிவவரப்பிரசாதத்தால் மண்ணின் மூடத்தக்க பருத்த வடிவினையும் அக்கினியைப்போலச் சிவந்தகண்களையும் பெற்றபெருச்சாளியாகிச் சீறிப்பாய்ந்து வரும்போது அசலன் தோளில் இருந்த கணபதியானவர் தாவி அதன் முதுகில் ஆரோகணித்து நம்மைச் சுமந்து திரிவாயென்

நடத்தினர். தேவர்கள் ஐயன் புகழைப்பாடிக் கற்பகமலர்களைச் சொரிந்தார்கள். விநாயகமூர்த்தி, பிரமன் முதலானோர் சூழ்ந்துபோற்ற அவ்விடம் விட்டுப் புறப்பட்டுவரும் மார்க்கத்தில் தமது பிதாவை ஸ்தாபித்து ஒருஸ்தலத்திற் பூசித்தனர். அதுகணபதீச்சுரமென்று இக்காலத்தும் விளங்குகின்றது. பின்பு விஷ்ணு பாம்பாய்த்தவஞ் செய்திருக்கின்ற பாலவன மார்க்கமாக விநாயர் எழுந்தருளினர். விஷ்ணு அவரை எதிர்கொண்டு தொழுதவுடன் தனது சுயவடிவம் பெற்றுப்பின் கணபதியைப் பூசித்துச்சகல வரங்களையும் பெற்றனன். அப்பால் விநாயகமூர்த்தி கயிலைசேர்ந்து தமது பிதாவைச் சேவித்து முன்போல் அங்கு எழுந்தருளி யிருப்பதாயினர். அப்போது தேவர்கள் அக்கடவுள் சந்நிதானத்தில் மும்முறை குட்டிக்கொண்டு செவிகளைப்பற்றிப் பாதங்களிற் சேர்த்துத் தாழ்ந்தெழுந்து கணபதியைப் போற்றிசெய்து, கர்த்தனே! இவ்வாறு உலகத்தார்கள் உம்மைப் பூசித்து நடந்துகொண்டால் அவர்களுக்கு வேண்டியவரங்களைக் கொடுத்து இரட்சிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தபடிக்கு வரத்தைப்பெற்றுப் பின் தங்கள் பதவிகளிற்சேர்ந்து சுகத்தி லிருந்தார்கள். நற்குணங்களையுடைய யோகிகளாலும் அறிதற்கரிய சிற்குணனைச் சின்மயனைச் நின்மயனைப் பராபரனை விளக்கும் பரமசிவத்தின் காரணங்களைச் சொல்லிமுடியுமோ வென்று ததிசி முனிவர் சொல்லி முடித்தவுடன் தக்கன், ஓ! முனியே! பலவாகச் சொல்வதிற் பயனில்லை! கயிலாசவாசியாகிய உனது கடவுள் ஆதியேயாயினும் அவனுக்கு அவிகொடுக்கமாட்டேன்! ஏன்வீண்வார்த்தையாடுகின்றாய்! போ!என்று சொல்ல அந்தரிஷிக்கு அதிகக்கோப முண்டாகிப்பரமசிவத்தை இகழ்ந்து செய்யும் உன்வேள்வி அறிவனோடு உண்மையைப் பேசாமல் மிரளவிழித்துக் கொண்டு இவ்விடத்திலிருக்கின்ற தேவர்களும் மாளக்கடவரென்றும்,பின் யாகத்துக்கு வந்திருந்த பிராமணர்களை நோக்கி நீங்கள் இருபிறப்பாளராக வேதவிதிக்குப் பிசகினவராய் உழலக்கடவீர்களென்றும் சாபமிட்டுத் தமது ஆசிரமம் சேர்ந்தனர்.

## "தக்கன் வேள்வி தொடங்கல்"

ரிஷி சென்றவுடன் நேரிட்ட துர்நிமித்தங்களையும் தக்கன் யோசியாமல் ஆசிரியனைக்கொண்டு வேதவிதியில் சிவத்தின் பாகமான பிர

தான மந்திரங்களை நீக்கி விஷ்ணுவுக்குரிய வாக்கியங்களை அவைகளுக்குப் பிரதியாக ஓதி மகத்தை வளர்க்கக் கட்டளையிட்டு விஷ்ணுவாதியரை மந்திர பூர்வமாகக் கூவி அவிகளைக் கொள்வீரென உபசரித்தான். அது தேவாமுதத்தினுஞ் சிறந்ததாயினும் பிரதமதேவனை நீக்கிய அருவருப்பால் அவரவர்களுக்கு நஞ்சாகக் காட்டியது. அக்காலத்தில் தக்கன் செல்வச் செருக்கை நாரதர் அறிந்து கயிலாசபதியினிடத்தில் அதனைத் தெரிவிக்கப்பக்கத்திலிருந்த உமையவள் கர்த்தனைப் போற்றி, சுவாமி! என்பிதா செய்கிற யாகத்தைப் பார்த்து வர விடை தரவேண்டுமென்று கேட்கப் பரமன், உன்னை எவ்வளவும் நினையாமல் அகந்தை கொண்டு அவன் செய்யும் வேள்விக்கு நீ போகலாகாதென்று சொல்ல, அம்பிகை, தெரியாமையால் அவன் செய்த பிழையினை மன்னிக்க வேண்டுமென்று மன்றாடி வருதி வாங்கிக்கொண்டு சகல ஆடம்பரங்களுடன் விமானத்தில் எழுந்தருளித் தக்கன் யாகசாலையிற் பிரவேசித்தபோது அவன் பார்வதியைக் கண்டு அவளைக் கோபித்து அதட்டித் தாய்தந்தையற்ற பித்தனுக்குரிய நீ இந்தயாகத்துக்கு வரவேண்டியதென்ன? இக்காரியத்தைக் குறித்து நான் உனக்குச் சொல்லியனுப்பினதுண்டோ? நான் வெள்ளிமலைக்கு வந்த காலத்தில் மாமனென்றும் எண்ணாமல் என்னை அவமானம் செய்வித்தவனுடைய தேவியென்று உன்னை அன்றே மறந்துவிட்டேன்! இவ்விடத்திலில்லாமல் சீக்கிரமாகத்திரும்பிப்போய் விடென்று சீறிச் சொன்னான். அதைக்கேட்டுப்பராபரையானவள் மனம் வாடித்தந்தையை நோக்கி நீ செய்யும் வேள்வியைக்கேள்விப்பட்டுப்பேதமில்லாமல் நானே வந்தும் சீறித்தடுக்கின்றாய்! இது நன்மையோ? ஆனால் உன் கருத்தைத்தீர்க்க மாய்ச்சொல்லிவிடு வாயென்ன, உடனே தக்கன் நகைத்து நீயும் பேயனுடன் பேயாகி என்னைமதியாமலிருந்தமையால் உன்னைத்தள்ளி வைத்தேன். இம்மகத்தில் உன் கணவனுக்கு அவிப்பாகங்கொடேன்! போ! போ! வென்று சொன்ன மாத்திரத்தில் அம்பிகைக்குக் கோபம் பிரவேசித்துப்பெருமூச்சுண்டாயிது. அக்கோபத்தின்உக்கிரம்உலகத்தைப்படுத்துவைத்ததுஇத்தன்மையதென்றுயாவராற்சொல்லப்படும்! பின் உமையவள் கருணையினால் அதனை அடக்கிக்கொண்டு தக்கனைப் பார்த்து, நீ என்னை இகழ்ந்ததை நான் பொருட்டாக நினைக்கவில்லை! என்கர்த்தனைக் குறித்துப் பேசிய கொடிய சொற்கள் என்செவிகளில் விஷத்தை யொப்பப் புகுந்தன! இவ்வபரா

தம் யாவராலே துடைக்கப்படும்! பேதாய்! இனி எவ்விதமாகக் கடத் தேறுவாய்! உனக்கு இதற்குத்தக்க தண்டம் விரைவில் உண்டாகக் கடவதென்று உடனே கயிலையை அடைந்து நடந்த விருத்தாந்தங்களைத்தமது நாயகனுக்குத் தெரிவித்துத் தக்கனது வேள்வியை அழிக்கத் திருவுள்ளங் கொள்ளவேண்டுமென வேண்டினள்.

## "யாகசங்காரம்"

அப்போது எமது கர்த்தன் கௌரியின் அன்புக்கிரங்கி அவள் எண்ணப்படி முடிக்கத் திருவுளங் கொண்டவுடன் அவர் நுதல்விழியில் ஆயிரம் சிரங்களுடனும் இரண்டாயிரம் கரங்களுடனும் அகோரவீரபத்திரர் உதயமானர். அதேசமயத்தில் உமையவளது கோபக்கனலில் பத்திரகாளி ஆயிரஞ் சிரங்களுடனும் இரண்டாயிரங் கரங்களுடனும் வெளிவந்து வீரபத்திரர் மருங்கில் நின்றாள். இவ்விருவருடைய வந்தனங்களை யேற்ற பரமசிவன் அவர்களை நோக்கி நீங்கள் இருவருந் தக்கன் யாகஞ் செய்யுமிடத்திற்குச் சென்று அவிப்பாகத்தைக் கொடுத்தால் வாங்கிவருவீர். இல்லாவிட்டால் தக்கன் சிரத்தைக்கண்டித்து அவனுக்கு உதவியாய்ச் சூழ்ந்த தேவராதியரை அதப்படுத்தி யாகத்தையும் அழித்து மீளக்கடவீர். அப்போது நாமும் அங்கெழுந்தருளுவோ மெனப் பணித்து உடனே தமது வேர்வையினின்றும் மயிர்க்கால்களி னின்றும் அளவற்ற பூதங்களையும் படைத்தனுப்பினர். உமையவள் அதேபிரகாரம் தாமும் அளவற்ற காளிகளைப் படைத்தனுப்பினள். அவர்கள் ஆர்ப்பரித்து எழும்பித்தக்கன் வேள்விச்சாலைக் காவலரைக்கொன்று தின்று அதனை வளைந்து கொண்டனர்.

பத்திரகாளியுடன் வீரபத்திரக்கடவுள் ஆர்ப்பரித்து யாகசாலையிற் சென்று ஓமகுண்டத்திற் கருகில் வருவதைப் பிரமனாதி தேவர்கள் கண்டு நடுக்குற்றிருக்கும் போது வீரபத்திரதேவர் சிறிச்சங்கநாதஞ்செய்தனர். பூதகாளிக் கூட்டங்கள் சுற்றிக்கொண்டு யாகசாலையை அழிப்பதனைக் கண்ட தக்கன் கோபங்கொண்டு தயிரியத்தை விடாமல் வீரபத்திரரைப் பார்த்து நீயாவன்! இவ்விடம் வந்தகாரணமென்ன வென்று வினவ, வீரன் நகைத்து நான் சங்கரர் குமாரனும். அவர் கட்டளையின் படிக்கு இந்த வேள்வியில் அவிப்பாகம்

வாங்கிப்போக வந்தேன். தாமதஞ் செய்யாமல் தரக்கடவா யென்று கேட்க, சிவனுக்கு இவ்விடத்தில் அவிப்பாகங் கிடைக்கமாட்டாதெ ன்று தக்கன் மறுத்தான். வீரபத்திரர், தக்கனுக்கு அளவற்ற நீதிக ளைப்போதித்தும் அவன் கேட்கவில்லை- அப்பால் வீரபத்திரர் பக்கத் திலிருந்த விஷ்ணு பிரமனைக்குறித்து இது உங்களுக்குச் சம்மதமோ வென்று கேட்டனர். அவர்கள் மௌனமா யிருந்தார்கள். உடனே வீரபத்திரர் கோபங்கொண்டு தமது கதையைச் சுழற்றிக் கேசவன் மார்பில் திடீரென மோதி அவனை மூர்ச்சிக்கச் செய்து, பிதாமகன் சிரங்களிற் குட்டி அவனைக் குப்புறவிழ்த்தி, கலைமகள் மூக்கையும் குய ங்களையும் அரிந்து, சந்திரனை உதைத்துத் தள்ளித் தேய்த்து, சூரிய னைப் பல்லுதிர அறைந்து, சனியைக் கண்ணைப்பிடுங்கி, எமனைவெட்டி, இந்திரனைக் கண்டித்து, அக்கினிதேவன் கரங்களை முறித்து நாக்களைக் களைந்து, அவன்தேவியின் நாசியை நறுக்கி, நிருதியைத் தண்டினல் மாய்த்து, வேண்டிக்கொண்ட உருத்திரகணங்களை ஓடிப்போக விழியி னற் குறித்து, வருணனை எழுவாயுதத்தால் மாய்த்து, வாயுவைவாளி னல் வாட்டி, குபேரனைச் சூலத்தினற் கொன்று, ஈசானமூர்த்தியை வைது இகழ்ந்து, யாகதேவதையை ஒருபாணத்தினுல் அடக்கி, யாக குருவைக்கண்டித்து, அதிஉக்கிரத்துடன் மேலிட்டுவந்தனர். அதனை க்கண்ட தக்கன், மிகவும் அச்சமுற்றுப் பின் தேறிக் கொக்கரித்துச் சண்டைக்கு முன்வந்தனன். வீரபத்திரர் அவன் சிரத்தை வெட்டித் தள்ளினர். பத்திரகாளியானவள் தக்கன் தேவிமுதலியவர்களைச் சம் ஹாரஞ்செய்து விட்டனள். மூர்ச்சைதெளிந்த விஷ்ணு கோபித்து வீரபத்திரருடன் எதிர்த்துச் சண்டையிட்டு முடியாமற் கடைசியிற் சரணடைந்தான். பிரமனும் தாழ்ந்து நின்றுன். அந்தச்சமயத்திற் சிவ பிரான் பராசத்தியார் சமேதராக ரிஷபவாகனத்தி லெழுந்தருளிச் சிவகணங்கள் சூழ யாகசாலைக் கெழுந்தருளக் கண்ட வீரபத்திரர் அவரைத்தொழுது நின்றுர். விஷ்ணு பிரமனுதிபரும் பரமனை வந்து பணிந்து தங்கள் குறைகளைப் பொறுத்தாள வேண்டுமென்று இரந் தார்கள். உமையவள் இரக்கமுற்றுப் பரமேஸ்வரனைப் பிரார்த்தித்து மடிந்தவர்களை எழுப்பும்படிக்கு விரும்பினள். கயிலாசபதி அதற்குக் கிருபைசெய்து வீரபத்திரரைக் கொண்டு யாவரையும் பிழைக்கும்படி. செய்ய, அவர்கள் அனைவோரும் எழுந்து பரமசிவனை நெருங்கிப்போ

ற்றி நின்றனர். தக்கனும் ஆட்டுத்தலையினைப் பெற்றெழுந்து நல்லறிவுடன் பரமசிவனைப் போற்றி நின்றனன். கர்த்தன் வீரபத்திரரை அண்டத்தின் எல்லையிலிருந்து சகல புவனங்களையும் பாதுகாக்கவும் மற்றவர்களை முன்போலத் தத்தம்பதிகளிற் சேர்ந்திருக்கவும் கட்டளையிட்டுத்தாம் உமாதேவியாருடன் கயிலைக்கெழுந்தருளினர்.

## "தக்கன் நன்மை யடைதல்"

இவ்வாறு சகலரும் நீங்கியசமயத்திற் பிரமன் தனது புத்திரனாகிய தக்கனை நோக்கி உன்னுடைய அகந்தையினால் தவத்திற் பெற்ற செல்வத்தைப் பறிகொடுத்ததும் அல்லாமல் உலகம் உள்ள மட்டும் தீராதபழியினையும் வேற்றுருவினையும் பெற்றனை; நின்னும் யானும் முன்னொருகாலத்தில் நாம் நாம் பரமென்று அகந்தை கொண்டு அளவற்றகாலம் வாது கொடுத்திருந்த போது உலகங்கள் அழிவடையவும் தேவர்களிற் பலர் இறக்கவும் சிலர் கயிலாயவாயலில் முறையிட்டோடவும் மேகங்கள் கரிந்து உருளவும் இவ்விதங்களாகச் சகலமும் வாதைப்பட்டன. அப்பொழுது சிவகடாக்ஷத்தால் நாரதர் வந்து என்னையும் விஷ்ணுவையும் பார்த்து உங்களுடைய வீண்வாதினால் உலகங்கள் நிலைகுலைகின்றன. இலிச்சண்டையை நிறுத்தக்கடவீர்! என்று சொல்லியும் நாங்கள் கேளாமற் போரைத் தொடுத்திருக்கின்ற போது தேவர்கள் பிரார்த்தனைக் கிரங்கிப் பரமசிவம் எங்கள் மத்தியில் அக்கினிமலையாகத் தோற்றி நாங்கள் எவியபடைகளை உண்டு அளவுபடாமல் நின்றனர். அதைக்கண்டு விஷ்ணுவும் நானும் பிரமித்துத் தியங்கி நிற்க, வானத்தினின்று ஒருவாக்கானது ஓ! விவேகமில்லாதவரே! இச்சோதியின் அடிமுடியினைக் கண்டவரே பெரியரென்று எழுந்தது. உடனே விஷ்ணு, வராகமாகப் புவியைக் கிள்ளி அச்சோதிப் பிழம்பின் அடியைக்காணச் சென்று முடியாமற் சோர்ந்து மீண்டர். யானும் அன்னமாய்ப் பறந்து வானத்தில் அதின் முடியைக்காணச் சென்று முடியாமல் வருந்தித் திரும்பி, இளைத்திருக்குந் திருமாலுடன் சேர்ந்து யாவரும் அறிதற் கரிய பரமசிவத்தின்பாதங்களிற் சரணடைந்து எங்கள் அகந்தைகளைப் போக்கிக்கிருதார்த்தரானோம். அப்பால் தோன்றி நின்ற ஜோதிப்பிழம்பில் எங்களுக் கருள்செய்த சிவபிரான் மறைந்தனர், உடனே அந்த அனல்வடி

வம்மாறி ஒருமலையுருக் கொண்டு சகலருங் கண்டு தொழ நின்றது யாங்கள் சிவக்குறியினைத் தாபித்து அந்த இரவில் வழிப்பட்டு எங்கள் பதவிகளிற் சேர்ந்தோம். அத்தினம் சிவராத்திரி யெனச்சொல்லப்படும். ஆகையினாலே ஏ! பிள்ளாய்! நீயும் அத்தகைய பரமசிவத்தை நோக்கித் தவஞ்செய்து பேரின்பத்தினை அடைவாயென்று போதித்தனன். தக்கன், பிதா அருளிச்செய்தபடிக்கு நிகரற்றகாசித்தலத்திற் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து ஆயிரம் வருஷந்தவஞ்செய்து பரமசிவத்தின் அனுக்கிரஹத்தினாற் கணத்தலைவனானன்.

## "முசுகுந்தன் கந்தவிரதம் அனுஷ்டித்தது."

பாலசுப்பிரமணியக் கடவுள் அனுக்கிரஹத்தினால் இந்திரன் திரிலோக பட்டாபிஷேகம் பெற்றுக் களித்திருக்கும் போது முசுகுந்தச்சக்கிரவர்த்தியானவன் பாலசுப்பிரமணிய தேவருக்குரிய சிறந்த விரதங்களைத் தான் மிகுந்த பக்தி வயிராக்கியங்களுடன் அனுஷ்டித்து வருவதோடும் தன் அரசாட்சிக்கு உட்பட்ட நாடுநகரங்களில் வாசமாயிருக்கின்ற சகலரையும் அவ்விரதங்களைக் கைக்கொண்டு நடக்கக்கட்டளையிட்டுச் செங்கோல்செலுத்தி வந்தனன். ஒருசமயத்தில் அவன் வசிஷ்டர் ஆசிரமத்துக்குச் சென்று அவரை பழிபட்டுக் கந்தசுவாமியாருக்குரிய விரத மான்மியங்களனைத்தையும் முறைப்படி போதிக்க வேண்டிக் கொள்ள ரிஷீஸ்வரர் மகிழ்ந்து, அந்த முருகக்கடவுளுக்குச் செய்ய வல்ல விரதங்களில் ஒன்று உண்டு அதனை ஆகம விதிப்படிக்கு முடித்த புண்ணியவான்கள் இம்மை மறுமை லாபங்களை அடைவார்கள், அதற்குத் திருஷ்டாந்தமாக இச்சரித்திரத்தைக் கேட்பாயாக எனச்சொல்வதானார். முன்னொரு காலத்திற் பகீரதச் சக்கிரவர்த்தியைப் பகைத்துக் கோரனென்னும் அவுணராஜன் அவன் இராஜ்ஜியத்தை முற்றிலும் அபகரிக்கச் சக்கிரவர்த்தி தன் மனைவியையும் பிள்ளைகளையும் அழைத்துக்கொண்டு கானகத்திலோடி அன்னங் கிடையாமல் அலைந்து கடைசியில் புகர் என்னுந் தவ சிரேஷ்டரின் அனுக்கிரஹத்தினாற் கந்த சுவாமிக்குப்பிரியமாகிய சுக்கிரவார விரதத்தை அனுஷ்டித்து முற்றிய காலத்திற் சண்முக நாதர் கிருபையுற்றுத் தமது வெற்றி வேலாயுதத்தையேவிக் கொடியவனாகிய அவுணப் பகைவனைப் பிளந்தெறிந்து சக்கிரவாத்தியை முன் போல அரசு செலுத்தி மகிழ்ந்திருக்கச் செய்தனர்.

இதைப் போலக் கந்தசுவாமிக்கு உகந்த விரதம் மற்றொன்றுஉண்டு, அதனையுஞ் சொல்லக் கேட்பாயாக. நாரத முனிவரானவர் விநாயக மூர்த்தியை உபாசித்துத் தான் சப்த ரிஷிகளிலும் முதன்மை பெறத் தக்க விரதமொன்றைப் போதிக்கவேண்டுமென வேண்டிக்கொள்ளப் பிள்ளையார், எனது இளையோனாகிய சண்முகப் பெருமானுக்கு விருப்பமாகிய கார்த்திகை விரதத்தை முறையாய் அநுசரிக்கக் கடவை யெனத் திருவாய் மலர்ந்தனர். ரிஷிபுங்கவர் பன்னிரு வருடம் பக்தி வயிராக்கியத்துடன் அவ்விரதத்தை நடத்திவரச் சரவணபவன் அவருக்குக் காட்சிதந்து சப்த முனி வர்களினும் முந்திப் பேசிக் கொண்டாடத்தக்க மேலான பதத்தை யனுக்கிரஹித்தனர்.

சதுர்வேத பண்டிதனை பிராமண னொருவன் இந்த விரதத்தை அனுஷ்டித்து முருகர் கடாக்ஷத்தினால் அப்பிறவியை ஒழித்துச் சூரியன் மரபில் மனுச்சக்கிரவர்த்தியாய் அவதரித்துச் சகல சௌகரியங்களையும் அனுபவித்து அரச நீதிகளையும் மனுவிக்கியான சாஸ்திரத்தையும் ஏற்படுத்தி நற்பேறு பெற்றனன்.

மற்றொரு பிராமணோத்தமன் அந்தச் சிறந்த நோன்பைப் பல காலஞ்செய்து சிவ குமாரன் திருவருளின் படிக்குத் தன் மனதிற் சிந்தித்தவாறே திரிசங்கு மகாராஜனாகத் தோற்றிப் புகழ் பெற்றுக்கடையியில் மோக்ஷ வீட்டைப் பெற்றுச் சவுக்கியமா யிருக்கின்றனன்.

இவையன்றி மற்றொரு மன்னனும் வேடனும் இவ்விரதத்தைச் செய்து வந்த சிறப்பினால் சரவணபவன் அநுக்கிரஹப்படிக்கு அவர்கள் அந்திமான் சந்திமான் என்னும் இராஜ குமாரர்களாக ஜெனித்துப் பிர முகராய்ப் பூமண்டல முற்றும் ஆக்கினை சக்கிரத்தைச் செலுத்தி வாழ்ந்திருந்தனர். இத்தகைய மகிமைகளுள்ள கார்த்திகை விரதத்தை நடாத்தி எத்தன்மைத் தாகிய பேறுகளையும் பெற்றுச் சிறந்த புண்ணிய சிலர்களைக் கணக்கிட்டுப் பிரமனாலுஞ் சொல்லமுடிவதோ!

இஃதன்றிக் கந்த மூர்த்திக்கு உவக்கத்தக்க விரதம் மற்றொன்றுண்டு. அதனையுங் கூறக் கேட்பாயாக. தேவர்கள் ஒரு காலத்தில் தங்களுக்குச் சம்பவித்த துக்க வருத்தங்களைப் போக்கிக் கொள்வதாய்ப் பிரம தேவரை வணங்கிப் பிரார்த்தித்துக் கொண்டார்கள். பிதாமகன் அவர்களுக்குக் கந்தர் சஷ்டி விரதத்தை வரன் முறையாகப்

போதித்து அநுஷ்டித்து வரச் செய்ய அவர்கள் அதைப் பக்தி பூர்வ மாகக் கைக்கொண்டு முருகக்கடவுள் அநுக்கிரஹத்தினற் சுகமடைந் திருந்தார்கள் என்று வசிஷ்டர் சொல்லக் கேட்ட சக்கிரவர்த்தியான வன் தானும் அதனை அநுஷ்டிப்பதாய் மனம் ஒருமித்து ரிஷிபுங்க வரை வணங்கி விடை பெற்றுத் தனது நகரத்தை அடைந்து அவ்விர தத்தினை முறைப்படி தனது இராஜ்ஜிய முதம் கொண்டு அநுஷ்டிக்க ச்செய்து தானும் அதை வருஷந்தோறும் நடாத்திச் சண்முகநாதர் கிருபையினுல் தனது மனோ பீஷ்டங்களைக் குறைவின்றி அனுபவித்து வரும்போது, வலாசுரனென்பவன் பொன்னுலகத்திற் படை யெடுத் துத் தேவர்களை வாட்டி இந்திரனையும் துறக்தி யடித்து விட்டான். மகபதி, முசுகுந்தச் சக்கிரவர்த்தியினது உதவியைப் பெற்று அவுண ர்களை வேரறக் களைந்து கடைசியில் வலாசுரனையும் தனது வச்சிரப் படையால் தாக்கிக் கொன்று ஜெய சீலனுய்க் களித்துப் பின் சக்கிர வர்த்தியைத் தன் நகரத்திற் கழைத்துப்போய் உபசரித்திருந்தனன். அப்போது சக்கிரவர்த்தியானவன் அங்கெழுந்தருளி யிருக்கும் உமா பரமேஸ்வரரைப் பூசித்திருக்கும்போது குமாரசுவாமியும் அவன் பால் விளங்கக் காக்ஷிதந்து நின்றனர், முசுகுந்தன் பேரானந்தத்தில் மூழ் கிப் பலவாருகத் தோத்திரஞ் செய்தனன். இப்படி யிருக்கும்போது பரமேஸ்வரன் அவனுடைய பக்திக்கு மகிழ்ந்து ஓ! சக்கிரவர்த்தி! உனது மெய்ப்பத்திக்கு மிகவுஞ் சந்தோஷித்தோம், நம்மை வெகு கா லம் உபேந்திரர் ஆராதித்திருந்தவர் ஒருபோது சில காரணத்தினுல் இந்திரனிடத் தொப்பி வித்துப் போக நேரிட்டது. உன்னிடத்தில் நமக்கு இரக்க முண்டானதால் நீ நம்மைப் பூலோகத்துக்குக் கொண் டுபோய்த் தாபித்துப் பூசிக்கக் கடவாயெனத் திருவாய் மலர்ந்தனர். சக்கிரவர்த்தி மகா பாக்கிய மென்று மனம் பூரித்து இந்திரன் உபசரி ப்பிலிருந்து கொண்டிருக்கும் போது ஒரு நாள் மகவான் சக்கிரவர்த் தியைப் புகழ்ந்து உமக்கு என்னுலாக வேண்டியதைக் கேட்டுக்கொள் ளு மென்றனன். சக்கிரவர்த்தி நீர் பூசித்து வரும் சிவபிரானைத் தயை செய்து எனக்கு மெய்யன்புடன் கொடுப்பீராகில் நான் அத்தேவனை ப் பூலோகத்திற்குக் கொண்டுபோய் என் பட்டணத்தில் தாபித்துப் புனிதனுவேனென வேண்டினன். அதைக் கேட்ட இந்திரன் திடுக்கி ட்டு மனதைத் தேற்றிக்கொண்டு எனக்கு அன்புள்ளவரே! இத்தேவ ன் வரலாற்றைக் கேட்பீராக! மகா விஷ்ணுவானவர் தனக்கு ஒரு புத்

திரனில்லாமல் வருந்திப் பரமசிவனைக் குறித்து வெகுகாலந் தவஞ்செய்தனர். பரமேஸ்வரன் கௌரியுடன் அவர் முன் பிரசந்நமாகி உன் கோரிக்கையின் படிக்கு மிகுந்த சுந்தரவடிவும் தீர்க்காயுசும் பொருந்திய ஒரு குமாரன் உண்டாவானெனக்கடாக்ஷித்தசமயத்தில் மாதவன், பரமன் பால் அமர்ந்திருக்கும் உமையவளிடத்திற் சற்றும் அன்பைச் செலுத்தாமலிருக்க, லோகநாயகிக்கு மனங்கறுத்து மாதவனை உருத்துப் பார்த்து நீ பெறவிருக்கின்ற புத்திரன் என் பிராணநாயகன் அனல் விழித்தியினிற் பட்டுச் சாம்பலாய்ப் போகக் கடவனென்று சபித்துத் தமது கர்த்தனைப் பல வந்தமாக வாரும்! வாரும்! என அழைத்துச் சென்றனள். விஷ்ணு அதைக்கண்டு திடுக்கிட்டுத் தனது அபராதத்தினைத் தெளிந்தவராய்த் தக்ஷணத்திற் சிவ பிரானையும் லோகநாயகி யாரையும் குமார சுவாமியையும் பாவனை உருப்படச்செய்து பல்லாயிரக்கோடி வருஷம் தவஞ் செய்திருக்கின்றபோது பரமேஸ்வரன் உமையவளுடன் அவருக்குக் காக்ஷி கொடுத்தனர். விஷ்ணுவானவர்களிசிறந்து இருவரையும் போற்றி நிற்கப் பார்வதி யானவள் அவரிடத்தில் இரங்கி உனது பிள்ளையானவன் ஒருதினம் நாதன் நுதல்விழித் தியிற் பட்டுச் சாம்பலாயிறந்து போனபோதிலும் பரமன் திருவுள்ள முயற்சியினூற் பழய படிக்குத் தோற்றி யெக்காலத்திலும் வாழ்ந்திருக்கக்கடவனெனச் சாபவிமோசனஞ் செய்தனள். பரமசிவமும் அவ்வாறே ஆசிர்வதித்து மறைந்தனர். மகா விஷ்ணு பாற்கடலைச்சேர்ந்து தனது மனதின் மூலமாய்ச் சுந்தரமுள்ள மன்மத குமாரனை உதிக்கச் செய்து அவன் தக்க பருவ மடைந்தபோது அவனுக்கு இரதி தேவியை மணஞ்செய்வித்து மகிழ்ந்திருந்தனன். அக்காலத்திற் பரந்தாமன் தான்முன் வழி பட்டிருந்த மூன்று திருவுருவங்களையும் தமது மார்பாகிய பீடத்தினிடத்தே யெழுந்தருளச் செய்து போற்றி வைத்திருந்தனன்.

இப்படி யிருக்குங் காலத்தில் வாற்கலி என்னுஞ் சூரன் அவதரித்து எனது நாட்டிற் படை யெடுத்து என்னையும் துறத்தி விட்டனன். நான் அதைப்பற்றி மகா விஷ்ணுவினிடம் போய் முறையிட்டுக் கொண்டேன். அப்போதவர் என்னிடத்தில் இரக்க முற்றுத் தனது மார்பினிடத்தில் வைத்திருக்குந் தேவதைகளை என் முன்னோர்களும் நானும் முடித்திருக்கின்ற தவப் பேற்றினால் எனக்களித்துப்

பின் அவர் தில்லை யம்பலத்திற்குச் சென்று சிவநாதனை வழிப்பட்டு அங்கு நின்றும் கருடாருடராய்க் கிளம்பி எனது பகைவனாகிய வாற்கல்வி யென்னும் அவுணராஜனைக் கொன்று எனக்கு முன் போல இந்திரப் பட்டத்தை யளித்தனர். அப்பால் நான் பெற்ற இந்த மூவரையும் அதிகப் பிரியத்துடன் ஆராதனை வழிபாடுகள் செய்துவருகின்றேன். எனக்கினிய தோழரே! நீர் மகா விஷ்ணுவினிடம் சம்மதங் கேட்டு வருவீராகுல் இந்த முத்தேவர்களையும் உமக்கு அளிப்பேனென்றான். சக்கிரவர்த்தி நல்லதென்று மாதவனிடம் சென்று தாழ்ந்து அவருடைய சம்மதத்தைப் பெற்றுத் திரும்பி அதனை இந்திரனுக்குத் தெரிவித்தனன், மகபதியானவன், சக்கிரவர்த்தியை யேமாற்றிவிடக் கருதித் தேவதச்சனைக் கொண்டு ஆறு தடவைகளாக அந்த மூன்று மூர்த்திகளைப் போலவே வேறு வேறு படைக்கச்செய்து அளித்த காலையில் முசுகுந்தன் பரமசிவ கடாக்ஷத்தினுல் அக்கள்ளத்தை உணர்ந்து தள்ளித் தேவராஜன் திருவடிகளிற் பணிந்தனன். தேவராஜன் இரங்கி உடனே ஓ! அன்னவரே! நான் முன்னங் கொடுத்திருந்த ஆறு தேவதைகளுடன் இவர்களையும் பூமண்டலத்திற் கொண்டு போய்த் தாபித்துப் பூசிக்கக் கடவீரெனத்தான் பூசித்துவந்த உமா பரமேஸ்வர குமார மூர்த்தங்களை முசுகுந்தனிடம் கொடுத்தனன் அவன் மனப்பூரிப்புடன் பூமண்டலத்தி லிறங்கித் திருவாரூரில் முதன்மையான மூர்த்திகளைப் பிரதிஷ்டை செய்து மற்றத் தேவர்கள் அறுவரையும் நாகபட்டணம், திருநள்ளாறு, திருக்காறுயல், திருக்கோளரியூர், திருவான்மியூர், வேதாரணியம், இவைகளில் எழுந்தருளச் செய்தனன். பின் சக்கிரவர்த்தி மன வெழுச்சியுடன் தனது பட்டணமாகிய கருவூரைச் சேர்ந்து அளவற்ற காலம் செங்கோல் செலுத்தி வரும் போது பரமசிவ கடாக்ஷத்தை நினைந்து தனது புத்திரனுக்குப்பட்டாபிஷேகம் செய்து வைத்துத் தான் தவவேடம் பூண்டு கானகம் சென்று அரிய தவங்களைச் செய்து பெறுதற்கரிய சிவபதஞ் சேர்ந்தனன்.

## "வள்ளி நாயகியார் திருமணம்"

மிகவளத்தைக் கொண்டிருக்கும் தொண்டை நாட்டில் மேற்பாடியென்னும் பதி ஒன்று உண்டு. அதற்கருகில் வானத்தை அளாவப் பருத்து ஓங்கிய பருவதம் ஒன்று இருக்கிறது. அது வள்ளிநாயகியாரைத் தன்னிடத்திற் படைத்திருக்கும் மகத்துவத்தினுல் வள்ளி

மலையென்னும் பெயரைக் கொண்டிருக்கும். அதிற் சிவகுமாரன் திருநாமங்களில் ஒன்றாகிய குமரனென்னும் பேரைப் படைத்திருப்பவன் ஒருவன் தன் துணைவியுடன் சுப்பிரமணியக்கடவுளைக்குறித்து அளவற்றகாலம் செய்தவரும் விரதபலத்தினாற் சில பிள்ளைகளைப்பெற்றும் புத்திரி யில்லாமையால் அந்தப் பாக்கியத்தையும் கிடைக்கப் பெற்றுக்களிக்க விருப்புற்றவனாய்த் தங்கள் குலதேவதையா யிருக்கின்ற சுப்பிரமணியக் கடவுளுக்குப் பூசனை வழிபாடுகளும் திருவிழாக்களும் வெறியாடல்களும் சம்பிரமமாக நடத்திக் கொண்டிருந்தனன்.

மேற்குறித்த மலைச்சாரலின் அருகில் தழைத்தோங்கும் சோலையின்கண் சிவமுனிவரென்னும் தவசிரேஷ்டர் பர்னசாலை செய்து கொண்டு அதிற் சிவத்தைக்குறித்துத் தவஞ்செய்து கொண்டிருந்தனர். அவருக்கு முன் வெற்றி வேலாயுதக் கடவுளுடைய திருவருளினாற் பொன்மயமாகிய அழகிய பெட்டைமான் ஒன்று தோன்றியது. ரிஷிபுங்கவர் அதனைப் பார்த்தவுடன் தருணமங்கையை நேர்ந்த காமுகனைப்போலக் காமக்கவலையிற் பட்டுப் புணர்ச்சியை அநுபவிக்க விரும்பிப் பின்விரதத்தை ஒழித்துத் தவத்தைப்பேணி யிருந்துவிட்டனர். அந்தச் சிவயோகியினது திருஷ்டி சம்பந்தத்தினாற் பெண்மானினுடைய உதரத்தில், அத்தலத்திற் கருகில் தவஞ்செய்திருக்கும் மகாவிஷ்ணுபெற்றகன்னிகையாளவள்குமாரதேவர் கட்டளைப்படிக்கு அத்தருணத்தைத் தெரிந்து பிரவேசித்திருந்தனள். அந்தமானனது அப்பாற் பூரணகருப்பமாகி வள்ளிமலையின் பேரில் வேடப்பெண்கள் சில்லாக்கோலினால் வள்ளிக்கிழங்கைக் கல்லியெடுத்திருக்கும் குழிகளினொன்றில்வள்ளிநாயகியாரை யீன்றது. ஒப்புவமையில்லாத எமது இறைவியானவள் ஒருமானின் இடமாகத் திருவவதாரம்செய்தது ஒரு திருவிளையாடலாக நினைப்பதன்றி வேறுமுண்டோ! அந்தப்பெண்மான்தன் இனமில்லாத பெண்குழந்தையைப் பார்த்துப் பயந்து ஓடிப்போனது. எமது தலைவியானவள் ஏகாங்கியாய்ப் பசியினால் வருந்திச் சரஸ்வதியின் இன்னிசைப்பெருக்கோவெனக் கேட்போர் சந்தேகிக்க அழத்தொடங்கினள். சண்முகதேவர் முயற்சியினால் வேடராஜன் தன் தேவியுடன் பலர் சூழ்ந்துவரத் தினைப்புனங்களைச் சுற்றிப்பார்த்து வரும்போது அம்மையின் அழுகுரலைச் செவிக்கு அமுதாகக் கேட்டுத்தேடிவந்து பெண்ணரசியைக் கண்டு தேகம் பரவசமாகிக் குழந்தையை மெல்ல யெடுத்துத் தன் துணைவியின் கரத்திற் கொடுத்து நமது

குறை இன்று ஈடேறியதென்று களித்தனன். வேடர்களுக்கு அரசியானவள் பெண் அமுதந்தைக் கரங்களில் ஏந்தியவுடன் தன் கொங்கைகள் பூரித்துச் சொரிகின்ற பாலமுதத்தை அம்மைக்குத் தெவிட்டக்கொடுத்துச் சீராட்டி மகிழ்ந்தனள். வேடராஜன் தன் தேவியுடன் மகளையும் எடுத்துக்கொண்டு தன்பதியாகிய சிற்றூரைச் சேர்ந்து குமாரக்கடவுளுக்குச் சிறப்பொடு பூசனை வழிபாடுகளை முற்றியிருந்தனன். பின் எமதன்னையானவள் பருவக்கிரமமாகச் சப்பாணி கொட்டியும் தவழ்ந்தும் தளர் நடைகொண்டும் தோழிகளுடன் விளையாடியும் மணிகளை வாரிக்கொழித்தும் முத்துகளினுற் சிறுவீடு கட்டியும் நிலாச்சோறு சமைத்தும் அம்மானை ஆடியும் சிறுதேர் உருட்டியும் அம்புலியைக் கூவியும் புஷ்பப் பந்தாடியும் மாலைகள் செய்து சூடியும் இவ்விதவிநோதத் திருவிளையாடல்களைச் செய்து பூர்வக்கியானம் சற்றுமில்லாவராய்த் தமது தாயானவள் பலவித உபசாரங்களைச் செய்துவர விருத்திச் சந்திரனைப்போல வளர்ந்து குமரன் புயாசலங்களைத் தழுவுவதற்கு இந்தப் பருவம் தகும் தகும் எனக் கொண்டாடும் படிக்குப் பன்னிரண்டு வயது நிறைந்த பாலகுமாரத்தியாகக் காணும் தருணத்தைத் தாய்தந்தையர் தெரிந்து களித்தவர்களாய்த் தங்கள் குலமுறைப் பாராட்டி வள்ளிநாயகியாரைத் தினைப்புனத்தின் பரணினிடத்திற் கிளிகளாதிய பறவைகள் இறங்கிக் கதிர்களைக் கவரவொட்டாமற் காத்திருக்க வைத்திருந்தனர். வள்ளிநாயகியாரும் அதிக ஸந்தோஷத்துடன் மற்ற வேடுவப் பாவைகளுடன் யானைத்தந்தங்களைக் கால்களாகச் சேர்த்து வயிரச்சட்டங்களைப் பரப்பியுள்ள உயர்ந்து விளங்கும் பரண் பேரில் ஏறி வீற்றிருந்து தமது திருக்கரங்களிற் பற்றியகவணை ஒவ்வொருதரம் சுழற்றிப் பூவைகாள்! மாடப்புருக்காள்! ஆலோலமெனக்கூவி இரத்தினங்களைக் கடாவியோட்டியும், மயில்காள்! கிளிகாள்! ஆலோல மென்று அதட்டியும், குயில்காள்! சேவல்காள்! ஆலோல மெனத் துரத்தியும் இவ்விதங்களாகப் பட்சிக் கூட்டங்களையும் மிருகப் பெருக்கையும் ஓடும்படி பறக்கடித்துத் தினைப்புனத்தை ஏமாறுமற் காவல் புரிந்து பிதாவினுல் வேளைக்கு வேளைகொண்டுவந்து கொடுக்கப்பட்ட தேன் தினைமா பண்டு பலாதிகளைத் திருப்தியாக உண்டு மனவெழுச்சியுட னிருக்கின்ற தருணத்திற் பாலசுப்பிரமணிய தேவர், முன்னய் அவளுக்கு அனுக்கிரஹித் திருக்கின்ற படிக்குக் காட்சிதந்து ஆண்டு இரட்சிக்கத் திருவுள்ளத்திற் கொண்டவ

ராய்க் கந்தமாதன வரையில் தெய்வயானை யம்மையுடன் குலவி யிருந்தவர் அத்தலத்தினும் முன் போலவே காட்டி வெளிப்பட்டுத் தனியனாக வந்து திருத்தணிகை வரையைச்சேர்ந்து காலம் பார்த்திருந்தனர். அப்போது உலகம் எங்கணும்உலவி வரும் நாரதரிஷியானவர் தினைப்புனக்களி னொன்றில் ஆயாலோட்டிக் காத்திருக்கின்ற வேடராஜ புத்திரியைத் தெரிசித்தவுடன் உள்ள முருகிக்கரங்களைக் கூப்பிப் பாலசுப்பிரமணிய தேவருக்குப் பாரியாதற் பொருட்டு அரியதவங்களைச் செய்து அவருடைய அருளையும் பெற்றிருப்பதால் இந்த மாதாவினது பெருமிதங்களை உடனே சிவகுமாரனுக்குத் தெரிவிப்பேனெனத் திருத்தணிகையைச் சேர்ந்து கந்தசுவாமி யாரை விழிகள் களிக்கக்கண்டு தீர்க்கதண்டம் சமர்ப்பித்தெழுந்து குமாரக்கடவுளே! இதற்குச்சமீபத்திலுள்ள மலையில் வள்ளியம்மை யென்னுந் திருநாமத்தைக்கொண்டு பன்னிரண்டு வயது பாலகுமாரத்தியாய்ப் பரணிலிருந்து தினைப்புனத்தைக் காவல் கொண்டிருக்கும் மாதரசைக்கண்டு வந்தேன். அந்தமாதாவின் சுந்தரவடிவின் பெருக்கையும் குணாதிசயங்களையும் பார்க்குமிடத்தில் ஸ்ரீ மகாலெட்சுமிக்கும் மேற்படக் காணுகின்றது. தேவரீர் எழுந்தருளி அந்நாயகியாரைக் கண்டு களிக்கலாகுமென விண்ணப்பஞ் செய்து தனதிருப்பிடம் சென்றனர். குமாரசுவாமியார் அக்கன்னிகை யினிடத்தில் மையல் கொண்டு வேடக்கோலம்பூண்டவராய்ப் புறப்பட்டுத் தமது சித்தத்தைப் புறம்பிற் செலுத்தாமல் ஏகமனதாய்ப் பயிரைப்போற்றி வரும் வேடர் பெருமான் தவக்கொழுந்தை வந்து கண்டவுடன் நம்கடவுளுக்கு விரகாக்கினி மேலிட்டுச் சகிக்கக்கூடாமையால் மெல்ல மெல்ல அம்மையார் இருக்கும் பரணுக்கருகிற் சென்று அவள் மீதில் தமது விழிகளைச் செலுத்தி இதனைக் கூறுவதாயினர். பாலையொப்ப வெளுத்து விஷத்தினுங்கறுத்து விளங்கும் நேத்திரங்களையுடைய பெண்கள் சிகாமணியே! உமது சுந்தரவடிவினைக் கண்ட மாத்திரத்தில் எமக்கு மனந்தாளவில்லை. உம்மைப்போன்ற வரை எவ்வுலகத்தினும் கண்டதில்லை. தினைப்புனத்தைக் காக்கும் படிக்கு உம்மைத்தனித்து விட்டிருக்கும் நியாயம் அடுக்குமோ? உம்மைவிட்டுப் போக மனமில்லாமல் மதிமயங்கி வருந்துகின்றாம் களிக்கும்படியாக உமது பெயரைச்சொல்லும்? அதற்குச் சம்மதமில்லாவிடில் நீர் வாசஞ்செய்யும் சிறந்த பதியாதெனப்பேசும்? அதற்கும் இஷ்டமில்லாமற் போமாயின் உமது சிற்றூரு

க்குப்போகும் மார்க்கத்தையாவது திருவாயைத் திறந்து தயை செய்து செப்பவேணும் ஓ! பெண்கள் நாயகமே! என் கேள்விகளைக் காதுகொடுத்து வினவி மறுமொழியாட மனமிரங்கீராயின், யான் என்னசெய்வேன்? இவை நிற்க, என்மனமும் தேகமும் பூரித்துக் களிக்கும்படிக்கு நகை முகத்தை யாயினுங்காட்ட வொண்ணுதோ? அல்லது சேற்கெண்டையைப் போலப் பிறழும் திருநோக்கத்தை க்குளிர்ச்சியாக என் பேறிற் செலுத்தலாகாதோ! உமது தரிசனை யைப்பெற்ற மாத்திரத்தில் நிலைகலங்கிப் பொறிகள் மயங்கிக் காமவலையிற்பட்டுழலும் தமியேன் களித்துப் பிழைக்கும் மார்க்கமொன்றைக்காட்டாமலும் சற்றும் என்னிடத் தன்பைச் செலுத்தாமலும் இரக்கமற்று இவ்வாறேஇருப்பீராகில், சத்தியமாகச் சொல்லுவேன்! எக்காலத்திலும் தீராத பழி பாதகம் உம்மைச் சேருவதற் கையமில்லை! பராமுகமாயிராமல் இதற்கொரு வகைதேட வேண்டும்! என்று உலையிற்பட்ட மெழுகைப்போல மனம் கரைந்து மறச் சிறுமியின் மேற்கொண்ட மையல் வலையில் அகப்பட்டுக் கொண்டு திகைப் பவனை யொப்பப் பற்களைக்காட்டி முகமலர்ச்சியுடன் வருந்திக் கெஞ்சிக் கெஞ்சிக் கரங்களை நீட்டி நீட்டிக் குறை யிரந்து நின்றனர். அக்காலத்திற் பால சுப்பிரமணியக் கடவுள் நடித்த திருவிளை யாடல்களைப் பார்க்கு மிடத்திற் சோடச கலைகளை யுடைய சந்திரன் விளக்கமானது அலைகள் மிகுந்த நீர்ப் பெருக்குள் தோற்றும்போது கலங்கிக் காட்டுமாறு போல விருந்தது. அதுசமயத்திற் கேசவன் திருக்குமாரியிடம்வேடராஜன் தன்பரிசனருடன் தினைப்புனத்திற்கு வரும் அரவத்தைச் சுந்தர சண்முகர் தெரிந்தவுடன் தமது தெரிசனையை அவர்களுக்குக் காட்டாமல் மறைத்து வேங்கைமரக் கோலங்கொண்டு நின்றனர். வேடராஜன், புத்திரிக்குத் தின் பண்டங்களைக் கொடுத்துத் திரும்பும்போது பக்கத்தில் தழைத்தோங்கி நிற்கும் வேங்கையின் வளத்தைக்கண்டு அதிசயித்தனன். அவனுடன் வந்த கடின சித்தமுடைய வேடர்கள் இது பரியந்தம் இவ்விடத்தில் இந்த மரத்தைக் கண்டது கிடையாதே! இதனால் சில தீங்குகள் நேரிடக் கூடியதாயிருக்கும். ஒரு நிமிஷத்தில் இதனை முறித்தெறிவோம் எனமேவிட்ட காலத்தில் அரசன் தன் குமாரத்தியைப் பார்த்து அம்மணி! இம்மரம் வந்த காரணமென்ன வென்று வினவ, அம்மை பயந்து அப்பனே! எனக்கொன்றுந் தெரியாது மாயமா யிருக்கிறதென்று கூறக்கேட்டுப்

பிதா வானவன் நீ இந்த மரத்தின் அழகிய புஷ்பங்களைப் பறித்து விளையாடிக் காலங் கழிக்கயேதுவாயிருக்குமென்று சொல்லிப் பின் வேடர்களை அதை வெட்டுவதினின்றுந் தடுத்துத் தன்பதிக்குச் சென்றனன். அவர்கள் மறைந்தவுடன் சுப்பிரமணிய தேவர், வேங்கையுருவை யாற்றிக்கொண்டு அதிக சுந்தரமுள்ள மானிட வடிவைத்தாங்கி வேடராஜ புத்திரிக் கெதிரில் நின்று, ஏ! தேமற் பரந்து விளங்குந் தன பாரங்களையுடைய குறப்பாவாய்! உமது அழகைக் கேள்விப்பட்டு வெகு தூரத்திலிருந்து வந்தேன்! உமது திருவடிகளல்லது எனக்கு வேறு கதியில்லை! எக்காலத்திலும் உம்மைப் பிரிய வறியேன்! நமது விரகாக்கினி தணியும் படிக்கு எம்மை ஆலிங்கனஞ்செய்து மருவுவீராயின் நீர் எதனைக் கேட்டாலும் தருவோம்! என்று காமலாகிரிக்குரிய வருத்தங்களைக் காட்டி நிற்க, வேடராஜன் புத்திரியானவள் அவ்வாக்கியங்களைக் கேட்டுக் குறிப்பாய்க் குமாரசுவாமியின் மனக்கருத்தைநிதானித் தறிந்து கொண்டு இவர் வடிவிற் பெருக்கும் குணாதிசயங்களும் கொஞ்சிப்பேசும் வார்த்தைகளின் குளிர்ச்சியும் வெகு நேர்த்தியென்று நாண மிகுதியினால் தலையை யிறக்கி யிவ்விதம் பேசுவதாயினள். நான் இழிகுலமாகிய வேடர் பாவையாகும். உம்முடைய வடிவின் சிரையும் நடை நொடி பாவனைகளையும் பார்க்குமிடத்தில் இராஜ குமாரனாகவும் புவனங்கள் அனைத்தையும் பாதுகாத்து இரட்சிக்கும் முதல்வனாகவும் காணுகின்றது. இத்தகைய தேவரீர் ஹீனளாகிய என்னைத் தழுவ நினைந்து தகாத வார்த்தைகளைப் பயமற்றுப் பேசுவது பழி யல்லது நன்மார்க்கத்துக் கடுக்குமோ! வீரத்தன்மை பொருந்திய புலியானது பசிப் பிணியினால் வாடுமாயினும் அற்பமாகிய புல்லைத்தின்ன நினைப்பதுண்டோ! எனப் பல விதங்களில் வள்ளிநாயகியார் மறுதலை பேசிய சமயத்தில் வேடராஜன் சகல ஆடம்பரங்களுடன் வருகின்றதனைத் தெரிந்து எமதன்னையானவள் திமிக்கிட்டு எமது நாயகனை நோக்கி ஐயனே! தாட்சணிய மற்ற கொடிய வேடர் வருகின்றனர். ஆதலால் துரிதமாயிந்த எண்ணத்தை ஒழித்துப்போய் விடக் கடவிரென்று வேண்டிக் கொண்டனள். அவள் அன்பிற்கு முருகர் மனம் பூரித்து ஒரு சன்னியாசி வேடங்கொண்டு, அதட்டி உருட்டி மிருகங்களைத் துரத்தி வரும் வேடர்கள் எதிரிற் போய் அவர்களுடைய இராஜனைக்கண்டு திரு நீற்றை யெடுத்துச் "சிவநாதனே இரட்சிக்கக் கடவன்" என அவனுக்குக் கொடுத்து ஆசிர்வதித்தனர். வேட

ராஜன் மகிழ்ந்து உமக்கு வேண்டியதென்ன வென்று கேட்கக்கபடச் சந்நியாசி, இவ்வள்ளி வரையில் உதித்திருக்கின்ற குமரியைக் கலந்து இன்பமாயிருக்க நெடுந்தூரத்திலிருந்து வந்தனம். அதுவே நீ எமக்குச் செய்ய வேண்டும் ஒரு உபகாரம் என்று சிலேடையாகச் சொல்லினர் வேடராஜன், தேவரீர் அப்படியே இந்தக் குமரி தீர்த்தத்தில் மூழ்கி இஷ்டம் போலிருந்து கொண்டு தனித்திருக்கும் எனது புத்திரியினிடமும் அடிக்கடி வந்து விசாரணைசெய்து கொண்டு போம்எனக் கட்டளை யிட்டனன். பின் அரசன் தன் குமாரத்தியினிடம் வந்து கனி வகைகளாதி உணவுகளைக் கொடுத்து இந்தப் பெரியவரும் உனக்குச் சகாயமாக விருப்பரெனச் சொல்லித் தன் பதிக்குச் சென்றனன். சந்நியாசி, தனித்திருக்கும் வள்ளியம்மையைப் பார்த்து, என்ன செய்வேன்! பசியால் அதிகக் களைப்பாய் வருகின்றது! என்று தள்ளாடுவதைக்கண்ட எமதன்னை மிகவும் இரக்கப் பட்டுப் பெரியவரே! இதோ யிவைகளைப் புசியுமென்று தினை மா தேன் கனிகளை நீட்டினள். சந்நியாசி ஆவலுடன் அவைகளை வாங்கித் துரிதமாய் உண்டனர். அச்சமயத்திலது தமது கண்டத்தில் அடைத்துக்கொண்ட தென்பதாய் மிரள மிரள விழித்துப் பாசாங்கு செய்து மற நாயகியைத் தண்ணீர் தர வேண்டினர். பாவையானவள் ஓ தவ சிரேஷ்டரே! சீக்கிரமாயிந்த ஏழுமலைகளையுந் தாண்டி அங்குள்ள திவ்ய தீர்த்தத்தை யுண்டு சிரமத்தை தீர்த்துக்கொள்ளும் என்றனள். சந்நியாசி யானவர், அடி பெண்ணமுதே! வழியை நான் எப்படிக் கண்டு பிடிக்கப் போகிறேன்? நீர் துரிதமா யென்னுடன் வந்து சுனை நீரைக் காட்டித் திரும்பி விடும்! என்றனர். வள்ளி நாயகியார் அதனை எதார்த்தமாக நம்பி வாருமென்று அவரை அழைத்துச் சென்று கபடச் சந்நியாசிக்குத் தாகத்தைப் போக்கி வைத்த காலையில் அவர் தேவியைக் கிருபையாகப் பார்த்து ஓ! பெண்ணரசியே! எனது பசிப்பிணியையும் தாகத்தையும் தீர்த்து வைத்தீர்! அடியேன் கொண்டிருக்கும் மோகக் கவலையையும் தணியச் செய்வீராகில் நமக்கு எல்லாக் குறைகளும் நிவிர்த்தியாகும் என்று தமது இருகரங்களையுங் கூப்பிக்கொண்டு வேண்டி நின்றனர். அதைக் கேட்ட நங்கைநகைத்துப் பெருமூச்செறிந்து நடு நடுங்கிப் பின் சீறி ஓ! முதியரே! நீர் மதி மருண்டு தகாத வார்த்தைகளைப் பேசினீர். குற்றமற்ற தவத்தரைப்போல வந்து என்னை வஞ்சித்து நெடுந்தூரங்கொண்டு வந்து இப்போது

ஆலிபங்களைச்செய்ய விருப்புற்றது உம்க்கு நீதியோ! இதிற் சிறிதே னும் வேடருக்குத் தெரியுமாகில் நம்மிருவருக்குங் கொடிய தீங்குகள் சம்பவிப்பதற்கு அய்யமில்லை! வாயில் வந்தபடிக்குப் பிதற்றலாமா! என்று கூறி நான் எனது இருப்பிடம் போகிறேனென்று நாயகி யார் வேகமாய் நடக்கும்போது எமதையன் பெண்கொடியினது மனவுறதிக்கு மெச்சித்திகைத்தவராய்ச் சற்று யோசித்துத் தமது முன்னவனாகிய விநாயக மூர்த்தியைச் சிந்திக்க அவர் மதயானையின் கோலங்கொண்டு துதிக்கையை நீட்டி விறிட்டு வள்ளிநாயகியாருக்கு எதிர்வர அதை அவள் கண்டு பயந்து நடுங்கிச் சரேலெனத் திரு ம்பி வேகமாய் ஓடிவந்து தவவேடம் கொண்டிருக்கும் குமாரசுவாமி யின்பக்கத்திற் சேர்ந்து சுவாமீ! இத்தருணத்தில் அடியாள் பேரில் இரக்கமுற்று மதயானையைத் துரத்தியென்னைக் காக்கக்கடவீர்! நீர் குறித்தபடிக்கெல்லாம் சம்மதப்படுவேன்! சம்மதப்படுவேன்! என்று அவர் பின்புறத்தில் வந்து முதுகைகட்டித் தழுவி யணைத்திருந்த னள். குறப்பாவையினது கொங்கைகள் தமது முதுகில்தாக்கியபோது குமாரக்கடவுளுக்குத் தேகம் பூரித்து அவளுடைய திருமுகத்தைத் திரும்பிப்பார்த்துப் பெண்கள் சிகாமணியே! பயப்படவேண்டாம்! என்று ஆதரித்துத் தம் மூத்தோனைப் பிரார்த்தித்துச் செல்ல விடு த்தனர். பின் சரவணபவன், வள்ளியம்மையைத் தழுவிக்கொண்டு போய் ஒரு பூங்காவைச் சேர்ந்து தமது உள்ளமுந் தேகமும் பூரித் துக்களிக்கத் தக்கதாக அவளைக் கலந்து இன்புற்று அவளிடத்திற் பெருங்கருணையாகச் சடுதியில் மயில்வாகனாருடராய்க் காட்சிகொடு த்தனர். மங்களமாகிய அந்தத் திருக்கோலத்தை அம்மையார் கண்ட வுடன் தமது விழிகளில் ஆனந்தவாரி பெருகத்தேகம் பூரித்து மன மகிழ்ச்சியுடன் நாயகனை மும்முறை வலம் வந்து பலதரம் அவர் திரு வடிகளிற் பணிந்து கரங்களைக் கூப்பிக்கொண்டு இதுபரியந்தம் பல நடனங்களைக் காட்டி வீண்காலத்தைக் கழித்த காரணமென்னே! பாலாகிய யான் பெண்மதியினால் தமது பெருமைகளைக் கண்டறி யாமற் பலகுறைபாடுகளைச் செய்தேன்! அவைகளை க்ஷமித்து இரட் சிப்பது தமது பாரமாகும்! இன்று முதல் நாயினேனை வழியடிமை யிற் சேர்த்து ஆட்கொள்ள வேண்டும் என்று பலவிதங்களில் நாயகி யார் போற்றும்போது, குமாரகுருபரன் அவளிடத்திற் கடாக்ஷ வீட்

சண்ணியத்தைச் செலுத்திப் பெண்ணரசியே! நீ முன்னம் எமது மாதுலராகிய ஸ்ரீமகா விஷ்ணுவுக்கு மகளாய் நம்மைச்சேர்ந்து களிக்கவிருப்பங்கொண்டு தவங்களைச் செய்திருந்த காலத்தில் நாம் உனக்கு அநுக்கிரஹித் திருந்தோம். அந்தப்படிக்கு இப்போது நாம் உனக்குக் கடாக்ஷிக்க வந்தனம். நம்மைக்குறித்து நீபேசிய வாசகங்களைத் தோத்திரமாகக் கொண்டனம். நீ இவ்விடம் வந்து நேரமாயிற்று தினைப்புனத்தைக் காக்கும்படிக்கு முன்னே போகக்கடவாய், நான் பின்னே வருகின்றேனெனத் திருவாய் மலர்ந்தனர். வள்ளிநாயகியார் கணவனைப் பிரியமனமில்லாத வளாகப்பிரிந்து போய்த் தினைப்புனத்தைச் சேர்ந்து முன்போற் பரணிலேறி ஆயாவோட்டி யிருந்தனள். அத்தருணத்தில் அடுத்த கொல்லையில் தினைகளைப் போற்றியிருந்த பாங்கியானவள் சிலசந்தேகங்களைக் கொண்டு தலைவியிடம்வந்து சேவித்து அவள் நடைநொடி பாவனைகளும் பேச்சும் கருத்தும் வேறுபட்டுக்காட்டுவதைக் குறிப்பாய்த் தெரிந்து, தாயே! நீர் இக்காவலை விட்டு எவ்விடத்திற்குப் போனீர்? என்றனள். தலைவி மிகவும் நாணினவளாய், அடி தோழி! வெப்பம் சகிக்கமாட்டாமற் சுனைநீராடி வந்தேனென்றாள். தோழி நகைத்து நீர்பேசியது வெகுநேர்த்தி, விழிகள் சிவக்கவும் அதரம் வெளுத்து காட்டவும் சரீரம் வாட்டமுற்று வியர்க்கவும் கொங்கைகள் பசலைமூடி விம்மவும் இத்தகைய பலமாறுபாடுகளைத்தரவல்ல சுனையிருக்கு மிடத்தைக் காட்டக்கடவீர் என வினவிய போது, நாயகியார், பாங்கியைக் கோபித்துப் பார்த்து என் பிராண பதமாகிய தோழி யென்று நான்உன்னை நம்பி யிருக்கும்போது என்னிடத்திலேதோ சில குற்றங்களைக் கற்பிக்கின்றனே! சற்றும் இரக்கமற்று இப்படிக்குப் பேசுவையோ வெனப் பிணங்கி இவ்விதங்களில் வாதாடி யிருக்கும்போது, சிவ சுப்பிரமணிய தேவர் வில்லை இடக்கரத்திற் கொண்டு வலக்கரத்திற் பாணத்தைப்பற்றி வேட்டையாடி வருகின்றவனைப் போல வேகமாய் வந்து ஓ! பெண்களே! எனது பாணத்தாற் காயப்பட்டு ஓடி வந்த ஒரு யானையைக்கண்டீர்களோ? என்றனர். பாங்கி, அவரை நிதானித்து நோக்கி, உமது சூரத்தன்மைகளை மங்கைபரிடத்திற் சொல்லியாவ தென்னை? என்று மறுமொழி கூறி, ஐயர் நிலைமைகளையும் தலைவியின் நாட்டத்தையும் நிர்மானித்தவளாய் இனி இவ்விடத்திலிருக்க லாகாதென்றெண்ணித் துரிதமாய் அடுத்த கொல்லையைச் சேர்ந்திருந்தனள். அப்போது வீரம் பேசி

வந்த சேவகன், தோழியைப் பின் பற்றிச் சென்று ஏ! பெண்ணே! தமியனுக்கு உறுதியாகிய சுற்றமும் சிநேகிதரும் நீங்களே! உங்களிருவருக்கும் வேண்டிய வெத்தலைய பொருள்களும் இந்த நிமிஷத்தில் தருவித்துக் கொடுக்க காத்திருக்கின்றனன். கோபங் கொள்ளாமற் சற்று அநுக்கிரஹம் செய்யவேண்டுமென்ற குறிப்பினைத் தோழி தெரிந்தவளாய் ஐயனே! எங்கள் குலத்துக்குப் பூமியுள்ள பரியந்தம் தீராத பழிப் புரையை நாட்ட வந்தீர். ஆயினும், இழிவாகிய மறவர் குலப் பாவையை உம்மை யொத்த கன்னியவான் விரும்புவது அழகோ? இது தகாதனவாதலால் மறந்து விடுமென்ற தோழியைக் குமர குருபரன் பார்த்து, எமது நெடிய மாமனாகிய ஸ்ரீ மகா விஷ்ணு பெற்ற அமுதத்தை வேடர் வருந்திப் பெற்ற தவக் கொழுந்தை எனக்குக்காதலைத்தந்து நல்லருள் செய்த பெண்கள் நாயகத்தை மறத்தி யெனப் பேசுவது பேதமையா மெனக் குறித்த இனிய வாசகங்களைக் கேட்ட பாங்கியானவள் யாதுந் தோன்றாமல் மயங்கி ஐயரே! வேடர் திரட்சியாயிவ்விடம் வருவார்கள், அவர்கள் மிகவும் கொடியவர்கள், அவர்கள் சில சந்தேகங்களைக் காண்பாராயின் முன் பின் பாராமல் உம்மைக் கொலை செய்து விடுவார்கள், எங்கள் பிராணனுக்கும் ஆனிவரும், நீர் இவ்விடம் விட்டுப் போய்விடும் என்றனள். சரவணபவன் நகைத்து ஏ! பெண்ணே! உமது இறைவியுடன் என்னைக் கூட்டுறவு செய்யாமற் போவீராயின் ஏட்டினிடத்தில் அவள் வடிவை யெழுதி மடலேறி உங்கள் ஊர்விதிகளி லோட்டத் துணிந்திருக்கின்றனன். அக்காலத்திற் சகலரும் பகிரங்கமாகத் தெரிந்து கொள்வர். இதனைச்சத்தியமாக நம்பக்கடவி ரென்றவுடன் தோழியானவள் இது வென்ன அநியாயமென்று பின் சற்று மனமிரங்கி, நீர் அதோ காணுகின்ற மாதவிச்சோலையிற் போய் மறைந்திரும்பீராயின் எங்கள் மங்கையை அவ்விடத்துக்கு அழைத்து வருவேனென்று நிச்சயங்கூறி அவரை அனுப்பிவிட்டுத் தன்தலைவியினிடம் வந்து சேவித்துக் குமரனுக்குண்டாயிருக்கும் காதல்மிகுதியையும் அதற்கு இசையாமற் போனால் வரும் அவதூறுகளையும் விவரித்துச் சொல்லித் தலைவியை மெல்ல அழைத்துக் கொண்டு போய் மயிலினங்கள் களித்தாடும் குளிர்ந்த மாதவிப் பொங்கரில் வைத்துப் பாவாய்! நீர் இங்கிருக்கக்கடவீர் நான் புஷ்பங்கள் பறித்து வருகிறேனென்று குறிப்பாய்ச் சொல்லிப் போயினள், வள்ளி நாயகியார், காந்தனை நினைந்து சுற்றிலும் விழிகளைப் பர

ப்பிப் பார்த்திருக்கின்ற காலையில் அளவிறந்த மகிழ்ச்சியுடன் விசாகப் பெருமான் அவள் எதிரில் வந்து நின்றனர். வள்ளிநாயகியார் எமது இறைவன் பாதங்களில் சேவித்தனள். கேசவன் மருமகன் தமது திருக்கரங்களை நீட்டி அவளை வாரியெடுத்தணைத்து இன்பநலங்களை அனுபவித்து இருவரும் தேகப்பரவசராய்க் களித்தபிற்பாடு குமாரசுவாமியானவர் தேவியை நோக்கி நீ முன்போலத் தினைப்புனத்திற் போயிருப்பாய், நாம் காலையத்தினம் வருவோமெனத் திருவாய் மலர்ந்து மறைந்தனர். வள்ளியம்மையார் எமதிறைவன் தோற்றங்காணாமையால் வருந்திப் பொதும்பரைக் கடந்து வரும்போது பாங்கியும் எதிர்சென்று தான் பறித்து வந்த புஷ்பங்களை அவளுக்குச் சூடிப்பின் இருவரும் தங்கள் இருப்பிடத்திற் சேர்ந்திருந்தனர்.

அக்தருணத்தில் தினைக்கதிர் முற்றி விளைந்து விட்டதனை வேடராஜன் தெரிந்து குறிச்சியிலிருப்பவ ரனைவரையும் ஒப்படிக்காக வரும்படிக்குக் கட்டளையிட்டுத் தன்பெண்ணைப் பார்த்து அம்மணீ! நீ இனி நமது சிறு குடிலைச்சேர்ந்து சௌக்கியமாயிருப்பை யென அவளை அனுப்பிவிப்பதாயினன். அம்மையானவள், கணவன் நாளை இங்குவந்து தேடுவாரே என்று மனம்வருந்திப் பறவைகளுக்கும் மிருகங்களுக்கும் சங்கதியைக் குமரனுக்குத் தெரிவிக்க மன்றாடிக் கேட்டுக் கொண்டவளாய்த் தன்மனையைச் சேர்ந்து விளையாடல்களைத் துறந்து ஆவலுடன் வந்த அன்னையையும் வளர்த்த தாயையும் கவனியாமற் குமரனையே யென்றும் நினைந்து துக்கசாகரத்தி லழுந்திப் பிராணன் உண்டோ இல்லையோ வெனச்சங்கை கொள்ளும் படிக்குச்சோர்ந்துபிரக்ஞைதப்பி விழுந்தனள். அதனைக்கண்ட செவிலித்தாய்முதலிய வேடப்பெண்கள் அதிகக் கிலேசத்துடன் அம்மனைவாரியெடுத்து அவளுடைய உறுப்புகளைக் குறிப்பாகப் பார்த்து அவள் திருமேனி துவண்டுகாட்டுவதையும் விழிகளில் நீர் பெருகுவதையும் நரம்புகள் பசலைகொண்டு பூரித்திருப்பதனையும் கொங்கைகளில் நகக்குறிபட்டு விம்மியிருப்பதனையும் மற்றக் குறிப்பேதங்களையும் அறிந்தவுடன் சூர்ப்பகையாகிய வேலாயுதன் அவளைத்தொட்ட தென்பதையறியாமல் மலையில் தனிமையாகத் தினைப்புனம் காவல் கொண்டிருக்கும்போது வள்ளிமலைச்சாரலி லிருக்கும் தேவதை சோங்கிற்று

வென்று பலரும் பற்பலவிதங்களாகப் பேசியிருக்கும்போது தந்தையாகிய வேடர் பெருமானும் சுற்றத்துடன் திரண்டுவந்து வள்ளிநாயகியாரின் நிலைமையைப் பார்த்துக் கிலேசித்துப் பின் குறமூதாட்டிக்கும் முருகனுக்கும் சிறந்த பூசனைகளை நடத்தி வெறியாடல்களைச் செய்து வந்த சமயத்தில் ஒருவன் பேரில் சுப்பிரமணியர் ஆவேசம் வந்து வேடராஜ புத்திரியானவள் தினைப்புனத்தில் தனிமையாகக் காவல்கொண்டிருந்த போது அவளுடைய சுந்தரவடிவத்திற்கு இச்சித்து நாமே வலிதில் அவளைத்தொட்டனம், அவளை நமது வெறியாடலுக்குள் ளாக்குவீர்களானால் அவள் மயக்கத்தினின்றும் நீங்கி முன்னிலும் பதின் மடங்கு மனவெழுச்சியுடன் இருப்பளென்று சொல்லிமுடிந்தவுடன் வள்ளி நாயகியார் களைதெளிந்து முன்போலத் தாய்தந்தையருடன் வார்த்தையாடிச் சந்தோஷமாயிருந்தனள்.

இவைநிற்க, குமாரசுவாமியார், மறுதினம் வழக்கப்படிக்கு மாறுவேடந்தாங்கி வந்து வள்ளிமலையில் திருத்தேவியரைக் காணாமல் மனம் கலங்கிப் பிரமைகொண்ட வனைப்போலப் புலம்பி அந்த வரைமுற்றிலும் திரிந்தலைந்து எதிர்ப்பட்ட பட்சி மிருகங்கள் விருட்சங்களிடத்தில் என்மனதிற் கினியபெண் கொடிபோனவிடம் சொல்வீரெனக் கேட்டுக்கொண்டு பின் இளைத்து மனவூக்கமற்று வாடிக் காமக்கவலையுற்றுப் பெருமூச்செறிந்து வள்ளியம்மையார் அடிச்சுவட்டை நாடித்திரிந்து கடைசியில் அர்த்தராத்திரி யானவுடன் மெல்ல மெல்ல வேடர் சிற்றூரிற் புகுந்து குறவர் பெருமான் குடிசிற்கு அருகிற் போய்ப்பதுங்கி நின்று கரத்தைத் தட்டிச் சிலசைகைகள் செய்தனர். இச்சம்பவம் நேருமென்று முன்னமே அவ்விடத்தில் நித்திரை கொள்ளாமலிருந்த தோழியானவள் அந்த அரவத்தைத் தெரிந்து மெல்ல வெளியே வந்து குமாரசுவாமியார் திருவடிகளில் வணங்கித் தேவரீர் இராக்காலத்தில் இவ்விடம் வருவது தகாது. நீங்கள் இருவரும் கலந்து இன்புறுவதற்குத் தகுந்த விடமும் இல்லை. அப்படி நேரினும் பின்பு எங்கள் பெண்கொடியானவள் உம்மைப் பிரிந்திருக்கச்சகியாள். இவ்விதச் சங்கடங்களிருக் கின்றமையால் வள்ளிநாயகியாரை உமது இடத்துக்குக் கொண்டு போய் இஷ்டப்படிக்குக் குலவிஇருப்பது உமக்குத் தகுதியாகுமென்று சுவாமியை அதற்குச் சம்மதப்படுத்தி அவரை அவ்விடத்தில் நிறுத்திச் செவிலித்தாயானவள்

ரும்பி வள்ளிநாயகியாரிடம் மெதுவாகச் சென்று அவளிடம் அமுதெனும் படிக்கான வாசகங்களைச் சொன்னவுடன் அவள் மனங்குளிர்ந்து துரிதமாய்ப் பரங்கியின் கரத்தைப் பற்றிக்கொண்டு தாய் தந்தையரும் மற்றவர்களும் மெய்மறந்து தூங்குவதைக் கண்டு எவருக்கும் தெரியாமல் நடையைச் சேர்ந்தவுடன் தோழியானவள் தாழ்ப்பாள் சத்தம் தெரியாமல் விலக்கிக்கதவைத் திறந்து வெளியில் அவளைக் கொண்டுவந்து சேர்த்தனள். இறைவியானவள் அங்கு நின்ற அமதிறைவனைக் கண்குளிரக்கண்டு சேவித்து, நாயினேன் பொருட்டுத் திருவடிகள் வருந்தக் கேவலமாயிருக்கப்பட்ட இக்குறவர் குறிச்சியை நோக்கி யாதொரு துணையுமின்றி இந்த நடுராத்திரி வேளையில் தேவரீர் எழுந்தருளுவதோ! சுவாமிக்குத் துன்பமாய் அடியாள் செய்ய நேர்ந்த இக்குற்றத்தினை க்ஷமிக்க வேண்டுமெனப் பிரார்த்தித்தனள். அது சமயத்தில் தோழியானவள், இங்கே நீங்கள் நேரப்படவிருக்கலாகாது, மோசம் வரும், தேவரீர் சீக்கிரமாக இந்தப்பெண்கோடியைத் தமது பதிக்குக் கொண்டுபோய்ப் பாதுகாத்திரட்சிப்பது தமது பாரமாகும், இவளை அருமையாக வளர்த்தனம், இக்காலத்தில் அவள் உமது அடைக்கலம் தான் என்று தலைவியின் கரங்களைப்பற்றிச் சரவணபவன் மலர்க்கரத்தில் வைத்துத் தொழுது நின்றனள். கந்தசுவாமியார் மனமகிழ்ந்து தோழியை நோக்கி, ஓ! பெண்ணே! நீபரிவாய்ச்செய்த இந்த உபகாரத்தை நாம் மறக்கமாட்டோம் எனத்திருவாய் மலர்ந்தனர். தோழி, பின் வள்ளிநாயகியாரைச் சேவித்துத் தன்னிருப்பிடஞ் சென்றனள். அப்பால் குமாரதேவரானவர் தமது திருத்தேவியுடன் ஓர் சோலையுட் பிரவேசித்து அவள் இன்பநலங்களை அநுபவித்திருந்தனர்.

இவை நிற்க, அதிகாலையிற் குறிச்சியில் வள்ளிநாயகியாரைக் காணமல் தாயானவள் பதைபதைத்துத் தன் நாயகனிடம் சொன்னமாத்திரத்தில் அவன் கோபங்கொண்டு என்பெண்ணை மாயமாய்க்கவர்ந்து போனகள்வனைச் சும்மாவிடேனென்று தன் சேரியிலிருக்கின்ற வீரரனைவரையும் திரட்டிக் கொண்டு ஏகமுகமாய் ஆயுதபாணிகளாகத் தேடிவரும் போது அதனைச் சோலையி னிடத்திலுள்ள வள்ளிநாயகியார் தெரிந்து நடுநடுங்கிச் சுவாமியை வேண்டிக் கொண்டனள். வாரணத்துவஜர் தம் நாயகியாருக்குத் தயிரியஞ்சூறி நீ நடக்க விரு

க்கும் வேடிக்கையைப் பார்த்திருக்கக் கடவாயெனக் கட்டளையிட்டனர். அத்தருணத்தில் வேடர்கள் ஆர்ப்பாடங்களுடன் கந்தசுவாமியாரிருக்கும் சோலையிற் பிரவேசித்து உற்றுப்பார்த்துக் கள்வன் அகப்பட்டான்! வாருங்கோள்! வாருங்கோள்! என்று கூவ, அதைக்கேட்ட மறவரனைவோரும் ஏகமாய் வந்து கூடி இடிமுழக்கம் போல் அதட்டி எமது பாலசுப்பிரமணிய தேவர்பேரில் இரக்கமில்லாமற் கொடிய பலஆயுதங்களை அளவுக்கு மிஞ்சியபெருக்குடன் சொரிந்தார்கள். அவைகள் குமாரசுவாமியாரின் திருமேனியில் ஒன்றுஞ் செய்யாமற் பக்தர் அருச்சனைசெய்யும் மலர்களைப் போலக் கிழே விழுந்தன. வள்ளிநாயகியார், சுவாமியை வேண்டி அவர்களனைவோரையும் உடனே சம்ஹரித்துவிடப் பிரார்த்தித்தனள். ஞானசுந்தர வேலரானவர் தமது வெற்றிக்கொடியை நினைந்தனர். அக்காலத்திற் சிவந்தகொண்டையுடைய சேவலானது கந்தசுவாமியாரின் திருக்குறிப்பின் படிக்கு விசாலமாய்த் தழைத்திருக்கும் சிறகுகளை விரித்தசைத்து வானவழிக்கொண்டு பறந்து வந்து சிவகுமாரன் சந்நிதானத்தில் நின்று கழுத்தை நீட்டிப் பேரொலி யெழ ஒருவிசை கூவிற்று. அந்தமுழக்கத்துக்கு ஆற்றமாட்டாமற் சத்துருக்கள் ஒருவர்மே லொருவர் விழுந்து மாண்டார்கள். தமது தகப்பனும் முதலிய சுற்றத்தார் மாண்டு கிடப்பதனை வள்ளிநாயகியார் கண்டவுடன் மனஞ்சகியாமற் பதைபதைத்துக்கண்ணீர் விட்டழுது சோருகின்றபோது தீனரட்சகராகிய சுவாமியார் தமக்கு யாதுந்தெரியாதவர் போலத்தம் திருத்தேவியைச் சோதிக்க வெண்ணி யிருந்தனர். அதுசமயத்தில் நாரதரானவர் நடந்த சம்பவங்களைத் தெரிந்து வந்து குமரபரனைச் சேவித்து ஏ! கருணாமூர்த்தி! மூடராக விருக்கும் வேடருக்குத் தேவரீருடைய மகிமைகள் தெரியுமாயின் இப்பெண் கொடியைத் தேவரீருக்குத் தத்தஞ்செய்து அதிக மரியாதையுடன் பூசித்தனுப்புவதற்குத் தடையுண்டோ! கள்ளவேடமாய் வந்து அருமையாய் வளர்த்துவந்த பெண்ணமுதைத் திருடிக்கொண்டு போனால் அவர்கள் சும்மாவிட்டு விடுவார்களோ! காங்கேயனே! திருத்தேவியாரின் மனவருத்தந் தீரக்கிருபைசெய்யவேண்டு மெனப் பிரார்த்திக்கும் மகரிஷியைப் பன்னிருகண்ணன் கிருபையாகப் பார்த்துப் பின் தமது சுந்தரநாயகியாரை அழைத்து நீயேமாண்டவர்க ளனைவரையும் எழுப்பக் கடவாயென்றனர். அம்மையார் அப்படியே அவர்கள் புறமாகத்திரும்பி நின்று நீங்கள

னவோரும் கமலக்கண்ணன் மருகன் கட்டளைப்படிக்கு முன்போல் எழுந்து என்மனக்கவலையைத் தீர்க்கக்கடவீர் என்றனள். உடனே யாவரும் உணர்ச்சி பெற்றெழுந்தனர். சிவகுமாரன் அக்காலத்தில் தாம் கொண்டிருந்த கோலத்தை மறைத்துக் கிருபாசமுத்திரம் பெருகும் தமது சுயசொரூபத்துடன் விளங்கினர். அந்த அற்புதக்காட்சியை வேடுவரனைவரும் தெரிசித்து ஓ! எங்கள் குலதெய்வமே! இழிகுலத்தராகிய அடியோங்களை வம்சபாரம் பரியமாக அடிமைகொண்டு காப்பாற்றும் ஆதிதேவனு யிருக்கும் தேவரீரே எங்கள் பெண்கொடியைச் கோரத்துவமாய்க் கவர்ந்து கொண்டு போய் இந்தக் குலவரம்பை அழித்துத் தீராதபழிப் புரையைப் பிரஸித்தமாக ஸ்தாபிந்தீர். இப்போது அந்தப்பழிச் சொல்லுக்கு ஏதுவில்லாமல் தேவரீர் எங்கள் ஊரைச்சேர்ந்து முறைப்படி யாவரும் அறிய எங்கள் குலக்கொடியைத் திருமணவாயிலாக ஏற்றுப்போகக் கிருபை செய்யவேண்டுமென்று பிரார்த்திக்கச் சரவணேற்பவன் மகிழ்ந்து அவ்வாறே இசைந்து வள்ளிநாயகியா ருடனும் நாரதருடனும் அவர்களுடைய ஊருக்கு விஜயஞ்செய்வதாயினர். வேடராஜன் அடங்கா மகிழ்ச்சியுடன் தனது பெண்ணைச் சகலசம்பிர மங்களுடன் குமரசுந்தரருக்குத் தாரா தத்தஞ்செய்து கொடுத்தனன். பின் நாரதர், சிவகுமாரன் கட்டளைப்படிக்கு ஓமக்கனலை வளர்த்திச் சகலசடங்குகளையும் முடித்து வைத்தனர் அந்தச்சமயத்தில் திரிமூர்த்திகளும் தேவர்களும் ரிஷிகளும் மற்றனேவோர்களும் வந்து சூழ்ந்தனர். சிவபிரானும் தமது தேவியுடன் எழுந்தருளித் தமக்கினிய தம்பதிகளை ஆசீர்வதித்துத் தமதிருப்பிடஞ் சென்றனர். சிவகுமாரன் மற்றவர்களை ஆசீர்வதித்து அவரவர்கள் தங்கள் தங்கள் இருப்பிடங்களுக்குச் செல்லத் திருவுளம் பற்றினர். பக்கத்தில் ஆனந்தப் பெருக்குடன் நிற்கும் வேடராஜனை எமது சுந்தரசண்முகர் கிருபையாகப் பார்த்து இந்தப்பெண்ணரசியுடன் நாம் திருத்தணிகை வரையிற் சேர்ந்திருப்போம், நீ சகலசம்பத்துக்களையும் பெற்று வாழ்ந்திருக்கக் கடவாயென்று ஆசீர்வதித்து அவனையும் அவன் இனத்தவரையும் நிறுத்தித்தமது திருத்தேவியாருடன் திருத்தணிகை வரையைச் சேர்ந்து தெய்வதச்சனுற் சோடித்திருக்கின்ற சபாமண்டபத்தில் உலகங்கள் பிழைத்தற் பொருட்டுக்கிருபாநோக்கஞ் செய்து வீற்றிருந்தனர்.

அக்காலத்தில் வள்ளிநாயகியார் தம் காதலனைச் சேவித்துச்சுவாமி! இந்த மகத்துவம் பொருந்திய மலையினது வரலாற்றை அடியாளுக்குத் திருவுளம்பற்ற வேண்டுமெனப் பிரார்த்திக்கக் குமாரதேவர் ஓ! பெண்ணே! இந்தவரை பரமசிவ கடாக்ஷத்தினால் உலகங்களுண்டானபோது நிருமிக்கப்பட்டது. நாம் சூரபதுமனாதி அவுணப்பாதகருடன் யுத்தஞ்செய்ததால் எமக்கு நேர்ந்த சோபங்களை இவ்விடத்தில் வந்தமர்ந்து தீர்த்துக் கொண்டோம். அக்காரணத்தினால் இம்மலைக்குச் செருத்தணி யென்றும் ஓர் பெயர் உண்டு. தேவேந்திரன் இங்குண்டாயிருக்கும் சரவணப் பொய்கையில் நீராடி நம்மை அர்ச்சித்து இஷ்ட சித்தியைப்பெற்றுப் போயினன். பிரளயகாலத்திலும் தெய்விகம் பொருந்திய இந்தவரையும் தீர்த்தமும் குலைவுதலடைவதன்று. இந்தமலையைத் தூரத்திலிருந்து தெரிசிப்போருக்கும் பாவங்கள் விலகி யோட்டமெடுக்கும். இந்தத்தலத்தில் நமக்கு அதிகப்பிரிய முண்டு. இவ்விடத்தில் நம்மை ஒருதினமாவது யாதாமொருவர் வந்து வழிபாடுக ளியற்றுவராயின் அவர்களுக்கு நாம் இகபர சுகங்களைக்கொடுத் தருளுவோம் எனக் குமாரதேவர் போதித்தவைகளை வள்ளிநாயகியார் கேட்டுச் சுவாமி! அடியாளும் பாக்கியவதியானேன் எனப்பணிந்து மகிழ்ந்திருந்தனள்.

பின் வேலாயுதக்கடவுளும் திருத்தேவியாரும் அந்தமலையினிடத்திற் சதாசிவப் பிரமலிங்கத்தை ஸ்தாபித்துப் பூசனைவழிபாடு களியற்றிவருங் காலத்தில் ஒருநாள் தெய்வ விமானத்தைத தருவித்து வள்ளி நாயகியாருடன் சிவசுப்பிரமணிய தேவர் அதில் எழுந்தருளித் திருக்கயிலாயத்திற்கு ஒருபுறத்தி லிருக்கின்ற கந்தமாதனத்தைச் சேர்ந்து விமானத்தை விட்டிறங்கித் தேவராஜ புத்திரியாகிய தெய்வயானையம்மை யெழுந்தருளி யிருக்கும் அந்தப்புரத்தில் வள்ளிமணாளனாக வருவதைக்கண்ட இராஜபுத்திரி அதிகஸந்தோஷமாக எதிர் வந்து கணவன் திருவடிகளிற் பணிந்தனள். கந்தசுவாமியும் அவளைத் தழுவித் தளர்ச்சிகளைப் போக்கினர். அந்தருணத்தில் வள்ளிநாயகியாரும் தம்முன்னவள் திருவடிகளிற் பணிந்தனள். இராஜபுத்திரி அவளைப் பரிவாயெடுத்து ஆலிங்கனஞ் செய்து வாழ்த்தினள். எம்மையாளுங் கடவுளானவர் உபய நாய்ச்சியாரையும் அணைத்து அந்தப்புரத்திற்குக் கொண்டு போய்ச் சிங்காசனத்திற் களித்திருந்து அவர்களு

டன் வார்த்தையாடிக் கொண்டிருக்கும் போது சுவாமியின் இடப்புறத்தில் அமர்ந்திருக்குந் தெய்வநாயகி யானவர் நாயகன் திருமுகத்தை நோக்கி, எமதிறைவனே! தேவரீருடைய வலப்புறத்தில் இருக்கும் மங்கையின் வரலாற்றைத் திருவுளம்பற்ற வேண்டுமெனப் பிரார்த்திக்கக் குமாரதேவர் அத்தேவியாரின் விருத்தாந்தங்களைச் சொல்லக்கேட்டு மனமகிழ்ந்து, நாயகனே! பூர்வத்தில் ஸ்ரீ விஷ்ணுபகவானிடத்தில் அவதரித்த இவளும் நானும் நெடு நாளாய்ப்பிரிந்ததை இக்காலத்திற் கிருபையுற்றுப் பழயபடிக்குக் கூட்டிவைத்த தேவரீர் கடாக்ஷத்திற்கு அடியோங்களாற் செய்யத்தகும் கைம்மாறுண்டோ வெனக்கொண்டாடி வள்ளிநாயகியாரை அதிகப் பிரியமாய்ப் பாராட்டி இருந்தனள். இவ்விதம் தேவராஜ புத்திரியும் வேடப்பாவையும் உபயபாரிசங்களிலும் பொருந்தி யிருக்கும் சந்நிதிமகிமையினல் உலகவாசிகள் அனைவரும் இம்மை மறுமைப் பேரானந்த சுகங்களைப் பெற்றிருந்தார்கள். அத்தருணத்திற் சேவற் கொடி அசையும் திருத்தேரும் பசிய தோகையை வாய்ந்தமயில் வாகனமும் பூர்வத்தில் நாரதர் யாகத்திற் பிறந்ததகரும் வெற்றிவேலாதி யாகிய படைகளும் திருவாயில் முதலிய தலங்களில் அமர்ந்து சண்முகநாதருடைய கட்டளையின் படிக்குப் பணிவிடைகளைச் செய்திருந்தன.

சிவசுப்பிரமணிய தேவர் அழகிய புயாசலங்கள் வாழ்க, துலங்குகின்ற சண்முகார விந்தங்கள் வாழ்க, பொற்சிலம்பு கொஞ்சும் திருவடிகள் வாழ்க, கிரவுஞ்சனையும் தாருகனையும் பிளந்து கொன்ற வெற்றி வேலாயுதம் வாழ்க, மற்றப் படைகளும் வாழ்க, மஞ்ஞை வாகனம் வாழ்க, சேவற் கொடி வாழ்க, நவவீரர் வாழ்க, இலட்சத்தவர் வாழ்க, தெய்வ நாயகியார் வாழ்க, வள்ளியம்மையார் வாழ்க, சிவகுமாரன் அடியவர் அனைவரும் வாழ்க,

சரவணபவன் சரித்திரங்களை அடியேன் ஆசைப் பெருக்கினும் கூடிய வரையிற் சுருக்கிச் சொன்னதாகும். இதில் வழுவிருக்குமாயினும் புலவோர் அவற்றில் விளங்கும் கடவுளது மேம்பாட்டைக் கருதிப் பாலிற் கலந்த ஜலமும் பயன் பெறுவதைப் போல அங்கீகரித்துக் கொள்வர்.

இந்த புராண வரலாற்றை ஆராய்ந்து ஆனந்தப் பரவசராய்க்களித்த குண சம்பன்னரும், அதன் பயன்களை வழுவின்றித் தெரிந்த மகத்துக்களும், அதைக்கொண்டு முக்திபெற நினைந்த ஞானவான்களும் பூமியின்கண் இலக்குமியை யொத்த அழகும் அருந்ததியை யொத்த கற்பும் மண்மகளைப் போன்ற பொறுமையும் மற்ற மேம்பாடுகளனைத்தும் பெற்றிருக்கின்ற கன்னிகையை மணந்து இன்புற்று நல்லபுத்திரரைப் பெற்று அஷ்ட அயிஸ்வரியங்களையும் அனுபவித்திருந்த பின்பு அந்தியகாலத்திற் சிவத்தில் எந்நாளுங் குடியாய் வாழ்ந்திருப்பார்கள்.

## 6-வது தட்சகாண்டம் முற்றிற்று.

உ
வெற்றிவேலுற்ற துணை.

## 7-வது உபதேச காண்டம்.

### விநாயகர் துதி.

குழவிவெண் பிறைமிலைச்சி யோற்குணித்த மாதவத்தி
னிழைதடம் புனலருவி தாழிமைய மீன்றெடுத்த
மழை மதர்த்தகண் மரகதப்ப சுங்கொடி பயந்த
தழைமடற் செவித்தந்தி பொற்சரணமே சரணம்.

### "சூராதிக ளொடுக்கம்"

சூரபதுமன், சிங்கமுகாசுரன், தாருகாசுரன் முதலானவர்கள் சுப்பிரமணியக் கடவுளால் ஏவப்பட்ட வெற்றிவேலாயுதத்தால் மடிந்த பின்பு அவர்கள் உயிரை அந்த வேற்படையானது ஒடுக்கிக்கொண்ட திவ்ய சரித்திரங்களையும் சொல்லுவாம். முன்னொரு காலத்திற் சிவசுப்பிரமணிய தேவர் கந்தமாதனத்தி னின்றும் மயில்வாகனரூடராய்ப் புறப்பட்டு ஸ்ரீ கயிலைபங்கிரியைச் சேர்ந்து வாகனத்தி னின்றும் இறங்கித் தமது மாதாபிதாக்களிடம் சென்ற பொழுது கோழிக்கொடியும் மயில்வாகனமும் கயிலைபங்கிரியின் சாரலில் இருக்கக் குமரக்கடவுளானவர் சிவபிரான் ஆனந்த நிருத்தத்தைக் கண்டு பரவசமடைந்திருந்தனர். ஸ்ரீமகா விஷ்ணுவும் பிரமதேவரும் தங்கள் தங்கள் வாக

னமாகிய கருடன் பேரிலும் அன்னத்தின் பேரிலும் பரமசிவத்தின் நடனத்தைக் கண்டுகளிக்க வந்துற்றிருந்தனர். அவர்களின் வாகனங்களும் கயிலையங்கிரிச் சாரலில் தங்கியிருந்தன. அப்போது சூரன், பதுமன், சிங்கமுகன், தாருகன் என்னும் நான்கு பூதகணத் தலைவர்களும் மயிலையும் சேவலையும் பார்த்து உங்களிருவரிலும் மிகுந்த மேன்மைக்கும் பலத்திற்கும் தாங்களே உரியவர்களென்று கருடராஜனும் அன்னமும் நினைத்து உங்களைக் கொஞ்சமும் மதியாது அவமதித்திருக்கின்றன. அதனை நீங்கள் அறியவில்லையோ! இனி அந்தப்பட்சிகள் உங்களுடன் சண்டைசெய்ய வருமானால் நாங்கள் நால்வரும் உங்களுக்குத் துணையாக வருவோம் என்று சொல்ல, மயிலும் சேவலும் பெருங்கோபத்துடன் நந்தி கணத்தலைவர்களுடன் சேர்ந்து போர் செய்ய வருவதனைக்கருடனும் அன்னமும் பார்த்து அவைகளும் சினங் கொண்டு எதிர்த்துப் பெரும்போர் விளைப்பதாயின. அக்காலையிற் கருடன் மயிலினிடத்திற் போராட முடியாமற் சண்டையை யிழந்து தன்சிறையை உதறிக்கொண்டு ஆகாயத்திற் பறந்துவிட, அன்னப்பட்சியும் சேவலுக்கு ஆற்றுமல் அந்தக்கருடனுக்குப் பின்னே பிறந்தோடினது. அதனைக்கண்ட கணத்தலைவர் கதாயுதமெடுத்து அவைகளைத் துரத்திக்கொண்டு செல்ல மயிலும் சேவலும் அந்தப்பட்சிகள் போனவழியைத் தொடர்ந்தன. கருடன் வைகுந்தத்திலும் அன்னம் பிரமலோகத்திலும் போய்ப் பதுங்கிக்கொண்டன. மயிலானது கருடனை விடாமல் அதன் அடியைப் பற்றித்தொடர்ந்து அதனை எலும்புகள் உடையும்படிக்கு நன்றுய்ப்புடைத்ததுமல்லாமல் வைகுந்த நாட்டையும் நிர்மூலஞ் செய்து விட்டுப் பின்பிரமலோகத்தையும் நாசப்படுத்தி அவ்விடத்திற் பதுங்கியிருந்த அன்னத்தையுங் கொன்று விட்டது. கோழி அவ்விடங்களிலுள்ள உயிர்களை யெலாம் கொறித்து விட்டது. நான்கு பூதகணத் தலைவர்களுடைய கொடிய போரையும் தேவர்கள் சகிக்கமாட்டாத வர்களாய் மனங்கலங்கிச் சோர்ந்து சோர்ந்து தங்களுக்கு நேரிட்ட இத்துன்பங்களை யாரிடம் சொல்லிக் கொள்வோ மென்றிருந்தார்கள். மயிலும் சேவலும் நான்கு பூதகணத் தலைவருடன் யுத்தத்தை விட்டுத் திரும்பி முன்போல் மலைச்சாரலை யுற்றிருந்தன.

அத்தச்சமயத்திற் பரமசிவனுடைய திருநடனத்தைப் போற்றித்திரும்பி வருகின்ற விஷ்ணுவைத் தேவர்கள் கயிலையங்கிரியின் கோபுரவாசலிற் கண்டு வணங்கித் தங்களுக்கு நேரிட்ட துன்பங்களை யிரந்து சொல்ல, விஷ்ணுவானவர் பிரமதேவருடன் குமரக்கடவுள் எழுந்தருளி யிருக்கும் இடத்தைச் சேர்ந்து அப்பெருமானைப் பலவிதமாகத் தோத்திரம் செய்து, மயிலும் கோழியும் நான்கு கணத்தலைவர்களும் செய்தகாரியங்களை விண்ணப்பஞ் செய்தார்கள். ஸ்வாமி நாதர் அதனைக்கேட்டருளி அந்தப் பூதகணத்தலைவரை வருவித்து நீங்கள் பிரமனுலகையும் விஷ்ணுவினுலகையும் அழித்தீர்கள், அல்லாமலும் தேவலோகத்தையும் நாசஞ் செய்தீர்கள், ஆகையால் நீங்கள் இனிப் பூவுலகத்திற் கொடிய பாவமுள்ள அரக்கர் குலத்திற் பிறந்து இந்தத் தேவர்களுக்குப் பலவிதத் துன்பங்களைச் செய்து பின் அக்காரணத்தினல் முடிவில் நமது வெற்றி வேலினு லிறந்து கதியடையக் கடவீர்களென்று கொடிய சாப மிட்டனர். அதனைப் பெற்ற நான்கு பூதகணத்தலைவரும் குமரகுரு பரனைச் சாஷ்டாங்கமாகச் சேவித்தெழுந்து எம்பெருமானே! நாங்கள் கொடிய அசுரகுலத்திற் பிறந்திருந்தாலும் தேவரீரிடத்தில் நீங்காத அன்பு பொருந்திய மனத்தை எங்களுக்கனுக்கிரஹஞ் செய்யவேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டனர். மேலும் வேலாயுதத்தினு லிறக்கும்போது சூரன் மயிலுருவங் கொண்டு சுவாமியின் திருவடியைத் தாங்கவும், பதுமன் சேவற்கொடியாய் அலரிடத்தமரவும் வரம்பெற்றுக் கொண்டு இருவரும் மாயையின் வயிற்றில் ஒரு உருவமாகச் சூரபதுமனென்னும் பெயரொடு பிறந்தார்கள். மற்ற இருவரில் சிங்கமுகனென் றொருவனும் தாருகனென்றொருவனுமாகச் சூரபதுமனுக்குப் பின்பு அம்மாயையின் வயிற்றிற்பிறந்தனர். வேர்மூலமாய் அழிந்தொழிந்த கருடனும் அன்னமும் மற்ற உலகங்களும் எமது வெற்றிவேற்கடவுளின் திருவாக்கின் விசேஷத்தினுற் பழயபடிக்கே நிலைபெற்றிருப்ப தாயின. இது பூர்வத்திலேயே நடந்த தென் றுணர்க.

இவை நிற்க, முன்னாட் சுப்பிரமணியக் கடவுளுடன் போர் செய்த யுத்தகளத்தில் மாயையானவள் தன் பௌத்திரனுகிய பானுகோபனுக்கு ஒரு ரகசியஞ்சொல்லி மறைந்து போய்த் தன்மகளாகிய அசமுகியினிடத்திற் சேர்ந்து மகளே! இனி உன்சகோதரர்களுக்கு

வெற்றிகிடையாது. அவர்கள் சுப்பிரமணியக் கடவுளுடைய வெற்றி வேலினால் இறந்துபோகும்வரை நீ இங்கே இருந்து அப்பால் நான் போவதாயிருக்கும் ஸ்ரீசயிலத்தைக் குறித்து வந்து சேரென்று சொல்லி நீங்கிப்போய் விட்டாள். சூரன் முதலானவர்கள் மாண்டுபோன பின்பு அசுரேந்திரனும் இரணியனும் பாதாளத்திற் போய்ச்சேர்ந்தார்கள். அசமுகியானவள் பிரலாபித்துக் கொண்டு ஸ்ரீசயிலத்தை யடைந்து மாயையினால் தான் கொண்டிருந்த மனத்துயரம் சற்று நீங்கி ஓ! என் அருமையான தாயே! எனது தமயனாகிய சூரபதுமன் சிவகுமாரனுக்குச் செயம் பொருந்திய மயிலும் சேவலும் ஆயினனென்றும் தாருகாசுரனும் சிங்கமுகாசுரனும் கயிலாயத்திற் சிவகணங்களாக வாழ்கின்றார்களென்றும் உன்னால் தெரிந்து கொள்ளலானேன். ஆனால் அவர்கள் தீமைகளையே செய்து கொண்டிருப்பவர்களா யிருந்தும் இப்பெரிய பதங்களை யடைந்ததற்கு என்ன காரணமென்று கேட்க மாயையானவள் சொல்லுவாள்.

நெடுங்காலத்துக்கு முன் சமுத்திரத்தின் நடுவிலுள்ள நவதீவுகளில் சாகத்தீவு என்பதொன்றில் பிரபாகர னென்னுமோர் அரசன் மகாபதிவிரதையாகிய சுகுமாரி யென்னும் மனைவியுடன் கூடி நீதியாய் அரசாங்கம் செய்து வரும் நாளையில் அவனுக்குச் சூரனென்றும், பதுமனென்றும், சிங்க னென்றும், தாருக னென்றும், நான்கு புத்திரர் பிறந்தார்கள். பிரபாகர னென்பவன் முன் பிறந்தவனாகிய சூரனுக்குத்தன் அரசாட்சியைக் கொடுத்துத் தவஞ்செய்யச் சென்றனன். சூரன் தன் துணைவர்களுடன் நீதியாய்ச் செங்கோல் செலுத்தி வருங்காலத்தில் அகஸ்திய முனிவர் அவர்களிடம் எழுந்தருளிச் சிவசுப்பிரமணியக் கடவுளினது பெருமைகளையும் அவரிடத்திற் பொருந்தி விளங்கும் மயில் சேவல் இவைகளினுடைய மகத்துவங்களையும் விளங்கச் சொல்லித் தமதிருப்பிடஞ் சென்றனர். பிற்பாடு சூரன் பதுமன் என்னும் இருவருக்கும் நம்பெருமானுக்கு மயில்வாகனமாகவும் சேவற் கொடியாகவும் ஆகவேண்டு மென்ற எண்ணம் உண்டானது. இவை நிற்க, திரணவிந்து வென்னும் முனிவரானவர் சிங்கமுகன் தாருகன் என்னும் இருவருக்கும் முறையே காளியைப் பற்றியும் அவள் வாகனமாகிய சிங்கத்தின் மகத்துவத்தையும் பின் அரிஹரபுத்திரரைப் பற்றியும் அவர் வாகனமாகிய ஆனையின் மகத்துவத்

தையும் எடுத்துப் போதித்துச் சென்றனர். பின்பு நான்கு இராஜபுத்திரரும் தங்கள் புத்திரர்களிடத்தில் பூமிபாரத்தைக் கொடுத்து விட்டு ஸ்ரீசயிலவனஞ் சென்று பஞ்சாக்கினி மத்தியில் மயில், சேவல், சிங்கம், ஆனை இவைகளைத் தனித்தனி ஒவ்வொருவரும் சிந்தித்து அவைகளின் பதவியைப் பெற்றுக் கொள்ள அரியதவஞ் செய்து கொண்டிருந்தார்கள்.

இவ்விதம் தவஞ்செய்து கொண்டிருக்கும் போது கயிலாசத்திற் பரமசிவத்தின் திருநடனத்தைத் தெரிசிக்கும் படிக்குத் தேவர்கள் தங்கள் வாகானங்களைக் கயிலையங்கிரிச் சாரலில் விட்டுச் சென்றிருந்தார்கள். அப்போது அச்சாரலி லிருந்த கருடனும் அன்னமும் மயிலையும் சேவலையும் நோக்கிச் சாகத்தீவில் உங்கள் இவர் பதங்களையும் மகாகாளி வாகனமாகிய சிங்கத்தினுடைய பதத்தையும், சாத்தன் வாகனமாகிய யானையினுடைய பதத்தையும் பெறும்படிக்கு நான்கு அரசர்கள் தவஞ்செய்கின்றார் களென்றவுடன் மயில் முதலாகிய வாகனங்கள் ஒன்றாகச்சேர்ந்து பெருங் கோபங்கொண்டு புறப்பட்டு ஒரு நாழிகைக்குள்ளாக அவ்வரசர்கள் தவத்தையழித்து நீங்கள் பெரிய பூதங்களாய்க் கணங்களுடன் இருக்கக்கடவீர்களெனச் சபித்துத் திரும்புங்காலையில் நால்வரும் மயில் முதலானவைகளை வணங்கி வேண்டிக் கொள்ள அவைகள் மனமிரங்கி நீங்கள் கருதியதவப்பயனைப் பிற்பாடு அடைவீர்க ளெனச் சொல்லிமீண்டன. உடனே அந்த அரசர்கள் கயிலையங்கிரியில் கணங்களாய்ச் சேர்ந்திருந்து பின்பு கருடனும் அன்னமும் நம்முடைய தவத்தை யிழக்குமபடி செய்தன வென்னும் பகையைத் தங்கள் சிந்தையில் வைத்துக்கொண்டு மிகுந்த கோபாவேசமாய்ச் சமயம் வந்தபோது மயிலையும் சேவலையும் கருடனுடனும் அன்னத்துடனும் போர்செய்ய மூட்டிவிட்டார்கள். அந்த நான்கு கணத்தவர்களும் பின்பு ஊழ்வினைத் தொடர்பினால் சுப்பிரமணியக் கடவுளின் கட்டளையின் படிக்கு உலகத்தில் அசுரர் குலத்திற் பிறந்தார்களென்று மாயைதன் மகளாகிய அசமுகிக்குச் சொல்ல அதனைக்கேட்டு அவள் தாயே! அவர்கள் அசுரராய்ப் பிறந்த காலத்தில் தேவர்களுக்குத் தீங்குசெய்து வருத்திய காரணம் யாதோவென்று கேட்க மாயை சொல்லுவதாயினள்.

பூர்வத்தில் ஸ்ரீகயிலாயத்திலிருக்கும் பூதகணங்களுடன் இந்நால்வரும் கணங்களா யிருந்தபோது தேவர்களுக்குப் பூலோகத்திலிருக்

கும் அசுரேந்திரனால் தோல்விநேரிட இந்த நான்கு கணத்தலைவரும் கோபித்து எழுந்து அசுரசேனையைக் கொன்று தேவர்களை இந்திர லோகத்தில் குடியேற்றினார்கள். அசுரேந்திரன் கயிலாசபதியினிடம் இந்நால்வர்களின் செய்கையை முறையிட்டுக் கொள்ளப் பரமசிவன் அந்நால்வரையும் வருவித்து நம்முடைய ஆக்கினையை மதிக்காமல் நீங்கி அசுரர்களைக் கொன்றீர்க ளாகையால் நீங்கள் அசுரர்குலத்திற் பிறந்து தேவர்களுக்குத் துன்பஞ்செய்யக் கடவீர்களெனச் சாபமிட்டனர். அவ்வாறு அவர்கள் அந்நாள்முதல் செய்துவந்த துன்பம் இப்போது நீங்கிவிட்டது.

இதற்குமுன் சாகத்தீவில் தவஞ்செய்திருந்த அரசர்களைக்கொலைவுதல் செய்ததனைச் சுப்பிரமணியக் கடவுள் பார்த்துத் தமது மயிலையும் சேவலையும் கோபித்து இன்று முதல் நீங்கள் நம்மைவிட்டு அகன்று போங்களென விலக்கி விட்டனர். சேவலும் மயிலும் இறைவனைவணங்கி இனி நாங்கள் எந்தக்காலம் தேவரீருடைய திருவடிகளைச் சேருவோமென வேண்டிக்கொள்ளக் குமாரசுவாமியார் கிருபையுற்று நீங்கள் காஞ்சிப்பதியில் நம்மைக்குறித்துத் தவஞ்செய்திருப்பீர்களாயில் நம்முடைய திருவடியைத் தருகின்றோமென அருள்செய்தனர். அவ்வாறே அவைகள் தவஞ்செய்து குமரக்கடவுள் பாதாரவிந்தங்களை அடைந்தபின் சூரனும் பதுமனும் செய்த தவத்தினால் மயிலுஞ் சேவலுமானார்கள். சிங்கமுகனும் தாருகனும் கயிலாயத்திலிருக்கும் திருநந்திதேவரை வணங்கிக் காளிக்குச் சிங்கமாகவும் சாத்தாவுக்கு வெள்ளயானையாகவும் இருக்க நாங்கள் செய்த தவப்பலனைக் கடாக்ஷிக்க வேணுமென்று பிரார்த்தித்துக் கொண்டார்கள். நந்திதேவர் ஓ! தவசிகளே! அந்தக்காளிக்கும் சாத்தாவுக்கும் இப்போது இருக்கின்ற வாகனங்களுக்கு மோக்ஷங் கொடுக்குமளவும் நீங்கள் நம்மிட்த்திலேயே இருங்களென்று சொல்ல அவர்கள் அப்படியே மகிழ்ந்திருந்தார்கள். இதனைக்கேட்ட அசமுகியானவள், தாயே! அந்தவாகனங்கள் நந்திதேவரால் மோக்ஷமடைந்த வகையைச் சொல்ல வேண்டுமென மாயைசொல்லுகின்றாள்.

முன்னொருகாலத்தில் துர்க்கையும் சாத்தாவும் பரமசிவனைத் தொழுது தங்களுக்கு வாகனங்களை யருள்செய்யவேணுமென்று பிரார்த்தித்துக் கொள்ளச் சிவநாதன் தமதுநந்தி தேவரைக்குறித்து

அவர்களுக்கு வாகனங்கள் அமைத்துக் கொடுக்கக் கட்டளையிட்டனர். அந்தத்தேவர் கயிலையங்கிரிச் சாரலில் தவஞ்செய்திருந்த ஒரு சிங்கத்தையும் யானையையும் இவர்களுக்கு முறையே வாகனமாகக் கொடுத்த வளவில் அவ்விரண்டு மிருகங்களும் நந்திதேவரைப் பிரார்த்தித்து நாங்கள் தேவரீருடைய திருவடியை அடையத் தவஞ்செய்திருந்தோம். அப்படியிருக்க மத்தியில் இவ்வாறு நேரிட்டகாரணம் யாது என்று கேட்க நந்திதேவர் அவைகளைப் பார்த்து உங்கள் இருவர் காலஞ்சென்றபின் கதிகொடுக்கின்றோமென்றருளத் துர்க்கைக்கும் சாத்தாவுக்கும் அவைகள் வாகனங்களாகப் பொருந்தியிருந்தன. பிற்பாடு அவைகள் காலஞ்சென்றபின் நந்திதேவர் அவைகளுக்குப் பதத்தைக் கடாக்ஷித்து அப்போது வாகனமில்லாதிருந்த காளிக்கும் சாத்தாவுக்கும் சிங்கமுகனையும் தாருகனையும் சிங்கமாகவும் வெள்ளை யானையாகவும் முறையே வாகனங்களா யிருக்கும்படிக்கு ஆக்கியாபித்தனுப்பினர்.

(அசமுகியின் வரலாறு)

இவைகளை அசமுகிகேட்டுப் பின்னும் மாயையை நோக்கி என் அன்னையே! இனி என்னுடைய பூர்வநிலையையும் சொல்லவேண்டுமென்ன அவள் சொல்வதாயினள். சப்த சமுத்திரங்களின் மத்தியில் கோமேதகமென்னும் திவுஒன்று உண்டு அதிற் பிராமணகுலத்தில் வசிட்டன் என்பவனுக்கும் கற்புடைய சுவேதை என்பவளுக்கும் சித்திரரேகையென்னும் பெண் பிறந்தாள். அப்பெண்ணனவள் சௌந்தரிய மெல்லாம் திரண்டு ஒரு வடிவங்கொண்ட வளாயிருந்தாள். கோமேதகத் திவுக்குச் சமீபத்தில் பூச்சக்கிர மென்னும் ஓர் நகரிற் பிராமணகுல சிரேஷ்டனாகிய அரிசன்மன் என்பவனுடைய புத்திரனாகிய புண்டரீக சன்மன் என்பவனுக்கு மேற்கூறிய அதிக அழகுள்ள சித்திரரேகை யென்பவளைக் கல்யாணஞ் செய்துகொடுக்கப் பட்டிருந்தது. புண்டரீக சன்மன் என்னப்பட்டவன் வயிணவ சமயத்தில் தலைமை பெற்றவனாகி விருந்து தான் விவாகஞ்செய்து கொண்டவளிடத்தில் உடலும் உயிரும் போலத் தழுவி வாழ்ந்திருந்தான், அந்நாளில் இந்தப் பிராமணனுக்கு வறுமைக்காலம் வர அவ்வறுமையைக் கண்டு இரக்கங்கொண்டு மகாவிஷ்ணு வானவர் அவனுக்குச் சிந்தாம

ணியைக் கொடுக்க அதனால் மிகுந்த திரவியத்தைப் பெற்றுத் தன்னிடத்திற் கல்விகற்றுக் கொண்டிருந்த பலமாணுக்கர் களுக்குக் கொடுத்துச் சிறப்பாக விருக்கும் நாளில், இவன் மனைவி கற்புநிலையை இழந்து அவனுடைய மாணுக்கரை விரும்பிப்புணர்ந்து மகிழ்ந்திருந்தாள். இதுவுமன்றி அந்நகரத்திலுள்ள ஆடவர்களையும் விரும்பி அவர்களில் அனேகரைத் தன்வசமாக்கிக் கெடுத்து விட்டனள். ஒரு நாள் அவள் நாயகனுகிய புண்டரீக சன்மனென்னும் வைஷ்ணவனிடம் துருவாசகமுனிவர் எழுந்தருளிவரப் பிராமணன் அவரை உபசரித்து இருக்கச்செய்து தனது பத்தினியாகிய சித்திரரேகையை நோக்கி இம்முனிவருக்குத் திருவமுது சமைக்கவேண்டுமெனக் கட்டளையிட அவளும் அவ்வாறே சமைத்து அமுதத்தை யெடுத்துக் கொண்டு யோக நித்திரை செய்திருக்கின்ற முனிவரிடம் சென்று அவர் பேரிற் காமவிச்சை கொண்டு மேல்விழுந்து அவருடைய தோளைத்தழுவினள். அம்முனிவர் விழிகளைத் திறந்துபார்த்த வளவில் இவள் பயந்தோடிச் சமீபத்திலிருக்கும் செம்மறியாட்டுக் கூட்டத்தில் ஒளிந்துகொள்ள உடனேமுனிவர் அதிக்கோபங்கொண்டு அதனை அறிந்தவராய்த் தமது சீஷனை நோக்கி நீ அவளைக்கொண்டு போய் உயர்ந்த அந்த ஆலமரத்தின் உச்சியில் ஏற்றி உன் தவப்பெருமை யாவரும் அறியும்படிக்குச் செய்வாயெனக் கட்டளையிட்டனர். சீஷனவன் அவளைப்பிடித்து உயர்ந்த ஆலமரத்தின் உச்சியில் ஏற்றினுன். அவளோ அம்மரத்தின் உச்சியிற் கொம்பை பிடித்துக் கொண்டு இறங்கமுடியாமல் துன்பப்பட்டு அலறிக் கொண்டிருக்கும் போது அந்நகரத்திலிருக்கும் ஸ்திரீ புருஷர்கள் அவளைப் பார்த்து ஆச்சரியங் கொண்டார்கள். அவள் நாயகன் சம்பவித்ததனை அறிந்து முனிவரை வணங்கி மரத்தைவிட்டு எனது பத்தினி யிறங்கக்கடாக்ஷிக்கவேணுமென்று பிரார்த்திக்க, அவர் அப்பிராமணனை நோக்கி இல்லறதருமத்தை யிழந்தவளுடைய புல்லிய வொழுக்கத்திற்குச் சம்மதித்திருக்கும் நீசனே! அவள் தனத்தை யிவ்வுலகத்தில் எல்லாருக்கும் கொடுத்தாள், இப்படிப்பட்டவளை அக்கினி சாட்சியாக உனக்கென்று கொடுத்தார்கள், அப்படியிருக்க அவள் தன்னுடைய இன்பம் பிறருக்குப் பயன்படச் சமைத்திருக்கின்றுளன்றி உன்னை ஒரு பொழுதும் நினைப்பவளல்ல என்று சொல்லப் பிராமணன், தேவரீர் அவள் எப்படிப்பட்ட குற்றஞ்செய்திருந்தாலும் திருவுள்ளத்திற்

கொள்ளாமல் ஆலமரத்தை விட்டு அவள் இறங்கக்கடவ தென்று ஒரு வார்த்தை சொல்லவேண்டு மென்று பிரார்த்தித்தனள். துருவாசர் அவனை நோக்கி அவள் பதிவிரதை யாயிருந்தால் நீபோய் அவளை இறங்கச் சொன்னவுடன் இறங்கிவிடுவள் என்றார். அவன் அவ்வாறே போய்ச்சொன்ன காலையில் அவள் காலடிமட்டும் இறங்கினின்றாள். பிராமணன் திரும்பிவந்து துருவாசரை வேண்டிக் கொண்டான். முனிவர் அப்படியானால் அவளைப் புணர்ந்த ஆடவரெல்லாரும் அந்த மரத்தடியில் வந்து இறங்கென்று சொல்வார்களாயில் இறங்குவாள் என்றனர். உடனே அவளிடத்திற் புணர்ந்தவர்களை யெல்லாம் அவன் அழைத்துக் கொண்டுவர அவர்கள் வந்து பெண்ணே இறங்கென்றாகள். அப்போது அவள் பாதிமரத்தில் இறங்கி அப்புறம் இறங்க மாட்டாமல் துன்புற்றனள். பிராமணன் மீட்டும் முனிவரிடம் சென்று வேண்டிக்கொள்ள அவர் உன்னுடைய சிஷர்களெல்லாரும் அழைத்தால் இறங்குவள் என்றனர். சிஷர்களும் வந்து அழைத்தார்கள். அவள் அப்போது அந்த ஆலமரத்தின் அடிக்கவட்டில் வந்திருந்தாள். அதைப்பார்த்த அவள் புருஷன் துன்பத்துடன் முனிவரிடம் ஓடி முறையிட்டுக் கொள்ள அவர் ஓ! பிராமணா! உன்மனைவியைப் புணர்ந்தவர்களின் பெயரை யெல்லாம் அவள் சொல்லிச் சொல்லித் தெரிவித்தால் இறங்குவா ளென்றனர். அந்தப்படியே அவள் அந்தந்தச்சோரபுருஷரை யெல்லாம் தனித்தனி பெயரைக்கூறினள். அப்போது அவள் அந்தக்கிளையை விட்டிறங்கிக் கிழ்க்கவட்டில் வந்திருந்தனள். புருஷன் அருந்தவரிடம் போய்த்திரும்பவும் வேண்டிக்கொள்ள அவர் தமது சிஷர்களுடன் அந்த ஆலமரத்தருகிற் சேர்ந்து புண்டரீக சன்மனை நோக்கி இவள் இதுவரையிற் செய்த பாதகங்களிற் பாதி உன்னைச் சேர்ந்தன. ஆகையால் உன் தவம் அழிந்து பரமேஸ்வரன் திருவடிகளையும் சேரமாட்டாயென்ற போது பிராமணன் ஓ! முனிவரே! நீர் சமயவிரோதத்தை உட்கொண்டு எனக்கு இந்தச்சாபம் கூறினீர் என்று சொல்லத் துருவாசர் கோபங்கொண்டு, அடா! தியானபங்கனே! உன்பேர் போனிமனத்தனென்று வழங்கக்கடவ தென்று சபித்து அவன் அருகிலிருக்கும் சிஷர்களைநோக்கி நீங்கள் குருவின்பத்தினியை விரும்பினீர்கள் ஆகையால் உங்கள் பத்தினிகளும் வேசையராவார்களென்று சொல்லி மரத்தில் தொத்திக்கொண் டிருப்பவளை

நோக்கிக் குவிந்தமுலையினை யுடைய சித்திரரேகையே! நீ மது மேனியைத் தீண்டினமையாற் கொடிய அசுரகுலத்திற் பிறந்து பலபேரைப் புணரும் நீங்காத காமவிகாரம் பெற்றிருப்பை. ஆட்டின் கூட்டத்தில் ஒளித்திருந்தனை ஆதலால் உன் முகமாத்திரம் ஆட்டின் முகமாகும். இனி மரத்தை விட்டு இறங்கிப்போ வென்றனர். அந்தப்பாதகியானவள் இரங்கி முனிவர் திருவடிகளில் வணங்கி என்னை நிந்தை செய்தீர் ஆனாலும் தேவரீர் திருவடிகளைப் பரிசிக்கத்திருவருள் செய்யவில்லை யெனப்பிரார்த்திக்க முனிவர் ஓ! சித்திரரேகையே! ஒருவர் செய்தபாதகம் எல்லாம் அவர்களே பகுத்துச்சொன்னால் தொலைந்து பொகுமென்னும் உலகப் பழமொழியை நீ அறிவாயே! ஆதலால் உன்பாவமெல்லாம் நீங்கிவிட்டது. இனி நீ பெண்ணாக அசுரகுலத்தில் இருக்கும் போது நீ நம்மைப் புணர்ந்து இரண்டு புத்திரர்களைப்பெறுவாய், அன்றியும் மகாகாளர் கையினால் மூக்கும் முலையும் கையும் இழந்து அவர் தொட்ட மகிமையினால் அன்று வரையில் நீ செய்தபாவ மெல்லாம்போய் நல்லுணர்ச்சி பெற்று ஸ்ரீ சபிலஞ் சேர்ந்து தவஞ்செய்து கொண்டிருப்பா யென்று கட்டளையிட்டருளினர். அடிமகளே! இப்படிப்பட்டவள் நீதான் ஆகும். அந்த முனிவர் சாபமும் இப்போது உனக்கு விமோசனமாகி விட்டது. இனித்தவத்தை விரும்புவாயாக வென்று மாயையானவள் தன்மகளாகிய அசமுகிக்குச் சொல்லினள்.

(மாயை வரலாறு)

அசமுகி அதனைக்கேட்டு அன்னையே! இனி உன்னுடைய பூர்வ ஜனனத்தின் விபரங்களையும் சொல்ல வேணுமென்று கேட்க மாயையானவள் சொல்லுகிறாள். பூர்வத்திற் காசிபரிஷிக்கு நானொரு பத்தினியாகி அவருக்குப் பலகோடி புத்திரரைப் பெற்றேன். அவர்கள் தேவர்களோடு போர்செய்து இறந்துவிட நான் அவ்வருத்தம் சகிக்கக்கூடாமல் இந்தமலையின் உச்சியிலேறி விழுந்து உயிர்விட்டேன், பின் நான் அசுரேந்திரனுக்குப் புத்திரியாகப் பிறந்து மாயையென்னும் பெயர் உள்ளவளாய் உங்களை யெல்லாம் பெற்றேன். காசிபர் என்னுடைய பிரிவாற்றாமல் வருந்தியிருப்பதனைப் பிரமன் நோக்கி அவருக்குச் சமாதானம் சொல்ல அவர் புலத்திய ரிஷியின் புத்திரியை விவாகஞ்செய்து கொண்டு விரகாக்கினியை ஒழித்திருந்தனர். இவைகளையெல்லாம் நான் சக்கிரபகவானால் அறிந்திருக்கிறேன். அல்லா

மல் திரிகாலங்களையும் அறிவேன் என்றனள். அசமுகியானவள் பின்பு மாயையின் பாதங்களில் வணங்கி நல்லதவமுயற்சியைப் பெற்றவளாய் மாயையுடனிருந்து தவஞ்செய்து ஸ்ரீகயிலாசத்தைச் சேர்ந்திருந்தனள்.

## (சிவமுனி முதலாயினோர் வரலாறு)

விஷ்ணுவானவர் வாமனவதாரங் கொண்டருளிய காலத்தில் அவருக்கு உபேந்திரரென்னும் பெயர் உண்டாயிற்று. அதாவது இந்திரனுக்குத் தம்பியென்பதேயாம். ஒருநாள் அந்த உபேந்திரமூர்த்தியானவர் தமது அவதாரத்துக்கு அதிட்டானப் பொருளாகிய நாராயண மூர்த்தியை வணங்குவதற்கு வைகுந்தம் போயினர். அந்தச்சமயத்திற் கண்ணுவரென்னும் ரிஷியானவர் விஷ்ணுவை ஆசீர்வதிக்க வந்தனர். விஷ்ணுவும், மகாலெட்சுமியும் உபேந்திரரும் அம்முனிவரை அலட்சியஞ் செய்திருந்த சமயத்திற் கண்ணுவர் கோபங்கொண்டு ஓ! பேதைகளே! சிவபெருமானுக்கு நான் வழித்தொண்டனென்று நீங்கள் அறிந்திருந்தும் என்னை அவமதித்தீர்களாகையால் இதோ சபிக்கின்றேனென்று முதலில் விஷ்ணுவைப் பார்த்து, நீ பூமியிற் பலஜென்மங்களெடுத்து உழன்று ஊமரைப்போற் பேதையாய்த் திரியக்கடவாயென்றும், மகாலெட்சுமியை நோக்கி நீயுந்தேககாந்தியொழிந்து பாலைவனத்திற் பெண்மானாகப் போந்து அலையக்கடவாயென்றும், உபேந்திரரைக்குறித்து நீ வேடுவனாகப்பிறந்து மூடனாய்த்திரியக்கடவாயென்றும் சபித்துக்கண்ணுவர் தமது ஆச்சிரமஞ்சேர்ந்தனர். சாபத்தைப்பெற்ற மூவர்களில் விஷ்ணுவானவர் பரமசிவனைக்குறித்துத் தவஞ்செய்தனர். கயிலாசபதி பிரசன்னமானவுடன் மாதவர் தனக்குக் கண்ணுவரிஷி கொடியசாபமிட்டதனைக்கூறி அதனைநிவர்த்தித்துக் கிருபைசெய்ய வேண்டுமெனப் பிரார்த்தித்தனர். பரமேஸ்வரன் கண்ணுவரிஷியைவருவித்து அவரைக்கொண்டே விஷ்ணுவுக்கு ஒரு ஜென்மமட்டிலும் எடுக்கும்படிக்குக் கிருபைசெய்தனர். உடனே விஷ்ணுவானர் ஓர்காட்டிற் சிவமுனிவர் என்னும் பேர்தாங்கி ஊமராய்ப் பிறந்தனர். உபேந்திரர் வேடுவனாகப்பிறந்தனர், மகாலெட்சுமியும் அவ்வனத்தில் தானேபெண்மானாகப் பிறந்து மருண்டுதிரிந்தனர். அப்பால் உலகமாதாவாகிய வள்ளிநாயகியாரைச் சிவமுனிவராகிய விஷ்ணு

பகவானும் பெண்மானாகிய மகாலட்சுமியும் பெற்றதினாலும், வேடுவனாகிய உபேந்திரன் எடுத்து வளர்த்ததினாலும், அந்த எம்பிராட்டியாரை எமது கந்தவேள் மணந்ததினாலும் மேலேசொன்ன மூவர்க்கும் சாபங்கள் நீங்கித் தங்கள் தங்கள் தெய்வ வடிவங்களையடைந்து இன்புற்றிருந்தார்கள்.

வாழ்த்து விருத்தம்.

துய்யதா மறைகளாலுந் துதித்திடற் கரியதான
செய்யவே ளடிகள்வாழ்க சேவலு மயிலும்வாழ்க
வெய்யசூர் மார்புகீண்ட வேற்படை வாழ்கவன்னான்
பொய்யில்சீ ரடியார்வாழ்க வாழ்கவிப் புவனமெல்லாம்.

திருச்சிற்றம்பலம்.

## 7-வது உபதேசகாண்டம்




ஸ்ரீ சிவசுப்பிரமணியக்கடவுள் திருவடிகளே சரணம்.